# கூட்டுறவின் வரலாறும் கொள்கைகளும்

முதல் புத்தகம்

## கூட்டுறவு இயக்கத்தின் கோட்பாடும் வளர்ச்சியும்

அ. பழனியப்ப முதலியார்
ஏ. பி. பாலசுப்ரமணியம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—719

# கூட்டுறவின் வரலாறும் கொள்கைகளும்

(பி.காம். பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகின்றது)

(முதல் புத்தகம்)

## கூட்டுறவு இயக்கத்தின் கோட்பாடும் வளர்ச்சியும்

ஆசிரியர்கள்

**அ. பழனியப்ப முதலியார்,** எம்.ஏ., ஐ.ஏ.எஸ். (ஓய்வு),
ஓய்வுபெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர்,
சென்னை.

**ஏ. பி. பாலசுப்ரமணியம்,** எம்.ஏ., ஜே.பி. (ஓய்வு),
ஓய்வுபெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் துணைப்பதிவாளர்
மற்றும்
கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி முன்னாள் விரிவுரையாளர்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—August, 1976

T.N.T.B.S. (C.P.) No. 719



# History and Principles of Co-operation

(Book I)

A. Palaniappa Mudaliar and
A. P. Balasubramaniam

Price Rs. 8.55

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

*Printed by*

**Nathan & Company,**
**Main Road, Velacheri,**
**Madras-600 042.**

# பதிப்புரை

**கூட்டுறவின் வரலாறும் கொள்கைகளும் (முதல் புத்தகம்)** என்ற இந் நூல், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 719 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 754 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

**மேலாண்மை இயக்குநர்**
*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்*

# பொருளடக்கம்

பக்கம்

1853) — இராக்டேல் முன்னோடிகளும் (1844) அவர்களின் கொள்கைகளும் — நுகர்வோர் இயக்கத்தின் வளர்ச்சி — சில்லறை விற்பனைச் சங்கங்களும் மொத்த விற்பனைச் சங்கங்களும் — கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமும் ஸ்காட்லாந்து கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமும் — பிரிட்டனில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வெற்றிக்கான காரணங்கள் — தொழில் உற்பத்திச் சங்கங்கள் — கூட்டுறவுக் கடன் — விவசாயக் கூட்டுறவு — கூட்டுறவு ஒன்றியம் — அயர்லாந்து, சர் ஹொரேஸ் பிளன்கட் — பிளன்கட் அறக்கட்டளை — அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பு — இங்கிலாந்தில் கூட்டுறவு இயக்கத்தில் அரசின் பங்கு.

**(iii) இத்தாலி :** இத்தாலியில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம் — லூசாட்டி 'மக்கள் வங்கிகள்' — எவ்வாறு லூசாட்டி வங்கிகள் ஷூல்ஸ்-டெலிட்சு வங்கிகளிலிருந்து வேறுபட்டன — டாக்டர் உல்லம்பர்க்—கிராமக் கடன் வசதிச் சங்கங்கள் — கத்தோலிக்கர்கள் சங்கங்கள் அல்லது கத்தோலிக்கச் சமுதாய வங்கிகள்—இயக்கத்தின் பொதுவான முன்னேற்றம்—தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் — கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் — பொது இயல்புகள்.

**(iv) டென்மார்க் :** பொது — டென்மார்க்கில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம் — பால் பண்ணைக் கூட்டுறவுச் சங்கங்கள் — கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலைகள் — கூட்டுறவு முறையில் முட்டை ஏற்றுமதி — இதர வகைச் சங்கங்கள் — கூட்டுறவுக் கல்வி — டேனிஷ் கூட்டுறவின் சிறப்பியல்புகள் — டேனிஷ் கூட்டுறவின் வெற்றிக்கான காரணங்கள்.

**(v) அமெரிக்க ஐக்கிய நாடுகள் :** அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம் — விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் — விற்பனைக் கழகங்கள் — கூட்டுறவுப் பால்பண்ணை

பக்கம்

# 1. கூட்டுறவின் கோட்பாடு
(Theory of Co-operation)

## 'கூட்டுறவு' என்பதன் பொருள்
(Meaning of Co-operation)

சொல்லாக்க விளக்கத்தின்படி, 'கூட்டுறவு' என்பது 'பலர் சேர்ந்து, ஒன்றுபட்டுத் திட்டமிட்டுச் செயல்படுமுறை' என்று பொருள்படும். ஆனால், அத்தகைய எல்லாச் 'செயற்படு முறை' களும், சிறப்புக் கருத்தியைபின்படி 'கூட்டுறவு' ஆகா. ஒரு பொதுப்படையான பலனிற்காக ஒன்றுசேர்ந்து செயல்படுவது மட்டும் அதன் பொருளன்று. உதாரணமாக, ஒரு நல்ல திரைப் படத்தைத் திரைப்பட இயக்குநர், நிழற்படம் எடுப்பவர், நடிப்பு வேடத்திற்கான சிங்காரிப்புச் செய்பவர், ஆண் நடிகர்கள், பெண் நடிகர்கள் ஆகியவர்களின் கூட்டுறவின்றித் தயாரிக்க முடியாது என்று சொல்லலாம். அவ்வண்ணமே, ஒரு தொழிற் சாலை, அதில் பணியாற்றும் தொழிலாளிகள் பலர், தொழிற்சாலைப் பணியை மேற்பார்வை செய்வதற்கு அமர்த்தப்பட்ட மேல் சிப்பந்திகள் ஆகியவர்களின் கூட்டுறவில்லாமல் தரமுள்ள பொருள்களை வேகமாக உற்பத்தி செய்ய முடியாது என்றும் கூறலாம். ஆனால், இந்தச் செயற்பாடுகள் கூட்டுறவுக் கொள்கைகளை மேற்கொள்ளுதலுக்குச் சான்று தரும் எடுத்துக்காட்டுகள் ஆகா. இந்த எடுத்துக்காட்டுகளில், ஊழியர்கள் பலரும் ஒரு புறம்பான தனிப்பட்ட நிறுவனத்திற்காகப் பணியாற்றுகின்றனர். அவர்கள் செய்யும் பணிக்காக அவர்கள் ஊதியம் பெறலாம்; ஆனால், அவர்கள் புரியும் உழைப்பின் விளைபலனில் அவர்கள் பங்கு பெறுகிறதில்லை.

கூட்டுறவு பற்றிப் பல்வேறுபட்ட பொருள் விளக்கங்கள் கூற முயலப்பட்டிருக்கின்றன. மிகப் பழமையான ஒரு பொருள் விளக்கத்தின்படி, கூட்டுறவு என்பது 'ஏதாகிலும் ஒரு முயற்சியைப் பலர் சேர்ந்து, ஒன்றுபட்டு, அது தொடர்பான எல்லோரிடத்தும் நேர்மையான ஈடுபாடும் கண்காணிப்பும் கூடிய ஒரு தன்முனைப் பான திட்டமிட்டுச் செய்யும் செயற்படுமுறையாகும்'. இந்தப்

பொருள் விளக்கத்தில், உண்மையாகவே கூட்டுறவின் முக்கியமான பண்பாடுகளில் சில அடங்கி இருந்தாலும், அது முழு நிறைவுடையதன்று; அது கூட்டுறவு பற்றிய எல்லாத் தகவல்களையும் அறிவிக்கவில்லை. இதுபற்றி முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டியவை : முதன்முதலாக, கூட்டுறவின் கொள்கையாவது, கூட்டுறவு ஒருவிதத் தன்னியல்பாகத் திட்டமிட்ட நிறுவனம்; இரண்டாவதாக, அது சமத்துவ அடிப்படையின்பேரில் அமைந்த, மனிதத்தன்மை வாய்ந்த, தனிப்பட்ட மனிதர்களின் ஒரு நிறுவனம்; மூன்றுவதாக, அந்த நிறுவனம் வேறு சிலருடைய நலன்களுக்கு அல்லாமல் நிறுவனத்தின் உறுப்பினர்களுடைய பொருளாதார நலன்களை மேம்படுத்தும் ஒரு திட்டவட்டமான நோக்கத்திற்காக உள்ளது.

பொருள் விளக்கம் கூறுங்கால், கூட்டுறவு நிறுவனம் தன்னல மற்ற நபர்களைக் கொண்டது என்ற உணர்ச்சிவசப்பட்ட ஒரு தவருன கருத்துப்போக்கை நம்மிடமிருந்து அகற்றவேண்டும். ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர்கள் குறிப்பிட்ட பொருளாதாரத் தேவைகளையுடையவர்கள்; அந்தத் தேவைகள் கடன் பெறுவதாக இருக்கலாம்; அல்லது நியாய விலையில் அத்தியாவசியமான பொருள்களை வாங்குவதாக இருக்கலாம்; அல்லது, இதர சேவைகளைப் பெறுவதாக இருக்கலாம். அவர்கள் சேர்ந்திருக்கும் கூட்டுறவுச் சங்கத்தின் நோக்கம் அவர்களுடைய தேவைகளை அவர்களுக்கு வழங்குவதாகும். எனவே, ஒரு பொருளியையில், கூட்டுறவுச் சங்கத்தின் ஒவ்வோர் உறுப்பினரும் தன்னல நோக்கம் கொண்டவர்தாம். ஆனால், இங்கேதான் கூட்டுறவின் அடிப்படைக் கொள்கை இருக்கிறது; அதாவது, எந்த ஓர் உறுப்பினரும் மற்றவர்களுடைய ஆதாய இழப்புப் பொறுப்பில் தன்னலமாக இருப்பதற்கு அனுமதிக்கப்படுகிறதில்லை. போட்டியிடுதல் என்ற அடிப்படையின்பேரில் நிறுவப்பட்ட ஓர் அமைப்புமுறையில், அது தவிர்க்கமுடியாத பயன்முடிவாக இருக்கும்; ஆனால், கூட்டுறவுக் கொள்கைகளின் பேரில் நிறுவப்பட்ட ஓர் அமைப்பு முறையில் அது பயன் முடிவாக இராது.

தோற்றத்தில், கூட்டுறவு இயக்கம் வறுமையில் வாடும் மக்களை மீட்கத் திட்டமிடப்பட்டாலும், கூட்டுறவுச் சங்கம் ஓர் அறக்கொடை (Charity) நிறுவனமன்று என்பது உறுதி. கூட்டுறவு ஓர் அறநிலையமன்று. அஃது, அனாதைகளுக்கும் திக்கற்றவர்களுக்கும் சமுதாய அடிநிலை வகுப்பினருக்கும் துயருதவி அளிக்கும் நிலையமன்று. கூட்டுறவு நிறுவனம் இன்றியமையாத வகையில், ஒரு தொழில் வணிக நிறுவனம் (Business

Organisation) ஆகும். ஒரு தொழில் வணிக நிறுவனமாதலால், நேர்மை நெறி, ஒழுங்குமுறை, காலந் தவறாமை, முழுநிறைத் திட்பநுட்பம் (Thoroughness) ஆகியவைகளின்மீது சரியான தனி முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்ட வணிக முறையில் அது நடத்தப்படவேண்டும். ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் தனிச்சிறப்பான அம்சம், அஃது, ஒரு தொழில் வணிக நிறுவனம் என்றவகையில், தன் உறுப்பினர்களின் நலனுக்காகத் தன் உறுப்பினர்களால் நடத்தப்படும் ஒரு நிறுவனம். கூட்டுறவின் சாராம்சம், உறுப்பினர்கள் தங்கள் பொதுவான தேவைகளைப் பெறுவதில் 'ஒவ்வொருவரும் எல்லோருக்காகவும், எல்லோரும் ஒருவருக்காகவும்' செயல்படவேண்டும். இது, கூட்டுறவின் நன்கறிந்த கொள்கையான 'எல்லோரும் ஒவ்வொரு வருக்காகவும், ஒவ்வொருவரும் எல்லோருக்காகவும்' என்பதில் சுருங்கக் கூறப்பட்டுள்ளது.

கூட்டுறவு இயக்கம், அதன் அடிப்படைக் கொள்கைகளின் இயல்பிலேயே, ஒரு பொருளாதார இயக்கமாக (Economic movement) மட்டுமல்லாமல், சமுதாய ஒழுக்கப் பண்புடன் தொடர்புகொண்ட (concerned with social morality) ஓர் இயக்க மாகவும்கூட இருக்கிறது. சிக்கனமும், தற்சார்புக்கு வழிகாட்டும் தன்னுதவியும், பரஸ்பரச் செயல் தொடர்பில் நேர்மையும், இந்த இயக்கத்தால் வளர்க்கப்படுகின்றன. இஃது உண்மையான ஒரு மக்கள் நல அரசை (Welfare State) அமைப்பதற்கு உதவும், தன்னலமும், தன்னலமற்ற பொதுநலமும் சேர்ந்த இணைப்பாகும். அறிஞர் கால்வெர்ட் (Calvert) அவர்கள் சொல்வதைப்போல், "ஒரு பொதுவான தேவையைப் பூர்த்தி செய்வதற்காக மனிதர்கள் சமத்துவ அடிப்படையின்பேரில் ஒன்றாகச் சந்திப்பது என்ற நிகழ்ச்சியானது, பொருளாதார அனுகூலத்தைவிட, மேலான காரியத்திற்கு வழிகாட்டும் ஒரு தன்னலமற்ற ஒழுக்கத் திறத்தை வளர்ப்பதற்கான வாய்ப்பைத் தருகிறது; எனவே, அநேகருக்குக் கூட்டுறவு ஒரு மதப்பற்றாக (faith) இருக்கிறது'. சமுதாயத்தின் நலனிற்காகத் தனி நபர் நலன்களைத் தாழ்த்திக் கொள்வதற்கு எழும் அவாவிலும், விருப்பத்திலுந்தான் உண்மை யான கூட்டுறவு உணர்ச்சி அமைந்திருக்கிறது. 'கூட்டுறவு இயக்கத்தின் இந்தக் கல்வி ஒழுக்கப் பயன்தான் நாட்டுப்பற்றுள்ள வர்களையும், பொதுநல உணர்ச்சி உள்ளவர்களையும் ஈர்க்கிறது. கூட்டுறவு இயக்கம் குடியானவர்கள், கைவினைஞர்கள் ஆகிய வர்களின் உள்ளார்ந்த தொழில் வணிகத் திறமையை வளர்ப்ப தோடு மட்டுமல்லாமல், சமுதாயத் தலைவர்களையும் தயாரிக் கிறது; அது சமுதாயப் பண்புகளின் வளர்ச்சியை ஊக்குவிக்

கிறது; நாணயமும் விசுவாசமும் கட்டாயமானவையாகின்றன; ஒன்றுபட்டுத் திட்டமிட்ட முயற்சியின்மூலம் பெறக்கூடிய மேம்பட்ட வாழ்க்கை வாய்ப்புத் திறக்கப்படுகிறது; வெறும் பொருளாதார இலாபத்தைத் தனக்காகத் தேடிக்கொள்வதற்கு மேலாக முயலப்படவேண்டிய சிலவும் இருக்கின்றன என்று தனி நபர் உணருகிறார். கூட்டுறவு, மக்கள் மனத்தில் நம்பிக்கையையும் முன்னேற்ற இலட்சியங்களையும் புகுத்தி, வாழ்க்கையின்மீது அவர்கள் கண்ணோட்டத்தைப் புரட்சிகரமாக்குகிறது'.

கூட்டுறவின் அடிப்படைக் கொள்கைகள் ஒரு மக்கள் ஆட்சியைச் சார்ந்த வாழ்க்கை நெறியின் இன்றியமையாத கொள்கைகளாகவும்கூட இருக்கின்றன. சரியான முறையில் கூட்டுறவு நிறுவனங்களைப் பரவச் செய்வதைவிட, சமுதாயத்தில் மக்களாட்சியைச் சார்ந்த வாழ்க்கை நெறியைப் புகுத்துவதற்கு வேறு எதுவும் மேலான திட்டமிட்ட ஏற்பாடாக இராது. ஏனெனில், அத்தகைய சிறு நிறுவனங்கள், உள்ளூருக்குரிய முயற்சி தொடங்கு நிலையை (local initiative) வளர்ப்பது மட்டுமல்லாமல், 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்குதான்' என்ற சமத்துவ அடிப்படையின்பேரில் மக்களைத் தங்கள் பொது நல்வாழ்வை வளர்ப்பதற்காகவும் ஒன்றுசேர்க்கின்றன.

## கூட்டுறவின் நோக்க வரம்பு
(Scope of Co-operation)

கூட்டுறவு இயக்கம், அதன் இயல்பில், உண்மையாகவே பொருளாதாரத்தைப் பற்றியதாகவும், தொழில் வாணிபம் செய்யும் ஒரு முறையாகவும் இருப்பதால், அதன் நோக்கம் தொழில் வாணிபத்தைப் போன்று பெரியதாகவும், விரிவுடையதாகவும் உள்ளது. ஆகையால்தான், தொடக்கத்தில் விவசாயிகளின் நலனுக்காகக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் மட்டும் இருந்த போதிலும், பின்னர், கூட்டுறவு அநேக துறைகளில் பயன் படுத்தப்பட்டு வருகிறது. உண்மையாகவே கூட்டுறவு முதன் முதல், இந்தியாவைப் போன்று பெரும்பாலும் விவசாயத்தை நம்பிக் கொண்டிருக்கும் எல்லா நாடுகளுக்கும் பொதுவான அம்சமாயிருக்கும் கிராமக் கடன் பிரச்சினைக்கு ஒரு பரிகாரமாகவே புகுத்தப்பட்டது. ஆனால், பின்னர்க் கூட்டுறவுக் கடன் சங்கங்களின் அடிப்படையாய் அமைவுறும் மூலாதாரமான கொள்கையானது இதரப் பொருளாதாரத் துறைகளிலும் நன்கு பயன்படுத்தப்பட முடியும் என்று அனுபவத்தின்மூலம் மக்கள் கண்டுகொண்டனர். கூட்டுறவு இயக்கம் பெருமளவு வளர்ச்சி

அடைந்திருக்கும் ஒரு திசையானது, கூட்டுறவுக் கொள்முதல் செய்தலுக்காகவும், விற்பனைக்காகவும் ஏற்பாடு செய்தலாகும். அத்தகைய கூட்டுறவு வர்த்தகத்தின் மிக முக்கிய உதாரணம், உறுப்பினர்களின் தேவைகளை விநியோகிப்பதற்காகச் செயல்படும் வர்த்தக சங்கங்களான கூட்டுறவுப் பண்டசாலைகள். அண்மை ஆண்டுகளில் வீடு கட்டுதல், காப்பீடு (Insurance), கைத்தறித் துணி உற்பத்தி, விற்பனை, பால் விற்பனை முதலிய நோக்கங்களுக் காகக் கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட்டு அவை வெற்றிகரமாகச் செயல்பட்டு வருகின்றன. எனவே, சாதாரண மனிதன் நல னுக்காகக் கூட்டுறவைப் பல்வேறுபட்ட வழிகளில் பயன்படுத்திக் கொள்ளமுடியும். அவற்றுள் சில, விவசாயிகள் கூட்டுறவுப் கடன் சங்கங்களின் மூலமாகவும், நிலவள வங்கிகள் மூலமாகவும், பருவ விவசாயப் பணிகளுக்காகத் தேவைப்படும் கடனுதவி மற்றும் இதர உதவிகளையும், சேவைகளையும் பெறுவதோடு மட்டுமல்லா மல், கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின்மூலம் தங்கள் விவசாயப் பொருள்களையும் இதர விளைபொருள்களையும் விற்பனை செய்யவும் கூட உதவி பெறுகிறார்கள். கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் போன்ற பதனப்படுத்தும் கூட்டுறவுச் சங்கங்கள் விவசாயிகள், தங்கள் விளைபொருள்கள் வழியாக உயர்ந்த இலாபத்தைப் பெற உதவுகின்றன. தொழில் இழந்த முன்னாள் கள்ளிறக்கும் தொழி லாளர்களும், மாஜி இராணுவ வீரர்களும், தங்கள் மறுவாழ்வுக் கான திட்டங்களுக்காகக் கூட்டுறவை நாடுகிறார்கள். சிறு கைத் தொழிலாளிகளும் கூட்டுறவுச் சங்கங்கள்மூலம் தங்களுக்குத் தேவையான கச்சாப் பொருள்களை வாங்கி உற்பத்தி செய்த பொருள்களை விற்பனை செய்கிறார்கள். கூட்டுறவு நூற்பு ஆலைகள், கூட்டுறவுத் தேயிலைத் தொழிற்சாலைகள், கூட்டுறவு உரத் தொழிற் சாலைகள் முதலிய விரிவான நடவடிக்கைகளுக்கும்கூடக் கூட்டுறவு இயக்கத்தில் வாய்ப்பு இருக்கிறது. இவை தவிர, போக்கு வரத்துத் துறைத் தொழிலாளிகள், ஆலைத் தொழிலாளிகள், சம்பளம் பெறும் ஊழியர்கள், மீனவர்கள் ஆகியவர்களின் நலனுக்காகவும் பலவிதக் கூட்டுறவுச் சங்கங்களும் மற்றும் கூட்டு றவு வேளாண்மைச் சங்கங்களும், நீர்ப்பாசனச் சங்கங்களும், இதரவகைச் சங்கங்களும் இருந்துவருகின்றன. எனவே, பல்வேறு துறைப் பொருளாதார நடவடிக்கைகளுக்குக் கூட்டுறவுக் கொள்கைகளைப் பயன்படுத்தும் வாய்ப்பு மிகப் பரந்திருக்கிறது.

**கூட்டுறவின் வரையறைகள்** (Limitation of Co-operation)

எனினும், கூட்டுறவுமுறைச் செயற்பாடு சில வரையறை களுக்கு உட்பட்டதாகும். ஒரு தனிநபர்ச் செயலைவிட, தொகுதி

களாகப் பலர் சேர்ந்து செயல்படுவதனுல் அதிகமான அனுகூலங் களையளிக்கும் துறைகளில் மட்டும்தான் கூட்டுறவு வெற்றிபெற முடியும். துப்புரவு அல்லது கல்வி போன்ற சில சேவைகளை ஒவ்வொரு குடிமகனுக்கும் வழங்கவேண்டிய துறைகளில் அது சரியான அமைப்பன்று. மற்றும், கூட்டுறவு ஒரு முறையே தவிர, கூட்டுறவைப் பயன்படுத்துகிற திட்டம் பழுதுள்ளதாக இருந்து அதன் உள்ளார்ந்த குறைபாடுகளின் காரணத்தால் தோல்வி யுற்ருல், அது திட்டத்தை அமல்படுத்துவதற்குக் கையாளப்பட்ட கூட்டுறவு முறையின் குற்றமன்று. மற்றும், கூட்டுறவு சில நிலைமைகளிலும், சூழ்நிலைகளிலும் மட்டும்தான் வெற்றிபெறக் கூடும். முன்னதாகவே தயாரிக்கப்பட்டு உடனடியாகப் பயன் படுத்தத்தக்கதாக அதனை மக்களுக்குக் கொடுத்துவிட முடியாது. அது, மக்களிடமிருந்தே, அவர்கள் சொந்தமான தேவைகள், விழைவுகள், விருப்பங்கள், அறிவாற்றல்கள் ஆகியவைகளிலிருந்து தோன்றவேண்டும். அஃது ஒரு பெரிய சமுதாயத் துணிவு முயற்சி என்று உணர்ந்து, ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களுக்காக நீதி முறையானதும், மேலானதுமான நிலைமையை உருவாக்க வேண்டுமென்ற விருப்பத்தினுல் தூண்டப்பட்டு, அந் நிலைமையை யடைய ஒன்றுசேரவேண்டும் என்ற அவாப் பெற்றிருந்தால் தான், கூட்டுறவு மிகச் சிறப்பாக வெற்றியடைகிறது.

## கூட்டுறவின் தத்துவம்
(Philosophy of Co-operation)

### (i) தோற்றுவாய் (Introduction)

கூட்டுறவு ஒரு வாழ்க்கைத் தத்துவத்தையும், தனக்கே உரிய ஒரு குறிக்கோள் பணித் திட்டத்தையும் உடையது; அது தொழில்-வாணிபம் செய்யும் ஒரு முறையாகவும், வாழ்க்கை நெறியாகவுமுள்ளது; அஃது ஓர் அமைப்பு முறையாகவும், உயிர்த் தத்துவமாகவும் இணைந்திருக்கிறது; அஃது ஒரு செயற்பாட்டு முறையாகவும் ஓர் அறநெறிச் சக்தியாகவும் இணைந்திருக்கிறது. அது, சட்ட ஆதரவு பெற்ற ஒருவகை நிறுவனம். மற்றும், அது சிறு அமைப்புகளைத் தத்தம் பொது நன்மைக்காகத் தம் சாதனங் களைக் கூட்டாகச் சேர்க்க உதவும் ஒரு பொருளாதாரச் செயற் பாட்டுமுறை. பொது நோக்கத்திற்காக இவ்வாறு மனிதர்கள் ஒன்று சேர்வதும், ஒன்றுபட்டுச் செயல்படுவதும், இதற்குத் தனி நபர் இலாபம் என்கிற வெறும் பொருளாதார நோக்கத்திற்கு மேலானதும் அப்பாற்பட்டதுமான ஒரு சமுதாய அறநெறி மதிப்பைத் தருகிறது.

**(ii) தோற்றம் (Origin)**

'கூட்டுறவிசம்' (Co-operatism) என்ற சொல், கூட்டுறவில் சமுதாய நிலைமைகளை மேம்படுத்தும் ஒரு சாதனத்தை மட்டுமன்றி, சமுதாயத்தைப் புதுப்பித்தலுக்கான ஒரு முழுமையான செயல்முறைத் திட்டத்தையும் கண்டவர்களால் கையாள ஆரம்பிக்கப்பட்டு வந்த 'நியோலோஜிசம்' என்ற ஒரு சித்தாந்தக் கோட்பாட்டைக் குறிப்பதும் ஆகும்.

ஒரு கருத்துச் சாயலில், கூட்டுறவானது, ஒன்பதாம் நூற்றுண்டு முற்பகுதியின் 'அசோசியனிஸ்ட் சமஉடைமை' (Associationist Socialism) என்பதிலிருந்து தோன்றியது என்று சொல்லலாம். கூட்டுறவு இயக்கத்தின் தோற்றத்தையும், அதன் தொடர்பான குறிக்கோள்களின் தோற்றத்தையும் இரண்டு மேதைகளான, ஆங்கில நாட்டைச் சார்ந்த 'சமதர்மத்தின் தந்தை' ராபர்ட் ஓவன் (Robert Owen, 1771–1858), அவருக்கு ஓர் ஆண்டு இளையவரான ஃபிரான்சு நாட்டு சமஉடைமைவாதி (French-Socialist) சார்லஸ் ஃபோரியர் (Charles Fourier) ஆகியவர்களின் மனக் கற்பனையானவையானதும் (visionary) செயல்முறைக்கொவ்வா இலக்கியலானவையானதுமான (utopian) கருத்துகளிலிருந்து தொடரலாம்.

**(iii) கூட்டுறவின் முன்னோடிகள்—ஓவனும் ஃபோரியரும் (Forerunners of Co-operation—Owen and Fourier)**

ராபர்ட் ஓவனும், சார்லஸ் ஃபோரியரும் 'வருங்காலத்துச் சமுதாயத்திற்கு முன்மாதிரியாக (model) பயன்படவிருந்த நுணுக்க மாதிரிப் படிவங்களான (microcosms) தன்னுட்சியுரிமையுடைய சிறு சங்கங்களைத் (autonomous associations) தோற்றுவிக்க முயன்றனர். இந்த மிகச் சிறிய தனி நிறுவனங்களைத் தோற்றுவிப்பதில் அவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். மிகச் சிறிய நிறுவனப் பகுதிகளான இந்த நுணுக்க மாதிரிப் படிவங்கள், பின்னுல் தோன்றவிருக்கும் மனித சமுதாயத்தின் வடிவத்தைக் காண்பிக்குமென்று நம்பினர். பரந்த சமுதாயத்தில் செயல் விளக்க முயற்சிகளை ஒளிக்கதிர்களைப்போலப் பரப்புகின்ற நிலையங்கள் போன்று அவை இருந்தன. தற்காலக் கூட்டுறவுக் கொள்கைகளின் உரிமைவாதிகளாக இருக்க முடியாவிட்டாலும், அவை ஆங்கில நாட்டிலும் ஃபிரான்சு தேசத்திலும் தொழிலாள வகுப்பினரை, ஏறக்குறையக் கூட்டாண்மைக் கோட்பாட்டுப் (collectivist) போக்குடைய எல்லாவிதமான பொதுவுடைமைச் சமுதாயங்களை நிறுவுவதற்கு வழிசெலுத்தும் சங்கத்தை அமைப்

பதற்கான ஆர்வத்தை உண்மையாகவே அளித்துத் தூண்டியது. சரித்திரப் பிரசித்திபெற்ற இவ்விரண்டு புள்ளிகளும் தமக்குப் பின்னல் கூட்டுறவு எடுக்கவிருந்த வடிவத்தின் விவரங்களை உருவாக்காவிட்டாலும், பின்னர் உருவாவதற்கிருந்த கூட்டுறவுக் கொள்கைகளின் அடிப்படைகளை இருவரும் கூறினர்.

### (iv) ராக்டேல் பயனீர்ஸ் அவர்களால் விளக்கப்பட்ட கூட்டுறவுத் தத்துவம்—பொருளாதார, சமுதாய, ஒழுக்கப் பண்புக் கூறுகள் (Co-operative Philosophy as expounded by Rochdale Pioneers—Economic, Social and Moral)

1844ஆம் ஆண்டில், ராக்டேல் ஈக்விடபில் பயனீர்ஸ் (Rochdale Equitable Pioneers) சங்கத்தை நிறுவிய புகழ்பெற்ற ராக்டேல் பயனீர்ஸ் (Rochdale Pioneers) என்பவர்கள்தாம் தற்காலக் கூட்டுறவு இயக்கத்தைத் தோற்றுவித்தவர்கள். இவர்களால் தெளிவுபடக் கூறப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளை ராபர்ட் ஓவன், சார்லஸ் ஃபோரியர் போன்ற சமுதாயச் சிந்தனையாளர்களின் சமுதாயத் தத்துவம், கருத்துகள் ஆகியவற்றின் தொடர்ச்சியானவையாகக் கருதப்படவேண்டும். ராக்டேல் பயனீர்ஸ் என்பவர்கள், மனிதனை மேம்பாடடையச் செய்வதற்குத் தம் முயற்சிகள் எல்லாவற்றையும் அர்ப்பணித்த ராபர்ட் ஓவனின் சீடர்கள். அவர்கள்கூடக் கூட்டுறவுச் செயல்முறைமூலம் மனிதனை மேம்படுத்த முயன்றார்கள். மனிதனை ஓர் உயர்ந்த அறநெறித் தளத்திற்கு உயர்த்தும் அவாதான் கூட்டுறவின் தனக்கேயுரிய அம்சமாக இருந்திருக்கிறது. அநேக ஆண்டுகளாகவும், 'முயலுதல், தவறு செய்தல்' என்ற நீண்டதோர் நடைமுறையிலும், கூட்டுறவு இயக்கத்தில் அதன் வர்த்தக விதி விவரங்களுடனும், கொள்கைகளுடனும் கூடிய கூட்டுறவின் நடைமுறை வடிவம் எல்லாச் செயல் உருவங்களிலும் மக்களால் வளர்க்கப்பட்டன என்பது உண்மையே. ஆனல், பொருளாதாரச் சமுதாய நடத்தையில், சகவாசச் சிந்தனையும் கருத்துகளும் மக்கள் செயலும் உருவாகும் சூழ்நிலையில்தான் கூட்டுறவு வழங்கும் தத்துவமும் பயனும் வாழ்க்கை நெறியும் காணப்படுகின்றன. அறிஞர் ஜி. ஃபாக்கட்டின் (G. Fauquet) கருத்தின்படி, கூட்டுறவு பொருளாதாரத்தைச் சமுதாயத்தில் மறு இணைப்புச் செய்கிறது. மற்றும், ஒரே சமயத்தில் தனி நபரைப் பொருளாதாரத் தளத்தின் மீதும் அறநெறித் தளத்தின்மீதும், சமுதாயத்துடன் ஒன்று சேர்ப்பதில்தான் அதன் சிறப்பு உதவிக்கொடை (special contribution) அமைந்திருக்கிறது. அது தன் உறுப்பினர்களின் பொருளாதார நிலைமையை மேம்படுத்தும் பிரதான நோக்கத்

துடன், அவர்களை ஒரே சமயத்தில் அறநெறித் தளத்தின்மீதும் சமுதாயத் தளத்தின்மீதும் அபிவிருத்தியடையச் செய்யும் ஒரு மிக உயர்ந்த காரியத்தைச் சாதிக்கிறது. அறிஞர் ஜி. ஃபாக்கெட் (G. Fauquet) கூட்டுறவின் கூடிச்சேரும் தன்மையை மேலும் வலியுறுத்திக் 'கூட்டுறவின் குறிக்கோள், மனிதர்கள் ஒரு முழுமையான தனிமனித வாழ்க்கைக்குத் தனிப்பட்ட முறையில் உயரவும், கூட்டாண்மைமுறையில் ஒரு முழுமையான சமுதாய வாழ்க்கைக்கு உயரவும், அவர்களைத் தனிநபர்ப் பொறுப்புணர்ச்சியுடனும் கூட்டுப் பொறுப்புணர்ச்சியுடனுமுள்ள மனிதர்களாக ஆக்குவது' என்று கூறுகிறார். கூட்டுறவின் இந்த இன்றியமையாத இயல்பு, அதை இதர வகையான வர்த்தக நிறுவனங்களிலிருந்து முழுதும் வேறுபட்ட ஒரு தனி அடிப்படையில் நிற்கச் செய்கிறது. கூட்டுறவுக் கொள்கைகள் பற்றிய அனைத்துநாட்டு ஆணைக்குழுவின் (International Commission on Co-operative principles) கூற்றின்படி, 'கூட்டுறவு அதன் வெறும் வர்த்தகச் செயல்திறனின் நோக்கு நிலையிலிருந்து மட்டுமன்றி, மனித வாழ்வை வெறும் லோகாயத வாழ்வுக்கு அப்பாற்பட்டும், மிருக வாழ்வுக்கு அப்பாற்பட்டும் உயர்த்தும் அறநெறி மதிப்பிற்கும், சமுதாய மதிப்பிற்கும் அதன் உதவியின் நோக்கு நிலையிலிருந்தும்கூட, தான் சோதனை செய்யப் படுவதற்குப் போதிய காரணமுள்ளது என்று நிறுவுகிறது'. இது கூட்டுறவின் ஓர் இன்றியமையாத பண்புக்கூறு. கூட்டுறவின் இந்த அத்தியாவசியமான பண்புக் கூற்றை, எந்தவிதமான செயல்திறனின் தனித்தரமான வாக்கியங்களில் மதிப்பிடவோ அளக்கவோ கடினமாகக்கூட இருக்கிறது.

கூட்டுறவின் முக்கிய நோக்கம் பரஸ்பரப் பொருளாதார உதவியை அளிப்பதாக இருந்தாலும் அதற்குச் சமுதாய நலம் உள்ளடங்கிய பொருளும்கூட இருக்கிறது. ஏறக்குறைய எல்லா ராக்டேல் கொள்கைகளையும் இந்த இரண்டு கோணங்களிலிருந்தும் சீர்தூக்கிப் பார்க்கக்கூடும். இரண்டு பக்கங்களையும் கவனத்தில் வைத்தாலன்றி, கூட்டுறவின் உண்மையான பொருள் மறைந்து விடும். மற்றும், கூட்டுறவில் மக்களாட்சிக் கொள்கை செயல்படு கிறது. 'ஒரு மனிதன் – ஒரு வாக்கு' என்ற கொள்கையின் பேரில் உண்மையான மக்களாட்சி செயல்படுகிறது. கூட்டுறவும், மனிதரின் அந்தஸ்து, சமயம் அல்லது அரசியல் ஆகியவற்றிற்குக் கவனம் செலுத்தாத அதே குறிக்கோளைத்தான் வலியுறுத்து கிறது. கூட்டுறவு நிறுவனங்கள் ஓர் உண்மையான மக்களாட்சி அமைப்பின்கீழ்ப் பரஸ்பரப் பொருளாதார உதவியை வழங்க வேண்டும். கூட்டுறவு, சமுதாய நீதி முன்னேற்றத்திற்கு அர்ப் பணிக்கப்பட்ட ஒரு பொருளாதாரப் பணித்துறை என்பதை

யாவரும் உணரவேண்டும். இதரவகைப் பொருளாதார நிறுவனங்களைப் போலல்லாது சமுதாயத்தின் கூட்டுறவுத் தத்துவமானது, தனி மனிதருக்குரிய சுதந்திரம், சமத்துவம் ஆகியவற்றால் கட்டுப்படுத்தப்பட்டும், ஜனநாயக ரீதியில் நிருவாகம் செய்யப்பட்டும், ஒரு தன்னுரிமை உடையதும், அனைவருக்கும் ஆனதுமான சங்கத்தின் அடிப்படையின்பேரில் அமைந்திருக்கவேண்டும். உண்மையான கூட்டுறவின் குறிக்கோள் ஒவ்வொருவருக்காகவும் ஒரு மேலானதும் முழுமையானதுமான வாழ்க்கையைச் சாதிப்பதாகும்.

### (v) அறநெறிப் பண்புக் கூற்றைப்பற்றிக் காந்தியடிகளின் வலியுறுத்தல் (Gandhiji's stress on Moral Aspect)

இயக்கத்தின் அறநெறிப் பண்புக்கூறானது புறக்கணிக்க முடியாத ஒரு முக்கியமான அம்சமாகும். கூட்டுறவு, பொருளாதார இலாபங்களையும், சமுதாய இலாபங்களையும் தவிர, தன்னுதவி, பரஸ்பர உதவி, உழைப்பு, சிக்கனம், முன்மதி, பற்றுறுதி ஆகிய பண்புகளையும் பேணி வளர்ப்பதற்கு ஊக்கமளித்துத் தனி நபரின் அறநெறிப் பண்பை உயர்த்தவும் முயலுகிறது. கூட்டுறவு ஓர் ஒழுக்கநெறி இயக்கம்; கூட்டுறவுச் சக்தி மேலான மனிதர்களையும் மேலான சமுதாயத்தையும் உருவாக்க உதவுகிறது. 1917ஆம் ஆண்டில் பம்பாய் மாகாணக் கூட்டுறவு மாநாட்டில் உரையாற்றுகையில் காந்தியடிகள் பின்வருமாறு மொழிந்தார். 'கூட்டுறவு இயக்கம் எந்த அளவுக்குச் சமய மதிப்பார்வமிக்க உணர்ச்சி வேகத்துடன் தூண்டப்பட்ட மனிதர்களால் இயக்கப்படும் ஓர் ஒழுக்கநெறி இயக்கமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு மட்டுந்தான் அஃது இந்தியாவிற்கு ஒரு திருவருட் பாலிப்பாகும். ஆகவே, வட்டிக்காரனுடைய பிடியில் இருப்பதன் காரணமாகவும், கொடுமைப்படுத்துகிற வறுமையின் காரணமாகவும் ஒழுக்கந்தவறியும், ஆனால் ஒழுக்கமான வாழ்க்கை நடத்த விருப்பமுள்ள மனிதர்களுக்கு மட்டுமே கூட்டுறவு வரையறுக்கப்படவேண்டும் என்பது பெறப்படும். நியாய வட்டியில் கடன்களைப் பெறும் வசதியானது ஒழுக்கமற்ற மனிதர்களை ஒழுக்கமுள்ளவர்களாகச் செய்துவிடாது. பொருளாதார வளத்தின் பொருள் ஒழுக்கநெறி வளர்ச்சி என்று நாம் பெரிதும் நம்புகிறோம். இந்தியாவிற்கு இவ்வளவு பெரிய நன்மை பயக்கக்கூடிய ஓர் இயக்கம், வெறும் எளிமையான கடனுதவியை வழங்குவதற்கான ஒன்றாக, இழிந்த நிலையை அடையக்கூடாது என்பது அவசியமானதாகும். நாம் இயக்கத்தின் வெற்றியை, நிறுவப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கையாலல்லாமல், கூட்டுறவாளர்களின் ஒழுக்க நிலையின் மூலம்தான் அளிக்கவேண்டும்'.

எனவே, கூட்டுறவு இயக்கம் ஓர் ஒழுக்கநெறி இயக்கமாகும்; கூட்டுறவுச் சக்தியானது மேலான மனிதர்களையும் மேலான சமுதாயத்தையும் உருவாக்க உதவுகிறது.

## (vi) கூட்டுறவுத் தத்துவத்தின் சிறப்பு இயல்புகள் (Salient features of Co-operative Philosophy)

கூட்டுறவுத் தத்துவத்தின் முனைப்பான சிறப்புக் கூறுகளாவன: (1) கூடிச்சேர்ந்து செயல்படுதல் (associated action). அதாவது, பிறருடன் சேராத தனி நபரின் தனிமைச் செயலால் சாதிக்க முடியாத ஓர் இலக்கை ஒரு சங்கத்தால் சாதிக்கமுடியும் என்பது. பரஸ்பர உதவியின்மூலம் தன்னுதவியைப் பயனுறுதியுள்ளதாகச் செய்வதாலும், தங்களிடையே கட்டொருமைப் பாட்டுறவை வலுப்படுத்துவதாலும், தங்கள் வளப்பொருள்களைப் பொதுவாக்கிக்கொள்ளும் ஏற்பாட்டைக்கொண்டு, தனிப்பட்ட நபரின் வலுக்குறைவு என்ற இயல்பான சூழலிலிருந்து வெற்றி பெற முடிகிறது. இஃது 'இணைப்பே வல்லமை நிலை' (Unity is strength) என்ற எல்லோருக்கும் தெரிந்த சாதாரணக் கொள்கையின் ஏற்பிசைவு. தனிப்பட்ட நபரின் நடவடிக்கையைவிட, கூட்டு நடவடிக்கையானது பெரும் நலன்களை நல்கவல்லது; மற்றும், அது கோரின பலனையும் விளைவிக்கிறது. (2) எல்லோருக்குமுரிய பொதுத் தன்மை (Universality) அல்லது எல்லோருக்குமுரிய சங்கம் (Universal Association): அதில் சேர விரும்பும் எல்லா மனிதர்களுக்கும், கூட்டுறவுச் சங்கம் தன் அங்கத்துவத்தை விரிவாகத் திறந்து வைக்கிறது. இயற்கையிலேயே இந்த நிறுவனங்களில் சேர விருப்பார்வமுள்ள மனிதர்களின்மீது எந்தவிதமான தடை வரம்பும் இருக்கமுடியாது. (3) தனி நபரின் சுதந்திரமான விருப்பம் அல்லது தன் விருப்பார்ந்த செயன்முறை அடிப்படை (free will of the individual or voluntary basis): தங்களுக்கு உதவி செய்து கொள்வதற்காகவும் பிறருக்கு உதவி செய்வதற்காகவும் மனிதர்கள் தன்னிச்சையாக நிறுவனத்தில் சேருகிறார்கள். நிறுவனத்தில் சேருவதற்கு வலுக்கட்டாயமோ (compulsion) அல்லது கட்டளையோ (direction) இல்லை. (4) சமத்துவம் (Equality): சங்கத்தின் கண்களில் எல்லா மனிதர்களும் சமநிலையாளர்கள். இந்தச் சமத்துவக் கொள்கையானது கூட்டுறவுச் சங்கம் ஒருவகைப் பொருளாதார மக்களாட்சி (Economic Democracy) என்ற மெய்மைக்குத் தொடர்புடையது. (5) மக்களாட்சி அடிப்படை அல்லது பொருளாதார மக்களாட்சி (Democratic basis of Economic Democracy). கூட்டுறவுச் சங்கத்தின் அமைப்பு ஒவ்வோர் உறுப்

பினரின் வாக்குச் சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' என்பது (One man one vote) அதன் முக்கியமான கொள்கை. நிறுவனத்தில் தனக்கிருக்கும் பிணைப்பு அக்கறையின் பலத்தின்பேரில் எந்த உறுப்பினரும் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்குகளுடையவராகமாட்டார். இந்த மக்களாட்சிக் கண்ணோட்டமானது (Democratic outlook) கூட்டுறவுச் சங்கத்தில் இலாபங்களைப் பிரித்துக்கொள்வதில் கைப்பிடிக்கப்படும் கொள்கையில் பிரதிபலிக்கப்படுகிறது. மூலதனம் முறைப்படுத்தப்பட்ட ஒரு மிதமான இலாப ஈவை (dividend) மட்டும் தான் பெற்று, மிகுதியாயுள்ள இலாபம் உறுப்பினர்களுக்கு அவர்கள் நிறுவனத்துடன் மேற்கொண்ட நடவடிக்கை அளவின் விகிதப்படி பிரித்துக் கொடுக்கப்படுகிறது. (6) சேவை நோக்கு – இலாப நோக்கு இல்லை (Service and not profit is the motive) : ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் செயல்நோக்கம் உறுப்பினர்களுக்கு மிகச் சிறந்த சேவை புரிவதேயன்றிப் பெருமளவு இலாபங்களைச் சம்பாதிப்பதன்று. (7) தனி நபர் சுதந்திரம் (Individual freedom or personal liberty): தனி மனிதனுக்குத் தன்னாட்சியுரிமை உறுதியாக்கப்படுகிறது. மற்றும் தனிநபரின் முயற்சி தொடங்கும் துணிவுக்குத் (Individual initiative) தடைக்கட்டு இல்லை. ஒரு குடிமகனைப் பரஸ்பர உதவிக் கொள்கையின்பேரில் தானே காரியங்களைச் செய்வதற்குக் கற்பித்தும், ஊக்குவித்தும் ஆயாசமுண்டாக்குகிற ஒருபடித்தான தன்மை (monotonous uniformity), மையக்கட்டுப்பாட்டின்கீழ் ஒருதிறமாக்குதல் (regimentation), அல்லது அதிகார இனஆட்சி (bureaucratisation) ஆகியவற்றின் போக்கினைத் தவிர்க்கிறது. (8) நடுநிலை நேர்மையும், சமுதாய நீதியும் (Equity and Social Justice): கூட்டுறவு நிறுவனங்களின் நடவடிக்கைகளில் இந்த இரண்டு பண்புகளும் கைப்பிடிக்கப்படுகின்றன. எந்த நபரையும் பிரிவினரையும் சுரண்டும் அடிப்படையில் அது அமையவில்லை. நியாயமானதும் ஒழுங்கு நீதியானதுமான செய்முறைகளே ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் செயற்பாட்டிற்கு வழிகாட்டுவன. (9) கட்டொருமைப்பாட்டு உணர்ச்சி அல்லது குழு மதிப் புணர்ச்சியை வளர்த்தல் (Promotion of a spirit of solidarity or esprit de corps) : உறுப்பினர்களிடையே சகோதரத்துவ உறவுகளும் கூட்டுரிமை உணர்வும், மனப்பான்மையும் பரப்புவதன்மூலம் இந்தப் பண்புகள் வளர்க்கப்படுகின்றன. பொதுக் குறிக்கோளை (common objective) அடைவதற்கு ஒன்று சேருகின்ற உறுப்பினர்களிடையே இந்த உணர்வுகள் பரவ வேண்டும். (10) ஒரு புதிய சமுதாய அமைப்பு (New Social order) கூட்டுறவு இயக்கத்தின் பிரதான நோக்க விருப்பம் பொருளா

தாரமாக விருப்பினும், அதனுடைய இறுதியான குறிக்கோள் அல்லது செயல் நோக்கம், செல்வவளத்தில் ஏற்றத்தாழ்வுகள் குறைக்கப்பட்டுச் சமுதாயத்தின் வலுவற்ற பிரிவினர் ஒரு மேலான வாழ்க்கையை நடத்துவதற்குதவும் ஒரு புதிய சமுதாய மரபை உருவாக்குவது. கூட்டுறவு இயக்கம், செல்வவளமும் உற்பத்தி சாதனங்களும் ஒருசிலர் கையில் குவிவதைத் தடுத்து, ஒரு புதிய சமூதாய மரபைத் தோற்றுவிக்கப்பாடுபடுகின்றது. (11) மனிதர்களின் உயர்படி மதிப்பை ஒப்புக்கொள்ளுதல் (Recognition of the dignity of men): மனிதன் ஒரு மிக நிறைவான வாழ்க்கையை நடத்தவேண்டும். கூட்டுறவு, மனிதர்களையும் சமுதாயத்தையும் மேம்படுத்துகிறது. (12) உயர்ந்த ஒழுக்கப்படித்தரம் அல்லது நியதி (High moral standards): இந்தப் பண்பை வற்புறுத்திப் பயிற்றுவிப்பதன்மூலம், கூட்டுறவு, சமுதாய ஒழுக்கத்தர முன்னேற்றத்திற்கு உதவுகிறது.

கூட்டுறவு நிறுவனங்களைச் சேர்ந்த இந்தத் தத்துவங்களைக் காட்டிலும் உயர்வான ஒரு தத்துவம் வேறு இருக்க முடியாது.

**(vii) சில பேரறிஞர்களின் விளக்கத்தின்படி கூட்டுறவின் தத்துவம்** (Co-operative Philosophy as expounded by eminent men)

இந்தியாவில் நிலவும் சந்தர்ப்ப நிலைகளைச் சிறப்பாகக் குறித்துக் கூட்டுறவுத் தத்துவத்தை விவரமாக விளக்கிக்கூறிய முன்னாள் இந்திய ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் பின்வருமாறு உரைத்துள்ளார்: "கூட்டுறவு, பிரதானமாக ஏழை மனிதனின் ஒரு நிறுவனமாக இருக்கிறது. அது சிறு குடியானவர்களை நடுநாயகமாகக்கொண்ட ஒரு பொருளாதார அமைப்பிற்குப் பொருந்தியவண்ணம் இருக்கிறது. தனி மனிதன் என்ற முறையில் ஒரு குடியானவன் வலிவற்றவனாகவும், தன்னைச் சுரண்டுவதற்கு வழிசெலுத்தும் பிரும்மாண்டமான சக்திகளை எதிர்த்து நிற்பதற்கு நம்பிக்கையில்லாதவனாகவும் இருக்கிறான். கூட்டுறவின்மூலம் அவன் பலத்தைப் பெறுகிறான். அதே நேரத்தில், கூட்டுறவுச் செயல்முறையானது தனிமனிதனுக்குப் போதுமான சுதந்திரத்தையும் வழங்குகிறது. ஆயினும், அவனுடைய தனிநபர் சுதந்திரம் அவன் ஒரு பகுதியாக இருக்கும் சமுதாயத்தின் நலனுக்காகப் பயன்படுத்தப்படவேண்டியிருக்கிறது. ஒழுங்குமுறைக்கும், சுதந்திரத்திற்கும் இடையே உள்ள இந்தச் சுமுகமான இணக்கம்தான் **'எல்லோரும் ஒவ்வொருவருக்காகவும்,** ஒவ்வொருவரும் எல்லோருக்காகவும்' (All for each–Each for all) **என்ற** கூட்டுறவின் மேற்கோள் வாசகத்தில் **பதிந்திருக்கிறது.**

ஒருவர் மற்றொருவரைத் தெரிந்துகொள்கிற அளவு சிறிய சமுதாயத்தில் வாழ்ந்துகொண்டும், தங்கள் பொருள்வளங்களை ஒன்றாகச் சேர்ப்பதற்கும், சமுதாய மற்றும் பொருளாதார ஒற்றுமையையும் பலத்தையும் உண்டுபண்ணுவதற்கும் விருப்பமுமுற்ற தற்சார்புள்ள குடியானவர்களின் ஒரு நாட்டிற்காக இதைவிட மேலான நற்பயன் விளைவிக்கிற தத்துவத்தை ஒருவர் நினைக்க முடியாது''. மறைந்த அறிஞர் வி. எல். மேத்தா அவர்களின் கூற்றின்படி, 'நாம் நினைக்கிற கூட்டுறவு, தொழில் வர்த்தகத்தைத் திறம்பட நடத்தும் ஒரு நூதன வழி மட்டுமல்லாமல், ஒரு புதிய வாழ்க்கை நெறியைத் தெரியச் செய்கிற வினியோக நீதி, சமத்துவம், அன்னியோன்னியம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய சமுதாய அமைப்பை (new social order) நம்மிடையே நிறுவுவதற்கும் அது கோருகிறது. ஒரு சிறப்பான உட்பொருளுடன் நிறுவப்பட்ட திட்டமிட்ட பொருளாதார அமைப்பாக அஃது இருக்கிறது. இந்திய நாட்டில், நாம் இதுவரை கூட்டுறவு இயக்கத்தில் பின்னியிருக்கும் கருத்துப்பாங்கை (ideology) பொருட்படுத்தாமல் விட்டுவிடத் தகுதியுள்ளவர்களாகவும், இயக்கத்தின் சமுதாய மற்றும் பொருளாதார ஊகத்தைப் (implication) புரிந்துகொள்ளாமலும் இருக்கிறோம். சிறப்புவாய்ந்த ஒரு கூட்டுறவாளர் கூறியிருப்பதுபோன்று, 'கூட்டுறவு ஒரு சமுதாயத் தத்துவ முறையில் இலாபம் தேடுவதற்குப் பதிலாகத் தேவைகளைப் பூர்த்தி செய்கிற ஒரு புதிய நாகரிகத்தின் கட்டுக்கோப்பு. அது தன்னிறைவுள்ளது. பலருக்கு நன்மை செய்தும் யாருக்கும் தீங்கு செய்யாமலும் சுரண்டல் விலக்கப்பட்ட தன்னலத்தில் வேறு உலகத்திற்கு வேண்டியதல்லாத எதையும் காண முடிகிறது'. நம் முதல் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களின் பொன்போன்ற வார்த்தைகளை மேற்கோள் கூறி முடித்துக்கொள்வோம். 'வேறு எந்த இயக்கத்தையும்விடக் கூட்டுறவு எனக்குப் பிரியமானது; ஏனென்றால், அது ஒரு வாழ்க்கைநெறியாகவும், மானசப் பழக்கமாகவும், ஒரு செயல்முறையாகவும் இருக்கிறது. இந்த இயக்கம் மிகப் பெரியதாக வளரவேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஏனென்றால், அஃது ஏழையின் மிக மதிப்புவாய்ந்த நண்பனாகவும், ஒரு மக்களாட்சிச் சமுதாய மரபை அமைப்பதற்குச் சிறந்த கருவியாகவும் இருக்கிறது'.

## கூட்டுறவின் கொள்கைகள்
## (Principles of Co-operation)

**(i) கூட்டுறவுச் சங்கங்களின் சட்டங்கள் என்ன கூறுகின்றன?**

கூட்டுறவின் கொள்கைகள் யாவை என்றோ, அல்லது தொழில் நுட்பப் பொருளின்படி எது கூட்டுறவு என்றோ, கூட்டுறவுச்

சங்கங்களின் சட்டங்கள் எங்கேயும் சுட்டிக்காட்டவில்லை. கூட்டுறவின் கொள்கைகள் யாவை என்பதைப் பற்றிப் பேச அவை முயலவில்லை. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 4-வது பிரிவில், 'கூட்டுறவுக் கொள்கைகளுக்கிணங்கத் தன் உறுப்பினர்களின் பொருளாதார நலன்களை வளர்ப்பதைத் தன் நோக்கமாகக் கொண்ட ஒரு சங்கம் பதிவு செய்யப்படலாம்' என்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால், இந்தக் கொள்கைகள் யாவை என்று அஃது எங்கேயும் விளக்கிக் கூறவில்லை. ஆயினும், அதன் பல்வேறு பிரிவுகளில், ஒரு சங்கத்தைக் கூட்டுறவு நிறுவனமாகச் செய்வதற்குண்டான பொது அம்சங்களைப்பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. சங்கம் அமைப்பதிலும் செயல்படுத்துவதிலும் கடைப்பிடிக்க வேண்டியவைகளை எடுத்து விளக்கும் சட்டத்தின் பல பிரிவுகள், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தால் வெளியிடப்பட்ட 'கூட்டுறவுச் சட்ட வரலாறும் நடைமுறைகளும்' என்ற தலைப்புள்ள நூலில் பாகம் 1-ன் அத்தியாயம் 2-ல் விளக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைத் தவிர, கூட்டுறவுக் கொள்கைகளைக் குறித்து நமக்கிருக்கும் ஒரே ஒரு தகவல் ஆதாரம் ராக்டேல் முன்னோடிகளால் நிர்ணயிக்கப்பட்ட புகழ் பெற்ற கொள்கைகளும், 1966ஆம் ஆண்டில் அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பால் (International Co-operative Alliance) முறைப்படுத்தப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளுமே.

### (ii) கூட்டுறவின் பொருள் விளக்கம்

கூட்டுறவு பற்றிப் பல பொருள் விளக்கங்கள் கூற முயலப்பட்டிருக்கின்றன. அவற்றுள் சிலவற்றை இங்கே குறிப்பிடலாம். அறிஞர் ஹோலியோக் (Holyoake) என்பவர், 'யாதொரு முயற்சியிலும், அக்கறை கொண்டவர்கள் எல்லோரும், நடுநிலை நேர்மையான ஈடுபாட்டுடனும் கண்காணிப்புடனும் தன்னிச்சையாகக் கூடி யோசித்து நிச்சயித்தல்' என்று கூட்டுறவுக்குப் பொருள் விளக்கம் கூறுகிறார். அறிஞர் ஃபே (Fay) என்பவர், 'கூட்டு வர்த்தகம் என்ற காரியத்திற்காக வலிவற்றவர்களிடையே உற்பத்தியாகி எப்பொழுதும் தன்னலமற்ற ஒரு மனப்பான்மையில் நடத்தப்பட்டு, உறுப்பினர் கடமைகளை ஏற்க முன்வரும் எல்லோரும் தங்கள் சங்கத்தைப் பயன்படுத்தும் அளவிற்குப் பொருந்த அதன் வெகுமானங்களில் பங்குகொள்ளும் வகையில் நடத்தப்படும் ஒரு சங்கம்' என்று கூட்டுறவுச் சங்கத்தை வர்ணிக்கிறார். மற்றொரு எழுத்தாளர் ' ஒரு கூட்டுறவுச் சங்கம் சமத்துவக் கொள்கைகளுக்கிணங்க நிறுவப்பட்டு, உறுப்பினர்களின் எண்ணிக்கை வரையறை இல்லாது, கலப்பற்ற தன்னுதவிமூலம் அல்லது அரசினர் ஆதரவுடன் கூடிய தன்னுதவியின்மூலம் பொருளாதார

நடவடிக்கைக் கூட்டு முயற்சியால் தாங்கள் நடத்தும் தொழிலின் நிலைமையையோ தன் உறுப்பினர்களின் நிதிநிலைமையையோ மேம்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட தனி மனிதர்களுடைய ஒரு கூட்டிணைப்பு' என்றும், 'ஒவ்வோர் உறுப்பினரும் அச்சங்கத்தின் தொழிலில் பங்குகொண்ட அளவுக்குப் பொருந்தவும் அவர்கள் முதலீடு செய்த மூலதனத்திற்குப் பொருந்துமளவு இல்லாமலும் கூட்டுறவுச் செயலால் ஏற்பட்ட எல்லாப் பலனையும் அது வினியோகிக்க வேண்டும்' என்றும் கூறியுள்ளார். அறிஞர் ஹெரிக் (Herrick) என்பவர், 'தன்னிச்சையாகக் கூட்டுச் சேர்ந்து தங்கள் பரஸ்பர நிர்வாகத்தின்கீழ்த் தங்களுக்குச் சொந்தமான சக்திகளையும் பொருள் வளங்களையும் அல்லது இரண்டினையும் தங்கள் பொது இலாபத்திற்கோ நட்டத்திற்கோ அன்னியோன்னியமாகப் பயன்படுத்திக்கொள்ளும் தனிநபருடைய செயலே கூட்டுறவு' என்று கூட்டுறவுக்குப் பொருள்விளக்கம் கூறியுள்ளார். மற்றோர் எழுத்தாளர், 'பொருட்சாதனங்களின் பொதுவான உடைமையின்மூலமும் அவற்றின் ஜனநாயக நிருவாகத்தின் மூலமும், தங்கள் சமுதாய, பொருளாதார நிலைமையில் ஒரு மேம்பாட்டை அடைவதற்காக ஒன்றுசேர்ந்த தனி நபர்களுடைய ஒரு தன்னிச்சையான சங்கம் என்று ஒரு கூட்டுறவுச் சங்கத்திற்குப் பொருள் விளக்கம் கூறலாம்' என்று கூறியுள்ளார். அறிஞர் கால்வெர்ட் (Calvert) என்பவர் கூட்டுறவுச் சங்கமானது, 'தங்கள் பொருளாதார நலன்களை வளர்ப்பதற்காகச் சமத்துவ அடிப்படையின்பேரிலும் மனிதர்கள் என்ற முறையிலும் தன்னிச்சையாக மனிதர்கள் ஒன்றாகக் கூட்டுச்சேரும் ஒருவகை நிறுவனம்' என்று விளக்கியுள்ளார்.

### (iii) கூட்டுறவின் முக்கியமான கொள்கைகள்

புகழ் வாய்ந்த ராக்டேல் முன்னோடிகளால் வகுக்கப்பட்ட கொள்கைகளைப் பின்பற்றியும் முன்கூறப்பட்ட பொருள் விளக்கங்களை மேற்கொண்டும் கூட்டுறவுக் கொள்கைகளைக் கீழ்வருமாறு ஊகிக்கலாம்.

**மனித இனத்தவர்களின் சங்கம்** (Association of Human beings)

கூட்டுறவுச் சங்கம் மனித இனத்தவர்களுடைய ஒரு சங்கமாகும். கூட்டுறவு நிறுவனத்தின் அடிப்படை, மனிதப் பண்பேயொழிய மூலதனமன்று. அதில் மனிதர்கள் மனித இனத்தவர்கள் என்ற முறையில் ஒன்றுசேருகிறார்களே அல்லாமல் முதலாளிகள் என்றோ வேறு வகையிலோ அன்று. மனிதனை மனிதனாக மதித்தும் மனிதப் பண்பைக் காக்கும் வர்த்தக நிறுவனம்

கூட்டுறவு ஒன்றே. பொருளுடைமை, ஒரு கூட்டுறவு நிறுவனத்தின் உறுப்பினராவதற்கு முக்கியத் தகுதியாகக் கருதப்படாது. உண்மையிலேயே மூலதனம் அவசியம்தான். ஆனால், அஃது ஒரு கருவியே தவிர முடிவான நிலையன்று. மனிதனுடைய கையில் ஒரு வெறும் கருவியாக மட்டும் அல்லாது வேறுவகையில் உதவாததும் மனிதனால் உண்டுபண்ணப்பட்டதுமான மூலதனத்தைவிடப் பெருமளவு மனிதனைப் பண்பாடு முக்கியமாக இருக்கிறது. ஆகவே, சரியாகச் சொல்லுமிடத்து, ஒரு கூட்டுறவுச் சங்கம் 'தனி மனிதர்களின் ஒரு கூட்டிணைப்பு; மூலதனத்தின் கூட்டிணைப்பன்று.'

**தன்விருப்பார்ந்த நிறுவனம் (A Voluntary Organisation)**

கூட்டுறவுச் சங்கம் ஒரு தன்விருப்பார்ந்த (Voluntary) நிறுவனமாகும். ஒன்றுசேருகின்ற மனிதர்களுடைய தன்னிஷ்டம், சுயேச்சை விருப்பம் ஆகியவற்றின் அடிப்படையில் கூட்டுறவு நிறுவப்படுகிறது. கூட்டுறவில் வலுக்கட்டாயம் கிடையாது. ஒவ்வோர் உறுப்பினரும் தம் விருப்பம்போல் சங்கத்திற்கு ஆதரவு தர உரிமையுள்ளவர். ஒவ்வொருவரும் தன்னிச்சையாகவே அல்லாது, பிறருடைய நிர்ப்பந்தத்தாலோ வலுக்கட்டாயத்தாலோ சங்கத்தில் சேருவதில்லை. எந்த நடவடிக்கையின் வெற்றிகரமான செயல்பாட்டிற்கும் அதைச் செய்பவர்களின் முழுமனதுள்ள முயற்சி வேண்டும் என்பது பொதுவாக யாவரும் அறிந்ததே. ஒரு நடவடிக்கையைச் செயலாற்றுபவரின் மனத்திட்பம், முடிவுசெய்யும் துணைக்கூறு ஆகிய மனிதத் தன்மையின் முக்கியப் போக்கைக் கூட்டுறவு ஒப்புக்கொள்கிறது.

**சமத்துவம் (Equality)**

ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் மனிதர்கள் சமத்துவ அடிப்படையின்பேரில் ஒன்றுசேருகிறார்கள். மனிதர்கள் மனிதர்களாக ஒன்றுசேரும்போது, சமத்துவ ஆதாரத்தின்பேரில்தான் அவர்கள் அவ்வாறு ஒன்றுசேருகிறார்கள் என்பது இயல்பானதே. ஆனால், சமத்துவம் என்ற சொல் சொத்துரிமையில் அல்லது திறமையுடைமையில் சமத்துவம் என்று பொருள்படாது. அஃது ஒரு வாய்ப்பு-சமத்துவமும் கண்காணிப்புச் சமத்துவமும் மட்டும்தான். தங்கள் சங்கத்தின் செயல்பாட்டின்மூலம் தங்கள் பொதுவான தேவைகள் பூர்த்தி செய்யப்படுவதில் உறுப்பினர்கள் சமத்துவமான வாய்ப்புகள் கொடுக்கப்படுகின்றனர். 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' என்ற கொள்கையுள்பட, கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்தில் உள்ளடங்கியிருக்கிற மக்களாட்சித் தத்துவத்தின் மூலம் கண்காணிப்புச் சமத்துவம் உத்திரவாதம் அளிக்கப்படுகிறது.

**எல்லாருக்குமுரியதான சர்வ சாமானியத்துவம் அல்லது திறந்த அங்கத்துவம்** (Universality or Open Membership)

சங்கத்தின் அனுகூலங்களில் நம்பிக்கைகொண்ட ஒவ்வொரு மனிதனும் அதில் சேர உரிமையுடையவன் என்று இதற்குப் பொருள். சிறப்பான அதிகாரம் கொடுக்கப்பட்ட ஒருசிலருக்கு மட்டும் அதன் அங்கத்துவம் ஒதுக்கப்படுவதில்லை. கூட்டுறவின் உயிர்நாடியாக இருக்கும் திறந்த அங்கத்துவக் கொள்கையை உருவாக்கின பெருமை ராக்டேல் முன்னோடிகளைச் சாரும்.

**ஒரு பொருளாதார நடவடிக்கையில் முரண்பாடுடைய அக்கறைகளைச் சமரசப்படுத்துதல்** (Reconciliation of the Conflicting interests in an Economic activtiy)

கூட்டுறவின் மற்றொரு சிறப்பான கொள்கை, அஃது ஒரு பொருளாதார நடவடிக்கையில் மாறுபடுகின்ற அக்கறைகொண்ட இருவர்களைச் சமரசப்படுத்தும் ஒரு வினைத்திறம். ஒரு பொருளாதார நடவடிக்கைக்கு அல்லது அதன் செயல்பாட்டிற்கு முரண்பட்ட அக்கறைகளைக்கொண்ட இரண்டு தரப்பினர்கள் தேவைப்படுகிறது. உதாரணமாக, ஒரு பொருள் விற்பனையை எடுத்துக் கொள்வோம். இந்த நடவடிக்கையில், ஒரு பக்கம் வாங்குபவர்களும், இன்னொரு பக்கம் விற்பவர்களும் இருக்கிறார்கள். குறைந்த விலையில் வாங்குவதில் வாங்குபவர்கள் எப்பொழுதும் அக்கறை கொண்டிருப்பவர்கள். ஆனால், விற்பவர்கள் முடிந்த அளவுக்கு உயர்ந்த விலையில் தம் பொருள்களை விற்பனை செய்வதில் அக்கறை கொண்டிருப்பவர்கள். கூட்டுறவு முயற்சியின் மூலம் இந்த அக்கறை மாறுபாடு இணக்கப்படுத்தப்படுகிறது. ஒரு நுகர்வோர் கூட்டுறவுச் சங்கத்தில் வாங்குபவரும், விற்பவரும் அதே மனிதர் தாம். இந்த வகையில் இரண்டு தரப்பினர்களுடைய முரண்பாடுள்ள அக்கறைகள் தாமாகவே இணக்கப்படுத்தப்படுகின்றன. அதேபோல ஒரு கூட்டுறவுக் கடன் சங்கம் கடன் வாங்குபவர், கடன் அளிப்பவர் ஆகியவர்களின் மாறுபட்ட அக்கறைகளை ஒற்றுமை யாக்குகிறது. ஏனென்றால், அது கடன் வாங்குகிறவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு சங்கம். கூட்டுறவில் உள்ளடங்கிய இந்த ஒறுமைப்படுத்தும் குணம்சமானது முதலாளித்துவமும், பொதுஉடைமையும் போன்ற இதரவகை நிறுவனங்களைவிடக் கூட்டுறவை அதிகமான மனிதஇனநலக் கோட்பாடுடையதாகச் செய்கிறது.

**உறுப்பினர்களின் பொருளாதார நலன்களை வளர்த்தல்** (Promotion of Economic Interests of Members)

கூட்டுறவின் அடுத்த சிறப்பான இயல்பு, அது தன் உறுப்பினர்களின் பொருளாதார நலன்களை வளர்ப்பதற்கான ஓர் அமைப்பாகத் திகழ்வதாகும். கூட்டுறவுச் சங்கம் முதன்முதலாக ஒரு வர்த்தக நிறுவனம். இது 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 4-வது பிரிவில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. உண்மையாகவே, அநேக நாடுகளில் கூட்டுறவு முயற்சிக்கு ஆரம்பம் அளித்தது, அன்றிருந்த முதலாளித்துவ முறை பல்வேறு பொருளாதாரத் தேவைகளையும் நிறைவு செய்ய முடியாததே. இங்கிலாந்தில், முதலாளிகளும் சில்லறை விற்பனையாளர்களும் செய்துவந்த சுரண்டலிலிருந்து தப்பித்துக் கொள்ளவே ராக்டேல் முன்னோடிகள் ஒன்றாகக் கூட்டுச் சேர்ந்தார்கள். ஜெர்மனி தேசத்துக் குடியானவர்கள், எளிமையான முறையில் கடன் வாங்க ஒன்றுசேர்ந்தார்கள். ஆகவே, கூட்டுறவு பொதுவான பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்வதற்கான ஒரு கூட்டு முயற்சி.

**கூட்டுறவு நிறுவன அலுவல் அதன் உறுப்பினர்களுக்கு மட்டும் எல்லைப்படுத்தப்பட்டிருக்கிறது** (The Business of a Co-operative Institution is Confined to its Members only)

கூட்டுறவு நிறுவனத்தின் அலுவல் அதன் உறுப்பினர்களுக்கு மட்டும் வரையறுக்கப்பட்டிருக்கிறது. இஃது ஒரு முக்கியக் கூட்டுறவுக் கொள்கையாக அமைந்துள்ளது. ஏனென்றால், கூட்டுறவுச் சங்கம் தன் உறுப்பினர்களுடைய பொருளாதார நலன்களை வளர்ப்பதற்காக அல்லாது, புறம்பான வேறு சிலருடைய நலனுக்காக அது செயல்படுகிறதில்லை. கூட்டுறவு இலட்சியம் அல்லது குறிக்கோள், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் பணி உறுப்பினரல்லாதவர்களுக்குக் கிடைக்க அனுமதிக்காவிட்டாலும், இந்தக் கொள்கையை எப்பொழுதுமே கடைப்பிடிப்பது நடைமுறையில் இயலவில்லை. உண்மையாகவே, அத்தகைய வர்த்தகம் இலாப நோக்கத்துடன் செய்யப்படாமல், அத்தியாவசியப் பண்டங்களை அரசு கட்டுப்படுத்தும் அல்லது வினியோகிக்கும் அவசியமான சமயங்களில் பொதுமக்களுக்குச் சேவை செய்யவும் அல்லது விவசாய அல்லது தொழில் உற்பத்தித் திட்டங்களையும் அரசினர் கொள்கைகளையும் நடைமுறைத் திட்டங்களையும் நிறைவேற்றுவதற்காக ஒரு கருவியாகச் சேவை செய்யவும் கூட்டுறவுச் சங்கம் எதிர்பார்க்கப்படும்போது அச் சேவைகள் அதன் கடமைகளில் ஒரு பகுதியாகச் செய்யப்பட்டாலும், கூட்டுறவுச்

சங்கத்திற்கோ அதன் உறுப்பினர்களுக்கோ கூட்டுறவு மனப்பான்மைக்கோ எந்த ஊறும் ஏற்படாது. ராக்டேல் முன்னோடிகள்கூட, உறுப்பினரல்லாதவர்களுக்கும், அவர்களையும் பிற்காலத்தில் உறுப்பினர்களாகச் செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன், விற்பனையை விரிவுபடுத்த விருப்பம் கொண்டார்கள். அவ்வாறு உறுப்பினரல்லாதவர்களுக்குச் செய்யும் பணி சேவையாக இருக்கவேண்டுமே தவிர இலாப நோக்கத்துடன் அமையக்கூடாது.

**சேவை நோக்கம்** (Service Motive)

கூட்டுறவின் மற்றொரு கொள்கை, ஒரு கூட்டுறவுச் சங்கம் இலாபம் ஈட்டி மூலதனத்தின்பேரில் இலாபஈவு அறிவிக்கும் நோக்கத்துடன் அமைக்கப்படுகிறதில்லை. உறுப்பினர்களின் பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்யும் வகையில் அவர்களுக்குச் சேவை புரிவதே அதன் முதன்மையான நோக்கமாகும். அது முதலாளித்துவ முறையின்கீழ் நிலவுகின்ற போட்டியிலிருந்து வலுவற்றவர்களைக் காப்பாற்றுகிறது; ஏழைகளைத் தங்கள் சொந்தப் பலத்தில் வாழ உதவுகிறது; சாதாரண மனிதனைத் தன் சொந்தக் காரியங்களைத் தானாகவே நிருவாகம் செய்வதற்குப் பயிற்றுவிக்க முயற்சிக்கிறது.

**சிக்கனத்தை ஊக்குவித்தல்** (Encouragement of Trift)

சிக்கனத்தை ஊக்குவிப்பதும் கூட்டுறவின் இன்னொரு கொள்கையாகும். மூலதனத்தை அடியோடு ஒழிக்கவேண்டும் என்று கூட்டுறவு கோருகிறதில்லை. இதர வர்த்தக நிறுவனங்களுக்குத் தேவைப்படுவதுபோலவே மூலதனம் கூட்டுறவுச் சங்கத்திற்கும் தேவைப்படுகிறது. எனினும், கூட்டுறவில் மனிதர்கள் மூலதனத்தை வாடகைக்குக் கொண்டுவந்து, அதன் சேவைக்காகப் பெயரளவு இருக்கிற ஒரு கைம்மாற்றை அதற்குச் செலுத்துகிறார்கள். மூலதனமானது சேமிப்பதன் விளைவு; சேமித்தல் சிக்கனத்தை முன்எண்ணமாகக் கொண்டது. ஆகவே, கூட்டுறவு உறுப்பினர்களிடையே சிக்கனப்பழக்கத்தை வளர்க்கிறது. ‘சிக்கனமின்றிக் கடன் கிடையாது’ என்பது கூட்டுறவுச் சங்கங்களின், குறிப்பாக, கடன் கூட்டுறவுச் சங்கங்களின் கோட்பாட்டுச் சொல். ‘சிக்கனத்தை ஊக்குவித்தல்’, முதலாளித்துவத்தின் போட்டிப் போராட்டத்தைச் சமாளிக்கக் கூட்டுறவுக்கு ஒரு பக்கபலமாக இருக்கிறது.

**உறுப்பினர்களின் தனித்தன்மை** (Individuality of Members)

கூட்டுறவின் மற்றொரு முக்கிய அம்சமாக இருப்பது அது தன்னுறுப்பினர்களுடைய தனித்தன்மையை விடாது வைத்திருக்

கிறது. கூட்டுறவில் கலப்பற்ற தன்னலத்திற்கு இடமில்லாம லிருக்கிறபோதிலும், கூட்டுறவுச் சங்கத்தின் ஓர் உறுப்பினர் தம் தனித்தன்மையில் எந்தப் பகுதியையும் தியாகம் செய்யத் தேவை யில்லை; அல்லது தம் முயற்சி மனப்பான்மையை விட்டுக் கொடுக் கத் தேவையில்லை. ஆனால், தமக்கு உதவி செய்துகொள்ளுங்கால், பிறருக்கும் உதவி செய்ய எதிர்பார்க்கப்படுகிறார். தம் கூட்டாளி களின் செலவில் அல்லது நட்டத்தில் தம்மைப் பணக்காரராக்கக் கூட்டுறவு ஊக்கம் அளிப்பதில்லை. தன்னலமும், தன்னலமின்மை யுமாகிய இரண்டு இறுதிமுனையான போக்குகள் அன்னியோன்னிய மாய் ஒரு மகிழ்ச்சிகரமான முறையில் கூட்டுறவில் ஒன்றாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

## நடுநிலை நேர்மை (Equity)

இன்னொரு முக்கியக் கூட்டுறவுக் கொள்கையானது ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உபரியை (Surples) உறுப்பினர்களிடையே வினியோகிப்பதில் கையாளப்படுகின்ற நடுநிலை நேர்மைவிதியாகும். இந்தக் கொள்கையானது நீதியை அடிப்படையாகக் கொண்டது. நடுநிலை நேர்மைக் கொள்கையை அடிப்படையாகக்கொண்டு கூட்டுறவின் உபரி இலாபம் உறுப்பினர்களுக்குள் சமத்துவமாகப் பிரித்துக் கொடுக்கப்படும் என்று யாராவது நினைத்தால், அது கூட்டுறவு பற்றிய ஒரு தவறான கருத்துப் பாங்கு. ஒரு கூட்டுறவுச் சங்கத்தில், செலவுக்குமேல் கிடைத்த வரவு உபரி உறுப்பினர் களிடையே அவர்கள் தங்கள் சங்கத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் அளவுக்கிணங்கப் பிரித்துக் கொடுக்கப்படுகிறது. ஏனென்றால், உபரி இலாபம் சங்கத்தின் வர்த்தக நடவடிக்கையில் உறுப்பி னர்களின் சுறுசுறுப்பான ஈடுபாட்டின்மூலம் உண்டாகிறது. எனவே, உறுப்பினர்களின் ஈடுபாட்டின் அளவே தவிர, வெறும் அங்கத்துவநிலை ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் உபரியை உண்டுபண்ணு வதற்கு முடிவு செய்கிற ஒரு காரணமாகாது. ஆகவே, நடுநிலை நேர்மைவிதியின் அடிப்படையின்பேரில் உபரி இலாபம் வினி யோகம் செய்யப்படுகின்றதே தவிர, சமத்துவ அடிப்படையின் பேரில் அன்று. உதாரணமாக, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களில் இலாபமானது ஒவ்வோர் உறுப்பினரால் செய்யப்படுகிற கொள்முதலுக்கிணங்கவே உறுப்பினர்களிடையே பிரித்துக் கொடுக் கப்படுகிறது. மாறாக, பங்கு மூலதனத்தின்பேரில் கொடுக்கப் படும் இலாபஈவு, கடன்முதலின்மேல் செலுத்தப்படும் வட்டியின் தன்மையையுடையதால், அது, ஒவ்வோர் உறுப்பினரால் செலுத் தப்பட்ட பங்கு மூலதனத்திற்கேற்பப் பிரித்துக் கொடுக்கப்படு கிறது.

**மக்களாட்சிக் கொள்கை** (Principle of Democracy)

கடைசியானதும், ஆனால் முக்கியத்துவத்தில் குறையாததுமான கொள்கை கூட்டுறவு நிருவாகத்தில் பொதிந்துள்ள மக்களாட்சிக் கொள்கையாகும். 'ஓர் உறுப்பினருக்கு ஒரு வாக்கு' என்ற முறை கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்தில் பயன்படுத்தப்படுகிறது. தங்களுடைய சங்கத்தின் நிருவாகத்தில், தாங்கள் செலுத்தியிருக்கும் மூலதனம் எவ்வளவாக இருந்தாலும், எல்லா உறுப்பினர்களும் சம உரிமைகளையுடையவர்களே. மற்றும், கூட்டுறவுச் சங்கத்தின் இறுதியான அதிகாரம் உறுப்பினர்களின் பேரவையில் பொருந்தி இருக்கிறது. ஒரு கூட்டுறவுச் சங்கம், உறுப்பினர்களால், உறுப்பினர்களுக்காக இயங்கும், உறுப்பினர்களின் நிறுவனம்.

## அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பினால் மாற்றி முறைப்படுத்தப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகள்

## (Reformulation of Co-operative Principles by the International Co-operative Alliance)

**கூட்டுறவுக் கொள்கைகளை மாற்றி முறைப்படுத்துவதற்கான காரணங்கள்**

1844ஆம் ஆண்டில் மேன்செஸ்டர் நகரத்தில் நிறுவப்பட்ட ராக்டேல் முன்னோடிகள் என்ற முதன்முதலான கூட்டுறவு நிறுவனத்தால் பின்பற்றப்பட்ட கூட்டுறவு நிறுவனக் கொள்கைகளும் செயற்பாட்டு நடைமுறைக் கொள்கைகளும் நீண்ட காலமாக அத்தியாவசியக் கூட்டுறவுக் கொள்கைகளென்று தொடர்ந்து ஏற்கப்பட்டு வந்தன. இதர அநேக வளர்முக நாடுகளைப்போல இந்தியாவிலும், நாட்டின் பொருளாதார அமைப்பில் கூட்டுறவு ஒரு புது முக்கியத்துவத்தை ஏற்றது. அரசுக்கும் கூட்டுறவு நிறுவனங்களுக்குமிடையேயுள்ள தொடர்பிலும்கூட மாறுதல்கள் ஏற்பட்டன. நம் நாட்டில் கூட்டுறவு நிறுவனங்களின் செயற்பாட்டிலும் சித்தப்படுத்துதலிலும் அரசினரின் தீவிர ஈடுபாடு அதிகமாக முக்கியமாயிற்று. வளர்முக நாடுகள் பலவற்றில் நம் நாட்டைப் போன்று ஒரேவிதமான பிரச்சினைகள் எழுந்தபோது, அந் நாடுகளும்கூட நம் நாட்டில் நாம் பயன்படுத்திய கூட்டுறவு வழிவகைகளைப் பின்பற்ற முயற்சித்தன. சமஉடைமை நாடுகளுங்கூட (Socialist countries) ஓர் இனமாக, நுகர்வோர்பண்டங்களை வினியோகிக்கும் ஏற்பாட்டின் ஒரு முக்கியப் பகுதியாகக் கூட்டுறவு நிறுவனங்களைப் பயன்படுத்தின. மற்றும் இந்த நாடுகள், கூட்டு

றவை விவசாய உற்பத்தி நிறுவன வகையாகப் பலமுறை பயன்படுத்தின. சர்வதேசக் கூட்டுறவு வட்டாரங்களில், ருஷ்ய நாடு ஒரு சமதர்ம அரசாக மாறியதிலிருந்து, மேலை நாடுகளின் பார்வையாளர்களுக்கு அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பில் ருஷ்யக் கூட்டுறவு நிறுவனங்கள் தங்களுடைய தகுதியற்ற சக பாடிகளாகத் தோன்றின. 1895ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இந்த அனைத்துநாட்டு நிறுவனத்தில் ருஷ்யா ஏற்கெனவே ஓர் உறுப்பினராக இருந்து, ருஷ்யக் கூட்டுறவு இயக்கம் அந்த நிறுவனத்தின் உறுப்பினர் உரிமைகளைத் தொடர்ந்து கோரியும், பெற்றும் வந்துள்ளது. அந்த ஒன்றிணைப்பின் மிகப் பெரும் பான்மையான உறுப்பினர்கள் முதலாளித்துவ நாடுகளிலிருந்து பெறப்பட்டனர். இயல்பாகவே, இந்த முதலாளித்துவ நாடுகள், மத்திய திட்டமிடும் சர்வாதிகார முறையையும், அதைத் தொடர்ந்தியங்கும் பெயரளவிலான உற்பத்தி அல்லது விநியோகக் கூட்டுறவு நிறுவனங்களையும் விரும்பவில்லை. அண்மைக் காலம்வரை, சமஉடைமை நாடுகளின் கோஷ்டியிலிருந்து புது உறுப்பினர் எவரும் சேர்க்கப்படவில்லை. மற்றும், அத்தகைய நாடுகளில் பழைய கூட்டுறவு நிறுவனங்களின் செயல்பாட்டுத் தொடர்ச்சி முறிந்தபோதெல்லாம், ஏற்கெனவேயுள்ள அந்த நாடுகளின் அங்கத்துவம் கழிந்துவிட்டதாகக் கருதப்பட்டது. ருஷ்ய நாட்டுச் சமுதாய, பொருளாதார அமைப்பில் தங்களுடைய பிரத்தியேக முக்கியத்துவ ஏற்பை ருஷ்ய நாட்டுக் கூட்டுறவாளர்கள் மிக உயர்வாக மதித்து, அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பிலும் அதன் மூன்று ஆண்டிற்கொருமுறை கூடும் காங்கிரஸ்களிலும் (Triennial Congresses), அவர்கள் கூட்டுறவு நிறுவனங்களின் அத்தியாவசியமான பொதுஅம்சங்களை முதலாளித்துவ அல்லது சமஉடைமை வாழ்க்கைநெறி போன்ற மற்ற எந்த நிறுவனங்களிலிருந்தும் வேறுபடுத்தித் தெளிவாக விளக்கவேண்டுமென்றும், இந்த அத்தியாவசியமான கொள்கைகளைப் பின்பற்றும் கூட்டுறவு நிறுவனங்கள் அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பின் முழு உறுப்பினர்களாக ஏற்கப்பட வேண்டுமென்றும் தொடர்ந்து வற்புறுத்தி வந்தனர். அதன் காரணமாக, கூட்டுறவுக் காங்கிரஸ்களில் பல ஆண்டுகளாக சர்ச்சையும் வாதமும் தொடர்ந்து இருந்துவந்தன. முதல் நடவடிக்கையாக, புகழ்பெற்ற ராக்டேல் கொள்கைகளாக இருந்தவை எவை என்பது பற்றி விளக்கம் கூற ஒரு சிறப்புக் குழுவைக் காங்கிரஸ் அமைத்தது. ராக்டேல் முன்னோடிகளின் காலத்திலிருந்து தற்காலம் வரை கூட்டுறவின் வளர்ச்சி வரலாற்றைப் பரிசீலனை செய்த அக் குழுவினர், தங்கள் அறிக்கையில், மொத்தத்தில் ஏழு கொள்கைகளை வரிசைக்கிரமமாக விளக்கினர்.

இவைகள்தாம் ராக்டேல் முறையில் அடங்கியுள்ள கொள்கைகள் என்று கூறி அவைகளை இரண்டு பிரிவுகளாகத் தொகுத்தனர். முதல் பிரிவில் மிக அத்தியாவசியமாகக் கருதப்பட்ட நான்கு கொள்கைகள் அடங்கியிருந்தன; அவைகளைவிட அத்தியாவசியத்தில் குறைந்த இதர மூன்று கொள்கைகள் இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவை. அக் குழுவினர் பட்டியலிலுள்ள மிக முக்கியக் கொள்கைகள் பின்வருமாறு:

(1) திறந்த அங்கத்துவம் (Open Membership);

(2) மக்களாட்சிமுறைக் கண்காணிப்பு (Democratic control) 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' (One Man One Vote);

(3) உறுப்பினரின் நடவடிக்கைகளின் வீதப்படி உபரியைப் பிரித்துக்கொடுத்தல் (Distribution of surplus in proportion to members transaction);

(4) மூலதனத்தில் வரையறுக்கப்பட்ட பற்று (Limited Interest on Capital).

குழுவினரால் குறைந்த முக்கியத்துவமுள்ளவை என்று கூறப்பட்ட எஞ்சியுள்ள மூன்று கொள்கைகளாவன:

(5) அரசியல், சமய நடுநிலைமை (Political and Religious Neutrality);

(6) ரொக்க வாணிகம் (Cash Trading);

(7) கல்வி வளர்ச்சி (Promotion of Education).

குழுவின் அறிக்கை 1937ஆம் ஆண்டில் கூடிய பாரிஸ் காங்கிரஸில் (Paris Congress) முன்வைக்கப்பட்டது. ஆனால், அதற்கு அறிக்கை மனநிறைவளிப்பதாக இல்லாத காரணத்தினால், அது அறிக்கையை வெறும் பதிவு செய்து சர்ச்சைக்கு ஒரு தீர்வும் காணவில்லை. அதன்பிறகு, இரண்டாவது உலகப்போரின் விளைவாகப் பல நாடுகளில் புதிய அரசுகள் ஏற்பட்டன; ஐக்கிய நாடுகள் நிறுவனமும் அமைக்கப்பட்டது. சமஉடைமை நாடுகள், சமஉடைமையல்லாத நாடுகள் முதலிய எல்லா நாடுகளிலும் ஏற்பட்ட சீரமைப்பு, புனர்வாழ்வு, அபிவிருத்தி போன்ற மாபெரும் வேலைகள் அரசுக்கும் அதன் குடிமக்களுக்கும் இடையேயிருந்த உறவுமுறைக் கொள்கையை மாற்றின. சமஉடைமையல்லாத முக்கிய நாடுகளுங்கூட (Non-Socialist Countries), பொரு

ளாதாரத் துறைகளில் அநேக ஒழுங்குபடுத்தும் அதிகாரங்களையும் செயல்பாடுகளையும் தங்களுக்கே எடுத்துக்கொண்டதன் விளைவாக, முழுநிறைவான தனிப்பட்ட நபர் சுதந்திரக் கோட்பாட்டையும், ராக்டேல் கூட்டுறவுச் சங்கத்தால் சிறப்பாக வலியுறுத்தப்பட்ட அரசினரீடுபாடு இல்லாதிருத்தல் என்ற கொள்கையையும் கடைப் பிடிக்க முடியாது போயிற்று. 1963ஆம் ஆண்டில் நடைபெற்ற போர்ன்மௌத் காங்கிரஸின் (Bournemouth Congress), 'தற்கால நிலைமையின்கீழ்க் கூட்டுறவு நடவடிக்கைகளின் மூலாதாரமான கொள்கைகளை முறைப்படுத்துவதற்கு' ஒரு சுயேச்சையான குழுவை அமைக்க வேண்டுமென்று மத்திய குழுவைக் கேட்டுக் கொள்ளும் ஒரு ருஷ்யத் தீர்மானம் பெரும்பான்மையோரால் நிறைவேற்றப்பட்டது. நாளடைவில், 1964ஆம் ஆண்டு அக் டோபரில் அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பின் மத்திய குழு, ஐந்து உறுப்பினர்கள் அடங்கிய ஒரு குழுவை அமைத்து, அவ்வொன்றிணைப்பால் 1937ஆம் ஆண்டில் வகுக்கப்பட்ட ராக்டேல் கொள்கைகளை எந்த அளவிற்கு இற்றைய நாளில் பின்பற்ற முடியும் என்று குறிப்பாக அறிவிக்கும்படியும், பின்பற்ற முடியாததற்குக் காரணங்களைக் கூறும்படியும் இந்தக் குழுவினர் கேட்டுக்கொள்ளப்பட்டனர். இந்தக் குழுவிற்குப் பேராசிரியர் டீ. ஜி. கார்வே (Professor D. G. Karve) அவர்கள் தலைமை வகித்தார். குழுவின் இதர நான்கு உறுப்பினர்கள், ஐக்கிய நாட்டையும் (U. K.), அமெரிக்க ஐக்கிய நாடுகளையும் (U.S.A.), ஜெர்மானிய நாட்டையும் (Germany), ருஷ்ய நாட்டையும் (U.S.S.R.), சேர்ந்தவர்கள். குழுவினர் தங்கள் அறிக்கையை 1966ஆம் ஆண்டு பிப்ரவரியில் முடிவு செய்தனர். அவர்கள் கீழ்க்கண்ட கொள்கைகள், உண்மையானதும் பயன் உறுதியானது மான கூட்டுறவு நடைமுறைக்கு அத்தியாவசியக் கொள்கைகளாகக் கருதப்படவேண்டுமென்று கருத்துத் தெரிவித்தனர்.

(1) ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்துவம் தன்விருப் பார்ந்ததாக (Voluntary) இருக்கவேண்டும். எந்தவிதமான சமுதாய, அரசியல், சமய அல்லது வம்சபேதமற்றதும் இயற்கைக்கு ஒவ்வாதது மான தடைபாடுகளுமில்லாமல் அந்த அங்கத்துவம் சங்கத்தின் சேவைகளைப் பயன்படுத்தவும் அங்கத்துவத்தின் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளவும் விருப்பமுள்ளவர்களாகவுள்ள எல்லா மனிதர் களுக்கும் கிடைப்பதாக இருக்கவேண்டும்.

(2) கூட்டுறவுச் சங்கங்கள் மக்களாட்சி அமைப்புகள், அவற்றின் விவகாரங்கள் உறுப்பினர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டும் அல்லது அமர்த்தப்பட்டும்;

அவர்களுக்குப் பொறுப்புள்ளவர்களாகவும் நடந்துகொள்ளும் நபர்களால் நிருவகிக்கப்படவேண்டும். பிரதம சங்கங்களின் உறுப்பினர்கள், வாக்களிப்பில் சம உரிமைகளையுடையவர்களாக வும், தங்கள் சங்கங்களைப் பாதிக்கும் முடிவுகளில் சம ஈடுபாடு உடையவர்களாகவும் இருக்கவேண்டும். பிரதம சங்கங்களைத் தவிர இதர சங்கங்களில் நிருவாகம் தக்க வகையில் மக்களாட்சி அடிப்படையில் நடத்தப்படவேண்டும்.

*(3)* பங்கு மூலதனம், ஒரு வரையறுக்கப்பட்ட பற்றை மட்டும்தான் பெறவேண்டும்.

*(4)* சங்கத்தின் செயற்பாட்டினால் ஏதாவது உபரி அல்லது சேமிப்பு ஏற்படின் அது சங்கத்தின் உறுப்பினர்களுக்குச் சொந்த மாகி, ஓர் உறுப்பினர் மற்ற உறுப்பினர்களின் இழப்பில் இலா பம் பெறுவதைத் தவிர்க்கத் தக்க முறையில் பிரித்துக் கொடுக் கப்படவேண்டும்.

*(5)* எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும், பொருளாதார ஜனநாயகத் தன்மையுள்ள கூட்டுறவுக் கொள்கைகள், தொழில் நுட்பங்கள் ஆகியவை பற்றிய அறிவினைத் தங்கள் உறுப்பினர் களுக்கும் அலுவலர்களுக்கும் ஊழியர்களுக்கும் பொதுமக்க ளுக்கும் போதிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

ரொக்கவாணிகம் என்ற கொள்கையையும், அரசியல், சமய நடுநிலைமை என்ற கொள்கையையும் குழுவினர், கொள்கைகள் பட்டியலிலிருந்து எடுத்துவிட்டனர். ரொக்கவாணிகத்தைப் பொறுத்தமட்டில், குழுவிற்குச் சாட்சியமளித்த நூற்றுக்கு மேலானவர்களில் எவரும், ரொக்க வாணிகத்தை ஒரு கொள்கை யாக ஆதரிக்காததைக் குழுவினர் கண்டனர். கூட்டுறவுச் சங்கங் கள் எல்லாக் காலங்களிலும் நாகரிகமானதும் சமுதாயத்தால் விரும்பப்படுவதுமான வர்த்தக நடைமுறைகளைப் பின்பற்ற வேண்டுமென்பது கூட்டுறவுத் தொழில் முயற்சிகளின் தன்மையில் அடங்கியிருக்கும் ஒரு பொதுக் கொள்கை. ஆனால், இந்தக் கொள்கையை அமல் செய்யும் முறையானது உறுப்பினர்களே தங்கள் அறிவிலும் பொறுப்பிலும் நிச்சயிக்க வேண்டியது மட்டு மன்றி ஒவ்வொரு சந்தர்ப்பத்தின் சூழ்நிலைகளைப் பொறுத்துமிருக்க வேண்டும். அரசியல், சமய நடுநிலைமையைக் குறித்து, அந்தக் கொள்கை விரும்பப்பட்டதாகக் கருதப்பட்டாலும்கூட அது சாத்தியப்படாதது என்று குழுவினர் கருதினர். ஏனென்றால், உடனடியானதும் நீண்டகாலமானதுமான தங்கள் சொந்த

நலன்கள் அடங்கியுள்ள அரசியல் பொது விவகாரங்களிலிருந்து கூட்டுறவாளர்கள் விலகியிருக்கச் சாத்தியப்படாது. ஆகையால், ஒரு குறித்த காலத்தில் ஒரு கூட்டுறவுச் சங்கம் எந்த முறையில் பொதுவிவகாரங்களில் தன் நலனுக்குப் பயனளிக்கவேண்டும் என்பதை ஒரு பொது விதியாக வகுக்க முடியாது என்று குழுவினர் கருதினர். எனவே, ராக்டேல் முறையின் ஏழு கொள்கைகளில் இரண்டு கொள்கைகளைக் குழுவினர் தள்ளிவிட்டனர். எனினும், அவர்கள் தாமாகவே ஒரு கொள்கையை ஆறுவது கொள்கையாகச் சேர்த்தனர். அதாவது, கூட்டுறவாளர்களிடையேயும் கூட்டுறவு நிலையத்தினிடையேயும் உள்ள உள்ளார்ந்த கட்டுப்பாட்டுணர்வு (Bond of solidarity) தெளிவாகக் கூறப்படவேண்டுமென்பது. உள்நாட்டு வாணிபத்திலும் அனைத்து அயல்நாட்டு வாணிபத்திலும் கூட்டுறவு அபிவிருத்திக்கிருக்கும் வாய்ப்பை நோக்கியும், தனியார் துறையிலும் பொதுத்துறையிலும், பெரிய கூட்டு இணைப்புகளின் போட்டிப் போராட்டத்தை நோக்கியும் கூட்டுறவாளர்களிடையேயும் கூட்டுறவு நிறுவனத்தின் இடையேயும் உள்ள கட்டுப்பாட்டுறவைப் பராமரித்தலை ஒரு கொள்கையாகத் தெளிவாகச் சொல்லப்பட வேண்டுமென்பதும் ஏற்கப்படவேண்டுமென்று குழுவினர் கருதினர். ஒவ்வொருவரும் எல்லோருக்குமாகவும், எல்லோரும் ஒவ்வொருவருக்காகவும் என்ற கூட்டுறவு இயக்கத்தின் அறைகூவல் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் தனிப்பட்ட உறுப்பினர்களுக்கு மாத்திரம் விடுக்கப்பட்டது அன்று; அது எல்லா நிறுவனங்களிலுள்ள எல்லாக் கூட்டுறவாளர்களுக்கும், எல்லா நாடுகளிலுள்ள கூட்டுறவாளர்களுக்கும் விடுக்கப்பட்ட ஓர் அறைகூவல். இந்த அறைகூவலுக்கு எல்லா நாடுகளிலுள்ள கூட்டுறவாளர்களும் முழுமனதாகவும் சுயேச்சையாகவும் பணிய வேண்டும்.

## மாற்றிமுறைப்படுத்தப்பட்ட ஆறு கொள்கைகள் (The Reformulated Six Principles)

புதிதாக முறைப்படுத்தப்பட்ட கூட்டுறவு நடவடிக்கையின் ஆறு கொள்கைகள், சாரத்தில், ராக்டேல் சங்கத்தின் வழிகாட்டியான நாளிலிருந்து கூட்டுறவாளர்கள் தங்கள் நம்பிக்கையின் ஒருங்கிணைந்த பகுதியாகக் கருதிவந்த அத்தியாவசியப் பெறுமானங்களை மீண்டும் சொல்லுதலே. முன்னமே கூறியபடி, இந்தக் கொள்கைகள் சர்வதேசக் கூட்டுறவுச் சம்மேளனத்தின் மத்திய குழுவால் அமைக்கப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளைப் பற்றிய கமிஷனின் ஏகமனதான அறிக்கையில் முறைப்படுத்தப்பட்டன. 1966ஆம் ஆண்டில் செப்டம்பர் மாதத்தில் வியன்னு

(Vienna) நகரில் நடைபெற்ற சர்வதேசக் கூட்டுறவுச் சம்மேளன 23-வது காங்கிரஸில் அவை கீழ்க்கண்டவாறு ஏற்றுக்கொள்ளப்பட்டன.

(i) ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்துவம் தன்னிச்சையானதாக (Voluntary) இருக்கவேண்டும். மற்றும், அந்த அங்கத்துவம் எந்தவிதமான சமுதாய, அரசியல், சமய அல்லது வம்ச பேதமற்றும், இயற்கைக்கு ஒவ்வாத தடைபாடுகளற்றும், சங்கத்தின் சேவைகளைப் பயன்படுத்தி அங்கத்துவத்தின் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள விரும்பும் எல்லா மனிதர்களுக்கும் கிடைப்பதாக இருக்கவேண்டும்.

(ii) கூட்டுறவுச் சங்கங்கள் மக்களாட்சி நிறுவனங்கள். அவற்றின் விவகாரங்கள் உறுப்பினர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட முறையில் தேர்ந்தெடுக்கப்படும் அல்லது அமர்த்தப்படும் நபர்களால் நிருவகிக்கப்பட்டு உறுப்பினர்களுக்கு அந்த நபர்கள் பொறுப்புள்ளவர்களாகவும் நடந்துகொள்ளவேண்டும். பிரதம சங்கங்களின் உறுப்பினர்கள் வாக்களிப்பில் சம உரிமைகளை உடையவர்களாகவும் (ஓர் உறுப்பினருக்கு ஒரு வாக்கு), தங்கள் சங்கங்களைப் பாதிக்கும் முடிவுகளில் சம ஈடுபாடு உடையவர்களாகவும் இருக்கவேண்டும். பிரதம சங்கங்களல்லாத இதர சங்கங்களில், நிருவாகம் தக்க வகையில் மக்களாட்சி அடிப்படையில் நடத்தப்படவேண்டும்.

(iii) பங்கு மூலதனம் ஏதாகிலும் ஒரு வரையறுக்கப்பட்ட வட்டிவிகிதத்தை மட்டுந்தான் பெறவேண்டும்.

(iv) சங்கத்தின் செயற்பாட்டில் ஏதாவது உபரி அல்லது சேமிப்பு ஏற்பட்டால் அது அச் சங்கத்தின் உறுப்பினர்களுக்குச் சொந்தமாகி, ஓர் உறுப்பினர் மற்ற உறுப்பினர்களின் இழப்பில் அல்லது நட்டத்தில் இலாபம் பெறுவதைத் தவிர்க்கத் தக்க முறையில் பகிர்ந்து கொடுக்கப்படவேண்டும். இது கீழ்க்கண்டவாறு உறுப்பினர்களின் தீர்மானத்தின்படி செய்யப்படலாம்:

(அ) கூட்டுறவுச் சங்கத்தின் வாணிப வளர்ச்சிக்கான ஏற்பாட்டின்மூலம்,

(ஆ) பொதுவான சேவைகளை வழங்குவதற்கான ஏற்பாட்டின்மூலம், அல்லது

(இ) உறுப்பினர்களிடையே அவர்கள் சங்கத்தினிடம் செய்திருக்கும் நடவடிக்கைகளின் விகிதப்படி பகிர்ந்து கொடுப்பதற்கான ஏற்பாட்டின்மூலம்.

(v) எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும், பொருளாதார மற்றும் ஜனநாயகத் தன்மையுள்ள கூட்டுறவுக் கொள்கைகளிலும் தொழில்நுட்பங்களிலும் தங்கள் உறுப்பினர்களுக்கும் அலுவலர் களுக்கும் ஊழியர்களுக்கும் பொதுமக்களுக்கும் கல்வி போதிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

(vi) தங்கள் உறுப்பினர்களின் நலனுக்காகச் சிறந்த முறை யில் சேவை செய்யும்பொருட்டு எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களும் அவற்றின் நிர்வாகக் குழுக்களும் உள்ளூர் மட்டத்திலும் தேசிய மட்டத்திலும் சர்வதேச மட்டத்திலும் இதரக் கூட்டுறவுச் சங்கங் களுடன் சாத்தியப்படும் ஒவ்வொரு வழியிலும் தீவிரமாக ஒத்து ழைக்கவேண்டும்.

## ஆறு கூட்டுறவுக் கொள்கைகளின் விளக்கம்

(அ) மேற்குறிப்பிட்ட கொள்கைகளில் ஒவ்வொன்றினைப் பற்றியும் ஒரு சில குறிப்புரை வழங்கலாம். அங்கத்துவத்தைப் பற்றிய முதல் கூட்டுறவுக் கொள்கையைப் பொருத்தவரை. திறந்த அங்கத்துவத்தில் இயல்பாகவுள்ள வரையறைகள் ஏற்கப் படுகின்றன. மற்றும், அங்கத்துவத்தின் தன்னிச்சையான தன்மை யும் வலியுறுத்தப்படுகிறது. கூட்டுறவு நிறுவனங்கள் எல்லோ ருக்கும் உரியன என்பதன் பொருள் கூட்டுறவுச் சங்கங்களின் அங்கத்துவம், சமயம், இனம், கோட்பாடு, சமுதாயம், வம்சம், மொழி அல்லது பிற வேற்றுமைகளில்லாமல், எல்லாக் குடி மக்களுக்கும் திறந்ததாக இருக்கவேண்டுமென்பதே. ஒரு பிரதமக் கூட்டுறவுச் சங்கத்தில் சேரும் நபர்களுடைய உரிமையில் விதிக்கப் படும் நியாயமான தடைகளாவன, சங்க எல்லையில் இருப்பிடம் அல்லது சொத்துரிமையும், சங்க நடவடிக்கைகளில் ஈடுபடுவதற் கான தகுதியும் மட்டுந்தான். எனினும், உறுப்பினர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான ஒரு சங்கத்தின் ஆற்றல் அதன் செல்வாதாரங்களினுல் வரையறுக்கப்படலாம். அத்தகைய சந்தர்ப்பத்தில், சேர்க்கவேண்டிய நபர்களின் எண்ணிக்கையில் வரம்பு இருக்கலாம். ஆனுல், அந்த வரம்பு மேற்குறிப்பிட்ட காரணங்களுக்காக இருக்கக்கூடாது. மற்றும், சம்பந்தப்பட்ட சங்கத்தின் செயற்பாட்டிற்கு முரணுன நடவடிக்கைகளில் ஈடுபட்டி ருக்கும் நபர்களைச் சங்கத்தில் சேர்க்காமல் விடுவதற்கு அவசியப் படலாம். உதாரணமாக, ஒரு கடன் சங்கத்தில் கடன் கொடுப்பவர் களையும், ஒரு நெசவாளர் சங்கத்தில் நெசவாளர் முதலாளிகளையும் உறுப்பினர்களாகச் சேர்க்க முடியாது. இந்த நிபந்தனைகளுக்குட் பட்டுத் தகுதியுள்ள எல்லா நபர்களுக்கும் ஒவ்வொரு பிரதம கூட்டுறவுச் சங்கமும் பேதமில்லாமல் திறந்திருக்கவேண்டும். அதே.

மாதிரி ஒரு மத்திய சங்கமும் அதன் உறுப்பினர் ஆவதற்குத் தகுதியுள்ள எல்லாப் பிரதம சங்கங்களுக்கும் திறந்திருக்கவேண்டும்; ஒரு தலைமைச் சங்கம் அதன் உறுப்பினராவதற்குத் தகுதியுள்ள எல்லா மத்திய சங்கங்களுக்கும், மற்றும் சில சந்தர்ப்பங்களில் இதர சங்கங்களுக்கும் திறந்திருக்கவேண்டும்.

மற்றும், கூட்டுறவு நிறுவனங்கள் அல்லாத இதர நிறுவனங்களாலும் அல்லது முக்கியமாகத் தனியார் வியாபாரம் செய்யும் நபர்களாலும் ஒரு கூட்டுறவுச் சங்கம் அமைத்தல், சட்டரீதியாக இருந்தாலும், கூட்டுறவு இயக்கத்தின் நோக்கங்களை வளர்ப்பதற்குச் செய்யப்படும் ஒரு செயல் என்று அர்த்தப்படாது. அதாவது அதை இலாபத்திற்கு வியாபாரம் செய்வதற்குப் பதிலாக வைக்கப்பட்ட பிரதானமாகப் பரஸ்பர உதவிமுறை என்று சொல்ல முடியாது. உதாரணமாக, நுகர்வோர் பண்டங்களை மொத்தமாக வாங்கி அவற்றைப் பொதுமக்களுக்குச் சில்லறை விற்பனையாளர்களாக வினியோகிப்பதற்காக ஒரு கூட்டுறவுச் சங்கத்தை அமைப்பதற்கு ஒரு வியாபாரிகள் கூட்டத்திற்கு அனுமதி அளிக்கமுடியாது.

கூட்டுறவின் அங்கத்துவம் தன்னிச்சையானதாக (Voluntary) இருக்கவேண்டும். இது கூட்டுறவு லட்சியத்தின் ஒரு முக்கியக் குணாம்சம் ஆகும்; அதாவது, ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் ஈடுபடுதல் தன்னிச்சையானது. சாதாரணமாகத் தனிநபர்கள் மட்டும் அடங்கியிருக்கவேண்டிய ஒரு பிரதம சங்கத்தில் சேருவதற்கு எவருக்கும் எந்தவிதமான கட்டாயமும் இராது. ஆனால், இந்தத் தன்னிச்சையானது ஒரு சங்கத்திலிருந்து எவரும் அவர் விரும்பும் காலத்தில் விலகுவதற்கு உரிமை இருக்க வேண்டும் என்று அர்த்தப்படாது. ஒரு நபர் ஒரு சங்கத்தில் ஒருமுறை சேர்ந்தால், அவர் இதர உறுப்பினர்களுடனும் அனைத்துச் சங்கத்துடனும் ஒரு கடமை ஒப்பந்தத்தில் சேருகிறார். ஆகையால், ஒரு சங்கம் திருப்திகரமாகச் செயல்படவேண்டுமானால், உறுப்பினர்கள் விலகுதல் குறித்தும், அவர்கள் பங்கு மூலதனத்தை வாபஸ் பெறுவது குறித்தும் நியாயமான நிபந்தனைகளும் தடைகளும் அவசியப்படுகின்றன. ஆனால், அத்தகைய கட்டுப்பாட்டுகளுக்குட்பட்டு, ஓர் உறுப்பினர் சங்கத்தில் காலவரம்பின்றி உறுப்பினராக நீடித்திருப்பதற்குக் கட்டாயப்படுத்தப்பட மாட்டார் என்பது உள்ளடங்கிய கருத்து. அதேபோன்று எந்தப் பிரதம அல்லது மத்திய சங்கமும்கூட முறையே மத்திய சங்கம் அல்லது தலைமைச் சங்கத்தின் உதவியின்றி இயங்கமுடியும் என்று நம்பினால், அச் சங்கத்தினின்று தனியாகச் செயல்பட அதற்கு உரிமையுண்டு. இங்கேயும்கூட, ஒரு சங்கம் ஒருமுறை ஒரு மத்திய

அல்லது தலைமைச் சங்கத்தில் சேர்ந்துவிட்டால் அஃது அதன் கடமைகளை நிறைவேற்ற வேண்டும். மற்றும், சட்டத்தில் விதிக்கப்படும் நிபந்தனைகளின்கீழ் மட்டுந்தான் தன் அங்கத்துவத்தை வாபஸ்பெற அதற்கு உரிமையுண்டு.

(ஆ) கூட்டுறவு நிறுவனங்களின் மக்களாட்சிமுறை நிருவாகம் என்ற இரண்டாவது கொள்கையில் பல்வேறு உட்கருத்துகள் இருக்கின்றன. பிரதம கட்டத்தில், ஒரு சங்கத்தின் அலுவல்கள் முழுமையாக அல்லது பெரும்பான்மையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகக் குழுவால் நடத்தப்பட வேண்டுமென்று அதற்குப் பொருள். அதேபோல, மத்திய சங்கங்களும் தலைமைச் சங்கங்களும் அவற்றின் உறுப்பினர் சங்கங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகக் குழுக்களால் நிருவகிக்கப்படவேண்டும். இந்தக் கூட்டுறவுக் கொள்கையை அனுசரிக்கவேண்டுமானால், கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகம் முழுதும் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர்களால் நடத்தப்படவேண்டும் என்று தேவைப்பட்டாலும், நடைமுறையில் ஓரளவு இந்தக் கொள்கை மாற்றப்படவேண்டியிருக்கிறது. அரசால் வழங்கப்பட்ட மூலதன உதவியையும் மற்றப் பல உதவியையும் பாதுகாக்கும்பொருட்டு நியமிக்கப்பட்ட இயக்குநர்கள் (Nominated Directors) அவசியப்படலாம். நிபுணர்களுடைய அறிவுரையைப் பெறுவதற்குக்கூட, இது தேவையெனத் தோன்றலாம். ஒரு கூட்டுறவுச் சங்கம் உள்பூசல்கள் அல்லது இதர காரணங்களால் திருப்திகரமாகச் செயல்படுவதற்குத் தவறும்போது வெளியார் தலையீடு மிக அவசியமாகும். ஆனால், மக்களாட்சி முறை நிருவாகத்திற்குள்ள இந்த வரையறைகள் குறைந்த அளவாக இருக்கவேண்டுமே தவிர, கடைசி உபாயமாக மட்டுந்தான், ஜனநாயக நிருவாகம் தள்ளி வைக்கப்படவேண்டும். முழுமையாக நியமனம் செய்யப்பட்ட நிருவாகக் குழு மூலம் அல்லது அரசு அதிகாரிகளின் விரிவான கட்டளைகள், அறிவுரைகள், வழிகாட்டுதல்மூலம் ஒரு நிறுவனம் நீண்ட நாள் அடிமை நிருவாகத்திலிருப்பது இயக்கத்தின் அடித்தளத்திற்கே ஊறு செய்து, அரசாங்கத்தின் முறைப்படிஅமையாத ஒரு கிளையாக இயக்கத்தை மாற்றிவிடுவதற்கு நிலை ஏற்படலாம். எனவே, ஜனநாயகக் கண்காணிப்போடு, கூட்டுறவு நிறுவனங்களின் தன்னுட்சிக் கருத்தமைப்பும் (Concept) தற்சார்புக்கான அவற்றின் ஆற்றலும் பராமரிக்கப்படவேண்டும். அவற்றை மறந்துவிட கூடாது.

(இ) பங்கு மூலதனத்தின்மீது வரையறுக்கப்பட்ட பற்று என்ற மூன்றாவது கூட்டுறவுக் கொள்கையைக் குறித்த விளக்கம்: கூட்டுறவு நிறுவனங்கள் பரஸ்பர சேவைக்கான உபயோகிப்போர் நிறுவனங்களாகும். எனவே, இந்த நிறுவனங்களுக்குச் சொந்த

மான அல்லது அவை உபயோகிக்கும் எந்த மூலதனமும் வெறும் உற்பத்திக் கருவியேதான். பங்கு மூலதனம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் வியாபாரத்தில் அது உபயோகப்படுத்தப்படுகிறதைப் பொருத்தமட்டில், அதற்குரிய வட்டி விகிதத்திற்கு உரிமைபெறும். ஆனல், அந்தக் காரணத்தினுல் எந்தச் சங்கத்தையும், தன் பங்கு மூலதனத்தைக் குறைந்த அளவில் வைத்துக்கொள்வதற்கோ, அதன்மீது வட்டி கொடுக்காமல் இருப்பதற்கோ தடுக்க முடியாது. இந்தக் கொள்கையில் அடங்கியிருக்கும் கூட்டுறவுப் பெறுமானம், ஒரு கூட்டுறவுச் சங்கத்தால் உபயோகிக்கப்படு கின்ற எந்தவித மூலதனமும் நியாயமான வட்டி விகிதத்திற்கு மேற்பட்ட உயர்வான ஊதியம் பெறக்கூடாது என்பதும், ஒரு சங்கத்தில் உறுப்பினர்கள் சமமற்ற பங்கு மூலதனத்தை வைத்திருந்தால், சங்க விவகாரங்களில் ஈடுபடும் உரிமையானது அதிகப் பங்கு மூலதனமுடையவர்களுக்குச் சாதகமாக வித்தியாசப்படக் கூடாது என்பதுமே.

(ஈ) உபரி அல்லது சேமிப்பு விநியோகம் (Disposal of surplus or savings) என்பதைக் குறித்த நான்காவது கூட்டுறவுக் கொள்கை: இது உறுப்பினர்களின் தீர்மானம்மூலம் கீழ்க்கண்ட வாறு செய்யப்படலாம்.

(1) கூட்டுறவுச் சங்கத்தின் வியாபார வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்தல்.

(2) பொதுவான சேவைகளை வழங்குவதற்கு ஏற்பாடு செய்தல்.

(3) உறுப்பினர்களிடையே அவர்கள் சங்கத்துடன் செய்த நடவடிக்கைகளின் விகிதப்படி வினியோ கிப்பதற்கு ஏற்பாடு செய்தல்.

இந்த மூன்று வித அனுமதிக்கப்பட்ட நடவடிக்கை முறை களில் வைதீகமான கூட்டுறவாளர்கள் கடைசி முறையைப் பின்பற்ற விரும்புவார்கள். அதாவது, உறுப்பினர்களின் நட வடிக்கைகளுக்கேற்ப உபரியை வினியோகம் செய்வதுதான் இலாப நோக்கை விலக்கும் ஒரு சரியான செயல் என்பது. எனினும், கூட்டுறவு வாணிபத்தின் நிதிஅமைப்பு முழுவதும், சுயநிதி அளித்துக்கொள்வதன் அவசியமும் எதிர்பாராத திசைகளில் அபி விருத்தி அடைந்திருப்பதால் இந்தப் பரம்பரைக் கொள்கையை நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களும்கூட எல்லாச் சூழ்நிலைகளிலும் பின்பற்றவேண்டிய பிரத்தியேகமான செயலூாக ஆதரிக்க முடியாது. இதரவகைச் சங்கங்களிலிருக்கும் நிலவரம் பொதுவான பொரு

ளாதார நடைமுறைகளுக்கு மிக நெருங்க ஒத்திருக்கிறது; ஆகை யால், உபரி ஏதாவது இருப்பின், இயல்பாகவே அது சங்கத்தின் ஓர் உள்ளிட்ட நிதி உதவி ஆதாரமாக அடிக்கடி கருதப்படுகிறது. அதை உறுப்பினர்களுக்கே நேரடியாகச் சில வடிவத்தில் விநியோகிப்பது பல முறைகளுள் ஒன்றுமட்டுமே. ஒவ்வொரு சங்கத்தின் உறுப்பினர்களும், தங்கள் யுக்திக்கேற்ப ஒரு நடவடிக்கை யைப் பின்பற்ற உரிமையுள்ளவர்களாவர். குறிப்பாகச் சங்கத்தைக் கலைத்தபிறகு, அதன் வில்லங்கப்படாத காப்பு நிதிகளைச் சில கூட்டுறவுக் காரியத்திற்கு ஆதரவாக உபயோகப்படுத்தவேண்டு மென்றும், எந்தச் சூழ்நிலையிலும் அஃது உறுப்பினர்களிடையே விநியோகிக்கப்படக்கூடாதென்றும் நீண்டகாலமாகவே கருதப் பட்டு வருகிறது.

(உ) ஐந்தாவது கொள்கையாகிய கல்வி நடவடிக்கையைக் குறித்து (Educational activity) அறிந்துகொள்ள வேண்டியது. கூட்டுறவாளர்கள் வாணிபத்தை மட்டும் வளர்ப்பதற்கு முயல்வ தோடன்றி, அவர்கள் அதைவிட அதிகமாக இதர நிறுவனங் களுடன், உதாரணமாக, முற்றிலும் முதலாளித்துவ அல்லது முற்றிலும் ஏதேச்சாதிகார நிறுவனங்களுடன் போட்டியாகத் தன்னை நிலைநிறுத்துவதற்கும், நியாயப்படுத்துவதற்குமுரிய ஒரு விரும்பப்படும் சமுதாய வாழ்க்கை நெறியையும் நம்பிக்கையையும் வளர்க்கவும் முயல்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட கூட்டுறவுச் சங்கம் எந்த அளவிற்கு, எந்த முறையில், தன் நிதி வசதிகளைக் கல்வி வளர்ச்சிக்காகச் செலவிடவேண்டும் என்பது, உறுப்பினர் களுடைய முடிவிற்கு விடப்படவேண்டிய ஒரு விஷயமாகும்.

(ஊ) ஆறாவது கொள்கையாகிய, கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகளை ஒருமைப்படுத்துதலும், ஒருங்கிணைத்தலும் (Co-ordination and integration of the activity of Co-operatives): ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் வெற்றிக்கு அத்தியாவசியமானது, சங்கத்தினிடம் உறுப்பினர்கள் வைத்திருக்கும் விசுவாசம். மற்றும் ஒரு நாட்டிலுள்ள தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களும், மையக் கூட்டுறவு அமைப்புகளும் கூட்டுறவுத் தொழிலையும், வாணிபத்தை யும் மொத்தமாக விரிவுபடுத்துவதற்கு ஒன்றோடொன்று உப யோகமுள்ள முறையிலும் ஆர்வத்துடனும் ஒத்துழைக்கவேண்டும். இந்தக் கொள்கையானது, கூட்டுறவாளர்களிடையேயும், கூட்டுறவு நிறுவனங்களிடையேயும் இருக்கவேண்டிய உள்ளார்ந்த கட்டுப் பாட்டுப் பிணைப்பினை வலியுறுத்த உதவுகிறது. தனியார் துறை யிலும், பொதுத் துறையிலுமுள்ள மாபெரும் கூட்டிணைப்புகளின் போட்டியை நோக்கியும், உள்நாட்டுக் கூட்டுறவு வளர்ச்சி, அனைத்துநாட்டு வாணிபம் ஆகியவற்றின் வாய்ப்பை நோக்கியும்,

இது மிக அவசியமாக இருக்கிறது. செலவுகளைக் குறைப்பதும், வியாபாரத்தை விரிவுபடுத்துவதும், அவசியமான மையமாக ஒன்றுசேர்தலும், பொதுவான நடவடிக்கையெடுத்தலுமான (Common action) போக்கு இதரவித நிறுவனங்களில் தீவிரமாக இருந்துகொண்டு வருகிறது. காலம் கழிக்காமல், கூட்டுற வாளர்கள், தங்கள் இலட்சியத்தை ஆதரிக்கும்பொருட்டுத் தனித் தனியாகவும் கூட்டாகவும் செயல்படாவிட்டால், பேரளவு நிறு வனங்களின் போட்டியால் அவர்கள் அழிக்கப்படுவார்கள். எனவே, தங்கள் உறுப்பினர்களின் நலன்களுக்காகவும் அனைத்துச் சமுதாய நன்மைக்காகவும் பணியாற்றும்பொருட்டு, எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களும், சாத்தியப்படும் ஒவ்வொரு வழியிலும், உள்ளூர், தேசிய, அனைத்துநாட்டு மட்டங்களிலுள்ள இதரக் கூட்டுறவு நிறுவனங்களுடன் சுறுசுறுப்பாக ஒத்துழைக்க வேண்டியது அவசிய மாகிறது.

மேற்கூறியவைகளிலிருந்து, மாற்றி முறைப்படுத்தப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளுள் ராக்டேல் முறை இரண்டு கொள்கை களை, அதாவது, ரொக்க வாணிபத்தையும், அரசியல், சமய நடுநிலையையும் தள்ளிவிட்டன என்பது தெளிவு. எனினும், புதிதாக முறைப்படுத்தப்பட்ட மற்ற ஆறு கூட்டுறவுக் கொள்கை களும், சாரத்தில் ராக்டேல் சங்க காலத்திலிருந்து கூட்டுற வாளர்கள் தங்கள் நம்பிக்கையின் ஒருங்கிணைந்த பகுதியாகக் கருதிவந்த அத்தியாவசியப் பெருமானங்கள் மீண்டும் சொல்லப் படுதலே (Restatement) ஆகும்.

## முதலாளித்துவத்திலிருந்தும், சமஉடைமையிலிருந்தும் எவ்வாறு கூட்டுறவு வேறுபடுகின்றது

(How Co-operation differs from Capitalism and Socialism)

(i) சமதர்ம முறையின்கீழ் உற்பத்திச் சாதனங்கள் பொது உடைமையிலும் பொது நிருவாகத்திலும் இருப்பதோடு, தனியார் சொத்தும், குறிப்பாக நுகர்பொருள்களில், ஒரு வரையறுக்கப்பட்ட அளவிற்கு அனுமதிக்கப்படும். ஒரு சம உடைமைப் பொருளாதார அமைப்பு ஒரு திட்டமிட்ட பொருளாதார அமைப்பாகும்; இலாபநோக்கு அதில் தள்ளிவிடப்படும்; அதில் விலைமுறை (Price system) இருக்கும்; ஆனால், அது ஒரு முக்கியமற்ற பணி புரியும். பொதுஉடைமையின் அடிப்படையான கொள்கை யானது, சமுதாயத்தின் உறுப்பினர்களிடையே, ஒரே குடும்பத் தின் உறுப்பினர்களிடையேபோன்று, ஒவ்வொன்றையும் பொது வாக வைத்துக்கொள்வது; அதாவது, 'ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் தேவைகளுக்கேற்ப' (Each men according to his needs)

என்பது. தனியார் சொத்து எவ்வளவு சிறிதாக இருந்தாலும் அது சுரண்டலுக்கு வழி செலுத்தும்ஆகையால், அஃது ஒரு தீய்து. பொருள்களின் அபரிமிதத்தை முன்எண்ணமாகக் கொண்டது இந்தக் கொள்கை. வரையறுக்கப்படாத அளவு செல்வம் அல்லது குறைந்தபட்சம் ஓர் உபரிச் செல்வமாவது இருக்கவேண்டும்; அப்பொழுதுதான் காற்றையும் நீரையும்போல ஒவ்வொரு மனிதனும் தன் விருப்பம்போல் அதில் எடுத்துக்கொள்ளலாம். ஆனால், துரதிர்ஷ்டவசமாக இது நிகழ்வதில்லை. பற்றுக்குறைதான் வாழ்க்கையின் கசப்பான உண்மை. முற்றிலும் பொதுஉடைமைச் சமுதாயத்தில், பணம்சார்ந்த செலவுகள் கழித்துவிடப்படும். பொதுஉடைமைக்காரர்கள் பணத்தை ஒழித்துவிட விரும்புகின்றனர். ஏனென்றால், பணம் என்பது தொழிலாளிகளைச் சுரண்டுவதற்காக முதலாளித்துவ வர்க்கத்தின் கண்டுபிடிப்பு என்று அவர்கள் கருதுகின்றனர். அவர்கள் கருத்தின்படி, சமுதாயத்தின் இறுதிநிலையில் வர்க்கப் போராட்டமின்மையால் அரசு அழிந்து விடும். இந்தவகையான பொதுஉடைமை உலகத்தில் எங்கேயும் இருக்கவில்லை என்பது குறிக்கற்பாலது. பொதுஉடைமை நாடுகள் என்று வழங்கப்படுகிற நாடுகளுங்கூட உண்மையாகவே சமதர்ம நாடுகளே.

(ii) 'கூட்டுறவு அத்தியாவசியமாகத் தனியார் ஸ்வாதீனக் கொள்கையை உடையதால், அது சமதர்மத்தினின்றும் வேறுபடுகிறது. தனிநபரின் சுதந்திரத்திற்காக அஃது இயங்குகிறது; தனியார் சொத்தையும் மூலதனத்தையும் ஒழித்துவிடாமல், தனக்கெனச் சிலவற்றைச் சம்பாதித்துக்கொள்ளத் தனிநபரை அஃது ஊக்குவிக்கிறது; தன் சொந்தக் கண்காணிப்பின்கீழ்ச் செயல்படுவதன்மூலம் தன் பொருளாதார நிலைமையை மேம்படுத்திக் கொள்ளவும் தன் சொந்த அலுவல்களின் நிருவாகத்தைத் தன் கையிலே எடுத்துக்கொள்ளவும் தனிநபரை அது ஊக்குவிக்கிறது' என்று அறிஞர் கால்வெர்ட் (Calvert) கூறியிருக்கிறார். ஒரு முதலாளித்துவச் சமுதாயத்தைப்போன்று அது மூலதனத்தை வளர்க்கிறது; ஆனால், அந்த மூலதனம் தனிநபரின் இலாபத்திற்கு உபயோகப்படுத்தப்படுகிறதில்லை. ஏனென்றால், கூட்டுறவுச் சங்கத்தின் இலாபம், அதன் வியாபாரத்திலாவது உறுப்பினர்கள் சங்கத்தைப் பயன்படுத்திய அளவிற்கு அவர்களுக்குப் பிரித்துக்கொடுப்பதிலாவது உபயோகிக்கப்படுகிறது; வட்டியின் வாயிலாக, மூலதனம் ஒரு பெயரளவிலான கைம்மாறு மட்டும்தான் பெறுகிறது. இந்த முறை சமதர்ம இலாபக் கொள்கையின் தன்மையைப் பெறுகிறது. கூட்டுறவு, தன் உள்விவகாரங்களின் நிருவாகத்தில், அரசினரிடமிருந்து எந்தத் தலை

யீட்டு யோசனையையும் எதிர்க்கிறது. இதர ஆதாரங்கள் கிடைக்காவிட்டால், அரசு உதவியைப் பெற்றுக்கொள்வதற்கு அது தயாராக இருந்தாலுங்கூட, தன்னிறைவு (Self-Sufficiency) அடைவதற்கும், சுதந்திரமாக இருப்பதற்கும் அது முயற்சிக்கிறது. அத்தியாவசியமாக, அது தன்னிச்சையான ஒன்று சேர்தலையும் (Voluntary Association), சுயேச்சையான உதவியையும் (Voluntary aid) அடிப்படையாகக் கொண்டதாகையால், அது சமஉடைமை முறையிலிருந்தும் பொதுஉடைமையிலிருந்தும் வேறுபடுகிறது.

(iii) சமதர்ம முறை அல்லது பொதுஉடைமையிலிருந்தும் கூட முரண்பட்டு, கூட்டுறவின் மற்ருெரு சிறப்பான அம்சமானது அது நிறுவுவதற்கு முயற்சிக்கும் சமுதாய அமைப்பு (social order) விருப்பார்ந்த (optional) தன்மையுடையது; அது வலுக்கட்டாயத்தைக் (compell entrance) கையாளுவதில்லை; தற்போதுள்ள பொருளாதார நிறுவனங்களை ஒடுக்குவதற்குப் புரட்சியான அல்லது சட்ட ரீதியான வலுக்கட்டாயத்தைக் கையாளுவதில்லை. கூட்டுறவினிடம் சமஉடைமை நாடுகளின் நோக்கம், வெவ்வேறு நாடுகளில் வெவ்வேருகவிருந்தாலும், சமஉடைமை நாடுகளும்கூட தொழிலாள வர்க்கத்தின் நிலைமையையும், சமுதாயத்தின் இதர வலுவற்ற மக்களின் நிலைமையையும் மேம்படுத்துவதற்காக, இதர முறைகளுடன் கூட்டுறவு முறைக்கும் ஓரிடம் கொடுப்பதற்குத் தயங்குகிறதில்லை என்பதை மறுக்கமுடியாது. சமதர்ம முறையைப் போன்று, கூட்டுறவு, உற்பத்திச் சாதனங்களின் பொது உடைமையை விரும்பாவிட்டாலும், அஃது அதற்காக வழி செய்கிறது.

(iv) கூட்டுறவு, முதலாளித்துவத்தின் அதிக வெளிப்படையான தீமைகளை நீக்கித் தற்போதுள்ள பொருளாதார முறையைப் பெருமளவு பயன்படுத்திக்கொள்ள முயற்சிக்கிறது. கூட்டுறவு, மனிதர்கள் தங்களை ஒழித்த மனிதர்களைச் சுரண்டும் முறைகளையும், போராட்டம் அல்லது விரோதத்தின் எல்லாக் காரணங்களையும் ஒழிக்க முயற்சிக்கிறது. உண்மையாகவே ஒவ்வொரு பெரிய கூட்டுறவு நிறுவன வகையும், மாறுபட்ட நலமிகளின் சண்டை அல்லது எந்தவிதமான விரோதம் அல்லது போராட்டத்தை ஒழிப்பதற்காகவே ஏற்பட்டது என்றே கூறலாம். நுகருவோர் சங்கம், வாங்குபவருக்கும் விற்பவருக்கும் இடையேயுள்ள போராட்டத்தை ஒழிக்கிறது; வீட்டுச் வசதிச் சங்கம் வீட்டுச் சொந்தக்காரருக்கும், குடித்தனக்காரருக்கும் இடையே உள்ள விரோதத்தை ஒழிக்கிறது; கடன் வசதிச் சங்கம் கடன் அளிப்பவனுக்கும், கடன் வாங்குபவனுக்கும் இடையேயுள்ள போராட்

டத்தை ஒழிக்கிறது; உற்பத்தியாளர் சங்கம் எஜமானனுக்கும், ஊழியனுக்கும் இடையேயுள்ள போராட்டத்தை ஒழிக்கிறது. சிறந்த பொருளாதார இயலினர், பேராசிரியர் ஜீட் (Prof. Gide) சுட்டிக்காட்டுவதுபோல, 'சமஉடைமை முறையைப் போலல்லாது கூட்டுறவு, மிக முக்கிய அவசியமான சமதர்மத் தத்துவங்களில் சிலவற்றை நடைமுறையில் நிறைவேற்றிக்கொண்டு, தற்போதுள்ள பொருளாதாரக் கட்டமைப்பிற்குள் நின்று செயல்படுகிறது. கூட்டுறவு நிறுவனங்களின் நோக்கம் மூலதனத்தை அறவே ஒழிப்பதன்று; உற்பத்தியின் நிருவாகத்தில் மூலதனத்தின் அபரிமிதமான பங்கை எடுத்துவிடுவதும், மூலதனம் இலாப வடிவத்தில் விதிக்கும் கப்பத்தை எடுத்துவிடுவதும்தான் கூட்டுறவின் நோக்கம். ஒரு முதலாளித்துவ சமுதாயத்தில், அதாவது ஒரு வரையறுக்கப்பட்ட பொறுப்பு நிறுவனத்தில், மூலதனம், நிறுவனத்தின் எல்லா இலாபங்களையும், நிருவாகத்தையும் தன்வசம் எடுத்துக் கொண்டு தொழிலாளியை ஒரு வெறும் கூலியாளாகக் குறைத்து விடுகிறது. இதற்கு மாருக, கூட்டுறவு முறை இந்த நிலைமையை மாற்றி, மூலதனத்தை ஊதியம் பெறும் ஒரு கூலியாளுக்கு மேற்படாதபடி செய்கிறது. எனவே, கூட்டுறவு முறை ஏறக்குறைய ஒரு சமுதாயப் புரட்சியாகும்.

(v) மற்றும், கூட்டுறவு ஓர் அரசியல் இயக்கமன்று. அரசியல் வழிகளில் அது தன் நோக்கத்தை அடைய முயற்சிக்கிறதில்லை. சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்ந்தாலன்றிப் பெற முடியாத அனுகூலங்களை, உறுப்பினரல்லாதவர்களும் பெறுவதற்கு அது போதனைமூலம் பாடுபடுகிறது. அரசினரின் நிர்ப்பந்தம் அல்லது வலுக்கட்டாயத்தினுல் உதவி செய்யப்படாமல், அது தன் தகுதிகளின்மீதுதான் நிற்கிறது அல்லது விழுகிறது. ஒவ்வோர் உறுப்பினரும், தாம் ஒத்துழைப்பதற்கு விருப்பமில்லாத நாளன்றே, இயக்கத்திலிருந்து விலக உரிமை பெற்றிருக்கிருர். அது பொதுநலன்களின் அடிப்படையின்பேரில் நிறுவப்பட்ட ஒரு சுயேச்சையாலான கழகம்; அஃது ஒரு வியாபார நிறுவனம்; அரசியல் நிறுவனமன்று. தன் சொந்த வியாபாரத் திறத்தின் மீது அது நிற்கிறது அல்லது விழுகிறது. அதன் விரிவாக்கத்தின் வரையறையானது, அது தன் எதிரிகளுடன் போட்டியிடுவதில் பெறும் தன் சொந்த வெற்றியினுல் அறுதியிடப்படுகிறது. தானில்லாமல் தன் உறுப்பினர்கள் என்ன லாபம் பெறுவார்களோ அதைவிட மேலான இலாபத்தை அவர்கள் பெறுவதனுல் மட்டும் தான், கூட்டுறவு, பிடிவாதமாக அப்படியே இருக்க முடியும்.

(vi) முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்குமிடையே பிளவை விளைவிக்கும் வகையில் ஒரு சிலரிடம் மட்டும் பொருள்

குவிய வழிசெய்யும் முதலாளித்துவத்திற்கும் தனியார் முன் முயற்சியை வளரவிடாமல் தடுக்கும் அரசு பொதுவுடைமைக்கும் (State Socialism) இடையே, கூட்டுறவு ஓர் இடைநிலை நெறியாக விளங்குகிறது. ஆகையால், பலாத்கார அடிப்படையில் கண்டிப்பான திட்டமிடுவதற்கும் அரசு தலையீடு அல்லது கட்டுப் பாடற்ற தாராளச் சுதந்திர முறைக்கும் இடையே (leissery liberalism) சாத்தியமுள்ள ஒரு நடுவழியாகக் கூட்டுறவைக் கருதலாம். இந்த வகையில், பொருளாதாரத் துறையில் ஒழுங்கு அமைதியும், நீதியும் நிலவுவதற்குச் சில வகையிலேனும் திட்ட மிடுதலை நம்புபவர்களும், தங்கள் அங்கீகாரத்திற்கு வழங்கப்பட்ட மற்ற முறைகளில் இருக்கும் பலாத்கார அம்சத்தை வெறுப்பவர் களும் கூட்டுறவு முறையைப் பலமாக விரும்புகிறார்கள்.

எனவே, கூட்டுறவு அன்றாடப் பொருளாதார நடவடிக்கை யில் பரஸ்பர உதவிக் கொள்கையையும், உள் தூண்டுதலையும் ஓர் அமைப்பாக்குவதை எடுத்துக் கூறுகிறது. பொதுவாக, உலகத்தில் கூட்டுறவு இயக்கம், தங்களுக்கு உபயோகப்படுத்தப்படும் விரும்பப் படாத பொருளாதார முறைகளுக்கெதிரே, மக்களிடையே தோன்றிய எதிர்விளைவின் ஆக்கம். பெருவாரி நிருவாகம், நிறுவனம் ஆகியவற்றின் ஆதாயத்துடன், சிறிய மனிதனுக்காகச் சுதந்திரமும் வாய்ப்பும் சேர்ந்திருக்கும் ஒரு தகுதியைக் கூட்டுறவு பெற்றிருக்கிறது. அது, முக்கியமாக ஒரு பொதுக் காரியத்திற்காகச் சரிசமமானவர்களின் ஒரு கூட்டு வணிகமாக உள்ளது. ஒரு நபரான ஒவ்வோர் உறுப்பினருக்கும் அவருக்குத் தேவைப்படும் பொருள்களையும்சேவைகளையும்சாத்தியபூர்வமானகுறைந்தசிக்கன மான செலவில் வழங்குவதே அதன் நோக்கம். அதன் கூட்டாட்சிக் கட்டமைப்பில், கூட்டுறவு இயக்கம் அதனுடன் ஒருங்கிணைந்த ஒவ்வொரு பிரதம சங்கத்திற்கும், அவற்றின் சுயாட்சித் தன்மையையோ கட்டமைப்பு அனைத்தின் நெகிழ்ச்சியையோ குறைத்துவிடாமல், ஒன்றுகத் திரட்டப்பட்ட செல்வாதாரங்களின் (resources) அனுகூலங்களை உதவ முடியும். மேலும், இயக்கத்தி னுள்ளே பல்வேறு பகுதிகளினிடையே ஒரு நெருங்கிய உறவை ஏற்படுத்துவதன்மூலம், நுகர்வோர் நிறுவனங்களுக்கும் உற்பத்தி யாளர் நிறுவனங்களுக்குமிடையே அவற்றின் பரஸ்பர அனுகூலங் களுக்கான நேரடித் தொடர்புகளையும் உருவாக்குகிறது. ஆகவே, முதலாளித்துவத்தின் தீமைகளை எதிர்த்துப் போராடுவதற்காக ஒரு போர்க் கருவியாகவும், பொதுவுடைமைக்கு எதிராக ஒரு ரட்சணமாகவும், ஜனநாயகத்தின் ஒரு பள்ளிக்கூடமாகவும் கூட்டு றவு கருதப்படுவது சரியே.

# சம உடைமைப் பொருளாதார அமைப்பில் குறிப்பாக இந்தியப் பொருளாதார அமைப்பில் கூட்டுறவின் இடம்

(The Place of Co-operation in a Socialist Economy with special reference to India)

ஒரு சமஉடைமைப் பொருளாதார அமைப்பில் கூட்டுறவின் இடம் அந்த அமைப்பின் வடிவத்தையும் வகையையும் பொறுத்திருக்கிறது. மாறிக்கொண்டிருக்கும் நிலைமைகளின் தேவைக்கேற்ப அவ்வப்பொழுது தோன்றிய பல்வேறு கருத்தாளர்கள் பல்வேறு வகையில் சமதருமத்தை விளக்கியிருக்கிறார்கள். சம உடைமை (Socialism) சர்வாதிகார முறைகளின் மூலமும் அல்லது ஜனநாயகம், திட்டமிடுதல் ஆகிய முறைகள் வாயிலாகவும் அமைக்கப்படலாம். ருஷ்யாவைப் போன்ற ஒரு சர்வாதிகாரச் சமஉடைமைப் பொருளாதார அமைப்பில், எல்லா வல்லமையுடைய மத்திய அதிகாரியான அரசு, பொருளாதார முறையைத் திட்டமிட்டு வழி நடத்துகிறது. பொருளாதார அமைப்பின் மாதிரி வகையையும் அரசு நிர்ணயிக்கிறது; அஃது உற்பத்தித் துறையில் பிரதானமான நடவடிக்கையை மேற்கொள்ளுகிறது; அஃது உற்பத்திச் சாதனங்களைச் சொந்தமாக வைத்துக்கொண்டு அவற்றை நிருவகிக்கிறது. எனினும், கூட்டுறவுக்கும் பொருளாதாரத் துறையில் குறிப்பாக, வேளாண்மை, விநியோகம் சிறிய அளவுத் தொழில்கள் போன்ற துறைகளில் ஓர் இடம் அளிக்கப்படுகிறது. ஆனால், அக் கூட்டுறவின் தன்மை, சுதந்திரமான பொருளாதார அமைப்புகளையுடைய நாடுகளில் போன்று, அதே மாதிரியாக இருப்பது சாத்தியமில்லை. மத்திய திட்டமிடுவதற்கு உட்பட்ட சர்வாதிகாரச் சமதருமப் பொருளாதார அமைப்பில், கூட்டுறவு, தன் உயிர்நாடியான பண்புகளை அதாவது சுயேச்சைத் தன்மை (voluntarism), ஜனநாயகக் கண்காணிப்பு (Democratic control), சுயாட்சி ஆகியவைகளை இழக்கிறது. அதன் செயல் துறைகளும் இயங்கும் முறைகளும் அரசால் நிர்ணயிக்கப்படுகின்றன. அஃது அரசு நிருவாக இயக்கத்தின் ஒரு பகுதியாகத்தான் இருக்கிறது; அரசினர் கொள்கைகளின் சில அம்சங்களை அமல்படுத்துவதற்காக அரசினர் கையில் அஃது ஒரு கருவியாக இருக்கிறது. எனவே, முன்முயற்சியானது குறைக்கப்பட்டு, கூட்டுறவுத் தொழிலமைப்பு, இந்த நாடுகளில் அரசு தொழிலமைப்பிலிருந்து எந்த வகையிலும் வேறுபட்டு இருப்பதில்லை.

மாறாக, ஜனநாயக சமஉடைமை (Democratic Socialism) ஒரு வேறுபட்ட படத்தைத் தருகிறது. இந்தியா ஒரு முதலாளித்துவப் பொருளாதார அமைப்பிலிருந்து ஒரு சமதருமப் பொருளாதார அமைப்பிற்கு மாறும் நிலையில் இருக்கிறது. அதன் குறிக்கோள் ஒரு சமஉடைமைச் சமுதாயத்தை (Socialistic pattern of Society) உருவாக்குவது; அதாவது, முன்னேற்றப் பாதைகளை நிர்ணயிப்பதற்கான ஓர் அடிப்படைச் சூத்திரம் தனியார் இலாபமாக இல்லாமல் சமுதாய இலாபமாக இருப்பதுடன் போற்றக்கூடிய அளவு தேசிய வருமானத்திலும் வேலைவாய்ப்பிலும் பெருக்கத்தை மட்டுமல்லாமல் வருமானங்களிலும் செல்வத்திலும் அதிகப்படியான சமத்துவத்தையும்கூட விளைவிப்பதாகவுமுள்ள சமுதாயம். இந்திய அரசு கொள்கையின் கட்டளைக் கொள்கைகளின் ஒன்று, சாதாரண மனிதனைப் பாதிக்கும் வகையில் பொருளாதார முறைச் செல்வமும் உற்பத்திச் சாதனங்களும் குவிவதற்கு வழிகாட்டக் கூடாது என்பது. இந்தக் கொள்கையை வளர்ப்பதற்காகப் பயன்படுத்தவேண்டிய நிறுவனங்களில், கூட்டுறவு நிறுவனங்கள் ஜனநாயகக் கொள்கையின்மீதும் சமதருமத்தின் பேரிலும் செயல்படுவதால், அவை மிகவும் தகுதி வாய்ந்தவை. ஐயமின்றி, முன்னமே குறிப்பிட்டபடி கூட்டுறவு நிறுவனங்களுக்குச் செயல்பாடு வரையறை உண்டு. எனினும், நம் நாட்டின் பொருளாதார அமைப்பில், குறிப்பாக வேளாண்மை, கடன் வசதி, விவசாயத் தேவைகள், விநியோகம், பதனப்படுத்தல், பால் பண்ணை, சிறு தொழில், குடிசைத்தொழில், மத்திய அளவுத் தொழில்கள், வீட்டுவசதி, நுகர்வோர் பொருள் வர்த்தகம் போன்ற துறைகளில் கூட்டுறவு நிறுவனங்கள் ஒரு நிர்ணயமான பணியை மேற்கொள்ளவும், பரந்த ஒரு துறையைத் தம் சேவைக்கு எடுத்துக்கொள்ளவும் வேண்டியிருக்கிறது. நம் நாட்டில் ஒரு சமதரும சமுதாயத்தை உருவாக்குவதற்காக மேற்கொள்ளப்படும் நம் முயற்சிகளில் கூட்டுறவு இயக்கத்தின் முக்கியத்துவம் இந்தியப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்களால் வலியுறுத்தப்பட்டுள்ளது. 1971ஆம் ஆண்டில் இந்தியக் கூட்டுறவுக் காங்கிரசைத் தொடங்கி வைக்கும்பொழுது அவர், 'கூட்டுறவு இயக்கத்தைப் போன்று முழுமையான சமுதாய நோக்கமும் வலிமையும் படைத்த இதர சாதனத்தை நான் அறியவில்லை. அது மக்களைத் தாங்களே உதவி செய்துகொள்வதற்கு உதவுகிறது. அவற்றின் முன்முயற்சியையும் தனித்தன்மையையும் குறைக்காதவாறு அவற்றிற்கு அவசியமான ஆதரவையும், செல்வ ஆதாரங்களையும் வழங்க அரசுக்கு வசதி அளிக்கிறது. பொருளாதாரக் குவியலின் தீமையான விளைவுகளை உண்டுபண்ணாமல், பெருவாரித் தொழிலின் சிக்கனங்களைப் பெறுவதற்கான ஓரே கருவியாகக்

கூட்டுறவு இருக்கிறது' என்று மொழிந்தார். இந்த அம்சங்களி லிருந்து நோக்கும்போது, நம் நாட்டின் பொருளாதார அமைப்பில் அரசினர் துறையிலிருந்தும் தனியார் துறையிலிருந்தும் வேறு பட்ட ஒரு பலமும், திறமையும் வாய்ந்த கூட்டுறவு முறையை வளர்த்தல் முதலாளித்துவப் பொருளாதார அமைப்பிலிருந்து சமதருமப் பொருளாதார அமைப்பிற்கு நிலைமாறுதல் அடைய மிகவும் உதவும்.

கடந்த 60 ஆண்டுகளுக்கு மேல், இந்தியாவில் கூட்டுறவு நிறுவனங்களின் செயற்பாட்டினால், கூட்டுறவு இயக்கத்தின் குறிக் கோள்களிலும் முக்கியக் கொள்கைகளிலும் ஒரு பொதுவான மாறுதல் ஏற்பட்டுள்ளது. கிராமப் புறங்களில் குடியானவர்களின் கடன் பளுவை மீட்கும் ஒரு வெறும் நிறுவனமாக இருந்து, இப்பொழுது கூட்டுறவு நிறுவனங்கள் பொதுவான பொரு ளாதார முன்னேற்றத்திற்கு — விவசாயத்திலும் தொழிலிலும் — மதிப்புவாய்ந்த நிறுவனங்களாகவும் ஜனநாயகத்தின் மதிக்க முடியாத தோழனாகவும் ஆகிவிட்டது. அரசு கொள்கைகளையும், பொருளாதார, சமுதாயநலத் திட்டங்களையும் அமல்படுத்து வதற்காகவும், நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக் காகவும் ஒரு தகுதிவாய்ந்த கருவியாக அது ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது. எல்லாவற்றையும்விட, அது சாதாரண மனித னின் பொருளாதார நலனை முன்னிட்டு அபிவிருத்தி செய்யப்பட வேண்டிய நம் பொருளாதார அமைப்பின் ஒரு முக்கியத் துறை யாக அது கருதப்படுகிறது. சாதாரண மனிதனின் பொருளா தார முன்னேற்றத்தின்மீதும், செல்வமற்றவர்களின் பொருளா தார முன்னேற்றத்தின்மீதும் செலுத்தப்படும் வற்புறுத்தல் அதி கரித்துக் கொண்டிருப்பதன் விளைவாக, கூட்டுறவு, நம் நாட்டின் ஐந்தாண்டுத் திட்டங்களில் தொடர்ந்து ஒரு முக்கிய இடம் பெற்று, மக்களின், குறிப்பாக, சமுதாயத்தின் வலிவற்ற பகுதி யினர்களின் சமுதாயப் பொருளாதார நலப் பல்வேறு திட்டங்களை அமல்படுத்துவதற்கு அது பயன்படுத்தப்பட்டு வருகிறது.

சமஉடைமையை அடைவதற்குப் பிராந்திய ஏற்றத்தாழ்வு, சமுதாய ஏற்றத்தாழ்வு, ஏழ்மை, வேலையின்மை ஆகிய பிரச்சினைகளுக்கு நாம் தீர்வுகாண வேண்டியிருக்கிறது. பொரு ளாதார நடவடிக்கையைப் பரவலாக்குவதற்கும், நானாவிதமாக்கு வதற்கும் சமநிலையான பிராந்திய அபிவிருத்திக்கும், விவசாயப் பண்ணைக் கூட்டுறவு நிறுவனங்கள் தொழில் ஒப்பந்தக் கூட்டுறவு நிறுவனங்கள் தொழிற் கூட்டுறவு நிறுவனங்கள்மூலம் பற்பல உற்பத்தி நடவடிக்கையை அமைப்பதற்காகவும், கிராமப்புறங்

களில் வேலைவாய்ப்பை உண்டுபண்ணுவதற்காகத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களையும் பலங்குன்றிய பகுதியினர்களுக்காக விசேஷத் திட்டங்களை அமைப்பதற்காகவும், கூட்டுறவு நிறு வனங்கள் சிறப்பான தகுதிவாய்ந்தவையாகும். உண்மையி லேயே, சிறு குடியானவர்கள், நிலமற்ற தொழிலாளிகள், கைவினைஞர்கள், சிறு வர்த்தகர்கள் முதலிய வலுவற்ற பகுதி யினர்கள், சுயஉதவி அடிப்படையின்பேரில், வெற்றிகரமான கூட்டுறவுச் சங்கங்களாகத் தங்களை அமைத்துக்கொள்ள முடி யாது. இந்த வகுப்பினரின் நிலையை உயர்த்தும்பொருட்டு அரசினர் மாபெரும் புனர் வாழ்வுத் திட்டங்களை அமைத்து அவைகளை கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் அமல்படுத்தவேண்டும். அப்போதுதான், கூட்டுறவு வெற்றியடைய முடியும்.

விரும்பத்தக்க சமுதாயப் பொருளாதார மாறுதலைக் கொண்டுவருவதற்கு அரசினர் கொள்கையின் ஓர் உறுதிப் பயனுள்ள கருவியாகக் கூட்டுறவு நிறுவனங்களின் முக்கியத் துவத்தை வலியுறுத்தமுடியாமலிருக்கமுடியாது. இந்தப் பின்னணியில்தான், அரசு தன் பல்வேறு திட்ட நிகழ்ச்சி முறை களில் கூட்டுறவு இயக்க வளர்ச்சிக்கு ஆதரவு வழங்கி வருகிறது. விடுதலைக்கு முன்னர், கூட்டுறவு இயக்கம் நாட்டின் பொருளா தார அமைப்பில் மிக அற்பமான ஓர் இடத்தைப் பெற்றிருந்தது. விடுதலைக்குப் பின்னர், திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி முறையை நாடு ஏற்றுக்கொண்டபோது அதில் தக்க இடம் கூட்டுறவுக்கு ஒப்படைக்கப்பட்டது.

மேன்மேலும் அதிகமான துறைகளில், அதிக எண்ணிக்கை யிலும் தரத்திலும், கூட்டுறவின் விரிவாக்கம், இந்தியப் பொரு ளாதார அமைப்பைச் சமஉடைமைப் பொருளாதார அமைப்பிற்கு மாற்றுவதில் பெரிதும் உதவும்.

## அரசும், கூட்டுறவும்
(State and Co-operation)

பல மேலைநாடுகளைப்போலல்லாது, இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் அரசு நடவடிக்கையால் தோற்றுவிக்கப்பட்டது. இந்திய அரசு இயற்றிய ஒரு சட்டத்தின்மூலம் இயக்கம் தொடங்கப்பட்டது. மிதமான அளவில், இயக்கம் அரசினர் ஆதரவைத் தொடர்ந்து பெற்றுவந்தது. நாடு விடுதலையடைந்த பிறகும், ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுக்கப்பட்டதிலிருந்தும், செயல்துறைகள் சில

வற்றில் கூட்டுறவு, அரசினரிடமிருந்து பேருதவியையும் ஆதரவை யும் பெற்றுவந்தது. சில சமயம், கூட்டுறவுச் சங்கங்கள் சுயஆட்சி நிறுவனங்கள் என்றும், அவை அரசினர் ஆதரவைச் சார்ந்து நிற்காமல், தங்கள் அலுவல்களை அரசினர் உதவியின்றித் தாங்களே நிருவகிக்கவேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. மற்றும், கூட்டுறவுச் சங்கங்கள் தனியார் அமைப்புகளாதலால், அவை தங்கள் சொந்த அலுவல்களை, நிதி அல்லது இதர வகை அரசினர் உதவியை எதிர்நோக்காமல், தாங்களே முறைப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தவையாக இருக்கவேண்டும் என்றும் வாதிக்கப்படுகிறது. இந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று; மற்றும், அது சரியானதும்கூட அன்று. கூட்டுறவுச் சங்கங்கள் தனியார் நிறு வனங்களின் ஓர் இனம் என்பது உண்மையேயானாலும், அவை களின் அமைப்பு, செயற்பாடு, குறிக்கோள்கள் ஆகியவையின் காரணமாக அவை ஒரு வேறுபட்ட ஆதாரத்தின்பேரில் நிற் கின்றன. நாட்டு விடுதலைக்குப் பின்னரும், அனைத்து இந்தியக் கிராமக்கடன் விசாரணைக்குழு (All India Rural Credit Survey Committee) அறிக்கையின் பிறகும், கூட்டுறவுச் சங்கங்களுடன் அரசினரின் இணைப்பு மேலும் அதிகமாகவும் பல தரப்பட்டதாகவும் ஏற்பட்டுள்ளது. உண்மையாகவே, கிராமக் கடன் விசாரணைக் குழுவினர், கூட்டுறவு நிறுவனங்களில், எல்லா மட்டங்களிலும், அரசுகூட்டாளித்துவமும் (State Partnership) அரசு பங்குகொள்ளுதலும் (State participation) இருக்க வேண்டு மென்று பரிந்துரை செய்துள்ளனர். மற்றும், அரசின் பேணுகின்ற கவனிப்பின்றி, கூட்டுறவு இயக்கம், இன்று அதன் தற்போதைய பரிமாணத்தைப் பெற்றிருக்க முடியாது. கூட்டுறவு இயக்கத்தின் அமைப்பிலும் வளர்ச்சியிலும் தீவிரமான முன்முயற்சி எடுப்பதும் உதவி அளிப்பதும் இன்று அரசினரின் கடமையாகிவிட்டது. மற்றும், திட்டமிடுதலிலேயே அரசினர் கட்டளையும் வழிகாட்ட லும் அவசியமாக அடங்கியுள்ளன. மேலும், வேறு எந்தவிதமான திட்டமிடுதலில்போன்று, கூட்டுறவுத் திட்டமிடுதலிலும் அர சாங்க வழிகாட்டலை நாம் எதிர்பார்க்கிறோம். இதில் புரட்சி கரமானதோ புதுமையானதோ எதுவுமில்லை. அரசினர் கட்டளையின்கீழும் அரசினர் உதவியின்கீழும், கூட்டுறவு வளர்ச்சி என்ற ஒரு கொள்கையும், அரசினர் கொள்கைகளை அமல்படுத்துவதற்கான ஒரு கருவியாகக் கூட்டுறவுச் சங்கங்களைப் பயன்படுத்தும் ஒரு கைக்கோளும், கூட்டுறவு நிறுவனங்களின் சுயேச்சைத் தன்மையையும், சுயஆட்சித் தன்மையையும் கட்டாய மாகப் பாதிக்கத்தேவையில்லை. ஒரு சிறந்த பொருளாதார இயலின ரான ஜி. டி. எச். கோல் (G. D. H. Cole) என்பவர் ஒருமுறை 'கூட்டுறவுச் சங்கங்கள், ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வசிக்கும்

எல்லோருக்கும் மாமிசமும் நிலக்கரியும் வழங்குவதற்கான அரசினரின் பிரதிநிதிகளாகச் செயல்படுவதற்கு வாய்ப்பு எழும்போது, அரசினர் உதவியைப் பெறுவதற்கு, உதவி பெறுவதனால் சுயேச்சைக் கொள்கையிலிருந்து விலகவேண்டிய நிலைமை ஏற்படினும்கூட, ஏன் முன்பின் ஆலோசிக்கவேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை' என்று கூறியுள்ளார். இயக்கத்திற்கு அரசு, வழிகாட்டலும், உதவியும் செய்யலாம்; மற்றும், அவ்வாறு செய்யவும் வேண்டுமென்றாலும், நாட்டின் பொருளாதார அமைப்பில் கூட்டுறவு இயக்கம் ஓர் உயிர்ச் சக்தியாக வளர்ச்சியடைவதானது, அது மக்களுடன் நெருங்கியதாகவும் தொடர்ந்துள்ளதாகவுமான இணைப்பின்மூலம் பெறும் மக்கள் ஆதரவின் பேரில்தான் பெரிதும் சார்ந்திருக்கும்.

கூட்டுறவு, அதன் உள்ளார்ந்த பண்புகளின் — ஒழுக்கமும் கல்வியும் — காரணமாக, எல்லா நாடுகளிலும் ஏற்கப்பட்டுள்ளது மட்டுமன்றி, எல்லா அரசியல் கட்சிகளாலும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. உண்மையாகவே, இந்தியாவில் ஒவ்வோர் அரசியல் கட்சியும், சாமானிய மனிதனின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதற்காகக் கூட்டுறவு முறையையும் கூட்டுறவு நிறுவனத்தையும் நாடுகிறது. இயக்கம் எல்லோராலும் வரவேற்கப்படுவதால், அஃது, எந்த அரசியல் கட்சியுடனும், அந்தக் கட்சி ஆட்சிபீடத்தில் இருந்தாலும் இல்லாவிட்டாலும், சேராமலிருப்பது அவசியமாகிறது. அஃது எந்தச் சூழ்நிலையிலும், அரசால் உறிஞ்சிவிடப்படக்கூடாது. அது பொருளாதாரச் செயல்துறையின் பெரும்பகுதியைக் கவர்ந்து, அரசினரின் பொருளாதாரக் கொள்கைகளில் சிலவற்றை அமல்படுத்துவதற்காக அரசினருக்கு உதவவேண்டும். ஆனால், அவ்வாறு செயற்படுங்கால், அது தன் சொந்த முன்முயற்சிச் சக்தியையும் தனித்தன்மையையும் சுதந்திரத்தையும் பேணவேண்டும்.

நம்மைப்போன்ற ஒரு மக்கள்நல நாட்டில் (Welfare State) மக்கள் நிறுவனமாகிய கூட்டுறவு நிறுவனம், மக்கள்நலத் திட்டங்களை அமல்படுத்துவதற்கான ஒரு கருவியாக, அரசால் பயன்படுத்தப்படவேண்டியது இயல்பானதே. எனினும், கூட்டுறவுச் சங்கங்களுடன் அரசினரின் இந்த நெருங்கிய இணைப்பில் சில அபாயங்களும் உள்ளன. முதலாவதாக, அரசு உதவியும் கட்டுப்பாடும் இயக்கத்தின் சுயஆட்சித் தன்மையைப் பாதித்து, மக்களிடம் தற்சார்பு உணர்வையும், தற்காப்பு உணர்வையும் வளர்க்கவிடாமல் செய்து, ஒவ்வொரு காரியத்திற்கும் அரசினரையே எதிர்நோக்கும் போக்கை ஊக்குவிக்கும். இரண்டாவதாக,

அரசினர் கட்டுப்பாடும் கண்காணிப்பும், கூட்டுறவுச் சங்கங்களில் கட்சி அரசியலை (Party Politics) நுழைப்பதற்கும்கூட உதவி செய்யலாம். அரசினர் தலையீட்டை எதிர்த்துநின்று, தன் சொந்த முன்முயற்சிச் சக்தியைவிடாமல் வைத்துக்கொள்ளுவதற்கு முயற்சி செய்யும் பண்பும் தைரியமும் வாய்ந்த தலைவர்களை மக்களிடையே தோற்றுவித்து வளர்ப்பதன்மூலம் இந்த அபாயங்களைத் தவிர்க்கலாம். மூன்றுவதாக, அரசு உதவி, குறிப்பாக நிதி உதவி இயக்கத்தைத் தன்னுதவி செய்துகொள்ளுவதற்குத் துணைபுரியும் வகையில் தாற்காலிக அடிப்படையில் இருக்கவேண்டுமே தவிர, அது கூட்டுறவுச் சங்கங்களை நிரந்தரமாக அரசினர் உதவியை நாடியிருக்கும் நிறுவனங்களாக ஆக்கிவிடக் கூடாது. நான்காவதாக, கூட்டுறவுச் சங்கங்களின் இயக்குநர் குழுக்களுக்கு இயக்குநர்களை அரசினர் நியமனம் செய்யும்முறையானது மிக அத்தியாவசிய சூழ்நிலைகளுக்கு மட்டும், குறைத்துக்கொள்ளப்படவேண்டும். ஐந்தாவதாக, அரசு உதவியாலும், கட்டுப்பாட்டினுலும், இயக்கத்தின் செயல்திறன் பாதிக்கப்படவும் கூடும். ஏனெனில், திட்டமிட்ட வளர்ச்சியில் எண்ணிக்கை இலக்குகள் (Quantitative targets) தவிர்க்க முடியாது அடங்கியுள்ளன. மற்றும், இலக்கையடையும் முயற்சியில், நிறுவனங்களின் தரமும் தொழில் திறனும் குறையலாம். இலக்குகள் அனுபவசித்தியானவையாக இருக்கவேண்டியது மட்டுமல்லாமல், தரமும் இருக்கவேண்டும். எண்ணிக்கைகளுக்காகத் தரம் பலியிடப்படக்கூடாது. இயக்கம் எண்ணிக்கையால் மட்டுமன்றித் தரத்தாலும் வளரவேண்டும். கவனமுள்ள திட்டமிடுதல் மட்டுமன்றி, இயக்கத்தின் தரம், பெருமளவு தெளிவுபெற்ற அங்கத்துவத்தின் பேரிலும், சுறுசுறுப்பான தலைமையின் பேரிலும் சார்ந்து நிற்கும்; இவை முறையே உறுப்பினர்களின் கல்வியின் பேரிலும், கூட்டுறவு நிறுவனங்களின் நடத்தையுடன் தொடர்புகொண்ட பல்வேறு வகை நபர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சியின் பேரிலும் சார்ந்து நிற்கும். இவைகளைக் குறித்துப் பின்வரும் ஓர் அத்தியாயத்தில் விரிவாக விளக்கியுள்ளோம்.

## நாட்டுடைமையாக்கலுக்குக் கூட்டுறவு ஒரு மாற்று வழி
(Co-operation as an Alternative to Nationalization)

சமஉடைமை வகையான நம் சமுதாய இலட்சியத்தை அடைவதில், நாட்டுடைமையாக்கல் உட்படப் பலவித நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. நாட்டுடைமையாக்கல் சில துறைகளிலும், தனிச் சூழ்நிலைகளிலும் அத்தியாவசியமாக இருந்

தாலும் அதில் குறைபாடுகள் இல்லாமல் இல்லை. நாட்டுடைமை யாக்கல், சமஉடைமையைவிட, அரசு முதலாளித்துவமாகக் (State Capitalism) கருதப்படுகிறது. உற்பத்தியில் மற்றும் சில சமயங்களில் விநியோகத்தில், அரசு நேரடியான பொறுப்பை ஏற்கும் முழுமையான நாட்டுடைமையாக்கலுக்குப் பதிலாக, ஜனநாயக சமஉடைமையைத் தோற்றுவிக்கக்கூடியதும், பொது நன்மைக்குப் பெருமமான நிறுவனச் சுயேச்சையுடனும் இணக்கத் துடனும் மக்கள் ஈடுபாட்டை உறுதிப்படுத்தக் கூடியதுமான ஒரே அமைப்பு, கூட்டுறவே. கூட்டுறவின் இந்தத் தனி அம்சம் அரசையும் திட்ட அதிகாரிகளையும், கூட்டுறவுத் துறையை விரும்ப வழி செலுத்தியுள்ளது. எல்லா மட்டங்களிலும் நாட்டுடைமை யாக்கலை நிறுவுவதன்மூலம் ஜனநாயக சமஉடைமையை அமைப்ப தற்கான எல்லாப் பணிகளையும் மேற்கொள்வதற்கு அரசினரே அதிகாரம் கொண்டாடினால், அப் பொறுப்பின் பருமம் மிகப் பெரிதாக இருக்கும். அதன் இயல்பிலேயே, அத்தகைய அதி காரத்தை அமல்படுத்தும் முறை, அரசு அலுவலர்கள் ஏராளமாக அமர்த்தப்படவேண்டிய அவசியம் கொண்டு, நம் நாடு விஸ்தார மானதாகவும் நானாவிதமானதாகவும் இருப்பதால், சர்வாதிகார மானதாக இருக்கவேண்டியுள்ளது. வளர்ந்துவரும் ஜனநாயகச் சமஉடைமைப் பொருளாதார அமைப்பின் தேவைகளுக்குத் தகுந்தவாறு, பல வருடங்களாகக் கட்டப்பட்ட அவசியமான உள்அமைப்பை (Infrastructure) ஏற்கெனவே கூட்டுறவுச் சங்கங்கள் வைத்திருக்கும்போது, நாட்டுடைமையாக்கல் என்பது பாதுகாப்பு அல்லது இதரப் பொதுக் காரணங்களுக்காக, நேரடி யான அரசு கட்டுப்பாடு தேவைப்படுகிற குறிப்பிட்ட துறை களைக் குறித்து மட்டுமே சிந்திக்கப்படவேண்டும். இதரத் துறை களில், குறிப்பாக விவசாயம், சிறு தொழில்கள், வீட்டு வசதி, அத்தியாவசியப் பொருள்கள் விநியோகம் முதலியவை போன்ற அதிகாரம் பரவலாக்கப்பட்ட பல அமைப்புகளின் (Decentralised Units) செயல்பாட்டின்மூலம் தொழில்திறனைப் பெறக்கூடிய சில துறைகளில், கூட்டுறவுச் சங்கங்கள் நாட்டுடைமையாக்க லுக்குப் பதிலாக ஒரு தக்க மாற்றுவழியாகவுள்ளன.

# 2. வெளிநாடுகளில் கூட்டுறவு

## (Co-operation in Foreign Lands)

### (i) ஜெர்மனி (Germany)

**ஜெர்மானிய நாட்டில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம்**

கூட்டுறவுத் துறையில் ஜெர்மனி செய்த உதவியானது கூட்டுறவுக் கடனை அல்லது வங்கித் தொழிலைத் தொடங்கி வைத்த தாகும். உண்மையாகவே, உலகத்தில் கூட்டுறவு இயக்கத்தின் பிறப்பிடம் ஜெர்மனியாகும். நம் நாட்டிலேயே கூட்டுறவு இயக்கத்தின் தோற்றத்திற்கான உணர்வு, ஆர்வம் பெருமளவு ஜெர்மனியிலிருந்தே வந்தது. நாம் பின்னர் அறியப்போவது போன்று, ஐரோப்பாவில் விவசாய வங்கிகளின் செயற்பாட்டை ஆய்வு செய்து, இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தைப் புகுத்தி வைப்பதற்கான நடவடிக்கைகளை யோசனை கூறுவதற்காக, 1892ஆம் ஆண்டில் சென்னை அரசால் ஐரோப்பாவிற்கு அனுப்பப் பட்ட திரு. ஃபெரடரிக் நிக்கல்சன் (Mr.Frederick Nicholson) பெரும்பாலும் ஜெர்மனியிலிருந்த கடன் சங்கங்களின் மாதிரி யின்பேரில் அடிப்படை கொண்டுதான் தம் பரிவுரைகளைச் செய் தார். 'ரெய்ஃபெய்சனைக் காணவும்' (Find Reiffeisen) என்ற அவருடைய அறிவுரையானது, இந்தியாவில் விவசாயக் கடன் பிரச்சினையைத் தீர்க்கும் ஒரு வழிமுறையாக, ரெய்ஃபெய்சன் கடன் முறைக்கு அவர் அளித்திருந்த முக்கியத்துவத்தை விளக்கு கின்றது. ஆகவே, ஜெர்மானிய முறையின் ஓர் ஆய்வு நமக்கு ஒரு தனி முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது.

கிட்டத்தட்ட 1850ஆம் ஆண்டில், ஜெர்மனியில் முதலாவது கூட்டுறவுச் சங்கம் நிறுவப்பட்டது. அவ்வமயம், ஜெர்மனி முதன்மையான ஒரு விவசாய நாடாகவே இருந்துவந்தது. 19-வது நூற்றூண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட தூர விளைவுகளைக்கொண்ட நிலச் சீர்திருத்தமும், தொழிற்புரட்சியும், அரசு தலையிடாக் கொள்கையும், கிராமங்களிலும் பட்டினங்களிலுமிருந்த உழவர் கள், கைவினைஞர்கள், சிறு வர்த்தகர்கள் ஆகியோர்களின் சமு தாய, பொருளாதார நிலைமைகளில், ஒரு கடுமையான சீர் குலைவுக்கு வழிசெலுத்தின. புதிய நிலைமைகளுக்கேற்றவாறு

அவர்கள் தங்களைத் திருத்தியமைத்துக்கொள்வதற்கு முயற்சி யெடுக்காமலிருந்தனர். தங்கள் பாரம்பரியத் தொழில்களைக் கைவிட்டு, அவர்கள் புதிய தொழிற் கேந்திரங்களிலுள்ள தொழிற் சாலைகளில் கூலிபெறும் பாட்டாளிகளாக வேலைசெய்ய வேண்டி யிருந்தது. வேலை நேரம் நாளொன்றுக்கு 12 மணி நேரம் வரை நீடித்தது; வேலை செய்யும் நிலைமைகள் கேவலமாக இருந்தன; சமுதாயக் காப்பீடும் ஒன்றுமில்லாதிருந்தது; சில சமயங்களில், ரொக்கத்திற்குப் பதிலாகப் பொருளாகக் கொடுக்கப்பட்டன. குடும்ப வயிற்றுப் பிழைப்பிற்காகப் பணமீட்டும்பொருட்டு மகளிர் களும், குழந்தைகளும் வேலைக்குச் செல்லவேண்டியிருந்தது. ஏறக் குறைய, ஒவ்வொரு வீடும் பண்ணை நிலமும் விவசாயக் கடனால் வில்லங்கப்படுத்தப்பட்டிருந்தன. அதன் விளைவாகத் தொழிலா ளர்களிடையேயும், குடியானவர்களிடையேயும் வறுமை நட மாடிக்கொண்டிருந்தது. சுற்றிலுமுள்ள சூழ்நிலையானது அவ் வாறு இருந்தபோது, வழி உண்டாக்குவோர் இருவர், கூட்டுறவுத் துறையில் புகழ்பெற்ற தலைவர்களான ரெய்ஃபெய்சனும், ஷுல்சும் (Herr F. W. Reiffeisen and Herr Franz Schulze), குடியானவர்கள், தொழிலாளர்கள் ஆகியவர்களின் பரிதாப நிலையைக் கண்டு உணர்ச்சிவசப்பட்டுப் பல்வேறு நிவாரண முறைகளைச் சோதனை செய்யத் தொடங்கினர்.

## ஹெர் ஷுல்சும், ஹெர் ரெய்ஃபெய்சனும் (1803 – 1883)

### ஹெர் ஷுல்சு (Herr Schulze)

அவர் ஜெர்மானிய சாம்ராஜ்யத்தின் நீதித்துறைப் பணி யாளர் தொகுதியில் சேர்ந்திருந்தார்; ஆனால், பின்னர் இளம் வயதிலேயே பதவியை ராஜீனுமா செய்துவிட்டுப் பொது வாழ்வில் ஈடுபட்டார். 'துணைவர்கள் அவைக்கு' (Chamber of Deputies) அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்; எப்பொழுதுமே அவர் கூட்டுறவுக் காகவும் சாமான்ய மனிதனின் உரிமைகளுக்காகவும் போராடி னார். பிரஷ்யா நாட்டிற்காக 1867ஆம் வருடத்திய முதற் கூட்டுறவுச் சட்டத்தை வரைவு செய்த பெருமை அவரைச் சாரும். இச் சட்டம் பின்னர் 1889ஆம் ஆண்டில், ஜெர்மானிய சாம்ராஜ்யம் அனைத்திற்காகவுமான சட்டமாயிற்று. 19ஆம் நூற்றாண்டின் 40-வது ஆண்டுகளில், உயிர்ச் சேதத்தினாலும் பஞ்சத்தினாலும் தம் நாட்டு மக்களுக்கு விளைந்த இன்னல்களுக்கு ஒரு தீர்வாகக் கூட்டுறவுக் கருத்து யோசனை அவருக்கு முதன் முதலில் தோன்றியது. 1850ஆம் ஆண்டில் அவர் டெலிஷ் (Delizsch) என்ற ஊரில், முதல் கடன் சங்கத்தை அமைத்தார். 1852ஆம் ஆண்டில் அவர் அச் சங்கத்தைத் தன்னுதவிக்கொள்கை யின் அடிப்படையின்பேரில் அமைத்து, அதைத் தன்னுதரவு

கொண்டதாகச்செய்தார்; அதில் வெற்றி கண்டார். அவருடைய கடன் சங்கங்கள், 'மக்கள் வங்கிகள்' (Peoples' Banks) என்ற பெயரால் வழங்கப்பட்டன. அவர் தம் வங்கியை முதன் முதலில் வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின்பேரில் அமைத்தார். ஆனால், எல்லாவகையான கூட்டுறவுச் சங்கங்களுக்கும் வரையறுக்கப்பட்ட பொறுப்பை அனுமதிக்கும் வகையில், 1889ஆம் ஆண்டில் ஜெர்மானியக் கூட்டுறவுச் சட்டம் திருத்தப்பட்ட பிறகு, அவர் பிந்தியதன் வங்கிகள் வரையறுக்கப்பட்ட பொறுப்பை ஏற்றுக்கொள்வதை அனுமதித்தார்.

**ஹெர் ரெய்ஃபெய்சன்** (Herr Reiffeisen)

இவர் இராணுவத்தில் சேர்ந்திருந்தார்; ஆனால், தம் கண் பார்வையைக் குறைத்த ஒரு நோயின் காரணமாக இராணுவத்திலிருந்து விலகி, சிவில் பணியாளர் தொகுதியில் சேர்ந்தார். 1865ஆம் ஆண்டில், அவர் ஓய்வு பெறுங்காலத்திற்கு முந்தியே, தம் பதவியிலிருந்து ஒரு வருடாந்திர ஓய்வூதியத்தின்பேரில் ஓய்வு பெற்றார். பதவியிலிருந்து அவர் ஓய்வு பெறுவதற்கு ஓராண்டிற்கு முன்பே, கூட்டுறவுக்கான அவருடைய பணி தீவிரமாகத் தொடங்கியது. பஞ்சம் தோன்றிய 1846 மற்றும் 1847ஆம் ஆண்டுகளில், ரைன்லேண்டில் வெஸ்டர்வெல் மாவட்டத்தில், அவர் பர்கோ-மாஸ்டராகப் (Burgo Master) பணிபுரிந்து வந்தபோது, யூதர்களுக்குக் கடுமையாகக் கடன்பட்டிருந்து கடும் வட்டியின் கைப்பிடியில் இன்னல் வாழ்க்கையை நடத்திவந்த ஏழைக் குடியானவர்களின் கடுமையான துன்பங்களைக் கண்டு அவர் உணர்ச்சி வசப்பட்டார். யூதர்களிடமிருந்து குடியானவர்களை மீட்க அவர் விழைந்தார். முதன்முதலில், அவர் ஒரு சகாய சங்கத்தை அமைத்தார். அச் சங்கம் குறைந்த விலையில் உணவுத் தானியத்தையும் உருளைக் கிழங்குகளையும் கொள்முதல் செய்து விற்பனை செய்தது. ஈகையானது குடியானவர்களுக்கு நிலையான நலன்களை அளிக்காது என்று விரைவில் அவர் உணர்ந்து, தன்னுதவிக் கொள்கை அடிப்படையில் கடன் சங்கங்களை அமைத்தார். அச் சங்கங்கள் 'கிராம வங்கிகள்' அல்லது 'ரெய்ஃபெய்சன் வங்கிகள்' என்ற பெயரால் வழங்கப்பட்டு வந்தன.

ஆக, மக்களுக்குக் காலப்போக்கில் உதவக்கூடியது இதய மாற்றம் மட்டுமே என்று ஷூல்சும், ரெய்ஃபெய்சனுமுணர்ந்து, குடியானவர்கள், கைவினைஞர்கள், சிறு வர்த்தகர்கள் ஆகியவர்களிடையே தன்னுதவி உணர்ச்சியையும், முன்முயற்சியையும் பரவச் செய்வதற்கு முயற்சித்தனர். ரெய்ஃபெய்சனும், ஷூல்சு

டெலிட்சும் துன்பமுற்றவர்களைத் தங்களுக்குப் பொதுவாகவுள்ள தேவைகளை உணரச்செய்ய முயற்சித்தனர். குடியானவர்களுக்கும், கைவினைஞர்களுக்கும் கூட்டுறவு வகை நிறுவனத்தை மேற்கொள்வதன்மூலம், அதாவது தன்னுதவி, கூட்டுப் பொறுப்பு, தன்விருப்பார்ந்த ஒழுங்குக் கட்டுப்பாடு ஆகிய கொள்கைகளைக் கடைப்பிடித்து ஒன்ருகச் செயற்படுவதன்மூலம் எப்படித் தங்கள் சமுதாயப் பொருளாதார நிலையை மேம்படுத்துவது என்பதை அவர்கள் செயல் விளக்கஞ்செய்து கற்பித்தனர்.

ஷூல்சு, ரெய்ஃபெய்சன் ஆகிய இருவரின் நோக்கங்களும், குறிக்கோள்களும் ஒரேமாதிரியானவையாகவிருந்தன. அதாவது, தன்னுதவியின்மூலம் ஏழைகளின் நிவாரணம் — ஆனல், அவர்கள் ஒவ்வொருவரின் பணித் துறையானது வேறுபட்டிருந்தது. ஷூல்சுக்குப் பணித்துறை நகரமாகவும், ரெய்ஃபெய்சனுக்குப் பணித்துறை கிராமமாகவும் இருந்தது. அவ் விருவருக்கும் அணுகுமுறையானது செய்முறையில் ஒரே மாதிரியாக விருந்தாலும், அவர்கள் தங்கள் பணித் துறைகளின் உள்ளூர் நிலைமைகளுக்கேற்ப இயக்கத்தை அமைத்தனர். ஷூல்சு என்பவர் நகர்ப்புற நிலைமைகளுக்கேற்ப ஒரு நிறுவனத்தை அமைத்தார்; ரெய்ஃபெய்சன் என்பவர் கிராமப்புற நிலைமைகளுக்கேற்ற சங்கங்களை நிறுவினர். எனவே, இவ் விருவகைக் கூட்டுறவு வங்கிகளுக்கிடையே வேறுபாடுகள் உள்ளன. மேலும், இவ்விரண்டு முறைகளும் வலிவு குன்றியவர்களின் சிக்கனத்தையும், பரஸ்பர உதவியையும் அடிப்படையாகக் கொண்டிருந்தபோதிலும், அவைகளுக்கிடையே ஒரு முக்கிய வேறுபாடு இருந்தது. ஷூல்சு டெலிட்சு என்பவர் மக்களின் கடன் தேவைகளை மட்டும்தான் கவனித்தார். ஆனல், ரெய்ஃபெய்சன் என்பவர் மக்களின் பொருளாதார, சமுதாய வாழ்வில் முழுமையான ஒரு மேம்பாட்டைச் செய்வதற்கு முயற்சித்தார். கூட்டுறவுத் தொழில்துணிவுக் கருவியின்மூலம், மக்களின் ஒழுக்க மேம்பாட்டின்மீது மிக அதிகமான வலியுறுத்தலை அவர் விதித்தார்; தம் பணியில் பெரியதோர் வெற்றியையும் பெற்ருர்.

### ஷூல்சு வகைச் சங்கங்களுக்கும், ரெய்ஃபெய்சன் வகைச் சங்கங்களுக்கும் இடையிலுள்ள வேற்றுமைகள்

ஷூல்சு வகைச் சங்கங்களுக்கும், ரெய்ஃபெய்சன் வகைச் சங்கங்களுக்கும் இடையிலுள்ள முதன்மையான வேறுபாட்டுக் கூறுகள் கீழ்வருமாறு:

**ரெய்ஃபெய்சன் சங்கங்கள்**

1. ரெய்ஃபெய்சன் என்பவர் தம் சங்கங்களைக் குடியான வரிடையே தொடங்கியதால் அவருடைய சங்கங்களின் உறுப்பினர்கள், பெரும்பாலும் ஒரே மாதிரியான மக்கள் வகுப்பினரிலிருந்து, அதாவது உழவர்களிலிருந்து பெறப்பட்டனர்.

2. பெரும்பாலான உறுப்பினர்கள் தனித்தனியாகக் கடன் தகுதி பெற்றிராமலிருந்தமையால், அவர்கள் கூட்டுப் பொறுப்பு அடிப்படையின்பேரில் மட்டுந்தான் கடன்கள் பெற முடியுமென்று, ரெய்ஃபெய்சன் நம்பினர். பரஸ்பர உதவிக்கு ஒரு சாதனமாக, வரையறுக்கப்படாத பொறுப்பை அவர் வாதாடினர்.

3. வரையறுக்கப்படாத பொறுப்பிற்கு ஒரு பாதுகாப்பாகப் பரஸ்பர மேற்பார்வை அவசியமென்று ரெய்ஃபெய்சன் கருதி, தம் சங்கத்தின் அலுவலெல்லை சிறியதாக இருக்க வேண்டுமென்று வாதாடினர்.

**ஷூல்சு வங்கிகள்**

1. ஷூல்சு என்பவர் தம் சோதனைகளைக் கைத்தொழிலாளர்களிடையே தொடங்கினர். எனவே, அவருடைய சங்கங்களின் உறுப்பினர்கள், பல்வேறு மக்கள் வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் பல்வேறு நோக்கங்களைக் கொண்டவர்களுமான கைத்தொழிலாளிகள், தொழில் துறைத் தொழிலாளர்கள், வர்த்தகர்கள் ஆகியவர்களிடையேயிருந்து பெறப்பட்டனர்.

2. மற்றவர்கள் நலத்திற்காகத் தங்கள் ஆஸ்தியை நஷ்டமடைய விடுவதற்கு விரும்பாத, ஒப்பிடும் வகையில் நல்ல வசதியுள்ள, மக்களிடையே, ஷூல்சு பணி செய்தாராகையால், அவர் வரையறுக்கப்பட்ட பொறுப்பைத் தம் வங்கியின் அடிப்படையாக வாதாடினர்.

3. ஷூல்சு வகைச் சங்கங்களின் உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டிருந்ததால், பரஸ்பர மேற்பார்வைக்கு அதிகமான முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. ஆகையால், இவ்வகைச் சங்கங்களின் அலுவலெல்லை பெரிதாக இருப்பதற்கு அனுமதிக்கப்பட்டது.

4. தொடக்கத்தில், ரெய்ஃபெய்சன் சங்க உறுப்பினர்கள் பங்குகள் எதையும் போடவில்லை. பின்னர், சங்கங்களில் பங்கு மூலதனத்திற்காகச் சட்டத்தில் சரத்து செய்யப்பட்ட போது, பெயரளவான பங்கு மூலதனத்தை ரெய்ஃபெய்சன் அனுமதித்தார்

4. வங்கிகள் வெளியேயிருந்து நிதிகளைப் பெறுவதற்கான ஓர் அடிப்படையாக, அவை வலிவு பொருந்திய பங்கு மூலதனம் கொண்டிருத்தலின் இன்றியமையாமையினை ஷூல்சு விளக்கினார்.

5. உறுப்பினர்கள் ஏழைகளாக இருந்ததால், அவர்களுக்குச் சிறு கடன்கள் மட்டுமே அளிக்கப்பட்டன. ஆனால், அவர்களுக்குக் கடன்களின் உச்சஅளவுப் பலனை அளிக்கும் பொருட்டுக் கடன் வசூலித்தல், ஒரு நீண்ட காலவரைக்குப் பரப்பப்பட்டிருந்தது.

5. முதலீடுகள் மேலான பலன்களை அளிக்கும் வகையில் பெருங் கடன்கள் வழங்கப்பட்டன. பருவ காலச் சிரமங்களைச் சமாளிப்பதற்கு, ஒரு தாற்காலிக நடவடிக்கையாகக் கடன்கள் அளிக்கப்பட்டுக் குறுகிய இடைக் காலங்களில் அவை வசூலிக்கப்பட்டன.

6. சொத்து உடைமையை விட உறுப்பினர்களின் நன்னடத்தையின் மீது மிகையான முக்கியத்துவம் விதிக்கப்பட்டது. உறுப்பினர்களிடையேயிருந்து கொடுக்கப்பட்ட நபர் ஜாமீன் அடிப்படையின் பேரில் கடன் வழங்கப்பட்டன. ஒரு பாதுகாப்பாக, உற்பத்திக் காரியங்களுக்கு மட்டுமே கடன்கள் வழங்கப்பட்டன.

6. ஷூல்சு வகை வங்கிகளில் கடன்கள் அசையாச் சொத்துகளின் பேரில், உற்பத்திக்காக மட்டுமே வழங்கப்பட்டன. உற்பத்திக் காரியங்களுக்காக மட்டுமே கடன்கள் வழங்கப் பட்டிருந்தமையால், கடன்கள் உபயோகத்தின் மீதான மேற்பார்வையின் மீது அதிக முக்கியத்துவம் வைக்கப்படவில்லை.

7. இலாபம் ஈட்டுதல் இச் சங்கங்களின் நோக்கமாக எப்பொழுதும் இருந்த தில்லை. இலாபங்கள் சங்கத்தின் கூட்டுச் சொத் தாக இருந்தன. இலாப ஈவு என்ற கருத்தை ரெய் ஃபெய்சன் என்பவர் ஆதரிக்கவில்லை.

7. ஷுல்சு வங்கிகள் வணிக முறைகளில் இலாபத்திற் காக நடத்தப்பட்டன. எனவே, இலாப ஈவு தாராளமாக அளிக்கப் பட்டது. உண்மையாக வே, நல்ல இலாப ஈவுகளை அளிப்பது, வங்கிகளைப் பிரபலியப்படுத்துவதற்கு ஓர் ஊக்குவிப்பாகக் கருதப்பட்டது.

8. நிதிகளில் பெரும்பான்மை யானவை. காப்பு நிதிக் கும், வராக்கடன் நிதிக் கும் கொண்டு போகப் பட்டன. இலாபங்களில் குறைந்தபட்சம் 2/3, பகிர்வு செய்யக் கூடாத ஒரு 'அறக்கட்டளை நிதி க்கு' (Endowment Fund) கொண்டு போகப்பட்டது.

8. ஷுல்சு வங்கிகள் காப்பு நிதி எதையும் வைக்க வில்லை. காப்பு நிதியானது சட்டத்தால் கட்டாயப் படுத்தப்பட்டபோது, அச் சங்கங்கள் இலாபத்தில் 20% மட்டுமே காப்பு நிதி யாக வைத்திருந்தன. காப்பு நிதியானது நட்டங் களை ஈடு செய்வதற்காகப் பயன்படுத்தப் பட்டது. ஆனால், இப் பற்றுக்குறை கூடிய விரைவில் சரி செய்யப்பட்டது.

9. ரெய்ஃபெய்சன் சங்கங் களில் ஊதியம்பெறாத நிர்வாகம் இருந்தது. மற்றும், நிர்வாகச் செலவு மிகக் குறைவாக வைக்கப் பட்டிருந்தது. கணக் கரைத் தவிர, வேறு எவருக்கும் எவ்வித ஊதிய மும் கொடுக்கப்படவில்லை.

9 ஷுல்சு வங்கிகள் நன்கு கட்டப்பட்ட கட்டடங் களிலும், திறமை வாய்ந்த பயிற்சி பெற்ற முழு நேர, நல்ல ஊதியம் பெற்ற பணியாளர்களைக் கொண்டும் நடத்தப் பட்டன. அன்றாட வேலை யின் முழு அதிகாரம் பணி யாளர்களுக்கு அளிக்கப் பட்டது. இயக்குநர் குழு வானது, கொள்கைத் துறைகளுடன் மட்டுமே அக்கறைகொண்டிருந்தது.

10. ரெய்ஃபெய்சன் சங்கம், உறுப்பினர்களின் கடனல்லாத தேவைகளையும் பூர்த்தி செய்தது.

10. ஷூல்சு வங்கி வெறும் வங்கித் தொழிலுக்கு மட்டுமே தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்கிறது.

11. பொருள் சார்பான நல் வாழ்வு போலவே, உறுப் பினர்களின் நல்லொழுக்க வளர்ச்சியும் ஒரே முக்கிய யத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பட்டது. சிக்கனம், கடும் உழைப்பு, பரஸ்பர உதவி, தன்னுதவி, கால முறைப்படியான திருப் பிச் செலுத்துதல், முதலி யன ஊக்குவிக்கப்பட் டன.

11. ஷூல்சு என்பவர் நல்லொ ழுக்க உணர்ச்சிக்கு அதிக மான முக்கியத்துவம் அளிக்கவில்லை. வங்கிகள் பெரும்பாலும் உறுப் பினர்களின் பொருள் சார் பான வளர்ச்சியில் அக் கறை கொள்ள வேண்டும் என்று அவர் நம்பினர்.

கூட்டுறவுக் கடன் பற்றிய இவ்விரு முறைகள் எந்த லட்சியத்தை அடிப்படையாகக்கொண்டு செயற்பட்டனவோ, அந்த லட்சியத்தில் அடிப்படை வேறுபாடுகள் இருந்தன என் பதை நாம் காண்கின்றோம். மிக அதிகமான எண்ணிக்கையுள்ள மக்களுக்கு மிக அதிகமான நன்மையைச் செய்வதை இவ்விரு முறைகளும் நோக்கமாகக் கொண்டிருந்தாலும், ஷூல்சு என்பவர் கடுமையான வாணிகக் கொள்கைகளின் பேரில் பணிபுரிந்தார். மாறாக, ரெய்ஃபெய்சன் என்பவர், மனிதஇனக் காரணங்களாலும், நல்லொழுக்கக் காரணங்களாலும் மிக அதிகமாகத் தூண்டப் பட்டார். ரெய்ஃபெய்சன் என்பவர், நாணயம், நல்லொழுக்கம் ஆகியவற்றை மூலதனமாக்குதலில் நம்பிக்கை வைத்து, உறுப்பி னர்கள் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து தங்கள் நிதி வளங்களை ஒன்றுதொகுப்பதன்மூலம் தங்களின் கடன் வாங்கும் சக்தியைப் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்று அவாவினர். சங்கங்கள், வெறும் வணிக நிறுவனங்களாக அல்லாமல், அவை உறுப்பினர் களுக்குத் தங்கள் நிதி நிலைமையையும் ஒழுக்க நிலைமையையும் மேம்படுத்த உதவி செய்வதற்கே உத்தேசிக்கப்பட்ட நிறுவனங்கள் என்று அவர் கருதினர். மாறாக, ஷூல்சு என்பவர், கூட்டுறவு நிறுவனங்கள் வணிக முறைகளின் பேரில் நடத்தப்படவேண்டு மென்று நம்பினர். மனப்பான்மையைவிட மெய்ப்பாட்டுகளில் அதிகமாக நம்பிக்கை வைத்து, தம் வங்கிகளைப் போட்டிகளையும்,

சங்கடங்களையும் சமாளிக்கக்கூடிய தானே இயங்கவல்ல தன்னிறைவுள்ள அமைப்புகளாகச் செய்தார். மூலதனத்தை எப்படித் திரட்டவேண்டுமென்றும், அதை இலாபகரமாக எப்படிப் பயன்படுத்த வேண்டுமென்றும், உறுப்பினர்களுக்கு அவர் விளக்கிக் காட்டினார். ரெய்ஃபெய்சன் போலல்லாது, நல்லொழுக்கங்களை அறிவுரை செய்வதற்கான அவசியம் எதையும் அவர் நினைக்கவில்லை. மாறாக, ரெய்ஃபெய்சன் என்பவர், சங்க உறுப்பினர்களின் — மனித இனத்தின் — நல்லொழுக்க மறுமலர்ச்சிக்காக ஓர் அவாவினைத் தம் உள்ளக் குகையில் கொண்டிருந்தார். இதுகாரணம் பற்றியே, உலகத்தில் ரெய்ஃபெய்சன் மாதிரிச் சங்கங்கள் மிகப் பிரபலியமடைந்து, உலகத்தின் பெரும்பான்மையான நாடுகளில் பெருமளவு முன்னேற்றமடைந்துள்ளன. இந்தியாவிலும்கூட, இன்றும் கிராம அல்லது விவசாயச் சங்கங்கள், பெரும்பாலும் ரெய்ஃபெய்சன் மாதிரியையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. விவசாயமல்லாதவர்களுக்கான சங்கங்கள் அல்லது நகரச் சங்கங்கள், ஷூல்சு மாதிரியை அடிப்படையாகக் கொண்டுள்ளன.

## 1880ஆம் ஆண்டுவரை கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றம்

30 ஆண்டுகளுக்குமதிகமாக நீடித்த ஒரு 'முயற்சித்துத் தவறு செய்தல்' காலவரைக்குப் பிறகு, ஜெர்மனியில் கூட்டுறவுச் சங்கங்கள் பாரம்பரியக் குடியானவர்களும், கைவினைஞர்களும், நவீன வாழ்க்கை நிலைமைகளுக்கேற்பத் தங்களைத் திருத்தியமைத்துக்கொள்வதற்கு வகை செய்த ஒரு மனமாற்றத்தைப் பெறுவதற்குப் போதுமானதொரு சாதனமாக உள்ளது என்பதை நிரூபித்திருந்தன.

சிக்கனம் மற்றும் கடன் சங்கங்கள் கிராமங்களிலும் பட்டிணங்களிலும் நிறுவப்பட்டன. குடியானவர்களும், கைவினைஞர்களும், சிறு வர்த்தகர்களும், கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்கான தங்கள் கூட்டுப் பொறுப்பின் காரணமாகக் கடன் தகுதி பெற்றவர்களாயினர். விநியோகக் கூட்டுறவுச் சங்கங்கள், நவீன உற்பத்தி முறைகளைத் தொடக்கிவைப்பதற்கான முன்தேவைகளாகவிருக்கும் உர வகைகளையும், தெரிந்தெடுக்கப்பட்ட விதைகளையும், பண்ணைத் தளவாடங்களையும் குடியானவர்கள் பெறுவதற்கு உதவி புரிந்தன. குடியானவர்களும் கைவினைஞர்களும் தங்கள் செய்பொருள்களுக்கு இலாபகரமான சந்தைகளை எளிதில் கண்டறிவதற்கு விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள் வகைசெய்தன.

மக்கள் வங்கிகளாகத் (நகரக் கடன் சங்கங்கள்) தங்களை அமைத்துக்கொண்ட கைவினைஞர்கள், தங்கள் பணிமனைகளை இயந்திர மயமாக்குவதற்காகத் தேவைப்பட்ட மத்திய காலக் கடன்களை, ஒரு நியாயமான வட்டிவிகிதத்தில் பெற முடிந்தது. ஒரு கடனுக்கு விண்ணப்பித்த ஒரு மக்கள் வங்கியின் ஒவ்வோர் உறுப்பினரும், தம் திறனை எளிய கணக்குவைப்பில் நிரூபிக்க வேண்டியிருந்தது. முந்திய ஆண்டுகளுக்கான ஐந்தொகைக் குறிப்புகளைச் சமர்ப்பிக்கக் கூடியவர்களுக்கு மட்டுமே கடன்கள் அளிக்கப்பட்டன. 50 ஆண்டுகளான ஒரு காலவரைக்குப் பிறகு, மிகத் தீவிரக் கைவினைஞர்கள் தங்கள் பாரம்பரியப் பணிமனைகளை நவீனச் சிறு தொழில்களாக மாற்றம் செய்திருந்தனர். இந்த நவீனக் கைவினைஞர்கள் கடன் சங்கங்களின் உறுப்பினர்களாகவும், விநியோக விற்பனைச் சங்கங்களின் உறுப்பினர்களாகவும் இருக்கின்றனர்.

தொழிற் கேந்திரங்களிலுள்ள தொழிற்சாலைத் தொழிலாளர்கள், உள்ளூர் வியாபாரிகளால் சுரண்டப்படுவதிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ளும் பொருட்டு, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களை நிறுவினர். மற்றும், இக் கூட்டுறவுச் சங்கங்களில், தொழிலாளர்களே விற்பனைக்கான பொருள்களின் தரத்தையும், விலையையும் கண்காணித்தனர். நுகர்வோர் சங்கங்கள், பொருள்களைப் பெருமளவிலும் மொத்த விற்பனை விலைகளிலும் கொள் முதல் செய்தமையால், இத் தொழிலாளர்கள் தாங்கள் ஈட்டிய பணத்திற்காக அதிகமானதும், மேலானதுமான பொருள்களை வாங்குவதற்குச் சக்தி பெற்றனர்.

தங்கள் வீட்டு வசதி நிலைமைகளைத் திருப்தியற்றவையாகக் கருதிய தொழிற்சாலைத் தொழிலாளர்கள், தங்களை வீட்டு வசதி மற்றும் வீடுகட்டும் கூட்டுறவுச் சங்கங்களாக அமைத்துக்கொண்டனர்.

ஆக, 1880ஆம் ஆண்டிற்குள், ஜெர்மனியில் எல்லாவகையான கூட்டுறவுச் சங்கங்கள் சுமார் 5,000 இருந்தன. அவற்றின் அலுவல் அளவும், நோக்கங்களும் எப்படியிருந்தாலும், அவையனைத்தும் இதரத் தொழில் துணிவுகளிலிருந்து மாறுபட்டுப் பொதுவான ஒரு குணங்குறி இயல்பைப் பெற்றிருந்தன. அதாவது, கூட்டு நடவடிக்கையின்மூலம் தங்கள் உறுப்பினர்களின் சமுதாய மற்றும் பொருளாதார நிலைமைகளை மேம்படுத்தும் நோக்கத்தைக்கொண்ட தன்னிச்சையான சங்கங்களாக இக் கூட்டுறவு நிறுவனங்கள் இருந்தன.

# 1889ஆம் ஆண்டிலிருந்து 1971ஆம் ஆண்டுவரை இயக்கத்தின் வளர்ச்சி

## ஜெர்மானியக் கூட்டுறவு இயக்கம் மேற்கொண்ட வரலாறு, கீழ்க்காணும் தலைப்புகளின் கீழ்க் கூறப்படலாம்

### (i) 1889ஆம் ஆண்டு முதல் 1933ஆம் ஆண்டுவரையான காலவரையில் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி

*1889ஆம் ஆண்டில் முதலாவது ஜெர்மானியக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் அமலுக்கு கொண்டுவரப்பட்டது. அச் சட்டம் இன்றும் ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசுக்கு (*Federal Republic of Germany*), அடிப்படை ரீதியில் பிரயோகப்படுத்தப் பட்டு வருகிறது. அச் சட்டம், கூட்டுறவுச் சங்கங்களை அமைப்ப தற்காகவும், அவற்றை வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்கூட அமைப்பதற்காகவும் சரத்து செய்தது. மற்றும், அது, பதிவு செய்யப்பட்ட எல்லாச் சங்கங்களின் கணக்குகளைக் கட்டாயமாக வருடாந்திரத் தணிக்கை செய்வதற்காகவும் சரத்து செய்தது. அச் சட்டத்தின்கிழ், ஓர் அதிகமான எண்ணிக்கையில், பிரதம, இடைநிலை, தலைமைச் சங்கங்கள் வளர்ச்சியுற்று, கூட்டுறவு இயக்கத்தை அநேகப் பல்வேறு பிரிவுகளாகப் பிரித்தன. சிறப்பு இலட்சிய, சமய, அல்லது பொருளாதார நம்பிக்கைகளைக் கொண்ட உறுப்பினர்களுடைய கூட்டுறவுச் சங்கங்களின் பிரிவு களால் தலைமை நிறுவனங்கள் அமைக்கப்பட்டன. பல்வேறு தேசிய, மண்டல நிறுவனங்கள் சில சமயங்களில் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுங்கூட வளர்ச்சியடைந்தன.*

*உதாரணமாக, 1902ஆம் ஆண்டில், ஹாம்பர்க் (*Hamberg*) நகரில், தம் சொந்த மொத்த விற்பனைப் பண்டசாலைகளை அமைத் திருந்த ஏராளமான நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், ஒரு தேசிய ஜெர்மானியக் கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டமைப்பி லிருந்து நீக்கப்பட்டன. ஏனென்றால், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் குறிக்கோள்கள், அக் கூட்டமைப்பில் பெரும்பான்மை யிலிருந்த சில்லறை வர்த்தகர்களின் கூட்டுறவுச் சங்கங்களின் நலன்களுக்கு முரணாக இருந்தன. தாங்கள் நீக்கப்பட்டதை யொட்டி, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் ஹாம்பர்க் நகரில் தங்களுக்குச் சொந்தமாக ஒரு தலைமை நிறுவனத்தை அமைத் தன.*

முதலாவது உலகப் போரின்போது (1914–18), ஜெர்மனியிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களனைத்தும், கூட்டுறவு இயக்கத்தின் நலன்களை மொத்தமாக, மிகத் திறமையான ஒரு முறையில் எடுத்துச்சொல்ல, ஜெர்மானியக் கூட்டுறவுச் சங்கங்களின் மத்தியக் குழு ஒன்றை (A Central Committee of German Co-operative) அமைத்தன. உலகப் போருக்குப் பின்னர் ஏற்பட்ட பணவீக்கப் போக்குகளின் காரணமாகக் கூட்டுறவு இயக்கம் பெரிதும் பாதிக்கப்பட்டது. வைப்புகள் குறைந்து, கடன்கோரல் அதிகரித்தது. இக் கட்டத்தில், பிரஷ்ய (Prussian) மையக் கூட்டுறவு வங்கி ஜெர்மனி முழுமைக்கும் ஒரு தலைமை வங்கிப் பணியை ஏற்றது. அது பெரும்பாலான கடன்களை அரசிடமிருந்து பெற்று, கூட்டுறவு இயக்கத்தைக் காப்பாற்றியது. அதன் பலனாக, இயக்கம் 1930ஆம் ஆண்டிற்குள் மீண்டும் தன்னை நன்கு அமைத்துக்கொள்ள முடிந்தது.

1920ஆம் ஆண்டில், நகரக் கூட்டுறவுச் சங்கங்களின் இரண்டு முக்கியக் கூட்டமைப்புகள், ஜெர்மனியில் எல்லா நகரக் கூட்டுறவுச் சங்கங்களின் பிரதிநிதியாக இயங்கும் ஓர் ஒற்றையான நிறுவனமாக இணைந்தது. (D.G.V.)

1930ஆம் ஆண்டில், கிராமக் கூட்டுறவுச் சங்கங்களின் நடப்பு மண்டலத் தேசியத் தொகுப்புகள் அனைத்தும் தங்கள் தலைமைக் கூட்டமைப்பை (D.R.V.) நிறுவின. இட்லர் (Hitler) ஆட்சியின்போது இயக்கம் ஒரு நல்ல ஆக்கத்தைப் பெற்றது. உழவர்கள் தங்கள் நிலங்களைப் பராதீனம் செய்வது சட்டத்தால் தடை செய்யப்பட்டதால், ஈட்டுக் கடன்களை மட்டும் வழங்கிவந்த வாணிக வங்கிகள், விவசாயிகளுக்குக் கடனுதவி அளிக்கத் தவறின. ஆகையால், விவசாயிகள் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களை அணுகவேண்டிய நிலைமையேற்பட்டது. 1935ஆம் ஆண்டில் 40,713 சங்கங்களிருந்தன. 1938ஆம் ஆண்டில், எல்லா வீட்டு வசதி, மற்றும் வீடுகட்டும் சங்கங்களும் பொதுத் துறையிலிருந்த வீடு கட்டும் நிறுவனங்களுடன் இணைந்து, வீட்டு வசதியில் அக்கறைகொண்ட பொதுநல நிறுவனங்களின் கூட்டமைப்பை நிறுவின. 1818ஆம் ஆண்டு முதல் 1933ஆம் ஆண்டு வரையான இக் காலவரையை, ஜெர்மானியக் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி மற்றும் ஒருங்கிணைப்புக் காலமாகக் கூறலாம்.

## (ii) 1933ஆம் ஆண்டு முதல் 1945ஆம் ஆண்டு வரையான காலத்தின்போது, கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சி

1933ஆம் ஆண்டு முதல் 1945ஆம் ஆண்டு வரையான காலத்தில், ஜெர்மானியக் கூட்டுறவு இயக்கத்தில் ஒரு கடுமையான பின்னடைவு இருந்தது. கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள், பொருளாதாரச் சிக்கல்களைச் சமாளிப்பதற்கும், மற்றும், பின்னர்ப் போர்ப் பொருளாதார அமைப்பின் பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கும், அரசால் நிறுவப்பட்ட அரை-அதிகார முறையான நிறுவனமொன்றில் சேர நிர்ப்பந்திக்கப்பட்டன. நுகர்வோர் சங்கங்கள் கலைக்கப்பட்டன அல்லது தனியார் நிறுவனங்களாக மாற்றப்பட்டன. அக் காலத்தில், நுகர்வோர் சங்கங்கள் அமைத்தல் அனுமதிக்கப்படவில்லை. வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்கள் பொதுநலத் தனியார் நிறுவனங்களுடன் ஒன்றாக இணைந்து, ஒரு தேசியத் தலைமை நிறுவனத்தை அமைத்தன.

## (iii) 1945ஆம் ஆண்டிற்குப் பிறகு, 1971ஆம் ஆண்டுவரை, கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி

1945ஆம் ஆண்டில், இரண்டாம் உலகப் போரில் ஜெர்மானியத் தோல்விக்குப் பிறகு, ஜெர்மனி, நான்கு படைப் பாதுகாப்பு மண்டலங்களாகவும், பெர்லின் நாடாகவும் பிரிக்கப்பட்டது. அதன் விளைவாகக் கூட்டுறவு நிறுவனங்களும் அதற்கொப்பப் பிரிக்கப்பட்டன. ருஷ்ய படைப் பாதுகாப்பு மண்டலத்தில் (தற்போதைய ஜெர்மானிய மக்கள் குடியரசு (German Democratic Republic) அமலிலிருந்த அரசியல் பொருளாதார முறையானது, 1949ஆம் ஆண்டிலிருந்து ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசாக (Federal Republic of Germany) அமைத்துக் கொண்ட இதரப் படைப் பாதுகாப்பு மூன்று மண்டலங்களில் வளர்ச்சிபெற்ற கூட்டுறவு இயக்கத்திலிருந்து, பெருமளவு வேறுபடுகின்ற ஒரு கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சிக்கு வழிநடத்தியது. ஜெர்மானிய மக்கள் குடியரசு மண்டலத்தில், விவசாய உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்கள் ருஷ்யாவிலுள்ள தொகுப்புப் பண்ணைகள் மாதிரியின் பேரில் அமைக்கப்பட்டுள்ளன. ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசு மண்டலங்களில், கூட்டுறவு இயக்கமானது நான்கு தனிப்பட்ட பிரிவுகளாக வளர்ச்சியடைந்துள்ளன. ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசில் இயக்கம் சீரமைக்கப்பட்ட பிறகு, நான்கு தேசியக் கூட்டமைப்புகள் இருந்தன.

(அ) டி. ஆர். வி. (D.R.V.) ஜெர்மானியக் கிராமக் கூட்டுறவு சங்கங்களின் ரெய்ஃபெய்சன் கூட்டமைப்பு

(German Reiffeisen Federation of Rural Co-operatives).

(ஆ) டி. ஜீ. வி. (D.G.V.) ஜெர்மானிய ஷுல்சு-டெலிட்சு சங்கங்களின் கூட்டுறவுக் கூட்டமைப்பு (அதாவது நகரக் கூட்டுறவுச் சங்கங்கள்) (German Co-operative Federation Schulze-Delitzch, i.e, of Urban Co-operatives).

(இ) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு (National Federation of Consumers Co-operatives).

(ஈ) வீட்டு வசதியில் அக்கறை கொண்ட பொதுநல நிறுவனங்களின் கூட்டமைப்பு (Federation of Undertakings of Public Utility concerned with Housing) மற்றும் டி. ஜீ. கே. (D.G.K.) தேசியக் கூட்டுறவுத் தலைமை வங்கி (National Co-operative Apex Bank)

**(அ) ஜெர்மானிய ரெய்ஃபெய்சன் கூட்டமைப்பு – கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள்**

1971ஆம் ஆண்டில், 4.9 மில்லியன் உறுப்பினர்களைக் கொண்ட 15,000 பிரதமக் கூட்டுறவுச் சங்கங்கள், 11 மண்டலக் கூட்டமைப்புகளிலும், 10 மைய வங்கிகளிலும் அமைக்கப்பட்டன. இவை, ரெய்ஃபெய்சன் மாதிரியின்பேரில் அமைக்கப்பட்ட கூட்டுறவு நிறுவனங்களின் மிக முக்கியப் பிரிவான, கிராமப் பல நோக்குச் சங்கங்களாகும். இச் சங்கங்களன்றியும், பால்பண்ணைப் பொருள்கள், ஒயின் திராட்சை, காய்கறி வகைகள், தானிய வகைகள், கால்நடைகள் ஆகியவைகளின் விற்பனை அல்லது உர வகைகளின் உற்பத்தி போன்ற தனி நோக்கங்களைக் கொண்ட சுமார் 100 இடைநிலை நிறுவனங்களும், தலைமை நிறுவனங்களும் இருந்தன. பிரதமச் சங்கங்களில் பல, ரெய்ஃபெய்சன் வகையான பலநோக்குச் சங்கங்களாக இருந்தன. எனினும், ஒரேநோக்குச் சங்கங்களுங்கூட இருந்தன. அவை முட்டை, பழவகைகள், காய்கறிகள் ஆகியவற்றின் விற்பனைக்காகவும், கனரகப் பண்ணைத் தளவாடங்களைப் பயன்படுத்துதலுக்காகவும் அல்லது தானியப் போரடித்தல், நீர்ப்பாசனம், மின்சாரம் முதலியவற்றிற்காகவும் அமைக்கப்பட்டன. ஜெர்மனியின் மொத்த மக்கள்தொகையில் சுமார் 9 சதவிகிதம் மக்கள் மட்டுமே விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றமையாலும், ஒவ்வோர் ஆண்டும் சுமார் 1,00,000 பேர்கள்

விவசாயத் தொழிலைக் கைவிடுகின்றமையாலும், இன்று கிராமக் கூட்டுறவுச் சங்கங்களின் பெரும்பான்மையான உறுப்பினர்கள் குடியானவர்கள் அல்லர்; அவர்களில் 2/3 இதரத் தொழில் களில் உள்ளனர். ஆனால், கிராமங்களில் வாழுகின்றனர்; ஆகையால்தான், சாதாரணமாக விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் என்பதற்குப் பதிலாகக் கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் என்று கூறுகின்றனர். இச் சங்கங்களில் கடனளிப்புப் பணி மிகமிக முக்கியத்துவம் பெற்று வருகிறது. ஆயினும், பாலில் 75 சத விகிதமும், தானிய வகைகளில் 42 சதவிகிதமும், காய்கறி வகை களில் 40 சதவிகிதமும், ஒயின் திராட்சையில் 30 சதவிகிதமும் இன்றும் கிராமக் கூட்டுறவுச் சங்கங்களால் விற்பனை செய்யப்படு கின்றன. மற்றும், குடியானவர்களுக்கு அளிக்கப்படும் எல்லாக் குறுகிய காலக் கடன்களில் 60 சதவிகிதமும், எல்லாப் பூச்சி கொல்லி மருந்துகளில் 70 சதவிகிதமும், உர வகைகளில் 60 சதவிகிதமும் தெரிந்தெடுக்கப்பட்ட விதைகளில் 40 சதவிகிதமும், பண்ணைத் தேவைகளில் 25 சதவிகிதமும் கிராமக் கூட்டுறவுச் சங்கங்களால் வழங்கப்படுகின்றன.

### (ஆ) ஜெர்மானிய ஷூல்சு-டெலிட்சு கூட்டுறவுக் கூட்டமைப்பு-நகரக் கூட்டுறவுச் சங்கங்கள்

1971ஆம் ஆண்டுவரை, ஜெர்மானியக் கூட்டுறவுக் கூட்ட மைப்பானது, நகரக் கடன் சங்கங்கள், கைவினைஞர்கள் மற்றும் சில்லறை வர்த்தகர்களின் விநியோக விற்பனைச் சங்கங்கள், போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவைகளின் தலைமை நிறுவனமாக இருந்தது. 1971ஆம் ஆண்டில், 3.3 மில்லியன் உறுப்பினர்களைக் கொண்ட 1771 பிரதமக் கூட்டுறவுச் சங்கங் களும், 53 மண்டலக் கூட்டமைப்புகளும், ஒன்றியங்களும் இத் தலைமை நிறுவனத்துடன் இணைக்கப்பட்டன. ஏறக்குறைய 2 மில்லியன் உறுப்பினர்களைக் கொண்ட 641 மக்கள் வங்கிகள் அதன் மிக முக்கிய ஒரு கிளையாக உள்ளன. இவ் வங்கிகள், பெரும்பாலும் கைவினைஞர்களுக்கும், சிற்றளவுத் தொழிற்சாலைக் காரர்களுக்கும், சில்லறை வர்த்தகர்களுக்கும், வளர்விகிதத்தில் சம்பளம் பெறுபவர்களுக்கும்கூட வங்கித் தொழில் வசதிகளை வழங்குகின்றன. தவிரவும், ஜெர்மானிய அஞ்சல் அலுவலகப் பணியாளர்களாலும், இரயில்வே அலுவலகப் பணியாளர்களாலும் நிறுவப்பட்டதும், சுமார் 1 மில்லியன் உறுப்பினர்களைக் கொண்டது மான 37 கூட்டுறவு வங்கிகள் உள்ளன.

ஜெர்மானியக் கூட்டுறவு இயக்கத்தின் மிகவும் எடுத்துக் காட்டான ஒரு கிளையானது, கைவினைஞர்களின் விநியோகக்

கூட்டுறவுச் சங்கங்கள். உதாரணமாக, ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசிலுள்ள எல்லா ரொட்டித் தயாரிப்பவர்களில் சுமார் 70 சதவீதமானவர்கள் (ஏறக்குறைய 36,000 பேர்கள்), 143 விநியோகக் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களாக உள்ளனர். இச் சங்கங்கள், 7 மண்டல ஒன்றியங்களிலும் ஒரு தேசியத் தலைமை நிறுவனத்திலும் அமைக்கப்பட்டுள்ளன. 1971ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்களின் இக் கிளையின் விற்பனைப் புரள்வு 1.2 பில்லியன் டூஷ்மார்க்ஸ் ஆக இருந்தது. கசாப்புக் காரர்கள், கண்ணாடி வேலை செய்பவர்கள், மருந்துத் தயாரிப்பாளர்கள் முதலியவர்களுக்காகவும், அதேமாதிரி வகையான நிறுவனம் இயங்குகின்றது.

மற்றோர் எடுத்துக்காட்டான பிரிவு, உள்ளூர்ச் சில்லறை விற்பனையாளர்களுக்கு உணவுப் பொருள்களின் கூட்டு விற்பனைக்கான சில்லறை வர்த்தகர்களின் கூட்டுறவுச் சங்கங்களாகும். இப் பிரிவின் மிக முக்கியக் கிளையான, 'எடிகா' (Edeka) 1907ஆம் ஆண்டில் நிறுவப்பட்டு, அது தனக்குச் சொந்தமான தலைமை நிறுவனத்தை, நகரக் கூட்டுறவுச் சங்கங்கள், மைய வங்கி, ஒரு முக்கிய நிலையம், 12 மண்டல ஒன்றியங்கள் ஆகியவைகளின் தலைமை நிறுவனத்திற்குள்ளே அமைத்துள்ளது. 'எடிகா' என்பது 99 பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினர்களாக உள்ள சுமார் 30,000 சில்லறைவிற்பனையாளர்களையும், 1971ஆம் ஆண்டில் 6.8 பில்லியன் டூ. மா. விற்பனைப் புரள்வையுங்கொண்ட ஒரு நிறுவனமாக இருந்தது. விநியோகக் கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினராகவுள்ள சில்லறை விற்பனையாளர்கள், ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசில் விற்பனை செய்யப்பட்ட எல்லா உணவுப் பொருள்களில் சுமார் 26 சதவீதத்தை விற்பனை செய்கின்றனர்.

### (இ) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு

1971ஆம் ஆண்டில், நுகர்வோர் கூட்டுறவு இயக்கம் 2 மில்லியன் உறுப்பினர்களைக்கொண்ட 126 பிரதமச் சங்கங்களையும், 1 தேசியக் கூட்டமைப்பையும், சுமார் 30 தொழிற்சாலைகளை நடத்துகின்ற ஒரு மொத்த விற்பனை நிறுவனத்தையும் கொண்டிருந்தது. 1971ஆம் ஆண்டில், அதன் விற்பனைப் புரள்வு சுமார் 5.6 பில்லியன் டூ. மா. ஆக இருந்தது.

### (ஈ) பொதுநல வீட்டு வசதி நிறுவனங்களின் கூட்டமைப்பு

1971ஆம் ஆண்டில், பொதுநல வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு, 1385 கூட்டுறவுச் சங்கங்களை

உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. கூட்டுறவுச் சங்கங்கள் 10 மண்டலக் கூட்டமைப்புகளில் அமைக்கப்பட்டுள்ளன. மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 149 மில்லியன்களாகும். 1971ஆம் ஆண்டில், 9,10,000 அறைகள் (apartments) கூட்டுறவுச் சங்கங்களால் நிர்வகிக்கப்பட்டன. அவற்றின் கட்டளையின்கீழ், ஒவ்வோர் ஆண்டும் சராசரி 33,000 அறைகள் கட்டப்படுகின்றன. வீட்டு வசதிச் சங்கங்கள், உறுப்பினர்களிடமிருந்தும், அரசிடமிருந்தும் பெற்ற நிதிகளைக்கொண்டு தங்கள் உறுப்பினர்களுக்காக வீடுகளைக் கட்டுகின்றன. வீட்டு வசதித் துறையில் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு சுமார் 10 சதவீதத்திற்கும் ஒரு சிறிது மேலாக உள்ளது.

மேற்கண்ட 4 கூட்டுறவுச் சங்கப் பிரிவுகளனைத்தும் நிதிகளைத் திரட்டுவதற்காகத் தங்கள் சொந்தமான கூட்டமைப்பு நிறுவனத்தைப் பெற்றிருந்தாலும், பிரதமச் சங்கங்கள் 13 மண்டல மைய வங்கிகளாகக் கூட்டமைக்கப்பட்டுள்ளன. மண்டல, மைய வங்கிகள் 'ஜெர்மானியக் கூட்டுறவு வங்கியாக' மேலும் கூட்டமைக்கப்பட்டுள்ளன. இவ் வங்கி 1949ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட தலைமைக் கூட்டுறவு வங்கியாகும். அது மண்டல மைய வங்கிகளுக்குக் கடன் அளிக்கிறது. அதன் தலைமை அலுவலகம் ஃபிரான்க் ஃபோர்ட் (Frank furt) நகரிலுள்ளது. அஃது, அரசு பங்காளித்துவம் கொண்ட ஒரு வங்கியாகும். அதில், 15 சதவீத அளவுக்கு அரசு மூலதனம் பெற்றுள்ளது. ஜெர்மானியக் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் நாட்டின் அரசு இவ் வங்கியில் 42 சதவீதம் வரை மூலதனம் பெற்றிருக்கக் கூடும். பிரதமச் சங்கங்கள் தணிக்கைக் காரியங்களுக்காக, 12 மண்டலக் கூட்டமைப்புகளாகக் கூட்டமைக்கப்பட்டுள்ளன. ஜெர்மனியில் கூட்டுறவுச் சட்டத்தின்படி, சங்கங்களின் தணிக்கைக் கூட்டுறவு ஒன்றியங்களால் செய்யப்படுவது ஒரு சட்டப்படியான கடமையாகும்.

## ஜெர்மானியக் கூட்டுறவுத் தலைமை நிறுவனங்களின் அண்மையான வளர்ச்சி

### நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் பிரிவில்

1967ஆம் ஆண்டில், 'ஜெர்மானிய நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மத்திய கூட்டமைப்பின்' (Central Federation of German Consumers Co-operatives) பணிகள் 2 நிறுவனங்களுக்கு மாற்றப்பட்டன. அதாவது, தணிக்கை மற்றும் அறிவுரைப் பணி

களுக்காக 'ஜெர்மானிய நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் தணிக்கைக் கூட்டமைப்பும்' (Audit Federation of German Consumers Co-operatives) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் அனைத்திற்கும் தொடர்பான துறைகளில் ஒரு மையத் திட்டமிடும் நிறுவனமாகவும், முடிவு செய்யும் நிறுவனமாகவும் பணியாற்றுவதற்காக, 'பண்டு' (Bund) (Federation of German Co-operatives) என்ற நிறுவனமும், இதற்கிடையில், 5 மண்டலத் தணிக்கைக் கூட்டமைப்புகளும் தங்கள் பணிகளைப் புதிதாகத் தொடங்கப்பட்ட ஆர். டி. கே. (R.D.K.) நிறுவனத்திற்கு மாற்றின. 1973ஆம் ஆண்டிறுதியில் இருந்த திட்டத்தின்படி, நடப்பு 126 நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களும் 20 மண்டலக் கூட்டுறவுச் சங்கங்களில் இணைக்கப்படவிருந்தன.

1972ஆம் ஆண்டு டிசம்பரில், கூட்டுறவு மொத்த விற்பனை நிறுவனம் (ஜீ. இ. ஜீ.) (G.E.G.) ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியாக ஆக்கப்பட்டது. இது 'பண்டு' நிறுவனத்தின் பணிகளையும் எடுத்துக்கொண்டது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களை நவீனமாக்குவதற்கும், சீரமைப்பதற்கும் வகைசெய்வதற்காகப் பலம் பொருந்திய ஒரு மையமாக்கப்பட்ட தலைமை நிறுவனத்தைத் தோற்றுவிப்பதற்கு இந் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இந் நிறுவனத்தின் 51 சதவீதம் பங்கு மூலதனம், மண்டல நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களால் பெற்றிருக்கப்படும். காலப்போக்கில், நுகர்வோர் சங்கங்களின் தனிநபர் உறுப்பினர்களுக்கு, ஓர் இலாபஈவு உத்திரவாதத்தைக்கொண்ட வாக்குரிமையில்லாத பங்குகள் வழங்கப்படும். இதனால், அவசியமான முதலீட்டிற்கு நிதியளிப்பதற்குத் தேவைப்படும் 250 மில்லியன் டூ. மா. எழுப்புவதற்குச் சாத்தியப்படும்.

### கிராம மற்றும் நகரக் கூட்டுறவுச் சங்கங்களின் பிரிவில்

ஜெர்மானிய ரெய்ஃபெய்சன் கூட்டமைப்பும், ஜெர்மானியக் கூட்டுறவுக் கூட்டமைப்பும் (நகரச் சங்கங்களின்) தங்கள் இணைப்பிற்கு வழிநடத்தும் வகையில் இந்த இரண்டு பிரிவுகளுக்குமிடையே நெருங்கிய ஒத்துழைப்பிற்கான ஓர் ஒப்பந்தத்தைக் கையெழுத்திடச் சம்மதித்தன. இம் முயற்சிக்கான முக்கியக் காரணங்களாவன: (அ) வங்கித் தொழில் வாணிகத்தில் பெருகிவரும் போட்டி, (ஆ) கிராமத்திற்கும் பட்டினத்திற்கும் இடையேயிருந்த தொன்மையான வேறுபாட்டையும் அதனையொட்டி நகரக் கடன் சங்கங்களுக்கும், கிராமக் கடன் சங்கங்களுக்குமிடையேயிருந்த தொன்மையான வேறுபாட்டையும் அவசியமற்றதாகச் செய்த கிராமப் பகுதிகளில் ஏற்பட்ட ஓர்

அமைப்புச் சம்பந்தமான மாற்றம். ஐந்தாண்டுகளுக்குச் செல்லு படியாக உள்ளதும் அதற்குப் பிறகு அவசியப்பட்டால் திருத்தப் படக்கூடியதுமான நெருங்கிய ஒத்துழைப்பு ஒப்பந்தத்தின்படி, கிராம, மற்றும் நகரக் கூட்டுறவுச் சங்கங்களின் பிரிவின் புது அமைப்பானது பின்வருமாறு:

'ஜெர்மானியக் கூட்டுறவுச் சங்கங்கள் மற்றும் ரெய்ஃபெய்சன் கூட்டமைப்பு' ஆனது இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களுக் காகப் பொதுவான நலனுக்குத் தொடர்புள்ள எல்லாத் துறை களுக்கும் பொறுப்பாகவுள்ள தேசியத் தலைமை நிறுவனமாகும். அதாவது கூட்டுறவுச் சட்டம், வரி விதிப்பு, அனைத்துநாட்டு அலுவல்களில் பிரதிநிதித்துவம் ஆகிய துறைகள். இந்தத் தேசியத் தலைமை நிறுவனம் தவிரவும் ஒவ்வொன்றுக்கும் கூட் டுறவுச் சங்கங்களின் ஒரு தனிப்பட்ட பிரிவுக்குப் பிரதிநிதியாக இயங்கும் 3 தலைமை நிறுவனங்களும் உள்ளன; அதாவது,

(அ) 6,400 இணைக்கப்பட்ட கூட்டுறவு வங்கிகளையும், 18,900 கிளை அலுவலகங்களையும், 52 மில்லியன் உறுப்பினர் களையும், 145 பில்லியன் எம். டி. ஒருங்கிணைக்கப்பட்ட ஓர் எச்சத்தையுங்கொண்ட, 'ஜெர்மானியக் கடன் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு'. இப் புதிய கூட்டுறவு வங்கித் தொழில் பிரிவு, ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் வங்கித் தொழில் பிரிவுகளில் மூன்றுவது தரத்தில் உள்ளது. ஜெர்மனியிலுள்ள வங்கித்தொழில் அலுவலகங்கள் அனைத்தின் 45 சதவீதம், இக் கூட்டுறவு நிறுவனங்களுக்குச் சொந்தமாக உள்ளன.

(ஆ) 'கிராம விநியோக விற்பனைக்கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு'. கடனளிப்பு நீங்கலாக, பழைய ரெய்ஃபெய்சன் கூட்டமைப்பின் பணிகளை இக் கூட்டமைப்புப் பெரும்பாலும் மேற்கொள்கிறது. 10,800 இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் மொத்தப் புரள்வு 1971ஆம் ஆண்டில் சுமார் 31 பில்லியன் டூ. மா. ஆக இருந்தது.

(இ) 'மொத்த விற்பனை மற்றும் சேவைக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு'. (ஜென்ட்ஜெனோ — (Zentgeno). இது 1971ஆம் ஆண்டில் சுமார் 32 பில்லியன் டூ. மா. மொத்தப் புரள்வைக் கொண்ட, 1,080 நகர விநியோக விற்பனைச் சங்கங்களின் தலைமை நிறுவனமாக உள்ளது. ஏறக் குறைய 100 ஆண்டுகளாகச் சுதந்திரமாக இயங்கின பிறகு ஏற்பட்ட இந்த இரண்டு தேசியத் தலைமை நிறுவனங்களின் இணைப்பையொட்டி, மண்டல மட்டங்களிலும், உள்ளூர் மட்டங் களிலும் 2 கூட்டுறவுப் பிரிவுகளும் திருத்தியமைக்கப்படவேண்டும்.

## தற்போதைய நிலை – பொதுக் கூறுகள்

ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசில், இன்று கூட்டுறவு இயக்கத்தை மொத்தமாகப் பார்த்தால், அஃது ஒரு தேசியச் சக்தியாக வளர்ச்சியடைந்துள்ளது. கிராமப் பகுதிகளில் கூட்டுறவு இயக்கம் தற்போது ஏறக்குறையப் பொருளாதாரத் துறைகள் அனைத்தையும் தழுவுகின்றது. கடனளிப்பு மட்டுமன்றி, கிராமச் சங்கங்கள், பலநோக்குச் சங்கங்களாகப் பணியாற்றிப் பரந்த விரிவுடைய நடவடிக்கைகளைத் தழுவுகின்றன. தங்கள் உறுப்பினர் எண்ணிக்கையையும், புரள்வையும் பெருக்குவதன்மூலம், இச் சங்கங்கள் தொழிற் சீரமைப்புக் கொள்கையை மேற்கொண்டுள்ளன. அதேமாதிரி வகையான சங்கங்களும், பெரிய அமைப்புகளாக அமைத்துக்கொள்வதற்கு இணைக்கப்பட்டு வருகின்றன. கூட்டுறவு நடவடிக்கையின் தனிப்பட்ட துறைகளைத் தழுவும் வகையில், சங்கங்களை மைய நிறுவனங்களாகவும், தேசிய நிறுவனங்களாகவும் ஒரு செங்குத்தான ஒருங்கிணைப்புப் பலப்படுத்தப்பட்டு வருகிறது.

ஜெர்மானியக் கூட்டுறவின் தனித்தன்மையான பொதுக் கூறுகளில் சில, வருமாறு:

(i) விவசாயக் கடன் கூட்டுறவுச் சங்கங்கள், இயக்கத்தில் ஓர் ஆதிக்கமான நிலைமையை வகித்து, விவசாயத்தில் ஓர் ஆதார நிலைமையைப் பெற்றுள்ளன. எல்லாவகையான சங்கங்களும், தன்னிச்சையான அங்கத்துவம், ஜனநாயகக் கட்டுப்பாடு, இலாபநோக்கு இன்மை போன்ற இதரக் கொள்கைகளையன்றியும், தன்னுதவி, தற்பொறுப்பு, சுய நிர்வாகம் ஆகிய ஒரேமாதிரியான அடிப்படைக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கின்றன.

(ii) எல்லாவகையான கூட்டுறவுச் சங்கங்களும், ஒரேமாதிரியான கூட்டுறவுச் சட்டத்திற்குள் கொண்டுவரப்படுகின்றன. அதாவது, 1889ஆம் வருடத்திய ஜெர்மானியக் கூட்டுறவுச் சட்டம் கிழக்கு ஐரோப்பிய நாடுகளாலும், ஆசிய நாடுகளாலும் மேற்கொள்ளப்பட்ட சட்டமியற்றுதலில் ஜெர்மானியச் சட்டத்தின் செல்வாக்குப் பெரிதாக இருந்தது.

(iii) ஒரு சங்கம் அமைக்கப்பட்டவுடனே அது, நிதி பெறுவதற்காக ஒரு மைய வங்கியுடனும், விநியோகத்திற்காக ஒரு மொத்த விற்பனைச் சங்கத்துடனும், தணிக்கை, ஆய்வு,

கண்காணிப்பு ஆகியவற்றிற்காக ஓர் உள்ளூர் ஒன்றியத்துடனும் தன்னை இணைத்துக்கொண்டது. ஒன்றியங்கள், புதுச் சங்கங் களுக்கு ஊட்டமளித்து, அவற்றை வளர்த்து, அவை சரியான முறைகளில் இயங்க அவைகளுக்கு வழிகாட்டி வந்தன. எல்லா வகையான சங்கங்களும் ஜெர்மானியக் கூட்டுறவு வங்கியுடன் இணைக்கப்பட்டு, அதனிடமிருந்து தேவைப்பட்ட நிதிகளைப் பெறக் கூடும்.

(iv) கடமையானதும், சட்டப்படியானதுமான காப்பிருப்பு களைத் தவிரவும், கூட்டுறவுச் சங்கங்கள் பல்வேறு இதரக் காப்பிருப்புகளை அமைத்து வந்தன. காப்பிருப்புகளைக் கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்து வளர்ப்பதற்குக் கூட்டுறவு இயக்கம் அதிக மான முக்கியத்துவத்தை அளித்தது.

(v) ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும், ஒரு நிருவாகக் குழுவையும், அதன் அலுவல்கள் நடத்தப்படுவதைக் காவல் புரிவதற்கு ஒரு மேற்பார்வைக் குழுவையும் கொண்டுள்ளது. கூட்டுறவு நிலையங்கள், எல்லாவகையான சங்கங்களின் பணி யாளர்களுக்குப் பயிற்சியளித்தன.

கிராம மற்றும் நகரக் கூட்டுறவுச் சங்கங்களின் நோக்கங்கள், இன்றுங்கூட அவற்றின் தொடக்கத்திலிருந்த மாதிரியாகவே உள்ளன. ஆனல், அந் நோக்கங்களை அடைவதற் குப் பயன்படுத்தப்பட்ட முறைகள், மாறுபடுகின்ற பொருளா தார, சமுதாய நிலைமையையொட்டி மாறுபட்டு வந்துள்ளன. எனினும், ஜெர்மனியில் கூட்டுறவுச்சங்கங்கள், கூட்டு நடவடிக்கை யின்மூலம் தங்களை உதவி செய்துகொள்வதற்கு முன்முயற்சி எடுத்த உழவர்கள், கைவினைஞர்கள், சில்லறை விற்பனையாளர்கள் ஆகியவர்களின் தனிப்பட்ட சுதந்திர வாழ்க்கையைப் பராமரிப்ப தற்குப் பெரிதும் உதவி புரிந்துள்ளன என்று கூறலாம். இதுவன்றி யும், நுகர்வோர், குடியிருப்போர் ஆகியவர்களின் நலத்தைப் பிரதிநிதித்துவம் செய்தும், ஜெர்மானியச் சந்தைப்பொருளாதார அமைப்பில் ஓர் எதிர்ச்சக்தியாகப் பணியாற்றியும், ஜெர்மானி யப் பொருளாதார அமைப்பில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங் களும், வீட்டு வசதிச் சங்கங்களும் ஒரு முக்கியப் பங்கை மேற் கொண்டுள்ளன.

சுமார் அரை நூற்றாண்டிற்கு முன்பு ஜெர்மனியில் நிலவிய நிலவரங்களின் மாதிரியான நிலைமைகள் வழியாகச் சென்று கொண்டிருக்கும் நம் இந்திய நாடு, ஜெர்மனியில் கூட்டுறவு

இயக்கம் ஒரு தேசியச் சக்தியாக வளர்ந்துள்ள வழிமுறைகளி லிருந்து படிப்பினைகளைப் பெற்றுக்கொள்ளலாம். கூட்டுறவுச் சங்கங்களைத் தொழிற் சீரமைத்தல், நவீனமாக்குதல் ஆகிய அவர்களின் கொள்கையிலிருந்து ஒரு படிப்பினை நாம் பெறவேண்டி யுள்ளது.

## (ii) இங்கிலாந்து
## (England)

### பிரிட்டனில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம்

பிரிட்டனில் நுகர்வோர் கூட்டுறவு இயக்கமானது, உலக முழுவதிலும் பரவியுள்ள ஓர் இயக்கமாகிய தற்காலத்து நுகர் வோர் கூட்டுறவுக்கு மட்டுமன்றி, தற்காலத்தில் பெருமளவு விநியோக முறைகள் பலவற்றின் முன்னோடியாகவும் இருந்துள்ளது. பிரிட்டனில் விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள்கூடப் பலமாக வளர்ச்சி பெற்றுள்ளன; அங்கு அநேக உற்பத்திச் சங்கங்கள் உள்ளன. 19ஆம் நூற்றுண்டில் பசிப்பிணி பரவியிருந்த 40ஆம் ஆண்டுகளில் மக்கள் துன்பங்களிலிருந்துதோன்றி, ஒரு நுகர்வோர் கூட்டுறவு முன்முயற்சியை வாணிக வழியாக இராபர்ட் ஓவன் (Robert Owen) கண்ட கனவு, இன்று பிரிட்டன் நாட்டின் பொருளாதார அமைப்பின் முக்கிய அம்சங்களிலொன்ருக நன வாகியுள்ளது. பிற்காலத்தில் ஓர் அனைத்துலக இயக்கமாக ஏற்படவிருந்த இவ் வியக்கத்தின் அடிக்கல், 1844ஆம் ஆண்டு டிசம்பர் 28ஆம் நாளன்று நாட்டப்பட்டது. அஃது இராக்டேல் நகரில் டோட்சந்தில் (Toad-Lane Rachdale) 28 கம்பளி நெசவாளர் களுக்குச் சொந்தமான, ஓர் ஆடம்பரமற்ற அடக்கமுள்ள அமைப்பாக இருந்தது. அவர்கள் அங்குத் தொடங்கிவைத்த பண்ட சாலை இன்னும் அங்கேயே அந்த ஆரம்ப காலத்து வழிகாட்டி களுக்கு ஒரு நினைவுச் சின்னமாகவும் இக் காலத்து முயற்சிகளுக்கு ஆவேசம் தரும் ஒரு தோற்றமாகவும் நின்றுகொண்டிருக்கின்றது.

### இராபர்ட் ஓவன் (Robert Owen), (1771–1853)

கூட்டுறவு தன் தீர்க்கதரிசிகளை, அன்னவர்கள் அதன் மிகவும் வெற்றிகரமான நடைமுறைப்படுத்துபவர்களாக இல்லாமலிருந் தாலும், எந்த வகுப்பினருக்கு மிகத் தேவைப்பட்டதாக இருந் ததோ அவ் வகுப்பினருக்கு வெளியே கண்டறிந்தது. அவர்களுள் பெயர்பெற்றவர் இராபர்ட் ஓவன் ஆவார். கூட்டுறவு என்ற சொல்லை அதன் தற்காலத்துப் பொருளில் முதன்முதலில் உப யோகித்த அவர் ஒரு வெற்றிகரமான ஆலை உரிமையாளராகவும்,

லோகோபகாரியாகவும் இருந்தார். ஓவன் என்பவர் ஸ்காட்லாந்தில் 1774ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் புரட்சிகரமானதாகவோ ஜனநாயகமானதாகவோ இல்லாத ஒரு 'தந்தைவகைப் பொதுவுடைமைவாதி' (Paternal Communist) என்று அழைக்கப்படக்கூடிய வகையில் இருந்தார். சீர்திருத்தம் மேலிடத்திலிருந்து வரவேண்டுமென்று அவர் விரும்பினர். ஒரு பணக்கார உற்பத்தியாளராகவும் உதவும் எண்ணமுடைய வேலை கொடுப்பவராகவுமிருந்த அவர், தொழிலில் தற்காலத்து நல் வாழ்வுக் கருத்துகளைத் தொடங்கிவைப்பதில் முதலானவராக இருந்தார். அந் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்து, அவர் உழைப்பு நேரங்களைக் குறைத்தல், குழந்தை உழைப்பைத் தடைப்படுத்துதல், வேலையாளர்களின் கூட்டுறவுச் சங்கங்கள், சேமிப்புவங்கிகள், பண்டசாலைகள், பள்ளிகள் போன்ற பல்வேறு பரோபகார நடவடிக்கைகளை ஆரம்பித்தார். இவையோடு திருப்தியடையாமல் பொதுவுடைமைச் சங்கங்களை அமைப்பதற்கு அவர் கனவு கண்டார். அத்தகைய ஒரு சங்கத்தைப் 'புதிய இணக்கம்' (New Harmony) என்ற தலைப்பின்கீழ் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அமைப்பதற்கு முயற்சித்தார். குடியேறுபவர்களின் ஒரு கூட்டத்தினரைக் குடியமைப்பது அவருடைய கருத்தாக இருந்தது. அவர்கள் அவர் ஏற்படுத்திய நிலத்தில் குடியிருப்பதற்கு விருப்பமுள்ளவர்களாகவும், ஒரே குடும்பத்தின் உறுப்பினர்களிடையே போன்று சங்க உறுப்பினர்களிடையே ஒவ்வொன்றையும் பொதுவாகப் பெற்றிருக்கும் அடிப்படையின்மீது தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்வதற்கு விருப்பமுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும். அச் சமுதாயம் அல்லது குடியிருப்பு அல்லது சங்கம் தன் உறுப்பினர்களின் நுகர்வுக்காகத் தேவைப்பட்டிருந்த பொருள்களைப் பொதுவாக உற்பத்தி செய்யவேண்டியிருந்தது. இச் சோதனைத் திட்டமும், இங்கிலாந்திலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் செய்யப்பட்ட அதேமாதிரியான பல்வேறு இதரப் பரிசோதனைகளும் வெற்றியடையவில்லை.

இலாபத்தை அதன் எல்லா வடிவங்களிலும் ஒடுக்குதலே ஓவன் முறையின் இன்றியமையா அம்சமாக இருந்தது. இலாபத்தில் எல்லாப் பொருளாதாரத் தீமைகளின் ஒரு சுருக்கத்தை அவர் கண்டு, அதை ஒழிப்பதற்குப் பெரிதும் பாடுபட்டார். ஆகையால், அவர் 'தொழிலாளர் பரிமாற்றங்களை' (Labour Exchange) தொடங்கினர். இப் பரிமாற்றங்களில் தொழிலாளர்கள் தங்கள் செய்பொருள்களைத் தொழில் சீட்டுகளுக்காகவும் (Coupons) தொழிற்சீட்டுகளைச் செய்பொருள்களுக்காகவும் பரிமாற்றம் செய்துகொள்ளலாம். இம் முறையில் தொழிலாளிகள்,

தொழிற்சாலை அதிபர்களின் ஆதிக்கத்தின்கீழ்ச் செல்லவேண்டியதோ அவருக்கு இலாப வடிவத்தில் கப்பம் செலுத்தவேண்டியதோ இல்லை. இச் சோதனையுங்கூடச் செய்முறையில் ஒத்துவரவில்லை.

ஓவன் என்பவர் ஒரு மனச்சிருஷ்டியாளராகவும், வீண் தோற்றமுள்ளவராகவும் இருந்தாலும் சமத்துவத்தையும், கூட்டுறவையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு முழுமையான புதியவகைச் சமுதாயச் சாத்தியக்கூற்றின் கருத்தினை உலகிற்குத் தந்தார். அவருடைய முறைகள் சாத்தியமற்றவையாய் இருந்திருக்கலாம்; அவருடைய சோதனைகள் தோல்வியடைந்திருக்கலாம்; ஆனால், அவருடைய கருத்துகள் முக்கியமாகச் சமுதாயத்தின் நல்லொழுக்கத்தை மேம்படுத்தல் அல்லது தார்மீகச் சக்தியின் வாயிலாக ஏற்படுத்தப்பட வேண்டிய ஒரு புதிய சமுதாய அமைப்பைக் காட்டின. தனியார் சுவாதீனக் கொள்கையை முதன்மையாகப் பின்பற்றிய ஒரு சகாப்தத்தில், கூட்டுறவில், தன் மிகவும் ஆக்க பூர்வமான வெளிவழியைக் கண்ட, 'இணைப்பு உணர்ச்சியை' (Spirit of Association) அவர் வளர்த்துப் பரவச் செய்தார். இதுதான் கூட்டுறவுக்கு அவர் ஆற்றிய பேருதவி. அதாவது, இணைந்துசெயற்படுதல் ஒரு புதிய சமுதாயத் தார்மீக அமைப்பை ஏற்படுத்தும் என்பது, கூட்டுறவு பிற்காலத்தில் எடுக்கவிருந்த வடிவத்தின் விவரங்களை அவர் உருவாக்காவிட்டாலும், பிற்காலத்தில் கூட்டுறவுக் கொள்கைகள் உருவாக்கப்பட வேண்டிய அடிப்படைகளை அவர் கூறிச் சென்றார். அவற்றை அவர் கூறியிராமலிருந்தால், துன்பப்படுத்தப்பட்ட தொழிலாளர்கள், நடைமுறைக் கூட்டுறவில் தங்கள் சோதனையை நிறைவேற்றுவதற்கு, ஆற்றலையும், நிலையான நம்பிக்கையையும் எப்பொழுதுமே கண்டிருக்கமாட்டார்கள். ஆகையால், ஓவன் என்பவர் 'கூட்டுறவின் தந்தை' (Father of Co-operation) என்ற பட்டத்தைப் பெற்றுள்ளார்.

### இராக்டேல் முன்னோடிகளும் (Rochdale Pioneers,1844) அவர்களின் கொள்கைகளும்

இக் காலத்து நுகர்வோர் கூட்டுறவானது, 1844ஆம் ஆண்டில் இராக்டேல் முன்னோடிகள் என்ற 28 தொழில்செய்பவர்களால் இலங்காஷயரில் (Lancashire) இராக்டேலில் தொடங்கப்பட்ட ஒரு பண்டசாலையின் அடித்தளத்திலிருந்து ஆரம்பித்தது எனலாம். அவர்கள் தங்கள் கூட்டுறவுச் சங்கத்தின் நடவடிக்கைகளுக்கு அடிப்படையாகப் பின்பற்றிய கொள்கைகள், எல்லா

நாடுகளிலும் விவசாயிகளின் இடையேயும் தொழில்துறைத் தொழிலாளர்களின் இடையேயுங்கூடக் கூட்டுறவு இயக்கத்தின்மீது அடித்தளமாகக் கருதப்படும் செல்வாக்கைப் பெற்றிருந்தன. அக்கொள்கைகள் சுருக்கமாகக் கீழே தரப்பட்டுள்ளன:

**(i) திறந்த அங்கத்துவம் :** தெரிந்த கெட்ட நடத்தையாளர்களாக இல்லாத எந்த ஒரு மனிதனும், மகளிரும் சங்கத்தின் உறுப்பினராக இருப்பதற்கு உரிமை; எனவே, ஒரு கூட்டுறவுச் சங்கமானது பொதுமக்களுடன் வாணிகம் செய்து ஓர் இலாபத்தை ஈட்டுகின்ற பிரத்தியேகமான ஒரு தொகுப்பு அன்று என்பது பெறப்படுகிறது.

**(ii) சங்கத்தின் நிதியாதாரங்களுக்குச் சமமாக உதவுதல் :** இது ஒரு குறைந்தபட்சப் பங்குடைமையாகவும், கூட்டுறவு நடைமுறை ஒரு சட்டத்தில் உருவுபடுத்தப்பட்டபோது (இன்டஸ்டிரியல், மற்றும் பிராவிடண்ட் சங்கங்களின் சட்டம், 1852), ஓர் உயர்ந்தபட்சப் பங்குடைமையாகவுங்கூடப் பொருள்படுகிறது. எனவே, தன்னலத் தியாகத்திலும், நட்டவச்சத்திலும் ஏதாகிலும் உதவுவதற்குத் தயாராக இல்லாத எவரும் உறுப்பினர்களாக இருக்கமுடியாது. மற்றும், ஒப்பிடும் வகையில், ஒரு பணக்காரரால் அல்லது கெடுதிக்காரக் கூட்டத்தால் அதிகாரம் செலுத்துதல் இராது. அதேசமயத்தில், சங்கமானது வைப்புகளைப் பெறுவதற்குத் தகுதியுள்ள ஒரு சேமிப்பு வங்கியாகவும் ஓரளவிற்கு இருந்தது.

**(iii) சமத்துவ வாக்குரிமை :** ஒரு வருடாந்திரப் பொதுக் கூட்டத்தின் மூலமாகவும், ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட குழுவின் மூலமாகவும், சங்கம் ஜனநாயக முறையில் நிர்வாகம் செய்யப்பட்டது. ஒவ்வோர் உறுப்பினரும் தம் பங்குடைமை எதுவாகவிருந்தாலும் ஒரு வாக்கு மட்டுமே பெற்றிருந்தார். அது நபர்களுடைய சங்கமாக இருக்கவேண்டும்; மூலதனத்தின் சங்கமாக இருக்கக்கூடாது.

**(iv) செய்யப்பட்ட வாணிக வீதத்தில் உபரி இலாபத்தைப் பகிர்வு செய்தல் :** அடக்கவிலையில் விற்பதே முதற் கருத்தாக இருந்தது. நடைமுறையில், இது கணக்கிடுவதற்கு மிகக் கடினமாகவும், எதிரிக் கடைக்காரர்களுக்கு மிகக் கோபம் ஊட்டுவதாகவும் இருந்தது. நன்கு நடத்தப்பட்ட ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் நடப்பு விலைகளில் விற்பனைகள் செய்யப்பட்டால், ஆண்டிறுதியில் ஒரு நிதி கிடைக்கும். அந் நிதியை எவரும் இலாபமென்று வழங்க விரும்ப

மாட்டார்கள். அது, இலாப ஈவாக அல்லது சங்கத்திலிருந்து ஒவ்வோர் உறுப்பினராலும் கொள்முதல் செய்யப்பட்ட பொருள்கள் மதிப்பின்மீது தள்ளுபடியாக விநியோகிக்கப்பட்டது. இம் முறையானது, முன்னோடிகளின் ஒரு மிகப்பெரிய ஒற்றையான கண்டுபிடிப்பாக இருந்தது.

**இதர அம்சங்கள்**

இரசிக்கவேண்டிய இதர அம்சங்களும் இருந்தன. இராக்டேல் முன்னோடிகளின் உடனடியான நோக்கம், நம்பத்தகுந்த தரமுள்ள மளிகைச் சரக்குகளைக் கொள்முதல் செய்து உறுப்பினர்களுக்கு நியாயமான விலைகளில் சில்லறையாக விற்பதாக இருந்தது. இவ் விலைகள் முடிவில் கொடுக்கப்படுகின்ற இலாப ஈவால் மேலும் குறைக்கப்படுகிறது. எனினும், அவர்களின் விதிகள், அவர்களின் நோக்கங்கள் மேலும் அதிக உயர்வானவையாக இருந்தன என்பதைச் சாலவும் தெளிவு செய்தன. தங்களை வேலையில் அமர்த்திக் கொள்வதற்கு அவர்கள் தொழிற்சாலைகளையும், தங்கள் சொந்த உணவுப்பொருள்களைத் தாங்களே விளைவு செய்யக்கூடிய பண்ணைகளையும், தங்கள் குழந்தைகளுக்காகப் பள்ளிகளையும், தங்களுக்காக நூலகங்களையும், சொற்பொழிவு அறைகளையும் நிறுவுவதற்கு உத்தேசித்தனர். உண்மையாகவே, முன்னர்க் குறிக்கப்பட்ட ஓவனின் கூட்டுறவுச் சமுதாயத்திற்குக் கிட்டதட்ட அவர்கள் நோக்கங் கொண்டிருந்தனர். ஆனால், அக் கனவு முழுமையாக நிறைவேறவில்லை. ஏனென்றால், கூட்டுறவுப் பண்டக விற்பனையின் வெற்றி, தன் சொந்த வேகத்தைப் பெற்று இங்கிலாந்துத் தொழிலியக்கத்தை இதரப் பாதைகளில் கொண்டு சென்றது. ஆனால், இங்குத்தான், பிறவிடங்களில் பரிணமித்த பயனுள்ள மிகப் பல கருத்துகளின் வித்து இருந்தது. அக் கருத்துகளாவன :— (i) கல்வியின்மீது விதிக்கப்பட்ட வற்புறுத்தல் மிக முக்கியமானது. கல்வியுடன் இருந்த இணைப்புத் தொடர்ந்திருந்துள்ளது; அது, பணியாளர்கள், குழுக்கள், உறுப்பினர்கள் ஆகியவர்களின் கடமைகளைப் பற்றிய பயிற்சியில் குறிப்பாகக் காணப்பட்டது. (ii) பொருளாதாரத் துறையில் பல்வேறு அம்சங்கள் குறிப்பிடத் தக்கவையாக உள்ளன. ஒரு பங்கின் மதிப்பிற்கு வரையறுக்கப்பட்ட பொறுப்புக் கொள்கை, எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இக் கொள்கை, இன்டஸ்டிரியல் மற்றும் பிராவிடண்ட் சங்கங்கள் சட்டத்தில் ஒரு சரத்தின் மூலம் புகுத்தப்பட்டது. அது, ஆரம்பக் கூட்டுறவுச் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பின்பேரில் அமைக்கப்பட்ட ஐரோப்பாவின், சிறப்பாக ஜெர்மனியின், நடைமுறைக்கு முரண்பட்டு இருந்தது. (iii) ரொக்க வாணிகம் என்பது அதிகமாக

வற்புறுத்தப்பட்ட ஓர் ஆரம்பக் கொள்கையாகும். ஏனென்றால், கடன்முறை வாணிகத்தின் தீமைகள் ஆரம்பக் கூட்டுறவாளர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தன. அக் கொள்கை, முதன்மையாக, ஒரு சில விலக்குகளோடு, தொழிற்கூட்டுறவு இயக்கத்தால் பின்பற்றப்பட்டு வந்தது. (iv) ஓர் உறுப்பினர் தம் சங்கத்துடன் தான் தம் எல்லா வாணிகத்தையும் செய்யவேண்டும் என்ற கடமை எப்பொழுதுமே ஓர் ஒழுக்க ரீதியான கடமையாக ஏற்கப்பட்டது; ஆனால், அது முறைமைப்படியான ஒரு விதியில் ஏற்படுத்தப்படவில்லை. (v) உறுப்பினரல்லாதவர்களுடன் சங்கம் வாணிகம் செய்வதற்குச் சட்டமோ மரபோ தடை செய்யவில்லை. ஆயினும், உறுப்பினரல்லாதவர்கள் உறுப்பினராக வேண்டுமென்று வற்புறுத்தப்படுவது எப்பொழுதுமே ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவர்களுடைய வாடிக்கையானது தொடர்ந்திருந்தால் அவர்கள் காலப்போக்கில் அதன் பொறுப்புகளையும் உரிமைகளையும் ஏற்றுக்கொள்வார்கள் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. (vi) அரசியல் மற்றும் சமயச்சார்பின்மைக் கொள்கை உறுதியாக நிர்ணயிக்கப்பட்டு 70 ஆண்டுகளுக்கும் மேலாகக் கடைப்பிடிக்கப்பட்டது. பிரிட்டனின் தொழிலியக்கத்தில் அரசியல் சார்பின்மையைக் கைவிடச் சூழ்நிலைகள் ஏற்பட்டன; ஆனால், பிறவிடங்களில் இந்த நடுநிலைக் கொள்கை பராமரிக்கப்பட்டது.

## நுகர்வோர் இயக்கத்தின் வளர்ச்சி

வழி உண்டாக்குவோர்களின் வெற்றியைத் தொடர்ந்து, வடக்குத் தொழிற்பட்டினங்களிலும், கிராமங்களிலுமுள்ள ஆண்களாலும், மகளிர்களாலும், அநேக சிறு சங்கங்கள் அமைக்கப்பட்டன. மெல்லமெல்ல இயக்கம் தெற்கு நாடுகளுக்குப் பரவியது. நடுத்தர வகுப்பு ஆதரவாளர்களான ஒரு கூட்டத்தினர், குறிப்பாக அவர்களுள் ஒரு பிரமுகராகவிருந்த கிறித்தவச் சமதர்மவாதி வான்சிடார்ட் நீலும் (Vansittart Neale), வழக்கறிஞராகவும், நாடாளுமன்ற உறுப்பினராகவுமிருந்த லுட்லோவும் (Lud Low), அவற்றிற்குச் சட்ட உதவியை அளித்து, அரசு அதிகாரிகளுடன் அவற்றின் பாதையை எளிதாக்கி, 1852ஆம் ஆண்டில் இண்டஸ்டிரியல் மற்றும் பிராவிடண்ட் சங்கங்களின் சட்டம் நிறைவேறுவதற்கு உதவிபுரிந்தனர். அன்றிலிருந்து இச் சட்டத்தின்கீழ் அச் சங்கங்கள் செயற்பட்டுவந்தன. 1862ஆம் ஆண்டிற்குள், சில்லறை வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்த ஏராளமான சங்கங்கள், ஒரு மொத்த விற்பனை, கொள்முதல், உற்பத்தி செய்தலின் பிரதிநிதிக்கான தேவையை உணர்ந்துகொண்டிருந்தன.

அவை மைய மொத்த விற்பனைச் சங்கத்தை (C.W.S.) அமைத்தன. இந்த மொத்த விற்பனைச் சங்கத்திற்கு, ஒரு தனிநபர் தம் உள்ளூர்ச் சங்கத்தில் பங்குடைமை உறுப்பினர் தொடர்பு கொண்டிருப்பது போன்று, உள்ளூர்ச் சங்கங்கள் பங்குடைமை உறுப்பினர் தொடர்பு கொண்டிருந்தன. 1867ஆம் ஆண்டில், ஸ்காட்லாந்து மொத்த விற்பனைச் சங்கம் (Scottish Whole Sale Society) நிறுவப்பட்டது. 1882ஆம் ஆண்டில் ஆலோசனை செய்தல், சட்ட ஆய்வுரை பெறுதல், கல்வி, பிரச்சாரம், அரசு அதிகாரிகளுடன் தொடர்பு ஆகிய காரியங்களுக்காகக் கூட்டுறவு ஒன்றியம் என்ற பெயரில் ஓர் இணையான நிறுவனம் அமைக்கப்பட்டது.

### சில்லறை விற்பனைச் சங்கங்களும் மொத்த விற்பனைச் சங்கங்களும்

1971ஆம் ஆண்டிறுதியில், பிரிட்டனிலும், அயர்லாந்து குடியரசிலும் 11.34 மில்லியன் மொத்த உறுப்பினர்களையும், 1,203 மில்லியன் பவுண்டு வருடாந்திர விற்பனைகளையுங் கொண்ட 271 சில்லறை விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களிருந்தன. 29 மிகப்பெரிய சங்கங்களில், ஒவ்வொன்றிலும் ஓர் இலட்ச உறுப்பினர்களுடன், சுமார் 70 சதவீதம் உறுப்பினர் எண்ணிக்கை மையப்படுத்தப்பட்டிருந்தது. இங்கிலாந்திலும், வேல்சு நாட்டிலும் ஒரு தேசிய நிறுவனத்தை நடத்தும் கூட்டுறவுச் சில்லறை விற்பனைச் சேவைச் சங்கம் (வரையறுக்கப்பட்டது.) (Co-operative Retail Services, Limited.) என்ற நிறுவனமானது மிகப்பெரிய ஒரு சில்லறை விற்பனைச் சங்கமாகும். அது 29 கிளைகளையும், 1.36 மில்லியன் உறுப்பினர்களையும், 132 மில்லியன் பவுண்டு மதிப்புள்ள வருடாந்திர விற்பனைப் புரள்வையுங் கொண்டுள்ளது. சுமார் 34 சங்கங்கள், 1971ஆம் ஆண்டில், 10 மில்லியன் பவுண்டுக்கும் அதிகமான விற்பனைகளைப் பெற்றிருந்தன. அச் சங்கங்கள் மளிகைச் சரக்குகளில் மட்டுமன்றி ஏறக்குறைய ஒவ்வொரு நுகர் பொருளிலும் வாணிகம் செய்தன. அவை ஏராளமான சேவைகளையும், சிற்றுண்டி விடுதிகளையும், சாப்பாட்டுச்சாலைகளையும், நோய் தீர்ந்து உடம்பு தேறுகிறவர்கள் இல்லங்களையும், சலவையகங்களையும், சவ அடக்கச் சேவைகளையும் நடத்துகின்றன. சில்லறை விற்பனைச் சங்கங்களில் பல, தங்கள் சொந்த உற்பத்தித் துறைகளையும், பதனப்படுத்துதல் துறைகளையும் பெற்றிருந்தன.

1971ஆம் ஆண்டில் மொத்த, சில்லறை விற்பனை வர்த்தகத்தில் சுமார் 7.5%, (11.2% உணவுப் பொருள் விற்பனைகளும், 3 3% உணவு அல்லாத பொருள்கள் விற்பனைகளும்) கூட்டுறவுச்

சங்கங்கள் மூலமாகச் செய்யப்பட்டன. 1966ஆம் ஆண்டிலிருந்து, அவற்றின் சில்லறை வர்த்தகம் வளர்ச்சியடைந்திருந்தாலும், மொத்த, சில்லறை வர்த்தகத்தில் அவற்றின் பங்கு வீழ்ச்சியடைந்துள்ளது. ஏனென்றால், பன்முக வர்த்தகர்கள், துறைப்பண்டசாலைகள் போன்ற இதரவகையான சில்லறை வர்த்தகர்கள் தங்கள் விற்பனைகளை மிகத் துரிதமாகப் பெருக்கியுள்ளனர்.

1971ஆம் ஆண்டில், சில்லறை வர்த்தகக் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த நிதி 354 மில்லியன் பவுண்டுகளாக இருந்தது. முதன்மையான நிதியாதாரங்கள், உறுப்பினர்களால் வழங்கப்பட்ட பங்கு மூலதனமாகவும் (142 மில்லியன் பவுண்டு), கடன்களாகவும் (141 மில்லியன் பவுண்டு), காப்பு நிதிகள் வடிவத்தில் கூட்டாகப் பெற்றிருந்த சொந்த மூலதனமாகவும் (1971ஆம் ஆண்டில் 70 மில்லியன் பவுண்டிற்கும் அதிகரித்திருந்தது.) இருந்தன. இந் நிதிகளில், சுமார் 52% நிலையான சொத்துகளிலும், 32% முதலீடுகளிலும், எஞ்சிய 16% நிகர நடப்புச் சொத்துகளிலும் சென்றிருந்தன.

1971ஆம் ஆண்டில், சில்லறை வர்த்தகச் சங்கங்கள் 1,64,000 தொழிலாளர்களை வேலையில் அமர்த்தி இருந்தன. ஏறக்குறைய அவர்கள் எல்லோரும் தங்கள் முறையான ஒன்றியங்களில் உறுப்பினர்களாக இருந்தனர்.

ஒவ்வொரு சில்லறை வர்த்தகச் சங்கமும் உறுப்பினர்களால் தேர்த்தெடுக்கப்பட்ட இயக்குநர் குழுவால் கண்காணிக்கப்பட்டது. இந்த எல்லா இயக்குநர் குழுக்களும் பகுதிநேர நிறுவனங்களாக இருந்தன. 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' என்ற அடிப்படையின் பேரில் வாக்களிப்பு இருந்தது. தொழிற்சம்பந்த மேலாளர்கள் இயக்குநர் குழுக்களால் நியமிக்கப்பட்டு அக் குழுக்களுக்குப் பொறுப்பாளிகளாக விருந்தனர்.

## கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமும், ஸ்காட்லாந்து கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமும் (C.W.S and S.C.W.S)

கூட்டுறவுச் சங்கங்கள், ஒரு கூட்டமைப்புச் சங்கத்தை நிறுவுவதற்கு ஒன்றுக இணையலாம், பிரிட்டனில் 4 முக்கிய மொத்த விற்பனை நிறுவனங்கள் இயங்குகின்றன. அவற்றுள், மிக முக்கியமானவை கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமும், ஸ்காட்லாந்து கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமுமாகும். சுமார் 358 சங்கங்கள் கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்தின் உறுப்பினர்களாகவும், சுமார் 96 சங்கங்கள் ஸ்காட்லாந்து கூட்டுறவு

மொத்த விற்பனைச் சங்கத்தின் உறுப்பினர்களாகவும் உள்ளன. மிகப் பெரும்பான்மையான உள்ளூர்ச் சங்கங்களை உறுப்பினர் களாகக் கொண்ட இவ் விரண்டு கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கங்களும், இயக்கத்தில் விற்பனை செய்யப்பட்ட ஏறக்குறைய 2/3 பகுதியான பொருள்களை விநியோகித்தன. கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கம், 1971ஆம் ஆண்டில், 526 மில்லியன் பவுண்டுகள் மதிப்புள்ள விற்பனைகளைச் செய்து, 23,000 பணி யாளர்களைக் கொண்ட ஒரு தொழிற்படையுடன் 139 மில்லியன் பவுண்டு மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்தது. மிகப் பர வலான பண்டங்களைத் தயாரிக்கும் ஆலைகளையும் தொழிற்சாலை களையும் இவை பெற்றிருந்தன. கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கமானது, 6 நாடுகளில் முகவர்களைப் பெற்றிருந்தது. அது இந்தியாவிலும், இலங்கையிலும் தன்சொந்தத்தேயிலைத் தோட்டங் களையும் டென்மார்க்கில் தன் சொந்தப் பன்றி இறைச்சி பதப்படுத் தும் தொழிற்சாலையையும் பெற்றிருந்தது. மேற்கு ஆஃபிரிக்கா வில் எண்ணெய் வித்து வர்த்தகத்திலுள்ள பெரிய தனியார் கம் பெனிகளுடன் அது போட்டியிட்டது. கோதுமை இறக்குமதி, அரவையில் ஈடுபட்டிருந்த மிகப்பெரிய வர்த்தகர்களில் ஒன்றாக அது இருந்தது, வீட்டில் உற்பத்தியான பால், முட்டைகள், இறைச்சி, காய்கறிகள் ஆகியவற்றின் மிகப் பெரிய ஒரு கொள் முதலாளியாக அது இயங்கியது. ஸ்காட்லாந்து கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்தாலும் சொந்தமாக நடத்தப்பட்ட கூட்டுறவுத் தேயிலைச் சங்கங்கள் தேயிலையையும், காஃபியையும் பெருமளவு இறக்குமதி செய்வதிலும், விநியோகம் செய்வதிலும் ஈடுபட்டுத் தென்னிந்தியாவிலும், இலங்கையிலுமுள்ள தேயிலைத் தோட்டங்களை நிர்வாகம் செய்கின்றன.

கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்திற்குத் தன் சொந்த வங்கித் தொழில்துறை உள்ளது. அத் துறை, தன் உறுப்பி னர்களின் நிதி சம்பந்தமான நடவடிக்கைகளைக் கவனிப்பது மட்டுமல்லாமல், தொழிலாளர் சங்கங்கள், நண்பர்கள் சங்கங்கள், நகராட்சிகள், தனியார் நபர்கள் ஆகியவர்களின் வர்த்தகத்தை யும் மேற்கொள்கிறது. 1971ஆம் ஆண்டில், இச் சங்கத்தின் ஒரு துணை நிறுவனமான கூட்டுறவு வங்கி 152 மில்லியன் பவுண்டுகள் மதிப்புள்ள மொத்த ஆஸ்திகளையும், 2,02,000 நடப்புக் கணக்குகளையும் கொண்டிருந்தது. ஸ்காட்லாந்துக் கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்தின் வங்கி 674 மில்லியன் பவுண்டுகள் விற்பனைப் புரள்வைக் கொண்ட 10,000 நடப்புக் கணக்குகளையும், 56 மில்லியன் பவுண்டு மதிப்புள்ள சொத்து களையும் பெற்றிருந்தது.

கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்திற்கும், ஸ்காட் லாந்துக் கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்திற்கும் கூட்டாகச் சொந்தமான கூட்டுறவு ஈட்டுறுதிச் சங்கம் பிரிட்டனிலுள்ள பெரிய ஈட்டுறுதிக் கழகங்களில் ஒன்றாகும். அது நாட்டில் தொழிற் காப்பீட்டை நடத்திவருகிறது. 1971ஆம் ஆண்டில், அதன் சொத்துகள் ஏறக்குறைய 600 மில்லியன் பவுண்டுகளாக இருந்தன. ஈட்டுறுதித் தவணைக் கட்டண வருமானம் 100 மில்லியன் பவுண்டுக்கும் அதிகமாக இருந்தது.

## பிரிட்டனில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வெற்றிக்கான காரணங்கள்

பிரிட்டனில் கூட்டுறவு இயக்கம் தற்போது இதரவகைச் சங்கங்களை உள்ளடக்கியிருந்தாலும், அது முதன்மையாக ஒரு நுகர்வோர் இயக்கமாகவுள்ளது. அவ் வியக்கம், பிரிட்டனில் மட்டுமன்றி, ஏறக்குறைய உலகமுழுவதிலுங்கூடக் கூட்டுறவு இயக்கத்தில் ஒரு தலைமையிடத்தை வகித்துள்ளது. பிரிட்டனில் நுகர்வோர் இயக்கத்தின் வெற்றிக்கான காரணங்களில் சில, வருமாறு: (i) கூட்டுறவுக் கொள்கைகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்தல். (ii) பணியாண்மையருக்கும் ஊழியர்களுக்கு மிடையே சுமுகமான உறவுகள். (iii) சேமிப்பு வங்கிகள், பண்டசாலைப் பணியுடன் இணைக்கப்படுதல் — இம் முறையின்கீழ்ப் பண்டசாலைக்கு நிதிப் பற்றாக்குறை எப்பொழுதும் இராது. (iv) இயக்கத்தை ஒரு வெற்றியாகச் செய்வதில் மாதர்கள் ஒரு பெரும்பணியை ஆற்றுகின்றனர். பண்டங்களை வாங்குதல் அவர்கள்தாம்; இயக்கத்திடமுள்ள அவர்களுடைய விசுவாசம் பெயர் பெற்ற ஒன்று. (v) இயக்கத்தின் வளர்ச்சியானது, தனக்குத்தானனதாகவும், சுயேச்சையானதாகவும், தானே முறைப்படுத்திக் கொள்ளக்கூடிய நெறியுடையதாகவும் இருந்தது. (vi) பண்டசாலைகள், தங்கள் இலாபங்களில், ஒரு சதவீதத்தை நிதியொன்றுக்கு ஒதுக்கிவைத்து, அந் நிதியை மந்தமான பருவங் களில் பயன்படுத்தி வந்தன. (vii) நிருவாகத்திறன். (viii) இயக் கத்தின் தொடர்ச்சியான வெற்றிக்குகந்தவையாக இருந்த, பண்ட சாலையை நிலைநிறுத்துவதற்கு வழங்கப்பட்ட பெருங்கடின உழைப்பு மரபுகள்.

## தொழில் உற்பத்திச் சங்கங்கள்
## (Industrial Production Societies)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்குள், ஏராள மான 'பாட்டாளிகள் உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்கள்' (Workers'

Productive Co-operative Societies), முக்கியமாக மிட்லண்ட்சில் அமைக்கப்பட்டன. அதிசிறப்பாக அவை பாத அணி வகைகள் தயாரிக்கும் தொழில், கைப்பின்னல் வகைகள் தயாரிக்கும் தொழில், அச்சுத் தொழில் ஆகியவைகளிலும் மற்றும் ஒன்று அல்லது இரண்டு இதரத் திறமைமிக்க தொழில்களிலும் அமைக்கப் பட்டன. பாட்டாளிகள் பங்குகள் எடுத்திருந்தனர்; அவர்கள் நிர்வாகக் குழுவைத் தேர்ந்தெடுத்தனர்; அந்த நிர்வாகக் குழு மேலாண்மை அலுவலர்களை நியமித்தது. எனினும், இவ் வியக்கம் எக் காலத்திலும் நுகர்வோர் இயக்கத்தின் வேகத்தில் வளர்ச்சியடையவில்லை. ஆனால், லீசெஸ்டரில் (Leicester) தம் சொந்தக் கூட்டமைப்பையும் தலைமை அலுவலகத்தையுங் கொண்ட இவ் வுற்பத்திச் சங்கங்கள், தனியார் உடைமைத் தொழில்களுக்கும், நாட்டுடைமையாக்கப்பட்ட புதிய தொழில் களுக்கும் மகிழ்ச்சிக்குரிய ஒரு மாற்றுவழியாக விளங்குகின்றன. அவை நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுடன் நெருக்கமாக இணைக்கப்பட்டுள்ளன. இவ் விரு நிறுவனங்களுக்கிடையே எவ்வித மோதலும் கிடையாது. ஏனென்றால், அவற்றில் சில கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்தின் உறுப்பினர்களாகக்கூட உள்ளன. அவை நல்ல வேலை நிபந்தனைகளை வழங்கி, தொழிலாளர் சங்கங் களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. உபரி இலாபம் இராக்டேல் கொள்கைகளின்படி பகிர்வு செய்யப்படுகிறது. அதாவது, ஊழியர்களுக்குக் கூலிகளின்பேரில் போனசும், கூட்டுறவுச் சங்கங்களாகவுள்ள வாடிக்கையாளர்களுக்குக் கொள்முதல்கள் மீது இலாபஈவும், முதன்மையாகக் கூட்டுறவுச் சங்கங்களாகவுள்ள பங்குதாரர்களுக்கு ஒரு சிறிய மேல்ஊதியமும் — இவ் வுற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்களில் பெரும்பான்மையானவை பதிவு செய்யப் பட்ட ஒரு நிறுவனமாகிய கூட்டுறவு உற்பத்திக் கூட்டமைப்பின் உறுப்பினர்களாகவுள்ளன. இக் கூட்டமைப்பு, கூட்டுறவு ஒன்றியத்தின் ஓர் உறுப்பினராகவுள்ளது. அது உறுப்பினர் சங்கங்களின் நலன்களைப் பாதுகாத்து, அறிவுரை வழங்குகின்றது. 1962ஆம் ஆண்டில், அதில் 36 சங்கங்கள் உறுப்பினர்களாக இருந்தன. அது, 4,566 தொழிலாளர்களைக் கொண்டிருந்தது; அதன் வாணிகம் 7 மில்லியன் பவுண்டுக் கிருந்தது.

## கூட்டுறவுக் கடன்

பல்வேறு நாடுகளில் கூட்டுறவு இயக்கத்தின் பெரும்பகுதியாக அமைந்துள்ள கூட்டுறவுக் கடன், பிரிட்டனில் ஏறக்குறைய இல்லாதிருந்தது. கடனென்பது அங்குக் குடியானவனின் முதன்மையான தேவையாக இருந்திருக்கவில்லை; எனவே, கடன் கூட்டுறவுச் சங்கங்கள் பெருமளவில் வளர்ச்சியடையவில்லை.

1915ஆம் ஆண்டில் விவசாயிகளின் தேவைகளை வழங்கிவந்த 15 சங்கங்கள் மட்டுமே இருந்தன. டாக்டர் ஃபே (Dr. Fay) அவர்களின் கூற்றின்படி, ஆங்கில நிலவுடைமை முறையின் அமைப்பானது, விவசாயத்தைக் கூட்டுறவுக் கடனைச்சுற்றி வளர்வ திலிருந்து தடுத்தது. மற்றும், பொதுவாகக் குடியானவர் வசதி யுள்ளவர்களாக இருந்தமையால், அவர்கள் வட்டிக்கடைக் காரனுக்கோ வர்த்தகனுக்கோ அடிமை என்ற தாழ்வுமனப்பான்மை இல்லாமலிருந்தனர். மேலும், இங்கிலாந்தில் குடியானவர் களுக்கு வாணிக வங்கிகள் கடன் வசதிகளை நியாயமான நிபந்தனை களின்பேரில் வழங்குகின்றன. ஆதலால், குடியானவர்கள் கடன் சங்கங்களை அமைப்பதற்கான ஓர் அவசியத்தை உணராமலுள்ள னர். முதலாம் உலகப் போருக்குப் பிறகு ஏற்பட்ட பொருளா தார மந்தத்தின்போது, குடியானவர்கள் வர்த்தகர்களுக்கும் விவசாயத் தேவைகளை வழங்குவதில் ஈடுபட்டிருந்த வியாபாரி களுக்கும் கடன்பட்டிருந்தகாலையில், விவசாயத் தேவைகள் வினியோகத்திற்காக ஏராளமான சங்கங்கள் தோன்றின. நகரக் கடனைப் பொறுத்தமட்டில் வீடு கட்டுவதற்காகக் கடன் வழங்கும் வீட்டுவசதிச் சங்கங்களைத் தவிர, இதரக் கடன் நிறுவனங்கள் எதுவும் கிடையாது.

## விவசாயக் கூட்டுறவு

பிரிட்டனில் விவசாயக் கூட்டுறவு, ஒப்பிடும் வகையில் ஓர் அண்மைக் கால வளர்ச்சியாகும். முன்னர்க் கூறியபடி, பல நாடுகளைப்போலல்லாது, பிரிட்டன் நாட்டுக் குடியானவர்கள் எவருக்கும் கடன்பட்டில்லை. தங்கள் விளைபொருள்களை விற்பனை செய்வதிலும் அவர்களுக்கு எவ்விதச் சிரமமும் இல்லாமலிருந் தது. ஆயினும், உர வகைகள், விதைகள், கால்நடைத் தீவனங் கள் போன்ற பண்ணைத் தேவைகளைக் கொள்முதல் செய்வதில் சில சிரமத்தைக் கண்டார்கள். எனவே, குடியானவர்களுக் கிடையேயான கூட்டுறவானது, 'தேவைச் சங்கங்கள்' (Requirements Societies) என்று வழங்கப்படும் சங்கங்களாகத் தொடங்கியது. ஓவன் என்பவரின் சீடர்களுள் ஒருவரான எட்வர்டு ஓவன் கிரீனிங் (Edward Ovan Greening) அவர்களும், ஒருசில நண்பர்களும் தரமானவையும், தூய்மையானவையுமான பண்ணைத் தேவைகளை உறுப்பினர்களுக்காகக் கூட்டுக்கொள்முதல் செய்வதற்காக, மேன்செஸ்டரில் (Manchester) 1867ஆம் ஆண்டில், 'விவசாய மற்றும் தோட்டக்கலைச் சங்கம்' (Agricultural and Horticultural Association) பதிவு செய்யப்பட்டபோது, கூட்டுறவுக் கொள்கைகள் பிரிட்டன் நாட்டு விவசாயத்திற்குப் பொருத்தப்பட்டன. அச் சங்கம் இலண்டன்

நகரில் தலைமை அலுவலகத்தையும், நாடு முழுவதிலும் சிதறியிருந்த சுமார் 4,000 உறுப்பினர்களையும் கொண்டிருந்தது. ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், கம்பர்லேண்டில் (Cumberland) குடியானவர்களின் ஒரு பிரிவினர் இரசாயன உரங்களின் அகவிலையினாலும் நம்பகமற்ற தரத்தினாலும் வெறுப்படைந்து, அதே முறையைப் பின்பற்றி, இன்றும் இயங்கிவரும் 'ஆஸ்பாட்ரியா விவசாய கூட்டுறவுச் சங்கத்தை' (Aspatria Agricultural Co-operative Society) அமைத்தனர். அம் மாதிரி வகையில் மேலும் ஒருசில குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. எனினும், பிரிட்டனில் விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பில் மிக முக்கியமானதும், ஒற்றையானதுமான செல்வாக்காக இருந்தது அயர்லாந்தில் ஹொரேஸ் பிளன்கட் (Horoce Plankett) அவர்களின் தொண்டாகும். அவர் 1894ஆம் ஆண்டில் அயர்லாந்து விவசாய அமைப்புச் சங்கத்தை (Irish Agricultural Organisation Society) நிறுவினர். எட்டாண்டுகளுக்குப் பின்னரே, 1902ஆம் ஆண்டில் இங்கிலாந்து, தன் சொந்த விவசாயக் கூட்டுறவு இயக்கத்தைப் பலப்படுத்தும் பணிக்கு அர்ப்பணிக்கப்பட்ட அதே மாதிரியான ஒரு சங்கத்தைப் பெற்றது. அது 2,07,000 உறுப்பினர்களையும், ஏறக்குறைய 18 மில்லியன் பவுண்டு விற்பனைப் புரள்வையும் கொண்டிருந்தது. ஆனல், பல சிறு சங்கங்களின் அற்ப ஆயுளுள்ள வளர்ச்சியானது, பாராட்டப்படக்கூடிய பலன்களைப் பெற முடியாமல் மிகவும் பலமற்று இருந்தது. அநேக சங்கங்கள் கலைக்கப்பட்டன; நம்பிக்கை குறைந்திருந்தது; 15 ஆண்டுகளாக விவசாயக் கூட்டுறவில் அக்கறை மிகக் குறைந்திருந்தது.

ஆயினும், விவசாயக் கூட்டுறவுக் கருத்தமைப்பு ஜீவித்திருந்தது. கடந்தகாலத் தவறுகளின்மூலம் கற்ற படிப்பினைகளிலிருந்து பயனடைந்தும், இணைப்பினல் பலப்படுத்தப்பட்டும், 1939ஆம் ஆண்டிற்குள் இழந்த வளர்ச்சி மீட்கப்பட்டிருந்தது. இயக்கத்தின் வாணிகத் துறையைப் பிரதிநிதித்துவம் செய்வதற்கும், 1936ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட 'விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் மேலாளர்கள் சங்கமும்' (The Agricultural Co-operatives Managers Association) தேசியக் குடியானவர்கள் ஒன்றியத்துடனும் இதரப் பெரிய விவசாய நிறுவனங்களுடனுமிருந்த தொடர்பும், ஒரு சக்தியுள்ள செல்வாக்கைத் தர ஆரம்பித்தன. பின்னர், விவசாயத் தேசியக் குடியானவர்கள் ஒன்றியத்தால் ஆதரிக்கப்பட்ட விவசாய மத்தியக் கூட்டுறவு நிறுவனம் (தற்போதுள்ள விவசாயக் கூட்டுறவுச் சங்கம்) (Agricultural Co-opera-

tive Association) இயக்கத்தின் நலன்களை மேலும் ஒருங்கிணைத்து முன்னேற்றம் செய்தது.

இங்கிலாந்து நாட்டுக் குடியானவர்களில் குறைந்தது 2/3 பகுதியினர் விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களாக இருந்தனர். இதரப் பலர், தங்கள் வாணிகத்தின் சில பகுதியை அவற்றுடன் வைத்துக் கொண்டிருந்தனர். பெரும்பான்மையான சங்கங்கள் பெரியதாக இருந்து, தங்கள் உறுப்பினர்களுக்குப் பொருள்களையும், சேவைகளையும் வழங்கின அல்லது அவர்களின் செய்பொருள்களை விற்பனை செய்தன. 1971ஆம் ஆண்டு மார்ச்சு மாத இறுதியில், பிரிட்டனில் ஏறக்குறைய 400 விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களிருந்தன் (சில சிறுநிலவுடைமையாளர்கள் மற்றும் பூச்சி நோய்க் கட்டுப்பாட்டுச் சங்கங்கள் நீங்கலாக). இவை சுமார் 3,43,000 உறுப்பினர்களையும் 361 மில்லியன் பவுண்டு விற்பனைப் புரள்வையும் பெற்றிருந்தன. அண்மையாண்டுகளில், பிரிட்டனில் அரசு நிதியுதவியைக் கொண்டு கூட்டுறவு விவசாய நடவடிக்கைகளில் ஒரு கணிசமான பெருக்கம் நிகழ்ந்துள்ளது. அரசு 1967ஆம் ஆண்டில், விவசாயம் மற்றும், தோட்டக்கலைக் கூட்டுறவுக்கான மத்திய அவையை (Central Council for Agricultural and Horticultural Co-operation) அமைத்தது. அவ்வமைப்பு, பின்னர், 2 மில்லியன் பவுண்டு உதவித் தொகையை அளித்துள்ளது. விவசாயத்தில் சிலவகையான விற்பனை உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியை உதவுவதற்கு, அது சட்டப்படியான அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இங்கிலாந்தில், குடியானவர்கள் கூட்டுறவு இயக்கத்திற்குத் தேசியத் தலைவர்கள் இல்லாமலிருந்தனர். குடியானவர்கள், கூட்டுறவு இயக்கத்திலிருந்து பெரும்பயனைப் பெற்றிருக்கக்கூடுமாயினும், இராக்டேல் நெசவாளர்களை நடவடிக்கைக்குத் தூண்டிய தீவிர அவசியத்தின் ஒரு தொல்லை அவர்களுக்கு இல்லாமலிருந்தது.

பிரிட்டனில், 82 மீனவர்கள் சங்கங்கள்கூட உள்ளன. அவை, மீன் பிடிக்கும் இயந்திரங்களையும், வாடாத சந்தை மீன்வகைகளையும் வழங்குகின்றன. 1971ஆம் ஆண்டில் அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை சுமார் 7,650 ஆகவும், மொத்த விற்பனைகள் 2.6 மில்லியன் பவுண்டுகளாகவு மிருந்தன.

## கூட்டுறவு ஒன்றியம்

பிரிட்டன் நாட்டுக் கூட்டுறவுச் சங்கங்களின் மத்திய நிறுவனமானது, 1889ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட கூட்டுறவு ஒன்றிய

மாகும். 1972ஆம் ஆண்டில், இதற்கு 277 சில்லறை விற்பனைச் சங்கங்களும் 28 உள்ளூர்க் கூட்டமைப்புகளும், மொத்த விற்பனைச் சங்கங்களும், பல்வேறு உற்பத்திச் சங்கங்களும், தனிச் சங்கங்களும் இணைக்கப்பட்டிருந்தன. இவ் வொன்றியம், ஆய்வுரைச் சேவைகளை வழங்கி, கூட்டுறவு இயக்கமனைத்தின் கொள்கையையும், திட்டமிடுதலையும் ஒருங்கிணைக்கிறது. வெளியீடுகளை விற்பனை செய்தல் தவிர, அது வாணிகத்தில் ஈடுபடுகிறதில்லை; அம் மாதிரியான நிறுவனங்களைப்போன்று அது ஒரு தணிக்கைச் சேவையையும் அளிக்கிறதில்லை. அது, இயக்கத்தின் கல்வி நிலையமாகவும், கொள்கை வகுக்கும் நிலையமாகவும் உள்ளது. அது, கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் சொந்த அங்கத்துவ வீதத்தில் செலுத்தும் சந்தாக்களிலிருந்து தன் நிதியைப் பெறுகிறது. ஆண்டுதோறும் நடைபெறும் கூட்டுறவுக் காங்கிரஸ் ஒன்றியத்தின் உச்ச அதிகாரியாக உள்ளது. கொள்கைப் பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டுத் தீர்மானிக்கப்படும் இயக்கத்தின் ஒரு பார்லிமெண்ட்டாக அது உள்ளது. முதல் உலகப் போருக்குப் பிறகு, 'கூட்டுறவுக் கட்சி' (Co-operative Party) என்று வழங்கப்படும் தன் சொந்த அரசியல் கட்சியை அது ஆரம்பித்தது. 1971ஆம் ஆண்டிறுதியில், கூட்டுறவு ஒன்றியத்திற்கு இணைக்கப்பட்ட உறுப்பினர் எண்ணிக்கையில் 88 சதவீதத்தைக் கொண்ட 218 இணைக்கப்பட்ட சங்கங்கள், கூட்டுறவுக் கட்சிக்கு இணைக்கப்பட்டிருந்தன. ஒப்பந்தத்தின்மூலம் அக் கட்சி தொழிற்கட்சிக்கு (Labour Party) இணைக்கப்பட்டுப் பொதுவான அது அக் கட்சியின் கொள்கைகளை ஆதரிக்கின்றது. ஆனால், கூட்டுறவு இயக்கத்தின் நலன்களையும், குறிக்கோள்களையும் பாதுகாத்து வளரச் செய்தலே அதன் தனிப்பட்ட நோக்கமாகும். இந்த ஒன்றியம் 'கூட்டுறவு ரெவ்யு' (Co-operative Review) என்ற மாத இதழை வெளியிடுகிறது.

1919ஆம் ஆண்டில், மேன்செஸ்டரில் அமைக்கப்பட்ட, அலுவலர்கள் பயிற்சிக்கான கூட்டுறவுக் கல்லூரி, பின்னர், லீசிஸ்டர்ஷயரிலுள்ள (Leicestershire) ஸ்டேன்ஃபோர்டு ஹாலுக்கு (Stanford Hall) மாற்றப்பட்டது. பல்கலைக்கழகத்திற்குச் சம்பந்தமாக நடத்தப்பட்ட சமுதாய அறிவியலில் பட்டயப் பாடப்படிப்புகளையும், வாணிக நிருவாக இயலில் ஒரு பாடப்படிப்பையும், வெளிநாட்டு மாணவர்களுக்கான பாடப்படிப்பையுங்கூடத் தன் பாடத்திட்டத்தில் சேர்த்துக்கொள்வதற்கு அதன் நோக்கவரம்பு விரிவுபடுத்தப்பட்டது.

## அயர்லாந்து, சர் ஹொரேஸ் பிளன்கட்
(Sir Horace Plunkett)

பத்தொன்பதாம் நூற்றூண்டின் தொடக்கத்தில் அயர்லாந்து நாடு, ஒரு கூட்டுறவு அடிப்படையில் தன் விவசாயப் பொருளாதார அமைப்பையும், கிராமச் சங்கங்களையும் சீரமைப்பதற்காகப் பக்குவமடைந்திருந்தது. ஏனென்றால், அயர்லாந்தின் குடியானவர்கள், பாதுகாப்பான உடைமை முறையையும், இறுதியாக நிலவுடைமையையும் பெறும் தருணத்திலிருந்தனர். அயர்லாந்தில் இயக்கத் தலைமை, ஜெர்மனியில் போன்று, வெளியே ஒரு தனி நபரிடமிருந்து வரவேண்டியிருந்தது; அது, இங்கிலாந்து அல்லது டென்மார்க்கில் போன்று, ஓர் அநாமதேயமான வகுப்பினரிடமிருந்து வரவில்லை.

அத்தகைய ஒரு தலைவர், சர் ஹொரேஸ் பிளன்கட்டாக இருந்தார். 1854ஆம் ஆண்டில் பிறந்த அவர், அயர்லாந்து நாட்டின் ஒரு நிலச் சொந்தக்காரரின் புதல்வராக இருந்தார்; ஈட்டனிலும் (Eton) ஆக்ஸ்ஃபோர்டிலும் (Oxford) கல்வி பயின்றார். பல்கலைக்கழகத்திலிருந்தபோது, அவர் ஆங்கிலேய நாட்டுத் தொழிற்கூட்டுறவுச் சங்கங்களுடன் தொடர்புகொள்ள நேரிட்டது. அயர்லாந்து நாட்டின் கிராம வர்த்தகர்களும் வட்டித் தொழில் செய்பவர்களும், குடியானவர்களின் எளிய நிதியாதாரங்கள் பெரும்பாலானவற்றை உறிஞ்சிக் கொண்டிருந்த ஒரு கடற்பஞ்சாக இருந்தனர் என்பதை அவர் நன்கு அறிந்திருந்தார். ஒரு கூட்டுறவுப் பண்டசாலையானது நெசவாளர்களுக்கும், சுரங்கத் தொழிலாளர்களுக்கும் பயனளித்திருந்ததால், அது குடியானவனுக்கும் பயன்தரக்கூடும் என்பதை அவர் கண்டு, தம் தந்தையின் நிலங்களில் ஒரு சிறிய சங்கத்தை அமைத்தார். உடல்நலக் குறைவு அவரை அயர்லாந்திலிருந்து துரத்தியது. 1899ஆம் ஆண்டில் அவர் அயர்லாந்துக்குத் திரும்பிய பிறகு, அயர்லாந்து நாட்டுக் குடியானவர்களிடையே கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கான ஒரு கடுமையான இயக்கத்தைத் தொடங்கினார்; முதலில் பண்டசாலைகளை அமைப்பதற்கு எண்ணினார். ஆனால், அக் கருத்துப் பிடிபடவில்லை; சக்தி வாய்ந்த வர்த்தகர்களும் அதற்கு விரோதமாக இருந்தனர். டென்மார்க்கு நாட்டு ஆரம்பக் கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படையாகவிருந்த, பாலேடு பிரிக்கும் இயந்திரமும் (Mechanical cream separator), பால்கடையும் இயந்திரமும் (Mechanical churn), ஒரு மேலான திறவுகோலாக விளங்கின. பிளன்கட் அவர்களின் ஆர்வத்தின்மூலம், அவருடன் பணிபுரிய அவர் நண்பர்கள் குழாத்தின் அமைப்புத்திறன்கீழும்,

ஏராளமான கூட்டுறவுப் பாலாடை பிரிக்கும் சாலைகளும் (Creameries), இதரவகையான சில சங்கங்களும் தோன்றின. 1894ஆம் ஆண்டில், பிளன்கட் அவர்கள், பிரச்சார மேற்பார்வை வேலையை, 'அயர்லாந்து விவசாய நிறுவனச் சங்கத்திற்கு' (Irish Agricultural Organisation Society) மாற்றினர். இச் சங்கம் ஒரு கூட்டுறவு ஒன்றியத்தின் பணியைப் புரிந்தது. இதற்குள், பிளன்கட் அவர்கள் இங்கிலாந்து மாதிரியிலிருந்து கருத்துகள் பெறுவதைக் கைவிட்டார்; டென்மார்க்கு, சுவீடன், ஜெர்மனி ஆகிய நாடுகளிலிருந்து கருத்துகளைப் பெற்று வந்தார். அதே சமயத்தில் அவர் அயர்லாந்தில் விவசாய மற்றும் தொழில்நுட்பப் பாடத்துறை ஒன்றை (Department of Agricultural and Technical Instruction) அமைக்கச் செய்து, அவர் அதன் முதல் நிருவாகத் தலைவராக இருந்தார். அத் துறையானது அயர்லாந்து நாட்டுக் குடியானவர்களை மேலான சாகுபடி முறைகளில் பயிற்சி செய்வதன்மூலம் கூட்டுறவுச் சங்கங்களின் பொருளாதார நடவடிக்கைகளுக்குத் துணையாகப் பணியாற்றியது. அவருடைய மனைவி இல்லப் பொருளாதாரத்தில் பயிற்சியளித்தார். இம் முயற்சியானது, பிளன்கட் அவர்களின் பெயர்பெற்ற சொற்றொடரில் தொகுத்துரைக்கப்படுகிறது. அதாவது, 'மேலான பண்ணைத்தொழில், மேலான வாணிகம், மேலான வாழ்க்கை' (Better Farming, Better Business and Better Living). உண்மையில், அவர் அயர்லாந்து நாட்டுக் கூட்டுறவுத் தந்தையாக இருந்தார்.

**பிளன்கட் அறக்கட்டளை** (Plunkett Foundation)

இது, பிரிட்டனில் அலுவலகங்களைப் பெற்றுள்ள சர்வதேச நிறுவனங்களுள் ஒன்று. இந் நிறுவனத்திற்குப் பிரிட்டன் நாட்டு இயக்கங்கள் கணிசமான உதவித் தொகைகளை அளித்துள்ளன. கூட்டுறவு ஆராய்ச்சிப் படிப்புகளுக்கான பிளன்கட் அறக்கட்டளை 1919ஆம் ஆண்டில் ஒரு பொறுப்பு நிறுவனமாக (Trust) ஹொரேஸ் பிளன்கட் அவர்களால்கட்டளையாக்கப்பட்டு,1924ஆம் ஆண்டில் நடைபெற்ற விவசாயக் கூட்டுறவு பற்றிய ஒரு பிரிட்டிஷ் சாம்ராஜ்ய மாநாட்டில் விவசாயக் கூட்டுறவு பற்றிய ஒரு தகவல் தீர்வகத்தை அமைக்கும் பணி கொடுக்கப்பட்டது. அது, பிரிட்டிஷ் தீவுகள் அல்லது பிரிட்டிஷ் பொதுநல ஐக்கிய அமைப்பு (Common Wealth) நாடுகளுக்கப்பாலும் நீடித்துள்ள இணைப்புகளைக் கொண்டுள்ளது. இப் பொறுப்பு நிறுவனத்தின் நோக்கம், முதன்மையாக, விவசாயக் கூட்டுறவை வளர்த்தலாகும். அது, கூட்டுறவு இயக்கத்தைப் பற்றிய குறிப்பாக, உலக முழுவதிலுமுள்ள விவசாயத்தைப் பற்றிய ஒரு தகவல் நிலையமாகவுமுள்ளது.

இலண்டன் மாநகரில் ஒரு கூட்டுறவுப் பார்வைக்குரிய நூலகத்தை (Reference Library) அது பெற்றுள்ளது. 1927ஆம் ஆண்டிலிருந்து 'விவசாயக் கூட்டுறவின் ஆண்டு நூலையும்' (Year Book of Agricultural Co-operation), சிறப்பு ஆராய்ச்சி களையும் வெளியிட்டு வந்துள்ளது. இவ் வழிகளிலும், பொதுநல ஐக்கிய அமைப்பு நாடுகளின் பல பாகங்களிலிருந்துவரும் கூட்டுறவு அமைப்பாளர்களுக்கும், அலுவலர்களுக்குமுண்டான பயிற்சியில் உதவியளிப்பதன்மூலமும், காலமுறையான பொதுநல ஐக்கிய அமைப்பு நாடுகளின் மாநாட்டை நடத்துவதன்மூலமும், அது, கடந்த 40 ஆண்டுகளில் கூட்டுறவால் ஏற்பட்ட எல்லாப் பெரிய அபிவிருத்திகளுடனும் தொடர்பு வைத்துள்ளது.

## அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பு
## (International Co-operative Alliance)

1895ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இந் நிறுவனம், ஒரு ஆங்கிலேயக் கூட்டுறவாளராகிய, ஹென்றி உல்ஃப் (Henry Wolff) அவர்களின் ஆர்வத்தின் விளைவாகத் தோன்றியது. அதன் வெற்றியின் பெரும்பகுதி, அநேக ஆண்டுகளாக அதன் ஆங்கி லேயச் செயலாளராகவிருந்த, ஹென்றி டி. மே (Henry T. May) அவர்களைச் சாரும். உலகத்தின் தேசிய நுகர்வோர் கூட்டுறவு இயக்கங்கள் அனைத்தும், மற்றும் ஏராளமான விவசாய நிறுவனங் களுங்கூட அதன் உறுப்பினர்களாக உள்ளன. அது இரண்டு உலகப் போர்க் காலங்களில் தவிர, தொடர்ந்து மூன்றாண்டிற்கு ஒருமுறையான காங்கிரசுகள் தொடரை நடத்தி வந்துள்ளது. அது, வேறெந்த நிறுவனத்தைக் காட்டிலும், அதிகமாகக் கூட்டு றவு இயக்கங்களின் அனுபவத்தைத் தொகுப்பதற்கும், இயக்கத் தின் சர்வதேச ஒருமைப்பாட்டை நிறுவுவதற்கும் தொண்டாற்றி யுள்ளது. இந் நிறுவனம் இலண்டன் மாநகரில் அமைக்கப் பெற்றுள்ளது. அது ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் உத்தியோக பூர்வமான அங்கீகாரத்தைப் பெற்றுள்ளது; அது, 'ஐக்கிய நாடுகளின் பொருளாதார, சமுதாய அவைக்கு' அரசு சம்பந்த மில்லாத ஒரு நிரந்தர ஆலோசகராக உள்ளது. அது, 'அனைத்து நாட்டுக் கூட்டுறவின் ஆய்வு' (Review of International Co-operation) என்ற மாதக் கூட்டுறவு இதழை வெளியிடுகிறது. இப் பத்திரிகையில், கூட்டுறவுப் பிரச்சினைகளைப் பற்றிய தகவலும், விவாதமும் உள்ளடங்கியுள்ளன. 1923ஆம் ஆண்டில், அது, 'அனைத்துநாட்டுக் கூட்டுறவு நாளை' ஒவ்வோர்ஆண்டும், விழாவாகக் கொண்டாடுவதை ஆரம்பித்து, எல்லா நாடுகளிலும் ஒரு கூட்டுறவுச் சின்னமானதும், எல்லாப் பிரதம வண்ணங்

களாலமைந்ததுமான 'வானவில் கொடி'யான கூட்டுறவுக் கொடியைத் தொடங்கிவைத்தது.

## இங்கிலாந்தில், கூட்டுறவு இயக்கத்தில் அரசின் பங்கு

இங்கிலாந்தில் கூட்டுறவு இயக்கம் அரசு சார்பில்லாமல் முழுதும் சுதந்திரமுள்ளதாகவுள்ளது. அரசாங்கத்தில் கூட்டுறவு இலாகா கிடையாது. கூட்டுறவுச் சங்கங்கள் நேசச் சங்கங்களின் (Friendly Societies) தலைமைப் பதிவாளரால் பதிவு செய்யப் படுகின்றன. தொழிலாளர் சங்கங்கள், கம்பெனிகள் நீங்கலாக, இதரச் சங்கங்களையுங்கூட அவர் பதிவு செய்கிறார். கூட்டுறவுச் சங்கங்களைப் பரிபாலிக்கும் சட்டம், 1893ஆம் வருடத்திய 'இன்டஸ்டிரியல் மற்றும் பிராவிடண்ட் சங்கங்களின் சட்டம்' ஆகும். இச் சட்டத்தின்கீழ், அநேக இதரவகையான சங்கங்களும், கழகங்களுங்கூடப் பதிவு செய்யப்படுகின்றன. இச் சட்டத்தின் கீழ், எந்த உறுப்பினரும் 1,000 பவுண்டுக்குமதிகமான மதிப்புள்ள பங்குகளை வைத்திருக்கக் கூடாது. உறுப்பினரல்லாதவர்களுடன் வாணிக நடவடிக்கைகளை வைத்துக்கொள்வதில் தடைகள் எதுவு மில்லை. காப்புநிதியைப் பராமரிப்பதற்குக்கூடச் சங்கங்கள் கட்டா யப்படுத்தப்படவில்லை. கூட்டுறவுச் சங்கங்கள், இதரக் கூட்டு நிறுவனங்களைப் போன்று, இலாபவரி செலுத்த வேண்டியதில்லை. கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்கள்கூட, கூட்டுறவுச் சங்கங் களில் செய்யப்பட்ட தங்கள் முதலீடுகளின்பேரில் தங்களால் பெறப்பட்ட வட்டியின்மீது, வருமான வரி செலுத்த வேண்டும். கூட்டுறவு இயக்கம் அரசு உதவியை எதிர்பார்க்காது; சுதந்திர மானதாகவுள்ளது; கல்விக் காரியங்களுக்கான ஒரு சிறு உதவித் தொகையைத் தவிர, அரசு கடன்களையோ எந்தவிதமான அரசு உதவித் தொகைகளையோ அது பெறுகிறதில்லை. அரசுதவி இல்லாமலிருத்தலே இயக்கத்தின் சுதந்திரத்திற்கும், இயக்கத்தில் அரசு தலையிடாமைக்கும் காரணமாக ஒருவேளை இருக்கலாம்.

## (iii) இத்தாலி
(Italy)

### இத்தாலியில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம்

ஷுல்சுடெலிட்சும், ரெய்ஃபெய்சனும் கூட்டுறவுக் கடன் மற்றும், வங்கித் தொழில்துறையில் ஜெர்மனிக்கு எவ்வாறு இருந் தனரோ, அவ்வாறு இத்தாலி நாட்டிற்கு லுசாட்டியும், உல்லம் பர்க்கும் (Luzzatti and Wollem Burg) இருந்தனர். ஜெர்

மணியைப் போன்று இத்தாலியில், கூட்டுறவு இயக்கத்தின் பிறப்புக் கான காரணங்கள், அக் காலத்தில் நிலவியிருந்த கடுமையான அதிக வட்டி வழக்கத்திற்கு எதிராகத் தோன்றிய வெறுப்பும், அதன் விளைவாக ஏற்பட்ட மக்களின் வேதனைகளுமே. 1880ஆம் ஆண்டில், ஒரு பெரும் பொருளாதார மந்தம் நேரிட்டபோது, நிலைமை மிக மோசமாகி, விலை வீழ்ச்சியும் வேலையின்மையும் பரவின. மக்கள் தாங்கள் பட்டிருந்த கடன்களைத் திருப்பிச் செலுத்த முடியாமல் அவர்கள் வசமிருந்த சிறு ஆஸ்திகளுங்கூட வட்டித்தொழில் செய்பவர்கள் வசமும் நிலச் சொந்தக்காரர்கள் வசமும் சென்றடைந்தன. இக் கட்டத்தில், லுசாட்டியும், உல்லம்பர்க்கும் தோன்றி, மக்களின் நிலைமையை மேம்படுத்து வதற்கு வழிமுறைகளைச் சிந்திக்கத் தொடங்கினர்.

லுசாட்டியும், உல்லம்பர்க்கும் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; நன்கு கல்வி பயின்றவர்கள். லுசாட்டி என்பவர் ஆரம்பத்தில் மிலான் நகரில் ஒரு கல்வி நிலையத்தில் பொருளியல் பேராசிரியராக இருந்தார். இருவரும் நிதியமைச்சர்களாக இருந் தனர். லுசாட்டி என்பவர் சிலகாலம் பிரதம மந்திரியாகவுங்கூட இருந்தார். மற்றும், அவர் இத்தாலியில் விவசாய, வணிகத் தொழில்துறை அமைச்சராகவுமிருந்தார். அவர்கள் கூட்டுறவு இயக்கத்தைப் பரிபூரணமாகப் படித்திருந்தனர். லுசாட்டி என்பவர் தொழிற்பாட்டாளிகளிடையே பணியாற்றி, 'மக்கள் வங்கிகள்' என்று வழங்கப்பட்ட, ஷூல்சுடெலிட்சுத் திட்டத்தின் மாதிரியான, நகரக் கடன் சங்கங்களைத் தொடங்கியபோது, உல்லம்பர்க்கு என்பவர் குடியானவர்களிடையே பணிபுரிந்து, ரெய்ஃபெய்சன் முறைகளில் கிராம வங்கிகளைத் தோற்று வித்தார்.

## லுசாட்டி 'மக்கள் வங்கிகள்'

லுசாட்டி என்பவர் கடும் வட்டியின் முறையின்கீழ் மக்களின் வேதனைகளைக் கண்டு அவர்கள் பிரச்சினைகளுக்குக் கூட்டுறவுக் கடனை ஒரு தீர்வாகச் சிந்தித்தார். ஜெர்மானிய இயக்கத்தின் நடைமுறை அம்சங்களை அறிந்து ஆய்வதற்கு, அவர் ஜெர்மனிக் குப் பயணம் செய்தார். அவர், குறிப்பாக ஷூல்சு அவர்களின் கூட்டுறவுக் கடன் முறையில் அக்கறை கொண்டிருந்தார். ஜெர் மனியிலிருந்து திரும்பியவுடன், அவர் தம் பணியை நகரப் பகுதி களிலுள்ள தொழிலாளர்களிடையே தொடங்கி, தம் சொந்த அனுபவத்தின் அடிப்படையிலும், ஜெர்மனியில் நடைமுறைப் படுத்தப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளை இத்தாலிய நாட்டு நிலைமைகளுக்கேற்பத்திருத்தியமைத்தும்,இத்தாலியில் அவருடைய

வங்கிகள் இயங்கவேண்டிய முறைகளை உருவாக்கினர். 1886ஆம் ஆண்டில், மிலான் நகரில், அவர் முதற் கூட்டுறவுக் கடன் வங்கியைத் திறந்து வைத்து, அதன் பங்குதாரர்களில் ஒருவராகவும் ஆனர். இவ் வங்கியின் வெற்றியானது, மேலும் அத்தகைய வங்கிகளை யமைப்பதற்கு வழிசெலுத்தியது. லுசாட்டியால் தொடங்கப்பட்ட இத்தாலியக் கடன் சங்கம், ஷூல்சுடெலிட்சு கடன் சங்கங்கள் மாதிரியின்மீது அமைக்கப்பட்டிருந்தாலும், அது தன் சொந்தத் தனிப்பட்ட அம்சங்களைக் கொண்டிருந்தது. தற்போது, இவ் வங்கிகள் மிகவும் பலம் பொருந்தியவையாகவுள்ளன. அவைகளால் செய்யப்பட்ட வங்கித்தொழில் வாணிகம், நாட்டில் செய்யப்பட்ட மொத்த வங்கித்தொழில் வாணிகத்தில், ஏறக் குறைய $\frac{1}{3}$ ஆக உள்ளது.

**லுசாட்டி மக்கள் வங்கிகளின் அம்சங்கள்** (Features of Luzzatti Peoples' Banks)

(i) கடன் சங்கங்களை யமைப்பதில் லுசாட்டியின் பிரதமக் குறிக்கோள், நடுத்தர மக்களுக்கு அதாவது, நகர வாசிகளுக்கு உதவிபுரிவதாக இருந்தது. அவருடைய வங்கிகள், நகர மக்களிடையேயும், பெரிய குடியானவர்களிடையேயும் பிரபல்யம் அடைந்திருந்தன.

(ii) லுசாட்டி தம் வங்கிகளை வரையறுக்கப்பட்ட பொறுப்புக் கொள்கைகளின்பேரில் அமைத்தார். பெரும்பாலும், நடுத்தர வகுப்பைச் சேர்ந்த உறுப்பினர்கள் வரையறுக்கப்படாத பொறுப்புக் கொள்கைக்கு இணங்கவில்லை. ஆதலால், இத்தாலியில் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் நிறைவேற்றப்பட்டபோது அது வரையறுக்கப்படாத பொறுப்பை ஏற்கவில்லை.

(iii) லுசாட்டி, தம் வங்கிகள் ஏழைகளுக்குங்கூடத் திறந்திருக்கும்பொருட்டு, ஒப்பிடும் வகையில் குறைந்த பெறுமானமுள்ளதானவையும், தவணைகளில் செலுத்தப்படக்கூடியதானவையுமாகவுமுள்ள பங்குகளைத் தொடங்கிவைத்தார். எனவே, அவருடைய வங்கிகள், திடமான பங்கு மூலதனத்தைப் பெற்றிராமல் நடைமுறை நிதிகளுக்காக வைப்புகளின்மீது சார்ந்திருந்தன. வங்கியில் ஒரு பங்குக்கு மதிகமாக வாங்குவதற்கு உறுப்பினர்கள் ஊக்குவிக்கப்பட்டனர். பின்னர், ஒருவர் வைத்திருக்கக்கூடிய பங்கு மூலதன உச்சத் தொகையின்மீது, 200 பவுண்டு அல்லது 500 லயர் (Lire) வரையறையைச் சட்டம் விதித்தது. நடைமுறையில், போதுமான கடன்முதலை எழுப்புவதற்கு ஒரு மூலதன

உத்திரவாதமாகப் பயன்படும்பொருட்டுப் போதுமான பங்கு மூலதனத்தை வங்கிகள் பெற முடிந்தது.

(iv) நன்னடத்தையும், நாணயமும், நம்பிக்கைக்குப் பாத்திரமாகவுமுள்ள நபர்களை மட்டும் உறுப்பினர்களாகத் தெரிந்தெடுக்கப்படுதலுக்கு, லுசாட்டி அதிக முக்கியத்துவத்தைக் கொடுத்தார். நாணயமுள்ள பேர்களடங்கிய ஒரு சங்கமானது, வெளியார்களிடமிருந்து வைப்புகளையும், கடன்களையும் பெறுவதற் கவசியமான நம்பிக்கையை ஏற்படுத்த முடியும்.

(v) சங்கத்திற்காகத் தேவைப்படும் நிதிகளின் முதன்மையான ஆதாரமானது வைப்புகளாக இருந்தன. சங்கங்கள் தன்னிறைவுள்ளவைவாக இருக்கவேண்டுமென்று லுசாட்டி விரும்பினர். ஆகையால், உறுப்பினர்கள் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதற்கும், தங்கள் சேமிப்புகளை வங்கியில் போட்டு வைப்பதற்கும் ஊக்குவிக்கப்பட்டனர்.

(vi) நிருவாகம், மக்களாட்சி முறையிலிருந்தது. வங்கியின் பேரவைக் கூட்டம் வங்கியின் உச்ச அதிகாரியாக இருந்தது; அது ஆண்டிற்கொருமுறை கூட்டப்பட்டது; வங்கி உறுப்பினர்களின் 1/5 பாகம், கூட்டத்திற்கான ஒரு குறைவெண் வரம்பாக (Quorum) இருந்தது. 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' என்ற கொள்கை பின்பற்றப்பட்டது. மாற்றுள் மூலம் வாக்களிப்பது அனுமதிக்கப்படாமலிருந்தது. பேரவைக்கு அடுத்து, தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர் குழு ஒன்றிருந்தது. அதன் வசம் வங்கியின் நிருவாகம் இருந்தது. இயக்குநர் குழுவின் பருமம், வங்கியின் அளவுக்கேற்ப வேறுபட்டிருந்தது. அதாவது 7 முதல் 140 வரை இயக்குநர் குழுவின் உறுப்பினர்கள் மிகப் பெரிய வங்கிகளில் தவிர, ஊதியம்பெறாது கவுரவப் பணியாற்றினர். லுசாட்டி என்பவர், கருணையுள்ள கௌரவச் சேவையை (Gratuitous Service) வற்புறுத்தினர். அன்றாட வேலை, ஊதியம்பெறும் பணியாளர்களால் செய்யப்பட்டது. அன்றாட நிருவாகம், வங்கிகளின் அலுவல் தணிக்கை, கடன்கள் ஒப்பளிப்பு, அளிக்கப்பட்ட கடன்களின் உபயோகத்தை மேற்பார்வை செய்தல், கடன்களை வசூலித்தல், தகராறுகளைத் தீர்த்து வைத்தல் முதலியனபோன்ற சிறப்பு வேலையைக் கவனிப்பதற்குப் பல்வேறு உதவிக் குழுக்களுமிருந்தன.

(vii) கடன்கள் சிறு தொகைகளிலும், குறுகிய காலங்களுக்காகவும், அதாவது மூன்றுமாதக் காலங்களுக்காகவும் அளிக்கப்

பட்டன. வட்டிவிகிதம் குறைவாக இருந்தது. கடன் நீடிப்பு அனுமதிக்கப்பட்டது. கடன்கள் பெரும்பாலும் நபர் ஜாமீன்மீது இருந்தன. பெரும்பான்மையான கடன்கள், மாற்றுச்சீட்டு கள், முன்கடன் மாற்றுச்சீட்டுகள் அல்லது வர்த்தக மாற்றுச் சீட்டுகள் ஆகியவையின் அடிப்படையின் பேரில் வழங்கப்பட்டன.

(viii) லுசாட்டி, தமது வங்கிகள், தன்னிறைவுள்ளவையாக இருக்க வேண்டுமென்று விரும்பினர். மற்றும், அவர், எந்த விதமான மத்திய நிறுவனத்தையும் அமைப்பதற்கு விரும்பவில்லை. எனவே, இத்தாலியக் கடன் இயக்கத்தின் ஒரு தனி அம்சமானது எந்தவிதமான மத்திய நிதி நிறுவனம் இன்மையே. மிகப் பெரிய வங்கிகளில் சில, அவற்றின் உண்டியல்களை மாற்றுதல்மூலம், இதர வங்கிகளுக்கு உதவிபுரிகின்றன. இவ் வங்கிக ளனைத்தும், தற்போது ரோம் நகரில், 'மக்கள் வங்கிகளின் தேசியக் கழகத்தில்' தொகுக்கப்பட்டுள்ளன.

(ix) லுசாட்டி தம் வங்கிகள், எதிர்பாராத சம்பவங் களைச் சமாளிப்பதற்கு அவற்றின் அலுவல்களுக்கு வெளியே முதலீடு செய்யப்பட்ட மிகப் பெரிய காப்பிருப்புகளை அமைத்து வளர்ப்பதை விரும்பினர். நிகர இலாபங்களில், ஏறக்குறைய 20 முதல் 25 சதவீதம் வரை காப்பு நிதிக்கு ஒதுக்கப்பட்டன. பிந்திய ஆண்டுகளில், ஒரு பங்கின்மீது தெரிவிக்கப்படவேண்டிய இலாபஈவு விகிதத்திற்கான ஒரு வரம்பும்கூட நிருணயிக்கப்பட்டது.

## எவ்வாறு லுசாட்டி வங்கிகள் ஷூல்சு டெலிட்சு வங்கிகளிலிருந்து வேறுபட்டன?

லுசாட்டி வங்கிகளுக்கும், ஷூல்சுடெலிட்சு வங்கிகளுக்கு மிடையேயுள்ள முதன்மையான வேற்றுமைக் கூறுகள் பின்வரு மாறு:

| லுசாட்டி வங்கிகள் | ஷூல்சு டெலிட்சு வங்கிகள் |
|---|---|
| 1. வரை யறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படை யில் இயங்குகின்றன. | 1. சில சங்கங்கள் வரை யறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின்பேரிலும், மற்றவை, வரையறுக்கப் படாத பொறுப்பு அடிப் படையின்பேரிலும் இயங் குகின்றன. |

| | |
|---|---|
| 2. சிறிய பெறுமானமுள்ளவையாகவும் பத்து மாதங்களில் செலுத்தப்பட வேண்டியவையாகவுமுள்ள பங்குகள். | 2. உயர் பெறுமானமுள்ளவையாகவும், ஒரு நீண்ட காலவரைக்குப் பரப்பப்பட்ட தவணைகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டியவை யாகவுமுள்ள பங்குகள். |
| 3. உறுப்பினர்கள் பெரும்பாலும் நடுத்தர வகுப்பைச் சார்ந்தவர்கள். | 3. உறுப்பினர்கள் பெரும்பாலும் சிறு வருவாயுள்ள நபர்களாக இருந்தனர். |
| 4. கவுரவ நிருவாகம் | 4. ஊதியம் பெறும் நிருவாகம். |
| 5. முக்கியமாக, உண்டியல்கள், முன்பண உண்டியல்கள் அல்லது வணிக உண்டியல்கள் மூலம் கடன் வழங்கப்படுகிறது. | 5. ரொக்கமாகக் கடன்கள் அளிக்கப் படுகின்றன. ரொக்கக் கடனுங்கூட அளிக்கப்படுகின்றது. |
| 6. ஒரு மாவட்ட முழுவதற்குங்கூட நீடிக்கின்ற பெரிய அலுவலெல்லை. | 6. குறுகிய அலுவலெல்லை. பொதுவாக, ஒரு பட்டினம். |
| 7. மைய நிதி நிறுவனம் கிடையாது. | 7. மைய நிதிநிறுவனங்கள் அமைக்கப்பட்டன. |
| 8. உறுப்பினரல்லாதவர்க்குங்கூடக் கடன்கள் வழங்கப்பட்டன. | 8. உறுப்பினர்களுக்கு மட்டுமே கடன்கள் வழங்கப்பட்டன. |
| 9. சிறு கடன்கள். | 9. ஒப்பிடும் வகையில் பெருந் தொகைகளைக் கொண்ட கடன்கள். |
| 10. லுசாட்டி இயக்கத்திற்கும், உல்லம்பர்க் கிராம இயக்கத்திற்குமிடையே போட்டியின்மை — லுசாட்டி வங்கிகள், கிராமச் சங்கங்களுக்குங் கூடக் கடன்களளித்து அவற்றை ஆதரித்தன. | 10. ஷுல்சுடெலிட்சு முறையும், ரெய்ஃபெய்சன் முறையும், தங்கள் சொந்த இலட்சியத்தின் உயர்வை நிறுவுவதற்கு ஒன்றோடு ஒன்று போட்டியிட்டன. |

## டாக்டர் உல்லம்பர்க்
## கிராமக் கடன் வசதிக் சங்கங்கள்
## (Rural Credit Societies)

கிராமங்களில் சங்கடமான நிலையிலுள்ள சிறு குடியானவர்களின் தேவைகளுக்கு உதவி செய்ய, உல்லம்பர்க் என்பவர் கிராமப் பகுதிகளில் கூட்டுறவு நடவடிக்கையைத் தொடங்கினர். 1883ஆம் ஆண்டு சூன் மாதத்தில், தம் சொந்தக் கிராமத்தில், 32 உறுப்பினர்களுடைய ஆதரவுடன், ஒரு கிராம வங்கியைத் (Casse Rurali) தொடங்கினர். அவ் வங்கியில் அவரே மிகப் பெரிய வைப்பாளராக இருந்தார். அவ் வங்கிக்குத் தொடக்கத்தில் பங்கு மூலதனம் எதுவுமில்லை. ஆனல், அது சில காலத்திற்குப் பிறகு, சிறு பங்குகள் முறையைத் தொடங்கி வைத்தது. அவ் வங்கி சிக்கனமாக நடத்தப்பட்டது. வங்கி பெற்றிருந்த நற்கியாதிக்கு உல்லம்பர்க் முக்கியப் பொறுப்பாளியாக இருந்தார். பின்னர், ஏராளமான கிராமச் சங்கங்கள் தோன்றின.

**கிராம வங்கிகளின் அம்சங்கள்**

உல்லம்பர்க் அவர்களால் அமைக்கப்பட்ட கிராம வங்கிகளின் முதன்மையான அம்சங்கள் வருமாறு:

(i) வயது வந்தவர்களாகவும், நன்னடத்தையுள்ளவர்களாகவுமுள்ள அனைவருக்கும் அங்கத்துவம் திறந்திருந்தது. குடிப்பழக்கங் கொண்டிருந்த நபர்கள் எவரும் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படவில்லை. உறுப்பினர்கள், எழுதப்படிக்கவுங் கூட எதிர்பார்க்கப்படுகின்றனர். உறுப்பினர்களாகவிருக்கும் பொருட்டு, படிக்காதவர்கள் எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டனர்.

(ii) சங்கத்தில் சேர்ந்த பிறகு, உறுப்பினர்கள் கூட்டுறவுக் கல்வி யளிக்கப்பட்டனர். கூட்டுறவுக் கொள்கைகளை உணர்ந்து கொள்வதற்கும், அவற்றைப் பாராட்டுவதற்கும் அவர்கள் உதவப்பட்டனர். வாங்கிய கடனைச் சரியாக உபயோகப்படுத்துதலும், காலந்தவருத திருப்பிச் செலுத்துதலும் வற்புறுத்தப்பட்டன.

(iii) செலவுகளைச் சிக்கனப் படுத்துதல் மிகவும் வலியுறுத்தப்பட்டது. நிருவாகம், ஊதியம் பெருமல் கௌரவமாக இருந்தது. ஊதியம்பெறும் சிப்பந்திகளை நியமிப்பதற்குப் பதிலாக, நிருவாகக் குழுவே கணக்குகளை வைத்துப் பராமரிப்பதற்குங்கூட எதிர்பார்க்கப்பட்டது.

(iv) உறுப்பினர்களிடையே சிக்கனமும், சேமிப்புப் பழக்கமும் ஊக்குவிக்கப்பட்டன. சங்கம் அக் காரியங்களுக்காக வைப்புகளை மிகச் சிறிய தொகைகளிலுங்கூட ஏற்றது. வைப்புகள் இருவாரத்திற்காக ஏற்கப்பட்டன. கிராமவாசிகள் தங்கள் சங்கங்களில் வைத்திருந்த மிகுந்த நம்பிக்கையின் காரணமாகத் தங்கள் சிறு சேமிப்புகளை, எப்பொழுதுமே திறந்திருந்த அஞ்சலகச் சேமிப்பு வங்கிகளில் போடாமல், தங்கள் சங்கங்களில் போட்டுவைக்க விரும்பினர்.

(v) கடன்காரியத்தையும், கடனுதாரத்தையும், உறுப்பினரின் கடந்தகால நடவடிக்கைகளையும் தீவிரமாகப் பரிசீலனை செய்த பிறகே உறுப்பினர்களுக்குக் கடன்கள் வழங்கப்பட்டன. எல்லாக் கடன்களும், முதலில் மூன்று மாதங்களுக்காக அளிக்கப்பட்டன. ஆனால், கடனுக்கான காரியம், கடன் தவணைகளை நீண்டகால வரைக்குப் பரப்பவேண்டிய அவசியங்கொண்டிருந்ததால் கடன் நீட்டிப்பு அளிக்கப்பட்டது.

(vi) ஜெர்மனியில் ரெய்ஃபெய்சன் சங்கங்களில் போன்று, இலாபங்கள் அனைத்தும், கணக்கருக்கு ஓர் அடக்கமான ஊதியத்தைக் கொடுத்த பிறகு, ஒரு காப்பு நிதிக்கு வரவு வைக்கப்பட்டன. வங்கிகள் இலாபஈவு எதையும் அறிவிக்கவில்லை.

(vii) இச் சங்கங்கள், முழுமையான அரசியல், சமய நடுநிலைமையைக் கடைப்பிடித்தன. அவை அரசு மானியங்களைக்கூட ஏற்கவில்லை.

இத்தாலியக் கிராமக் கடன் முறையானது முதன்மையான தன் அம்சங்களில் ரெய்ஃபெய்சன் வங்கிகள் மாதிரியாகவே இருந்தன.

## கத்தோலிக்கர்கள் சங்கங்கள் அல்லது கத்தோலிக்கச் சமுதாய வங்கிகள்
## (Catholic Societies or Communal Banks)

லுசாட்டியும், உல்லம்பர்க்கும் சங்கங்களில் அரசியல் சார்பின்மையை ஆதரித்தனர். ஆனால், விரைவில் இத்தாலிய இயக்கத்தில் அரசியல் நுழைந்தது. சில அரசியல், சமய நிறுவனங்கள் தங்கள் அரசியல் நோக்கங்களுக்காகக் கூட்டுறவு இயக்கத்தை ஓர் அடிக்கல்லாகப் பயன்படுத்தும்பொருட்டுக் கூட்டுறவு இயக்கத்தில் நுழைந்தன. அவ்வாறு முதலில் இயக்கத்தில் நுழைந்தவர்கள் **1890ஆம்** ஆண்டில், தங்கள் முதலாவது கூட்டுறவுச் சங்கத்தை

அமைத்த கத்தோலிக்கர்களாவர். கத்தோலிக்க மத குருவான டான்செரூட்டி (Doncerutti) என்பவர் உல்லம்பர்க் கிராமக் கடன் சங்கங்களின் மதச்சார்பின்மையை விரும்பாமல், அதே மாதிரியான முறையில் ஆனால், கத்தோலிக்கக் குருமார்களால் கட்டுப்படுத்தப்பட்ட, ஒரு தனிப்பட்ட வகையான கிராம வங்கிகளை அமைத்தார். 1890ஆம் ஆண்டில், அத்தகைய முதல் வங்கி நிறுவப்பட்ட பிறகு விரைவில் உல்லம்பர்க் வங்கிகளைவிட அதிகமான எண்ணிக்கையில், அநேக வங்கிகள் தோன்றின. ஏனென்றால், அவ் வங்கிகளின் வளர்ச்சிக்குக் கத்தோலிக்கக் கிறித்துவ ஆலயம் காட்டின அக்கறையானது, ஒரு பலமான ஊக்கத்தையளித்தது. 1922ஆம் ஆண்டில் சுமார் 3,500 கத்தோலிக்கச் சங்கங்களிருந்தன. இவ் வங்கிகளில் கத்தோலிக்க மதத்தினர் மட்டுமே சேர்க்கப்பட்டனர். அவை, டையோசீசன் ஒன்றியங்களாகத் (Dioceson Unions) தொகுக்கப்பட்டன. இத் தொகுப்புகள், 1909ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட கத்தோலிக்கக் கிராமக் கடன் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பில் (National Federation of Catholic Rural Credit Societies) இணைந்தன. நெடுங்காலமாகக் கூட்டுறவு இயக்கம் இரண்டு கூட்டுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒரு கூட்டு, சோஷியலிஸ்ட் கட்சியாலும், மற்றொன்று, கத்தோலிக்கர்களாலும் அதிகாரம் செலுத்தப்பட்டன. இவ் விரண்டு கூட்டுகளுக்குமிடையே தீவிரப் போட்டியிருந்தது. கத்தோலிக்கர்கள் தனியார் சுவாதீனக் கொள்கையைப் பலமாக ஆதரித்தனர். கத்தோலிக்கர்கள் பெரும்பான்மையானவர்களாகவும், வல்லமையுள்ளவர்களாகவுமாக விருப்பினும், இன்று எல்லாக் கிராம வங்கிகளும் ஒரு தேசியக் கழகத்தில் இணைந்துள்ளன.

## இயக்கத்தின் பொதுவான முன்னேற்றம்

மக்கள் வங்கிகள்போலவே, கிராம வங்கிகளுங்கூட ஒரு மையநிதி நிறுவனத்தைக் கொண்டிருக்கவில்லை. அரசு நிதிகளால் பெரும்பாலும் ஆதரிக்கப்பட்ட 'கூட்டுறவுக் கடன் தேசிய நிலையம்' (National Institute of Co-operative Credit), கூட்டுறவுச் சங்கங்கள் அதனிடமிருந்து நிதிகளைப் பெறும்பொருட்டு 1913ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. லூசாட்டியின் மக்கள் வங்கிகளும், கிராம வங்கிகளும் தங்கள் நிதிகளை வைப்புகள் மூலம் பெறமுடிந்திருந்தாலும் சங்கங்களுக்கிடையே தாராளமான கடனளிப்பு இருந்ததால், அவை இந் நிறுவனத்தை அதிகமாகப் பயன்படுத்தவில்லை. 1919ஆம் ஆண்டில், கத்தோலிக்கக் கூட்டுறவுச் சங்கங்களால், 'தொழிலாளர்கள் மற்றும்

கூட்டுறவு வங்கி' (Labour and Co-operation Bank) தொடங்கப்பட்டது. கூட்டுறவுக் கடன் தேசிய நிலையம் அல்லது 'தொழிலாளர் மற்றும் கூட்டுறவு வங்கி' உண்மையான ஒரு கூட்டுறவு வங்கியாக இருக்கவில்லை. கூட்டுறவுக் கடன் தேசிய நிலையம், ஃபாசிஸ்டு ஆட்சியில் (Fascists Regime) (1922–1945) மூடப்பட்டது. புதிய இத்தாலியக் குடியரசில், அரசாலும், தேசியத் தொழிலாளர் வங்கியாலும், சேமிப்பு வங்கிகளாலும், கூட்டுறவு மக்கள் வங்கிகளாலும் அளிக்கப்பட்ட நிதிகளைக் கொண்டு ஒரு தன்னாட்சிக் கூட்டுறவுக் கடன் பிரிவு, தேசியத் தொழிலாளர் வங்கியில் அமைக்கப்பட்டது. என்டே (Ente) என்று வழங்கப்படும் 'ஃபாசிஸ்டு தேசியக் கூட்டுறவு நிறுவனம்' (Fascist National Organism of Co-operation) நிறுவப்பட்டது. அது, ஓர் அரசு நிறுவனமாக இருந்தது; அது ஓர் அரசு இலாகாவால் செய்யப்பட்ட எல்லாப் பணிகளையும் புரிந்தது. இவ்வாறாகக் கூட்டுறவு இயக்கமானது, அரசு கொள்கைகளை நிறைவேற்றுவதற்கு உத்தேசிக்கப்பட்டதும், அரசால் ஒழுங்கு படுத்தப்பட்டதுமான ஒரு நிறுவனமாக ஆயிற்று.

1944ஆம் ஆண்டில், ஃபாசிஸ்டு ஆட்சி முடிந்தபோது, இயக்கம் தன் அடிமை விலங்குகளை எறிந்துவிட்டுப் புத்துயிர் பெற்றது. குறைகளை நீக்க, 1946ஆம் ஆண்டில் 'கூட்டுறவுப் பொது இயக்குநரகம்' (General Directorate of Co-operation) ஒன்று அமைக்கப்பட்டுச் சங்கங்களின் திறனை அதிகரிப்பதற்கான ஆய்வுகளை மேற்கொள்வதற்கு அது அதிகாரமளிக்கப்பட்டது. 1947ஆம் ஆண்டில் ஒரு புதிய இத்தாலியக் கூட்டுறவுச் சட்டம் இயற்றப்பட்டது. இதற்கு முன்பு, கூட்டுறவுச் சங்கங்கள் பொதுச் சட்டத்தின்கீழ் (Commercial Code of 1880) பதிவு செய்யப் பட்டன. அரசு அலுவலர்களையும் கூட்டுறவு நிறுவனங்களின் பிரதிநிதிகளையுங்கொண்ட ஒரு 'மையக் கூட்டுறவு ஆணைக்குழு' (A Central Co-operative Commission) சட்டத்தின்கீழ் அமைக்கப் பட்டது. அது சங்கங்களுக்கு ஆய்வுரை வழங்கி அவற்றை மேற்பார்வை செய்கிறது. ஒவ்வொரு சங்கத்திற்காகவும், வருடாந் திரத் தணிக்கையும், ஆய்வும் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. இப் பணிக்காக ஒவ்வொரு சங்கமும் கூட்டுறவுத் தணிக்கை ஆய்வு ஒன்றியங்களுடன் இணைத்துக்கொள்ளவேண்டும். உறுப்பினர்களின் தகுதிகளைச் சட்டம் நிர்ணயித்தது. ஒரு சங்கத்தின் குறைந்த பட்ச உறுப்பினர் எண்ணிக்கை 9 ஆக இருக்கவேண்டும். ஒரு தொழில் ஒப்பந்த சங்கத்தில் உறுப்பினர் எண்ணிக்கை குறைந்தது 25 ஆக வும், ஒரு நுகர்வோர் சங்கத்தில் உறுப்பினர் எண்ணிக்கை 50 ஆக வும் இருக்கவேண்டும். ஒரு பங்கின் மதிப்பு, குறைந்தபட்சம்

500 லயராக இருக்கவேண்டும். ஓர் உறுப்பினர் வைத்திருக்கக் கூடிய பங்குகளின் உயர்ந்தபட்ச மதிப்பு 25,000 லயர்களாக (10,000 பவுண்டு) நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நாட்டின் பொருளாதார நிலவரத்தை மேம்படுத்துவதற்காகக் கூட்டுறவு இயக்கம் மிகச் சிறந்த ஒரு கருவியாக இருந்தது என்பது உணரப்பட்டது. 1956ஆம் ஆண்டில் 4,170 நுகர்வோர் சங்கங்களும், 5,762 தொழிலாளர் மற்றும் உற்பத்தியாளர் சங்கங்களும், 3,301 விவசாயச் சங்கங்களும், 8,465 வீட்டுவசதிச் சங்கங்களும் இருந்தன. 1962ஆம் ஆண்டில் மொத்தத்தில் பல்வேறு வகையான 18,791 சங்கங்களிருந்தன; அதாவது, விவசாயச் சங்கங்கள், தொழிலாளர் மற்றும் உற்பத்தியாளர் சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள், வீட்டுவசதிச் சங்கங்கள் முதலியன. அவை, 44 மில்லியன் உறுப்பினர்களைப் பெற்றிருந்தன. பொதுவாகப் பேசுமிடத்து, வர்த்தகத்தின்மீதும் தொழில் முயற்சிகளின்மீதும் வலியுறுத்தல் செய்யப்பட்டு நாட்டில் ஒரே நோக்கு அல்லது தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பால் மற்றும் மதுத் திராட்சைத் துறைகளில், மிகப் பெரிய ஓர் எண்ணிக்கையைக் கொண்ட சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவை, அத் துறைகளில் மொத்த இத்தாலிய உற்பத்தியில் 30 சதவீதத்திற்கு மதிகமாகக் கட்டுப்பாட்டதிகாரம் வகிக்கின்றன. உணவுப் பொருள்கள், காய்கறி வகைகள் உற்பத்திக்காகவும், விற்பனைக்காகவும், ஆலிவ் மரப்பொருள்கள், இறைச்சி, முட்டை ஆகிய பொருள்களைப் பதப்படுத்துவதற்காகவும், விற்பனை செய்வதற்காகவும், மற்றும் கால்நடை வளர்ப்புக்காகவும், அநேக கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பல்வேறு பொருள்களில் வாணிபம் செய்யும் சங்கங்கள், தங்களுக்குச் சொந்தமான கூட்டமைப்புகளை நிறுவியுள்ளன. இக் கூட்டமைப்புகள் அனைத்தும், இத்தாலியக் கூட்டுறவுக் கூட்டிணையத்திற்கு (Italian Co-operative Confederation) இணைக்கப்பட்டுள்ளன.

## தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள்
(Labour Co-operatives)

கூட்டுறவு இயக்கத்திற்குத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள், இத்தாலிய நாட்டின் சிறப்பான உதவிக்கொடையாகும். இத் துறையில் ஒரு முன்னோடியாக இருந்தமையால் அவை மிகப் பரவலான சர்வதேச அக்கறையை எழுப்பி, இத் துறையில் உலகத்திற்கு ஒளிகாட்டின. இத்தாலியக் கூட்டுறவின் மிகவும் வியப்பானதும், சிறப்பானதுமான ஓர் அமைப்பானது, இன்னும் தொழிலாளர் சங்கமாக உள்ளது. அச் சங்கம்

விவசாயத்தில் நிலமீட்புப் பணியில் ஈடுபட்டு, அதைத் தொடர்ந்து தனிநபர் குடியேற்றத்தையும் அல்லது சில வகைகளில் தொகுப்புப் பண்ணையையும் நடத்துகின்றது.

தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் சில ஊதியத்திற்கு மாற்றாக வேலை நிறைவேற்றுதலை மேற்கொள்கின்றன. இவ் வூதியம் உறுப்பினர்களிடையே சங்கங்களின் விதிகளின்படி விநியோகிக்கப்படுகின்றது. இச் சங்கங்கள், உதவாமல் கிடக்கின்ற நிலங்களின் மீட்பு, சாலைகளைக் கட்டுதல், பொறியியல் பணிகள் முதலியன போன்ற பலவிதமான வேலைகளை மேற்கொள்கின்றன. ஏறக்குறைய 1880ஆம் ஆண்டில் மக்கள் துன்பமும், வேலையின்மையும் இருந்தபோது அவை உள்ளபடியே தன்னிச்சைச் சங்கங்களாகவும் பிறர் உதவியின்றிப் பெருமளவிற்குத் தங்கள் சொந்தப் பலத்தைக்கொண்டும் வளர்ச்சியடைந்தன. அவை முற்றிலும் மக்களாட்சி நிறுவனங்களாகவும் இருந்தன. அச் சங்கங்களில் இரண்டு தொழிலாளர் வகுப்புகளிருந்தன. ஒன்று; மண்வெட்டுதல், கால்வாய் தோண்டுதல், வடிகால் மற்றும் சாலையமைத்தல் முதலிய தொழில்களில் ஈடுபட்டவர்களைக் கொண்டது. மற்றொன்று; கொல்லத்துக்காரர்களும் கொத்தனார்களும் அடங்கியது. அவற்றால் மேற்கொள்ளப்பட்ட வேலை, முதன்மையாக அரசிடமிருந்தும் பொது நிறுவனங்களிடமிருந்தும் கிடைத்தவை. அவை இதர எந்த ஓர் ஒப்பந்தக்காரரைப்போலவே, ஒப்பந்தத்திற்காக ஒப்பந்தப்புள்ளி சமர்ப்பித்தன. அவற்றின் பொதுச் செலவுகளும், மேற்செலவுகளும் மிகவும் சிக்கனமானவையாக இருந்தமையால் ஒப்பந்த அளிப்பு ஒன்றையுங்கூட அவை இழக்கவில்லை. முன்னுரிமையான வாடிக்கையைக் கொடுப்பதன் வாயிலாக, அரசு தன் சொந்த நிறுவனத்திற்கு உதவியது. தொழிற்செலவு ஒரு வேலையின் முதன்மையான பகுதியாக இருக்கும் சந்தர்ப்பங்களில், அந் நிறுவனங்களுக்கு ஒரு மில்லியன் லயர்வரை, தனியார் பேரம் மூலமாகவோ பொது ஒப்பந்த அறிவிப்பு மூலமாகவோ ஒப்பந்தங்களை அரசு கொடுக்கலாமென்று 1899ஆம் வருடத்திய சட்டமொன்று அறிவித்தது. 1904ஆம் வருடத்திய மற்றொரு சட்டம், ஒப்பந்தத்தில் தொழிலாளர் செலவு முதன்மையாக இருக்கவேண்டுமென்ற நிபந்தனையை அகற்றி, ஒப்பந்தங்களின் பணவரம்பை 2 மில்லியன் லயருக்கு நீட்டித்தது. அச் சட்டம் இச் சலுகைகளை விவசாயத் தொழிலாளர் சங்கங்களுக்குங்கூட நீட்டிப்புச் செய்தது. சங்கங்கள், எச்சரிக்கைப் பணம் அல்லது பிணைப்பணம் வைப்பிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டு, அவை ஒவ்வோர் இருவாரத்திலும் தங்கள் உறுப்பினர்களுக்குக் கூலிகளைப் பட்டுவாடா செய்யக்கூடிய வகையில், அவற்றால்

செய்யப்பட்ட வேலையின் அடிப்படையில் இருவாரத்திற் கொரு முறை பணம் பட்டுவாடா செய்யப்பட்டன.

1900ஆம் ஆண்டில் இத்தாலியில் தொழிலாளர் சங்கங்களின் எண்ணிக்கை 600-க்கு உயர்ந்திருந்தது. 1903ஆம் ஆண்டில், பிரச்சாரத்தை மேற்கொள்ளும் நோக்கத்துடனும், கணக்கியல், சட்டம், நிதி ஆகியவற்றின் பிரச்சினைகளில் உதவியளிக்கும் நோக்கத்துடனும், மிலான் நகரில் தொழிலாளர் சங்கங்களின் கூட்டமைப்பு நிறுவப்பட்டது. முதல் உலகப் போரின் போது, தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகள் குறைந்தன. ஆனல், அதற்குப் பின்னர், அச் சங்கங்கள் துரிதமான வளர்ச்சியடைந்து நல்ல வெற்றியைப்பெற்றன. 1921ஆம் ஆண்டில் தொழிலாளர் சங்கங்களின் எண்ணிக்கை 8,830 வரை உயர்ந்தது. ஒரு காலத்தில் அவை பொதுப்பணித்துறை ஒப்பந்தங்களின் ஏகபோகத்தை ஏறக்குறையப் பெற்றிருந்தன. தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள், குடியேற்றத்திற்காகவும், சாகுபடிக்காகவும் நிலமீட்பில் பெருமளவு பணியாற்றியுள்ளன. இத் துறையில் மிகத் தலைசிறந்ததொரு சாதனையானது, ரோம் நகருக்கும் ஓஸ்டியாவின் மலேரியா பிராந்தியத்திலுள்ள கடலுக்குமிடையே ரோம் நகரத்துத் தொன்மையான துறைமுகத்தில், வட இத்தாலியில் இராவென்ன (Ravenna) என்ற இடத்திலுள்ள தொழிலாளர்களால் மேற்கொள்ளப்பட்ட பிராணுபாயமான சதுப்பு நிலங்களின் நீர்க்கழிவு ஆகும். இந் நிலப்பகுதி, தற்போது இத்தாலியில் மிகக் கவர்ச்சிகரமான ஒரு கேந்திரமாகவுள்ளது. தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களுள், போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்கள் குறிப்பிடத்தக்கனவாகும். 1937ஆம் ஆண்டில், சுமார் 20,000 உறுப்பினர்களைக்கொண்ட 380 போக்குவரத்துச் சங்கங்க ளிருந்தன. அவை ஓர் இரயில்வே கூட்டுறவுச் சங்கத்தையும், ஒரு கப்பலோட்டுதல் சங்கத்தையும். ஒரு படகுகட்டும் கூட்டுறவுச் சங்கத்தையும், டாக்சி மற்றும் லாரிப் போக்குவரத்துப் பணிகளை வழங்கும் கூட்டுறவுச் சங்கங்களையும் உள்ளடக்கியிருந்தன.

ஓர் உதாரணமாக, தொழிலாளர் சங்கத்தில், ஒரு பங்கின் மதிப்பு 50 லயராக உள்ளது. அது வாரமொன்றுக்கு 1 லயர் வீதத்தில் செலுத்தப்படவேண்டும். உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது. எந்த உறுப்பினரும் 100 பங்குகளுக்கு மதிகமாகப் பெற்றிருக்கக்கூடாது. ஒற்றுமை உணர்ச்சியும், பயனுறுதியுமுள்ள பரஸ்பர மேற்பார்வையும் இருக்கும்பொருட்டு, ஒவ்வொன்றிலும் 15 உறுப்பினர்களைக்கொண்ட அணிகளில்

ஒப்பந்த வேலையை உறுப்பினர்கள் செய்கின்றனர். அத்தகைய ஒவ்வோர் அணிக்கும் ஒரு தலைவர் உண்டு; அணியின் வேலையை அவர் மேற்பார்வை செய்கிறார். இக் கூடுதலான வேலைக்காக அணியிலுள்ள ஆள்களின் மொத்த ஊதியத்தின் ஒருசில சதவீதத்தில் கூடுதலான ஊதியம் அவர் அனுமதிக்கப்படுகிறார். சில சமயங்களில், அணியனைத்தின் வேலையை மேற்பார்வை செய்வதற்கு உறுப்பினர்களிடையே ஒரு பொது இயக்குநர் நியமிக்கப்படுகிறார். ஒப்பந்தப்புள்ளி சமர்ப்பிப்பதற்காக உத்தேசிக்கப்படும் வேலையின் விவரக் குறிப்பிடுகையைப் பரிசீலனை செய்வதற்கும், வேலை நிறைவேற்றுதலை வழிகாட்டுவதற்கும், வேலைக்காரர்களிடையே ஊதியத்தைத் தீர்வுசெய்வதற்கும் சாதாரணமாகப் பொறியாளர்கள் போன்ற தொழில்நுட்ப மறிந்தவர்களைச் சங்கம் நியமிக்கிறது. சில சமயங்களில், உள்ளூரிலுள்ள சங்கங்களின் கூட்டமைப்புகள், தகுதிபெற்ற பொறியாளர்களையும் மதிப்பீட்டாளர்களையும் இக் காரியத்திற்காக நியமிக்கின்றன. பொதுவாகக் கூலி இருவாரத்திற் கொருமுறை பட்டுவாடா செய்யப்படுகின்றன. இலாபங்களில் பாதி, ஒரு 'விபத்து மற்றும் ஓய்வூதிய நிதி'க்கு எடுத்துச் செல்லப்படுகிறது. தொழில் சம்பந்தமான விளக்கவுரைக்காகவும், காப்பீட்டுக்காகவும் சிறப்பு நிதிகளுங் கூட ஏற்படுத்தப்படுகின்றன. எஞ்சியுள்ள இலாபம் உறுப்பினர்-வேலைக்காரர்களுக்கு, அவர்களால் ஈட்டப்பட்ட கூலிகளின் விகிதத்தில் பகிர்வு செய்யப்படுகிறது. அசாதாரணச் சந்தர்ப்பங்களில் துணைவினைஞர்கள் என்றழைக்கப்படுபவர்களும், உறுப்பினரல்லாதவர்களுமான தற்செயலான வேலையாள்களைச் சங்கங்கள் நியமிக்கின்றன. எல்லா உறுப்பினர்களுக்கும் ஒரே சமயத்தில் ஒரு சங்கம் வேலை கொடுப்பதற்குச் சாத்தியப்படாமலிருக்கலாம்; அத்தகைய சந்தர்ப்பங்களில், எல்லா உறுப்பினர்களும் வேலையளிக்கப்படக்கூடும் வகையில், அல்லது ஒரு குறிப்பிட்ட வேலையில் நியமிக்கப்படமுடியாத வேலையாள்கள், அவர்களுக்குச் சங்கம் வேலைகொடுக்கும் வரை, வெளியில் தற்செயலான வேலையைப் பெறும்வகையில் முறைப்பிரகாரம் உறுப்பினர்கள் வேலை செய்கின்றனர்.

ஃபாசிஸ்டு ஆட்சியின்போது (1921 – 44), இயக்கம் ஒரு பின்னடைவைப் பெற்று, இரண்டாவது உலகப்போருக்குப் பிறகு, தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் மறுவாழ்வு பெற்றன. 1954ஆம் ஆண்டில் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் சமர்ப்பிக்கக்கூடிய ஒப்பந்தப் புள்ளியின் உச்சவரம்பு 60 மில்லியன் லயருக்கு உயர்த்தப்பட்டது. ஏராளமான சிறு சங்கங்கள் ஒன்று சேர்ந்து, மிக அதிக நிதியும், தளவாடமும், தொழில்நுணுக்க அறிவும் தேவையாகவுள்ள வேலைகளின் நிறைவேற்றுதலை மேற்

கொள்ளும் சமயங்களில், இவ் வுச்சவரம்பு 300 மில்லியன் லயருக்கு அதிகரிக்கப்பட்டது. 1956ஆம் ஆண்டில், சுமார் 15,000 கொல்லத்து வேலைக்காரர்களும், தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களுமிருந்தன. இச் சங்கங்களில் சுமார் 60,000 உறுப்பினர்களிருந்தனர். அவ் வாண்டில், இச் சங்கங்களால் நிறைவேற்றப்பட்ட பணிகளின் மொத்தத் தொகை சுமார் 30,000 மில்லியன் லயருக்கு இருந்தது. அவற்றின் தளவாடங்களின் பெறுமானம் சுமார் 4,000 மில்லியன் லயராக இருந்தது.

தொழிலாளர் சங்கங்கள், தங்கள் நலன்களைப் பாதுகாப்பதற்கும், ஒருபடித்தான கொள்கைகளை வகுப்பதற்கும், அவசியப்படும் காலங்களில் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளும்பொருட்டும், அநேக ஒன்றியங்களுடன் தங்களை இணைத்துக்கொண்டுள்ளன. இவ்வாறு, ஓரிடத்திலுள்ள சங்கங்கள் இவ்வொன்றியங்களை யமைத்துக் கொள்கின்றன; ஒவ்வொரு சங்கமும் தன் பங்குமூலதனத்தின் 20 சதவீதத்தை ஒன்றியத்தின் பங்குகளுக்காகச் சந்தா அளிக்கின்றது. சங்கத்தின் ஒவ்வோர் 100 உறுப்பினர்களுக்காகக் கூடுதலான ஒரு பங்குங்கூடச் சங்கத்தால் வாங்கப்படுகிறது. இவ் வொன்றியங்கள், 'தொழிலாளர் சங்கங்களின் தேசிய ஒன்றியமாக' (National Union of Labour Societies) மேலும் இணைக்கப்படுகின்றன. அது, இச் சங்கங்களின் தலைமை நிறுவனமாகவிருந்து, கொள்கைகளை நிர்ணயிப்பதற்கான ஒரு பொதுமேடையை வழங்குகின்றது. சங்கங்களின் பிரச்சினைகளைக் குறித்து அரசுடன் பேச்சுவார்த்தைகளை நடத்துவதற்காக அது இயக்கத்தின் பேச்சாளராகவுங்கூட உள்ளது.

இத்தாலியில், தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களின் வெற்றிக்கான முக்கியக் காரணங்கள் வருமாறு: (i) கேட்பைவிட அதிகமாகத் தொழிலாளர்கள் மலிந்திருத்தல். (ii) தனியார் ஒப்பந்தக்காரர் முறைக்கு ஒப்பிடும்போது, கூட்டுறவு முறை மலிவாகவுள்ளது என்று நிரூபிக்கப்பட்டிருத்தல். (iii) அரசு ஆதரவும், நிதியுதவியும். (iv) சங்கங்களின் நல்ல நிர்வாகம். எனினும், சங்கங்களுக்கு இன்னும் கீழ்க்காணும் பிரச்சினைகள் உள்ளன. (1) வேலைகளை, குறிப்பாகப் பெரியவேலைகளை மேற்கொள்வதற்காகப் போதிய நிதியின்மை. (2) சங்கம் வேலை வழங்கமுடியாத காலங்களில், தனியார் ஒப்பந்தக்காரர்களின்கீழ் வேலை செய்வதற்குச் சென்று, சங்கத்தில் வேலையிருக்கும்போது, சங்கத்திற்குத் திரும்பாத உறுப்பினர்பால் விசுவாசமின்மை. (3) அரசு வேலைகள் கிடைக்காதபோது, பொதுப்பணிகளின்மீது சார்ந்திருந்தாலும் அதன் காரணமாக உறுப்பினர்கள் வேலையில்லாமலிருத்தல்.

இத்தாலியில் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் ஏறக் குறைய ஒரு வெற்றியாகவே உள்ளன. இச் சங்கங்கள் இதர நாடுகளுக்கு ஒரு மாதிரியாக இருந்து வந்துள்ளன. சங்கங்கள் இடைநிலையாளர்களின் இலாபத்தை அகற்றியதோடு, தொழிலாளர்களுக்குப் பெரிதும் உதவி செய்துள்ளன. தொழிலாளர் மேலான கூலிகளைப் பெறுகின்றனர்; அவர்களின் ஆயுள் ஈட்டுறுதி செய்யப்படுகிறது; வருங்காலச் சேமிப்புநிதி முதலிய நன்மைகளையும் அவர்கள் பெறுகின்றனர். மொத்தத்தில், ஒரு மேலானதும் மிகச் செழிப்பானதுமான வாழ்க்கையை அவர்கள் நடத்துகின்றனர். இந்தியாவில் ஏறக்குறைய அதே முறைகளின்மீது தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன; ஆனால், அவை பாராட்டக்கூடிய ஓர் அளவில் அமைக்கப்படவில்லை. அவை குறிப்பாக, சமுதாயத்தின் பலம்குன்றிய பகுதியினருக்கு உதவிபுரிவதற்காக அமைக்கப்பட்டுள்ளன.

## கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள்

கூட்டுறவுப் பண்ணைத் துறை, இத்தாலியில் கூட்டுறவுக்கு வழங்கப்பட்ட அரும்பரிசு எனக் குறிப்பிடத்தக்கது. தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் மிகப்பெரும் பரப்பளவுள்ள நிலங்களைச் சாகுபடிக்காக மீட்புச் செய்தன மட்டுமன்றி, நிலங்களின் சாகுபடியையுங்கூட மேற்கொண்டுள்ளன. எனவே, நிலங்களை மீட்ட தொழிலாளர் சங்கங்களிலிருந்து கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் வளர்ந்தன. தங்கள் வேலைவாய்ப்பை நீட்டித்துக்கொள்வதற்கும், நிலைப்படுத்திக்கொள்வதற்கும் ஒரு சாதனமாகத் தொழிலாளர்கள் நிலங்களில் தாங்களே வேலை செய்வதற்குத் தீர்மானித்தனர். தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களைப்போன்று பண்ணைச் சங்கங்களுங்கூடச் சுயேச்சை நிறுவனங்களாகவிருந்தன. இராவென்னு மாகாணம் இச் சங்கங்களின் கோட்டையாக இருந்தது. இங்குத்தான், அவை ஓர் இத்தாலிய பிரமுகரான நுல்லோ பால்தீன் (Nullo Baldin) அவர்களின் வழிகாட்டலின்கீழ் முதலில் தோன்றின.

கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களில் இரண்டு முக்கிய வகைகள் உள்ளன: (i) தொகுப்புவகை அல்லது பிரிக்கப்படாத வகை, (ii) தனிநபர் வகை அல்லது பிரிக்கப்பட்ட வகை. சங்கம், நிலத்தைச் சொந்தமாகப் பெற்றிருந்தது; அல்லது நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து நிலங்களைக் குத்தகை எடுத்திருந்தது. முதல் வகையில், நிலம் உறுப்பினர்களால் கூட்டாகச் சாகுபடி செய்யப்பட்டு, உற்பத்திச் சாதனங்கள் சங்கத்தால்

சொந்தமாகப் பெறப்பட்டுள்ளன. உறுப்பினர்கள் சங்கத்திற்காகப் பணிசெய்து வழக்கமான கூலி பெறுகின்றனர். ஆண்டிறுதியில், செலவுகளை ஏற்ற பிறகும் காப்பிருப்புகளை ஒதுக்கீடு செய்த பிறகும் கிடைக்கும் உபரி வருமானம் உறுப்பினர்களிடையே அவர்கள் ஈட்டிய கூலி விகிதத்தில் பகிர்வு செய்யப்படுகிறது. அத்தகைய சங்கங்கள், வழக்கமாகச் சமஉடைமை அல்லது பொதுவுடைமை ஆதரவின்கீழ்ச் செயற்படுகின்றன. இரண்டாவது வகையில், நிலம் பல உடைமைகளாகப் பங்கிடப்பட்டு ஒவ்வோர் உடைமையும் குத்தகையின்பேரில் ஓர் உறுப்பினருக்கு ஒதுக்கப்படுகிறது. உறுப்பினர்கள் தங்கள் நிலவுடைமைகளைத் தாங்களே நிர்வகிக்கின்றனர். கட்டளையிடுதல், வழங்குதல் ஆகிய பணிகளையும், கடனளிப்பு, விற்பனை, பொறிகளின் உபயோகம் முதலிய பொதுச் சேவைகளையும் சங்கம் மேற்கொள்கிறது. இவ் வகையான சங்கம், பொதுவாக, கத்தோலிக்கச் செல்வாக்கின்கீழ்ச் செயற்படுகின்றது.

பெரிய ஓர் எண்ணிக்கையுள்ள குடும்பங்கள் இச் சங்கங்களால் பலனடைந்துள்ளன. அவை பலருக்கு வேலைவாய்ப்பை வழங்கினது மட்டுமன்றி, விவசாய உற்பத்திப் பெருக்கத்திற்கும்கூட உதவியுள்ளன. தங்களுக்குத் தொழில்நுட்ப ஆய்வுரை அளித்து, விவசாய, மற்றும் இதரத் தேவைகளை வழங்கும் பிராந்தியக் கூட்டமைப்புகளாக அவை தங்களைத் தொகுத்துக் கொண்டுள்ளன.

## பொது இயல்புகள்

இத்தாலியக் கூட்டுறவு இயக்கம், பல்வேறு திசைகளில் குறிப்பாக, நகர, கிராமக் கடன் துறையிலும், மற்றும் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் துறையிலும் ஓர் ஒளிமயமான வெற்றியடைந்துள்ளது. பண்ணைத் தேவைகள், விற்பனைச் சங்கங்கள், பால்பண்ணைச் சங்கங்கள் போன்ற இதரவகைச் சங்கங்களும், நுகர்வோர் நிறுவனங்களும், வீடுகட்டும் சங்கங்களும், ஒரு சில தொழிற்சங்கங்களும், மீன்வர் சங்கங்களும்கூட இத்தாலியில் உள்ளன. பிரதமக் கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் சொந்த நிதியாதாரங்களைப் பெரும்பாலும் பங்குமூலதனம்மூலமும் தங்கள் உபரி இலாபங்களைக்கொண்டு பேணிவளர்த்த காப்பிருப்புகள் மூலமும் எழுப்புகின்றன. மற்றும், பல்வேறு வகையான விவசாயச் சங்கங்கள் தேசியக் கூட்டமைப்புகளாக இணைக்கப்பட்டுப் பின்னர், இந்தப் பல்வேறு கூட்டமைப்புகள் தேசியக் கூட்டுறவு ஒன்றியத்திற்கு இணைக்கப்படுகின்றன. இத்தாலியில்,

இயக்கம் மேலும் முன்னேறுவதற்காக, அது அரசியல் அல்லது இதரச் செல்வாக்குகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்வதற்கு முயற்சி செய்து, கற்றறிந்தவர்களும், முதன்மையானவர்களுமான கூட்டுறவாளர்களின் சேவைகளைப் பெறும்பொருட்டுக் கூட்டுறவுக் கல்விக்கான ஒரு திட்டத்தைச் செயற்படுத்த முனைய வேண்டும்.

## (iv) டென்மார்க்
(Denmark)

**பொது :** புதியதோர் டென்மார்க் ஏற்படுவதற்குக் கூட்டுறவு இயக்கம் மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு பெரும் பங்கு ஏற்றது. வேளாண்மை, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், வீடு கட்டுதல், நாணய நடவடிக்கைகள் போன்ற பல்வேறு துறைகளில், கூட்டுறவுக் கொள்கைகள் அதிக முக்கியத்துவத்தை அடைந்துள்ளன. இந்தியாவில் போலல்லாது, டென்மார்க்கில் இயக்கத்தை ஒழுங்காற்றச் சட்டம் எதுவும் இல்லை; கூட்டுறவுச் சட்டங்களின் சட்டப்படியான ஒரு பொதுப்பதிவுங்கூடக் கிடையாது; அரசிடமிருந்தோ மற்றவர்களிடமிருந்தோ மானியம், ஒழுங்குபடுத்துதல் அல்லது கட்டுப்பாடு கிடையாது.

டென்மார்க் நாட்டுக் கூட்டுறவு இயக்கம், தனிநபர் உற்பத்தியாளர்களாலும், நுகர்வோர்களாலும் தோற்றுவிக்கப்பட்டு, அவர்களுடைய நலன்களைக் கவனிப்பதற்காக அவர்களாலேயே நிர்வகிக்கப்படுகிறது. பொருளாதாரச் செய்திகளைக் குறித்து, உற்பத்தியாளர்களிடையேயும், நுகர்வோர்களிடையேயும் அது அத்தியாவசியமாக ஒரு சுயேச்சையான கூட்டுறவாகவுள்ளது. இன்று, அது நகர்ப்புறங்களிலும், கிராமப் பகுதிகளிலுமுள்ள ஆயிரக்கணக்கான டேனிஷ் குடும்பங்களின் அன்றாட வாழ்க்கையில் ஓர் இன்றியமையாத அம்சமாக அமைந்துள்ளது. அது வீட்டுச் செலவுகளைக் குறைத்து, நல்ல வருமானத்தைப் பெறுவதற்கு அவர்களுக்கு உதவுகிறது.

டேனிஷ் கூட்டுறவு இயக்கத்தின் தனிப்பட்ட ஓர் அம்சமானது, அதன் உயர்சிறப்புத் தேர்ச்சிச் சங்கங்களாகும் (Specialised Societies). குடியானவர்கள் எல்லாப் பிரச்சினைகளின் சுமையை நடப்புச் சங்கங்களுக்கு விட்டுவிடுவதில்லை; ஆனால், புதிய பிரச்சினைகள் ஏதாவது எழுந்தால், அவற்றைச் சமாளிப்பதற்கு ஒரு புதிய சங்கத்தை நிறுவுவதற்கே அவர்கள் விரும்புகின்றனர். அதன் விளைவாக, ஒரு குடியானவர் பல்வேறு கூட்டு

றவுச் சங்கங்களில் ஓர் உறுப்பினராக இருக்கலாம். தன் பன்றிகளை விற்பனை செய்வதற்காக அவர் ஒரு பன்றி இறைச்சிக் கூட்டுறவுத் தொழிற்சாலையின் உறுப்பினராக இருக்கவேண்டும்; தன் முட்டைகளை விற்பனை செய்வதற்காக உள்ளூரிலுள்ள முட்டை சேகரிக்கும் சங்கத்தில் அவர் சேரவேண்டும்; அவ்வண்ணமே, அவர் பல்வேறு இதரச் சங்கங்களின் ஓர் உறுப்பினராகவும் இருக்கலாம்.

ஆயினும், சங்கங்கள் மிகவும் சுதந்திரமாகவுள்ளன. ஒரு கிராமம் அல்லது மாவட்டத்திலுள்ள பல்வேறு உற்பத்திச் சங்கங்களுக்கும், விற்பனைச் சங்கங்களுக்குமிடையே கூட்டுறவு எதுவும் நடைபெறுவதில்லை; ஆனால், பல்வேறு சங்கங்களுக்கு இடையே வாணிகத் தொடர்பு பராமரிக்கப்படலாம். எனினும், தனிக் கிளைகளுக்குள் கூட்டுறவு நடைபெறுகிறது. ஒரே வர்த்தகத்தில் ஈடுபாடுடைய எல்லாக் கூட்டுறவுப் பால்பண்ணைகளும், பால்பண்ணைப் பொருள்கள் தயாரிப்பாளர்களின் நலன்களைப் பாதுகாக்கின்ற ஒரு நிறுவனத்தின் உறுப்பினர்களாகவுள்ளன. அவ்வாறே முட்டை சேகரிக்கும் சங்கங்கள் அனைத்தும், 'டேனிஷ் குடியானவர்களின் முட்டை ஏற்றுமதியாளர்கள் சங்கத்தின்' (Danish Farmers' Egg Exporters Association) உறுப்பினர்களாக வுள்ளன.

நாடு முழுவதிலுமுள்ள வர்த்தக நிறுவனங்கள் பெரியதாகவும், நிதி ரீதியாகப் பலமாகவு மிருப்பதுடன், செய்பொருள்களின் ஒருமைப்படுத்தப்பட்ட விற்பனையில், குறிப்பாக ஏற்றுமதி வளர்ச்சியில் இன்று அவை ஒரு நிச்சயமான பங்கை ஏற்கின்றன. ஒவ்வோரிடத்திலும் பின்பற்றப்படும் அடிப்படைக் கொள்கையானது, சங்கங்களும் நிறுவனங்களும், உறுப்பினர்களின் நேரடியான பொருளாதார நலனுக்காக இலாபப்பற்றற்ற அடிப்படையின்மீது செயற்படவேண்டுமென்பதே.

## டென்மார்க்கில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம்

ஏறத்தாற 17,000 சதுர மைல்கள் பரப்பளவுள்ள (தமிழ் நாட்டிலுள்ள ஏறக்குறைய 4 மாவட்டங்களின் பரப்பளவிற்குச் சமமான) ஒரு சிறு நாடாகிய டென்மார்க், பெரும்பாலும் சிறு நிலவுடைமைகளைக்கொண்ட ஒரு நாடாகும். விவசாயம் அதன் முக்கியத் தொழிலாக உள்ளது. கடந்த நூற்றாண்டின் மத்தியில், டென்மார்க்கானது இங்கிலாந்து மற்றும் ஐரோப்பாவின் இதர விவசாய நாடுகளைப் போன்றிருந்தது. அதன் முக்கிய ஏற்றுமதிகள்,

இங்கிலாந்திற்கும், ஜெர்மனிக்கும் ஏற்றுமதி செய்யப்பட்ட கோதுமையாகவும் கால்நடையாகவும் இருந்தன. ஜெர்மனியுடன் நேர்ந்த இரண்டு போர்கள், ஜெர்மனியில் விதிக்கப்பட்ட தடை செய்யும் காப்புவரி, அமெரிக்கா, ஆர்சன்டினு, ஆஸ்திரேலியா நாடுகளிலிருந்து கோதுமைப் போட்டி ஆகியவற்றின் காரணமாக, அது தன் ஏற்றுமதிச் சந்தைகளை இழந்தது; டேனிஷ் விவசாயமும் பாதிக்கப்பட்டது. எனவே, குடியானவர் தம் விவசாய முறைகளை மாற்றிக்கொள்ள நிர்ப்பந்தப்படுத்தப்பட்டு அவர்கள் பால் பண்ணையின்மீது முழுமையாகத் தம் கவனத்தைச் செலுத்துவதற்குத் தொடங்கினுர்கள். பன்றி இறைச்சி மற்றும் முட்டை உற்பத்தி, பால்பண்ணைக்குத் துணைத் தொழில்களாக ஆயின. எனினும், பாதிரி மகன் ஒருவரால் திஸ்டட் (Thisted) என்ற இடத்தில் ஒரு பண்டசாலை அமைக்கப்பட்டதன்மூலம்தான் கூட்டுறவு முதலில் நுகர்வோர் துறையில் தொடங்கிவைக்கப்பட்டது. பண்டசாலை இயக்கத்தின் வளர்ச்சி மிகவும் மெதுவாக இருந்தது. ஆயினும், குடியானவர்கள் கூட்டுறவுக் கருத்தைக் கைவிடாமல், தங்கள் வேளாண்மைத் தொழிலுக்கு அதைப் பொருத்துவதற்குத் தொடங்கினர். முதலாவது ஜெட்டிங் (Jedding) கூட்டுறவுப் பால்பண்ணையானது 1882ஆம் ஆண்டிலும், முதலாவது கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலையானது 1887ஆம் ஆண்டிலும் அமைக்கப்பட்டன. அவற்றின் வெற்றிகரமான செயற்பாடு, கூட்டுறவில் மக்கள் நம்பிக்கையைப் பெற்றுத் தந்தது. தற்போது, நூற்றுக்கணக்கான கூட்டுறவுச் சங்கங்கள், பெரும்பாலும் ஒவ்வொரு பட்டினத்திலும், கிராமத்திலும், பல்வேறு காரியங்களுக்காகவும் காணப்படுகின்றன. ஒரு பரந்த எண்ணிக்கையுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் வெண்ணெய், பன்றி இறைச்சி, முட்டை உற்பத்தியிலும் அவற்றின் விற்பனையிலும் குடியானவர்களுக்கு உதவுகின்றன. வீட்டுவசதிச் சங்கங்கள், ரொட்டி தயாரிக்கும் கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுறவுச் சிற்றுண்டிச் சாலைகள், காப்பீட்டுச் சங்கங்கள் முதலியனபோன்ற பல்வேறு இதரவகைச் சங்கங்களுமுள்ளன.

ரெய்ஃபெய்சன் முறைகளில், கடன் வசதி, டென்மார்க்கில் வளர்ச்சியடைந்திருக்கவில்லை. அவை, கூட்டுறவு இயக்கத்தில் ஓர் இடைநிலை இடத்தையே வகிக்கின்றன. பெருவாரியான கடன்சங்கங்கள் இல்லாமைக்குக் காரணம், கூட்டுறவுச் சங்கங்களின் தேவைகளையும், வேளாண்மைத் தொழிலின் தேவைகளையும் பூர்த்தி செய்யும் நிலையிலுள்ள தனியார் வங்கிகளின் மக்களாட்சி அமைப்பே. தங்கள் வருமானத்திற்காக மகசூல்களின்மீது சார்ந்திருக்கின்ற இதர நாடுகளிலுள்ள குடியானவர்களைப் போலல்லாது,

டேனிஷ் குடியானவர், தம் பால்பண்ணைச் செய்பொருள்கள், பன்றி இறைச்சி, முட்டை ஆகியவைகளின்மூலம் ஆண்டு முழு வதிலும் ஒரு நிலையான வருமானத்தைத் தம் பண்ணையிலிருந்து பெறுகிறார். அவர் குறுகிய காலக் கடனுக்காகத் தேவையை அதிகமாகக் காண்பதில்லை. கால்நடை, பொறிகள் ஆகியவற்றை வழங்குதல் முதலியன போன்ற காரியங்களுக்காக, நீண்டகாலக் கடன் வசதிக்காக, அவர், இதரக் குடியானவர்களுடன் கூட்டுச் சேர்ந்து, வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின் பேரிலுள்ள வர்த்தக வங்கிகளிடமிருந்து அல்லது சேமிப்பு வங்கி களிடமிருந்து நிதிகளைப் பெறுகிறார்.

## பால்பண்ணைக் கூட்டுறவுச் சங்கங்கள்

ஒரு கூட்டுறவுப் பால்பண்ணையானது, தங்கள் பாலையும், பால் பண்டங்களையும் பதனப்படுத்துவதற்கும், விற்பனை செய்வதற்கும் ஒரு கூட்டுத் தொழில் முயற்சியாக ஒன்றுசேரும் ஏராளமான பால் உற்பத்தியாளர்களைக் கொண்டுள்ளது. கூட்டுறவுப் பால்பண்ணை கள் வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின் பேரில் செயற் படுகின்றன. பால்பண்ணைப் பொறிகளை அமைப்பதற்காகத் தேவைப்படும் மூலதனத்தை, அவை வழக்கமாக வர்த்தக அல்லது சேமிப்பு வங்கிகளிடமிருந்து தங்கள் உறுப்பினர்களின் கூட்டு மற்றும் தனித்தனிப் பொறுப்பின்மீது வாங்கப்படும் ஒரு கடன் வாயிலாக எழுப்புகின்றன. சங்கத்திற்குள்ளே பொறுப்பு, பொதுவாக உறுப்பினர்களிடையே, அவர்களால் கடன்காலக் கட்டத்தில் ஒப்புவிக்கப்படும் பால் அளவின் விகிதத்தில் பகிர்வு செய்யப்படுகின்றது. வருடாந்திரத் தவணைகளில், ஒவ்வோர் ஆண்டின் இலாபங்களிலிருந்து, கடன் திருப்பிச் செலுத்தப்படு கின்றது. தாங்கள் சொந்தமாக வைத்திருக்கும் ஒவ்வொரு பசுவிற்கும் ஒரு குறிப்பிட்ட தொகை வீதத்தில் நடைமுறை மூலதனம் உறுப்பினர்களுக்கு வழங்கப்படுகிறது. இத் தொகை யின்மீது வட்டி எதுவும் செலுத்தப்படுகிறதில்லை. உறுப்பினர்கள் தங்கள் குடும்பத்தின் நுகர்வுக்காகத் தேவைப்படும் அளவைத் தவிர, தங்களுடைய எல்லாப் பசுக்களின் பால் அனைத்தையும் சங்கத்திற்கு வழங்கத் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்கின்றனர். அக் கடமையிலிருந்து தவறினால் அபராதங்கள் விதிக்கப்படுகின் றன. ஓர் உறுப்பினர் இவ் வொப்பந்தத்தைத் தொடர்ந்து மீறினால், அவர் சங்கத்திலிருந்து விலக்கப்படுகிறார். சங்கத்தின் வண்டி சுற்றிச்சென்று, உறுப்பினர்களின் பண்ணைகளிலிருந்து, பாலைச் சேகரிக்கிறது. பரிசோதனைக்குப் பிறகு, பால் பதப் படுத்தப்பட்டு, பாலிலிருந்து பாலாடை பிரிக்கப்பட்டுக் கடையப்

படுகிறது. வெண்ணெயும், மோரும் பெறப்படுகின்றன. வழங்கப் பட்ட பாலின் அளவிற்கும், தரத்திற்கும் ஏற்பப் பாலுக்கான விலை, இரு வாரத்திற் கொருமுறையாவது மாதத்திற் கொரு முறையாவது பட்டுவாடா செய்யப்படுகிறது. ஏடெடுத்த பாலும், மோரும், கால்நடைகளுக்கும், பன்றிகளுக்கும் தீவனமாக உப யோகிக்கப்படுவதற்கு உறுப்பினர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப் படுகின்றன. சங்கத்தின் உபரிவருமானம் உறுப்பினர்களிடையே, ஆண்டிறுதியில் ஒவ்வோர் உறுப்பினரால் வழங்கப்பட்ட பாலின் விகிதத்தில் விநியோகிக்கப்படுகிறது. கூட்டுறவுச் சட்டம் எதுவு மிராமலிருப்பினும், பால்பண்ணைகள், கால்நடைகளுக்குத் தீனி யிடுதல், பால் கறத்தல் முதலியவற்றைக் குறித்துத் தங்களுக்குச் சொந்தமான கண்டிப்பான விதிமுறைகளை வைத்துள்ளன.

1964ஆம் ஆண்டில், டென்மார்க்கில் மொத்தப் பால் பண்ணைகளின் எண்ணிக்கை 10,072ஆக இருந்தது. இதில், 853 கூட்டுறவு அடிப்படையின்மீது செயற்பட்டிருந்தன. அவை நாட்டின் மொத்தப் பால் உற்பத்தியில் தோராயமாக 86 சதவீதத்தைப் பெற்றிருந்தன. ஏறத்தாழ 90 சதவீதக் குடி யானவர்கள், கூட்டுறவுப் பால்பண்ணைகளின் உறுப்பினர்களாக வுள்ளனர். 1964ஆம் ஆண்டில் பால்பண்ணைகளின் உற்பத்தி யானது, சுமார் 5,210 மீட்டர் டன்கள் பாலும், 155 மீட்டர் டன்கள் வெண்ணெயும், 123 மீட்டர் டன்கள் பாலாடைக் கட்டிகளுமாக இருந்தது. 80 சதவீதப் பால் வெண்ணெய் தயாரிப்பதற்காகவும், 10 சதவீதப் பால் பாலாடைக்கட்டி மற்றும் கட்டியாக்கப்பட்ட பால் ஆகியவற்றைத் தயாரிப்பதற்காகவும் உபயோகப்படுத்தப்பட்டு எஞ்சியவை உள்ளூரிலேயே நுகரப்படு கின்றன.

பிரதம மட்டத்திலுள்ள கூட்டுறவுப் பால்பண்ணைகள் பிராந்தியப் பால்பண்ணைச் சங்கங்களாகக் கூட்டமைக்கப்பட்டி ருக்கின்றன. பிராந்தியச் சங்கங்கள், 'டேனிஷ் பால்பண்ணைச் சங்கங்களின் கூட்டமைப்புடன்' (Federation of Danish Dairy Associations) மேலும் இணைக்கப்பட்டுள்ளன. பிரதம மட்டத்தி லுள்ள தனியார் பால்பண்ணைகள்கூடப் பிராந்தியச் சங்கங்களுடன் இணைக்கப்படுகின்றன. இதன் நோக்கம் தனியார் பால்பண்ணை களைப் பாதுகாப்பதாகும். இதனால், இரண்டு துறைகளுக்கும் இடையே ஓர் ஆரோக்கியமான போட்டி உணர்ச்சியைப் பரா மரிக்க முடிகிறது. பால் உற்பத்திக்கும் பால் பண்டங்களுற்பத் திக்கும் திருப்திகரமான நிலைமைகளைப் பெறுவதற்கும், பராமரிப்ப தற்கும் முயற்சி செய்வதன்மூலம், நாட்டிற்குள்ளேயும், வெளி

யேயுமுள்ள பால்பண்ணைத் தொழிலின் நலன்களைக் கவனித்து வருவதே தேசியக் கூட்டமைப்பின் கடமையாக வுள்ளது.

வெண்ணெய், பாலாடைக்கட்டி, பாலாடை, பால்தூள் (Milk powder) உள்ளிட்ட 70 சதவீதப் பால்பண்ணைப் பண்டங்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்த ஏற்றுமதிப் பொருள்களைப் பெருமளவு வாங்கும் நாடு இங்கிலாந்து ஆகும். எஞ்சிய 30 சதவீதப் பால்பண்ணைப் பண்டங்கள் உள்நாட்டுச் சந்தையில் விற்பனை செய்யப்படுகின்றன.

பிரதமப் பால்பண்ணைகள் தங்கள் ஏற்றுமதிக் கழகங்களை அமைத்துள்ளன. தேசிய மட்டத்தில், பால்பண்ணைப் பிரதிநிதி களையும், விவசாய நிறுவனங்களின் பிரதிநிதிகளையும் கொண்ட வெண்ணெய் ஏற்றுமதி வாரியமும், பாலாடைக்கட்டி ஏற்றுமதி வாரியமும், அதனதன் பண்டங்களின் ஏற்றுமதியை அமைத்து ஒழுங்குபடுத்துகின்றன. இறக்குமதி செய்யும் நாடுகளில் நிலவி யுள்ள விலைகளின் அடிப்படையில் இவ் வாரியங்கள் ஒரு விற்பனை விலையை நிர்ணயிக்கின்றன. இவ் விலை ஏற்றுமதிக் கழகங்களால் செலுத்தப்படுகின்றன. இவ் வாரியங்களும், கூட்டமைப்புகளும், இறக்குமதி செய்யும் நாடுகளில் தங்கள் சொந்தப் பிரதிநிதிகளை வைத்திருக்கின்றன. வெண்ணெய்க்காக 1903ஆம் ஆண்டில், ஒரு தனிப்பட்ட வர்த்தகக்குறி, அதாவது 'லூர் பிராண்ட்' (Lur Brand) குறி, ஒரு தனிச்சட்டத்தின்கீழ்த் தொடங்கி வைக்கப்பட்டது. லூர் என்பது, ஜோடியாக ஊதப்பட்டுவந்த ஒரு பழைய டேனிஷ் போர்க்கருவியின் பெயரென்று கூறப்படு கிறது. 1964ஆம் ஆண்டில், 'பால்பண்ணைச் சங்கம், டென் மார்க்கு' (Dairy Society, Denmark) என்ற நிறுவனம் அமைக்கப் பட்டது. அது, கூட்டுறவுப் பால் பண்ணைகளும், ஏற்றுமதி நிறுவனங்களும் இணைக்கப்பட்டுள்ள ஒரு முழுமைக்குமான கூட்டமைப்பாகும். நாட்டில் கூட்டுறவுப் பால்பண்ணைத் தொழிலனைத்திலுமுள்ள உற்பத்தி நடவடிக்கையையும், விற்பனை நடவடிக்கையையும் ஒருமைப்படுத்துவதற்கு இக் கூட்டமைப்பு உதவி புரியும். டென்மார்க்கு நாடு, தன் பால்பண்ணைத் தொழி லுக்காக ஒரு சர்வதேசப் புகழைப் பெற்றுள்ளது. பால்பண்ணை யில் அது அடைந்த வெற்றிக்கு முதன்மையான காரணம், அது கூட்டுறவு முறையைப் பின்பற்றியதே.

**பால்பண்ணைக் கூட்டுறவின் குறிப்பிடத்தக்க வெற்றிக்கான காரணங்கள்**

முதன்முதலாக, உறுப்பினர்களின் உயர்ந்த விசுவாச **உணர்ச்சி.** தாங்களே விதித்துக்கொண்ட கட்டுப்பாட்டின்

மூலம் அவர்கள், தங்கள் வீட்டுநுகர்வுக்காகத் தேவைப் படும் பகுதியைத் தவிரத் தாங்கள் உற்பத்தி செய்யும் எல்லாப் பாலையும், பால்பண்ணைக்கு வழங்குவதற்குத் தங்களைக் கட்டுப் படுத்திக்கொள்கின்றனர். அவ்வாறு செய்யத் தவறிய உறுப்பி னர்கள் அபராதங்கள் விதிக்கப்படுகின்றனர்; அவர்கள் சங்கங் களிலிருந்து விலக்கவும் படுகின்றனர். உறுப்பினர்களுக்குப் பட்டு வாடாக்கள் முறைப்படி செய்யப்படுவதால், அவர்களின் விசு வாசம் உறுதிப்படுத்தப்படுகின்றது. இரண்டாவதாக, உறுப்பி னர்கள் தங்கள் கால்நடைகளின் பால் கறவையைத் தரத்திலும், அளவிலும் மேம்படுத்துவதற்கும், பராமரிப்பதற்கும் அதிக முயற்சியை எடுக்கின்றனர். கால்நடைகள் பெருமளவு பால் கொடுப்பதில் மட்டுமன்றி, அப் பால் மணத்திலும் வெண்ணெய் உள்ளடக்கத்திலும் நிறைவாயிருக்கும் பொருட்டுக் கால்நடை களுக்குத் தீவனமிடுதலிலும் சிறப்புக் கவனம் செலுத்துகின்றனர். மற்றும், ஆண்டு முழுவதிலும் ஒருபடித்தான தரமும், சம மான உற்பத்தியும் இருப்பதைப் பார்த்துக் கொள்கின்றனர். தரத்தைப் பராமரிப்பதற்காகப் பால்பண்ணைகள், பாலின் வெண் ணெய் உள்ளடக்கம் அடிப்படையின் பேரில், பாலுக்காகப் பட்டு வாடா செய்கின்றன. மூன்றுவதாக, வெண்ணெய் மிகவும் நவீனமான நிலைமைகளின்கீழ், இந் நாள் முறைகளில் தயாரிக்கப் படுகிறது. கூட்டமைப்புகள், பால்பண்ணைத் தொழிலிலுள்ள அண்மையான அபிவிருத்திகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டு, அவற்றை உறுப்பினர்களுக்குக் காலதாமதமின்றி அறிவிக்கின்றன. தன் கட்டுப்பாட்டுப் பணிப்பிரிவின்மூலம், அரசு வெண்ணெயின் தரத்தைக் கட்டுப்பாடு செய்கிறது. ஏற்றுமதிக்காக உத்தேசிக்கப் பட்ட எல்லா வெண்ணெயும் 'லூர் பிராண்ட்' வர்த்தகக் குறியை ஏற்றிருக்கவேண்டும். நான்காவதாக, பால்பண்ணைகள், உற் பத்திச் செலவைக் குறைப்பதன்மூலம், தங்கள் செயற்பாட்டில் சிக்கனத்தை விளைவிக்கும் மிகப் புதுமுறையான பொறிகளைப் பெற்றுள்ளன. சிப்பந்திகளும், உயர்தகுதி பெற்றவர்களாகவும் முழுமையாகப் பயிற்சியடைந்தவர்களாகவுங்கூட இருக்கின்றனர். விவசாயக் கல்லூரிகள் குடியானவர்களுக்கு இத் துறையில் போதிய பயிற்சியை அளிக்கின்றன. இறுதியாக, கூட்டுறவு முறையானது, மக்களால் சுயேச்சையாகவும், தங்கள் சொந்த முன்முயற்சியின் பேரிலும் பின்பற்றப்பட்டதால், இந்த இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாகவுள்ளது. அது அரசு அல்லது வேறெந்த அமைப்பாலும் வெளியேயிருந்து கட்டளையிடப்படவில்லை. பலத்தை யும், நிலைபேருக்கத்தையும் பெற்றுள்ள பால்பண்ணை இயக்கத்தின் வெற்றிக்கான முதன்மையான காரணம், மக்களின் முன்முயற்சி

யும் அவர்கள் கூட்டுறவில் தொடர்ந்து வைத்திருக்கும் அக்கறை யுமே.

## கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலைகள்

பால்பண்ணைகளைத் தொடங்கிய டேனிஷ் குடியானவர்கள், விரைவில் ஒரு கூடுதலானதும் துணைத் தொழிலானதுமான பன்றிப் பண்ணைகளைத் தொடங்கவேண்டி யிருந்தது. பால்பண்ணைத் தொழிலின் துணைப் பண்டங்களான, ஆடையெடுக்கப்பட்ட பாலும், மோரும், பன்றி வளர்ப்பை மேற்கொள்வதன்மூலம் பயன்படுத்தப்படுவதற்கு உத்தேசிக்கப்பட்டன. இல்லாவிடில், பிரிக்கப்பட்ட பால் வீணாகிவிடும். இப் பால், பன்றிகளை மிகவும் கொழுக்க வைப்பதனால், குடியானவர்கள் பன்றிகளை வளர்க்கத் தொடங்கினர். ஆயினும், பன்றியிறைச்சி தயாரித் தலும், ஏற்றுமதி செய்தலும் தனியார் வர்த்தகர்களின் கையி லிருந்தன. குடியானவர்கள் தாங்களே நன்மையடைவதற்குக் கால்நடை வெட்டும் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்படவேண்டு மென்ற கருத்துப் பரவியது. 1887ஆம் ஆண்டில், 'முதலாவது கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலை ஜட்லண்டு பிர தேசத்தில் ஆர்சென்ஸ் என்ற (Horsens) இடத்தில் நிறுவப் பட்டது. இம் முயற்சிக்குத் தனியார் வர்த்தகர்களிடமிருந்து பெரும் எதிர்ப்பு இருந்தது. ஆனால், தங்கள் விடாமுயற்சியி னால், அதன் உறுப்பினர்கள் சிரமங்கள் அனைத்தையும் வென்ற னர். 1888ஆம் ஆண்டில், பன்றி இறைச்சித் தொழிற்சாலைகள் மேலும் அமைக்கப்பட்டன. அச் சங்கங்கள் ஒரு பெரிய நிலப் பகுதிக்குப் பரவியுள்ள பெரிய உறுப்பினர் எண்ணிக்கையைக் கொண்டிருந்தன. முதலீடுங்கூட மிக அதிகமாகவுள்ளது. பெருந் தொகைகளில் கடன்கள் ஏற்பாடு செய்யப்படவேண்டியிருந்தன. உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டுள்ளது. 1950ஆம் ஆண்டில், 75 பன்றி இறைச்சித் தொழிற்சாலைக ளிருந்தன. 1967ஆம் ஆண்டில், அவற்றின் எண்ணிக்கை 61ஆக இருந்தது. அவை, நாட்டில் வெட்டப்பட்ட பன்றிகளின் மொத்த எண்ணிக் கையில், 89 சதவீதத்தைக் கையாண்டன. அவற்றின் வரு டாந்திர அலுவல் புரள்வு 5,000 மில்லியன் கிரோனராக (ரூ. 500 கோடி) இருந்தது.

கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலைகள், இலண்டன் அங்காடியில் பன்றி இறைச்சியை விற்பனை செய்வதற்காக, இலண்டன் நகரில் 'டேனிஷ் கூட்டுறவுப் பன்றி இறைச்சி வர்த்தகக் கம்பெனியை' (Danish Co-operative Bacon Trading Company)

அமைப்பதற்கு ஒன்றுக இணைந்துள்ளன. இக் கம்பெனி பிரிட்டனில் பதிவு செய்யப்பட்ட ஒரு கம்பெனியாகும். பன்றி இறைச்சித் தொழிற்சாலைகள் கோபன்ஹேகன் என்ற நகரில் 'யூனியன் டேனிஷ் கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலை'களில் (Union Danish Co-operative Bacon Factories) கூட ஒன்று சேர்ந்துள்ளன. தொழிற்சாலைகளுக்கு அந்த யூனியன் பேருதவியாக இருந்துள்ளது. குடியானவர்கள் வளர்ப்புப் பன்றிகளை வாங்குவதற்குப் பெருவாரியான பன்றி வளர்ப்புக் கேந்திரங்களைத் திறப்பதன்மூலம், அரசுதவியைக்கொண்டு பன்றி இன வளர்ப்பை மேம்படுத்துவதில் யூனியன் அக்கறை எடுத்துள்ளது. பன்றி இறைச்சித் தொழிற்சாலைகளின் எல்லாத் தேவைகளையும் அது கொள்முதல் செய்து வழங்குகின்றது. கூட்டுறவுக் குளிர்காப்புக் கிடங்குகள் (Co-operative Cold Store Houses) கூடப் பன்றி இறைச்சித் தொழிலில் அமைக்கப்பட்டுள்ளன. கூட்டுறவுக் குளிர்காப்பகச் சங்கங்கள், தளவாடங்கள் வாங்குதல், தொழில் நுட்பத் துறைகளில் ஆலோசனைச் சேவைகளை அளித்தல் போன்ற பொதுநலனுக்கான காரியங்களுக்காக ஒரு தேசியக் கூட்டமைப்பாக இணைந்துள்ளன. கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலையின் செயற்பாடு ஏறத்தாழ ஒரு கூட்டுறவுப் பால் பண்ணையின் செயற்பாட்டின் மாதிரியாக உள்ளது.

கூட்டுறவுப் பன்றி இறைச்சித் தொழிற்சாலைகள், பன்றிகள் வளர்ப்பு இனத்தில் ஒரு மேம்பாட்டையும், அவற்றின் எண்ணிக்கை, டேனிஷ் விவசாயத்தில் அவற்றின் முக்கியத்துவம் ஆகியவற்றில் ஒரு மேம்பாட்டையும் ஏற்படுத்தியுள்ளன. அநேக சங்கங்கள் தகரப்பெட்டி தயாரிக்கும் தொழிற்சாலைகளையும் (Canneries) இறைச்சித் தொழிற்சாலைகளையும் எலும்பு-எருத் தொழிற்சாலைகளையும், துணைப்பொருள்களைப் பதப்படுத்துவதற்குக் கொழுப்புச் சுத்திகரிப்புச் சாலைகளையும் நிறுவியுள்ளன.

## கூட்டுறவு முறையில் முட்டை ஏற்றுமதி

கூட்டுறவுப் பால்பண்ணைகளின் வெற்றியும், பன்றி இறைச்சித் தொழிற்சாலைகளின் வெற்றியும் கூட்டுறவு முறைகளில் முட்டைகளின் தரக்கட்டுப்பாடு, மொத்த விற்பனை ஆகியவைகளின் வாயிலாக ஏற்படக்கூடிய அதிகமான வருவாய் வாய்ப்பிற்குக் குடியானவர்களின் கண்களைத் திறந்தன. 1895ஆம் ஆண்டில், குடியானவர்கள் தாங்களே முட்டைகளைச் சேகரித்து, சேமித்து, விற்பனை செய்வதற்கு ஜட்லண்டு பிரதேசத்தில், டேனிஷ் கூட்டுறவு முட்டை ஏற்றுமதிச் சங்கத்தை அமைத்தனர். 1900ஆம்

ஆண்டில், அச் சங்கம் கோபன்ஹேகன் நகரில் தன் அலுவலகத்தை அமைத்தது. அது நாடு முழுவதிலும் கிளைகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு கிளைக்கும் ஒரு தனிப்பட்ட எண் உள்ளது. அதே மாதிரியாக, அடையாளப்படுத்துவதற்காக ஒவ்வோர் உறுப்பினரும் ஓர் எண் கொடுக்கப்படுகிறார். உள்ளூர்க் கிளைகள் இம் மையச் சங்கத்தின் உறுப்பினர்களாவர். கிளைகள், தங்கள் உறுப்பினர்களிடமிருந்து முட்டைகளைச் சேகரித்த பிறகு, அவற்றைத் தரம் பிரித்தற்காகவும், சிப்பங் கட்டுதலுக்காகவும், மையச் சங்கத்தின் மிக அருகிலுள்ள சிப்பங்கட்டும் கேந்திரத்திற்கு (Packing Centre) அனுப்பி வைக்கின்றன. இக் கேந்திரங்களில் முட்டைகள் சுத்தப்படுத்தப்பட்டுப் பரிசோதிக்கப்பட்டு, எடைக்கு ஏற்றவாறு தரப்படுத்தப்பட்டு இடப்பெயர்வுக்காகச் சிப்பங் கட்டப்படுகின்றன. ஒவ்வொரு முட்டையின்மீதும், கிளைகளால் ஏற்கெனவே முத்திரையிடப்பட்ட இரண்டு எண்களுக்கு அடுத்தபடியாக மையச் சங்கத்தின் வர்த்தகக் குறியுங்கூட முத்திரையிடப்படுகிறது. இவை யாவும், நல்ல தரமுள்ள முட்டைகள் மட்டுமே பிரிட்டிஷ் அங்காடிக்குப் போவதை உறுதிப்படுத்துகின்றன. தங்கள் முட்டைகளின் தரத்திற்கேற்ப, குடியானவர்களுக்குப் பணம் பட்டுவாடா செய்யப்படுகின்றது. இச் சங்கம் பிரிட்டிஷ் அங்காடியில் தனக்காக ஒரு நற் பெயரைச் சம்பாதித்துள்ளது; முட்டைகளின் விற்பனையும், வெகுவாக அதிகரித்துள்ளது. டேனிஷ் கூட்டுறவுக் கழகம் முட்டை ஏற்றுமதி அனைத்தில் 42 சதவீதத்திற்காகப் பொறுப்பாளியாக இருந்தது. 1969ஆம் ஆண்டில், டேனிஷ் கூட்டுறவு முட்டை ஏற்றுமதிக் கழகத்திற்கு இணைக்கப்பட்டிருந்த 7 முட்டை ஏற்றுமதிச் சங்கங்களிருந்தன. கூட்டுறவு முட்டை ஏற்றுமதி வர்த்தகம் 176 மில்லியன் கிரோனருக்கு (Kroner) உயர்ந்திருந்தது. ஆனால், அது அண்மையாண்டுகளில் வீழ்ச்சி அடைந்துள்ளது. ஆயினும், கூட்டுறவு முயற்சியானது, டேனிஷ் முட்டை வர்த்தகத்தில் ஒரு புரட்சியை உண்டுபண்ணி உற்பத்தியாளருக்கு மிக உயர்ந்த விலையை ஏற்பாடு செய்துள்ளது. அது தனியார் வர்த்தகர்களைத் தங்கள் தரங்களை உயர்த்துவதற்குங் கூடக் கட்டாயப்படுத்தியுள்ளது.

## இதர வகைச் சங்கங்கள்

டென்மார்க்கில் இதரவகைக் கூட்டுறவு நிறுவனங்களுள் முக்கியமானவை, நுகர்வோர் நிறுவனங்கள், வீடுகட்டும் சங்கங்கள், கடன் நிறுவனங்கள் ஆகியவையாகும். அவற்றுள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஒரு சுருக்கமானகுறிப்பு வருமாறு:

(i) இராக்டேல் வகையான நுகர்வோர் சங்கங்கள் டென் மார்க்கில் ஒவ்வோரிடத்திலும், பட்டினங்களிலும், கிராமங்களி லும் காணப்படுகின்றன. எல்லா டேனிஷ் குடும்பங்களில் $\frac{1}{3}$-க்கு மேலாக, ஒரு நுகர்வோர் சங்கத்தின் உறுப்பினர்களாக உள்ளனர் அவர்கள், தங்களுக்குக் கூட்டுச் சொந்தமான அங்காடியில் அதிகமாகவோ சிறு பாகமாகவோ பொருள்களை வாங்குகின்றனர். முதலாவது நுகர்வோர் கூட்டுறவுச் சங்கம் 1866ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. 1894ஆம் ஆண்டிற்குள், சங்கங்களின் எண் ணிக்கை 119-க்கு உயர்ந்தது. 1967ஆம் ஆண்டில், 1813 நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகளிருந்தன. அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 7,50,000 ஆக இருந்தது. மொத்த விற்பனைப் புரள்வு 2,875 கிரோனராக இருந்தது. 1896ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட டேனிஷ் கூட்டுறவு மொத்த விற்பனை நிறுவனம் நாடனைத்தின் தேவைகளைப் பூர்த்தி செய் கிறது. பல்வேறு நுகர் பொருள்களை உற்பத்தி செய்வதற்காக அது தனிப்பட்ட இலாக்காக்களைப் பெற்றுள்ளது. உற்பத்தி யாளர்களிடமிருந்து கூட்டாக அது கொள்முதல் செய்து அவற் றைப் பண்டசாலைகளுக்குக் குறைந்த விலையில் வழங்குகின்றது. 1967ஆம் ஆண்டில் எல்லா நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த வர்த்தகப் புரள்வு 3,670 மில்லியன் கிரோனராக இருந்தது. அது, நாட்டின் சில்லறை வர்த்தகத்தில் சுமார் 14 சதவீதத்தைக் கொண்டிருந்தது. நுகர்வோர் இயக்கம் பெரும் பாலும் இயல்பில் கிராம இயக்கமாக உள்ளது. அது விவசாய இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. கிராமப் பண்டசாலைகள் மொத்த விற்பனைச் சங்கத்தில் ஒரு பெரும்பான்மை யைப் பெற்றுள்ளன.

(ii) **வீடுகட்டும் சங்கங்கள் :** கடந்த சில பத்தாண்டுகளில் டேனிஷ் கூட்டுறவுச் செல்வாக்கு மாபெரும் முன்னேற்றத்தை அடைந்துள்ள துறைகளுள், வீடுகட்டுதலும் ஒன்றாகும். டென் மார்க்கிலுள்ள 15 மில்லியன் வீடுகளில், 10 சதவீதமுள்ள வீடுகள் கடந்த 24 ஆண்டுகளின்போது கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கத் தால் கட்டப்பட்டுள்ளன. இவையாவும், மக்கள் நிறுவனங் களின் முன்முயற்சியால் இலாபமற்ற அடிப்படையின்மீது மேற் கொள்ளப்படுகின்றன. அவை பெரும்பாலும் செங்கல் தயாரிப் பாளர்கள், தச்சர்கள் முதலியவர்களால் அமைக்கப்பட்டுள்ளன. அவை பொதுமக்களிடமிருந்தும், பொதுமக்கள் பாதி சேர்ந் துள்ள நிறுவனங்களிலிருந்தும், வீடுகட்டும் ஒப்பந்தங்களை மேற் கொள்கின்றன. அத்தகைய சங்கங்கள், 80-க்கும் மேலாக உள்ளன. அவை ஒரு கூட்டமைப்பைக்கூட அமைத்துள்ளன.

**(iii) கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள்:** முன்னர்க் கூறப்பட்டபடி, டென்மார்க்கில் கடன் கூட்டுறவுச் சங்கங்கள் ஓர் இரண்டாவதான பங்கை மட்டுமே ஏற்கின்றன. இக் கடன் கழகங்கள் அசல் கூட்டுறவு நிறுவனங்களாக உள்ளன. ஏனென்றால், இலாபத்தின் எந்தப் பகுதியும், குறைந்த வட்டி வடிவில் கடன் வாங்கினவர்களுக்குத் தவிர ஏனையவர்களுக்குப் போகிறதில்லை. அச் சங்கங்கள், 1950ஆம் ஆண்டில் சில வழிகாட்டிக் கொள்கைகளை விதித்த ஒரு தனிச்சட்டத்தின்கீழ் அமைக்கப்படலாயின. பிரஷியன் (Prussian) மாதிரி 'லேண்ட் சாஃபன்' (Landschaffen) அடிப்படையின்பேரில் அவை அமைக்கப்பட்டன. முதன்மையான நிதியாதாரம், கடனீட்டுப் பத்திரங்களின் விற்பனையின்மூலம் பெறப்படுகின்ற பணமாகும். அவைகளுக்குப் பங்குமூலதனம் கிடையாது. அவை வைப்புகளையும் ஏற்றுக்கொள்கிறதில்லை. கழகத்திற்கு அடைமானம் செய்யப்பட்ட எல்லா நிலங்களின்மீதுள்ள ஓர் ஈடும், மற்றும், ஒவ்வோர் கடன் வாங்கினவர் மீதுள்ள 60 சதவீதம் கூடுதலான ஒரு பொறுப்பும் கடனீட்டுப் பத்திரங்களுக்கு ஆதாரமாகவுள்ளன. அக் கழகங்களால் அளிக்கப்படும் கடன்கள், குடியானவர்களின் நிலத்தையும் கட்டடங்களையும் அபிவிருத்தி செய்வதற்குப் பயன்படுகின்றன. அவை விவசாயப் பொருளாதார அமைப்பில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. மொத்த அடைமானக் கடனில் 70 சதவீதத்திற்கு மதிகமாக இந் நிறுவனங்களும், சேமிப்பு வங்கிகளும் அளிக்கின்றன.

முக்கியத்துவத்தில் அடுத்தபடியானவை, சேமிப்பு வங்கிகளாகும். அவை வைப்பாளர்களுக்குச் சொந்தமான சுயநிர்வாக நிறுவனங்களாகும். ஒரு நூற்றூண்டிற்கு முன்னர், மதிப்பிற்குரிய ஒருசில குடிமகன்கள் தொடக்க மூலதனத்தை வழங்கினர். அது இதர உறுப்பினர்களின் வைப்புகளுக்காக ஓர் உத்திரவாதமாக அமைந்திருந்தது. இவ் வங்கிகள் உறுப்பினர்களிடமிருந்து வைப்புகளைப் பெற்று, அவற்றிற்காக வர்த்தக வங்கிகளிலுள்ள பொது வட்டி விகிதத்தைக்காட்டிலும் சிறிது உயர்வாகவுள்ள ஒரு வட்டி விகிதத்தைக் கொடுக்கின்றன. இவ்வாறு சேகரிக்கப்பட்ட தொகை பெரும்பாலும் விவசாயத் துறையில் கடனாக அளிக்கப்படுகின்றது. இப் பணத்தின் பெரும்பகுதி, சொத்து அடைமானத்தின் பேரில் அளிக்கப்படுகின்றது. ஆனால், சில சந்தர்ப்பங்களில் சுத்தக் கடன்களும் அளிக்கப்படுகின்றன. விதிக்கப்படும் வட்டிவீதங்கள் ஒப்பிடும்வகையில் குறைந்துள்ளவையாகவுள்ளன. இவ் வங்கிகளின் உபரி இலாபம் காப்புநிதிக்குக் கொண்டுபோகப்படுகிறது. அதில் எப் பகுதியும் உறுப்பினர்களுக்கு விநியோகிக்கப்

படுகிறதில்லை. இவ் வங்கிகள் மாபெருமளவு காப்பிருப்புகளைக் கொண்ட பலம் பொருந்திய நிறுவனங்களாக உள்ளன.

மேற்குறிக்கப்பட்ட சங்க வகைகள் மட்டுமன்றி, பெரு வாரியான ரொட்டித் தயாரிப்புக் கூட்டுறவுச் சங்கங்கள், செய்யப் பட்டுத் தயாராயிருக்கிற துணிகளுக்கான தையற்காரர்கள் கூட்டு றவுச் சங்கங்கள், கூட்டுறவுச் சிற்றுண்டிச் சாலைகள், நாட்டில் செலவழிக்கப்பட்ட மொத்த மின்சார சக்தியில் ஏறக்குறையக் கால்பாகத்தை வழங்குகின்ற கிராம மின்சாரக் கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுறவுச் சலவைச் சாலைகள், மருத்துவமனைகள் போன்ற உற்பத்திச் சங்கங்களும், இதரப் பலவகைச் சங்கங்களும் உள்ளன. விவசாயத் துறையில், இயந்திரக் கலப்பைகளையும், கருவிகளையும் கூட்டாக உபயோகிப்பதற்காகக் கூட்டுறவு இயந்திர நிலையங்கள், கூட்டுறவுக் கோழிப்பண்ணை நிலையங்கள், கூட்டுறவுக் கால்நடை விற்பனைச் சங்கங்கள், கூட்டுறவு விதைகள் வழங்கும் சங்கங்கள், பழ உற்பத்தியாளர்கள் கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டு றவு மாட்டுத் தீவனச் சங்கங்கள், கூட்டுறவு உர வகைகள் கொள் முதல் சங்கங்கள் போன்ற பல்வேறு வகையான சங்கங்களும் உள்ளன.

## கூட்டுறவுக் கல்வி

டேனிஷ் கூட்டுறவு இயக்க வெற்றிக்கான முக்கியக் காரணங்களிலொன்று உறுப்பினர் கல்வி வளர்ச்சிக்குக் கூட்டுறவு நிறுவனங்களால் அளிக்கப்படும் உயர் முக்கியத்துவமாகும். மக்கள் உயர்நிலைப்பள்ளிகள் (Folk HighSchools), விவசாயப் பள்ளிகள், வீட்டுப் பொருளாதார இயலுக்காக மகளிர் கிராமப் பள்ளிகள் ஆகியவை டென்மார்க்கு மக்களை ஓர் உயர்தர சமுதாயக் கல்விநிலைக்கு உயர்த்தியுள்ளன. அவை கூட்டுறவுக் கொள்கைகளைச் சரியாகப் புரிந்துகொள்வதற்கும், அவற்றைப் பயன்படுத்துவதற்கும் தேவைப்படும் பின்னணியைத் தயாரிப்பதில் ஒரு பெரும்பங்கை ஏற்றுள்ளன. டேனிஷ் கூட்டுறவு இயக்கத்தின் முன்னோடிகளில் பலர், மக்கள் உயர்நிலைப் பள்ளி களின் மாணவர்களாக இருந்தனர். அப் பள்ளிகள் கூட்டுறவு இயக்கத்தைத் தம் சொந்த மகவாகப் பெருமையுடன் பாவிக் கின்றன. எனவே, மிகப் பழங்காலத்திலிருந்தே, மக்கள்பள்ளி களும், கூட்டுறவு இயக்கமும் மிக நெருங்கிய ஒரு தொடர்பைப் பெற்றுள்ளன. அத் தொடர்பு இன்றுங்கூடப் பராமரிக்கப்படு கிறது. மக்கள் பள்ளிகளின் எண்ணிக்கை அண்மையாண்டுகளில் பெருமளவு அதிகரித்துள்ளது. அவை முன்பைவிட இன்று மிக

நேரடியாகக் கூட்டுறவுச் செய்தியைக் கற்பிக்கின்றன. இப் பள்ளிகளில் கூட்டுறவு மாநாடுகளும், கூட்டங்களும் அடிக்கடி நடத்தப் படுகின்றன. அவை மக்களுக்குப் பொதுக் கல்வியையும், தொழில்நுட்பக் கல்வியையும் அளிக்கின்றன. 1932ஆம் ஆண்டில் மிடில் ஃபோர்ட் (Middle Fort) என்ற ஊரில் டேனிஷ் கூட்டுறவுக் கல்லூரி, டேனிஷ் மொத்த விற்பனைச் சங்கத்தால் நிறுவப் பட்டது. அது கூட்டுறவுக் கருத்து, கூட்டுறவு இயல்பு ஆகிய வற்றின் ஓர் உண்மையான விளக்கத்துடன் நடைமுறைத் திறனை யும் போதிக்க முயல்கின்றது. மற்றும், பொதுக் கல்வித் தன்மை யான துறைகளிலும்கூட அது போதனை அளிக்கின்றது. கூட்டுற வியக்கத்தில் பணியாளர்களுக்காக அது 9 மாத அடிப்படைப்பாடப் படிப்பையும், அதிகாரிகளுக்காகவும் மைய நிறுவனங்களின் பணி யாளர்களுக்காகவும் குறுகியகாலப் பாடப்படிப்புகளையும் நடத்து கின்றது. அஞ்சல் வழிப் பாடப்படிப்புகளுங்கூடப் பயிற்சியாளர் களுக்காக நடத்தப்படுகின்றன. அதன் பொறுப்பில் ஒரு கல்லூரி அவை உள்ளது. கல்லூரி அவையின் உறுப்பினர்கள், மொத்த விற்பனைச் சங்கத்தாலும் மையக் கூட்டுறவுக் குழுவாலும், கூட்டு றவு மேலாளர் கழகத்தாலும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். டென் மார்க்கிலுள்ள இளங்குடியானவர் மன்றங்கள், இளைஞர்களின் ஆக்கபூர்வமான ஆர்வத்தைப் பெற்றுள்ளன. அதன் காரண மாகக் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி வசதிப்படுத்தப்படுகிறது.

## டேனிஷ் கூட்டுறவின் சில சிறப்பியல்புகள்

டேனிஷ் கூட்டுறவு இயக்கத்தின் ஒரு முக்கிய அம்சமானது, முன்னர்க் கூறப்பட்டபடி, அதற்கு அரசு தொடர்பு மிகச் சொற்ப மாக இருப்பதே. டென்மார்க்கில் கூட்டுறவுச் சங்கங்களைக் குறித்துச் சட்டம் கிடையா. அவைகளுக்கு ஒரு பொதுப்பதிவுங்கூட இல்லை; எவ்விதமான தனிப் பாதுகாப்பும் அல்லது மானியமும் அரசு அளித்ததில்லை. ஈட்டுறுதிச் சங்கங்களும், கடன் சங்கங்களும் போன்ற சில தனிவகையான கூட்டுறவுச் சங்கங்கள் மட்டுமே சில சட்டங்களுக்கு உட்பட்டுள்ளன. இச் சங்கங்கள் பொது மக்களிடமிருந்து வைப்புகளையும், நிதிகளையும் ஏற்பதால், அவற் றின் நடவடிக்கைகளை மேற்பார்வை செய்தலை அரசு அவசிய மாகக் கருதுகின்றது.

டென்மார்க்கில் கூட்டுறவு இயக்கம் தன்னிச்சையாகவும் இயல்பாகவும் வளர்ச்சியடைந்தது. அது முற்றிலும் சுயேச்சை யானதான ஒன்றாக உள்ளது. ஒரு கூட்டுறவுச் சட்டம் இல்லாம லிருந்தாலுங்கூடக் கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் சொந்தக்

கண்டிப்பான விதிமுறைகளை வைத்துள்ளன. அவை, தங்களுக்கும் தங்கள் உறுப்பினர்களுக்குமிடையே தங்களாலேயே விதித்துக் கொள்ளப்பட்ட கட்டுப்பாட்டு ஒழுக்கமாக அமைந்துள்ள கட்டுப் படுத்தும் ஒப்பந்தங்களைத் தொடங்கி வைத்துள்ளன. இவ்வொப்பந் தங்கள்தாம் கூட்டுறவுச் சங்கங்களின் வெற்றிக்குக் காரணமாக உள்ளன. சில முன்னோடிகளைத் தவிர, இவ் வெற்றிக்கான பெருமை பொதுவாக உறுப்பினர்களின் முயற்சிகளையும், தங்கள் சங்கங்களிடம் உறுப்பினர்களிடையேயுள்ள விசுவாச உயர் உணர்ச்சியையும் முதன்மையாகச் சாரும்.

தொடக்கத்தில் குறிக்கப்பட்டபடி, டேனிஷ் கூட்டுறவு ஓர் உயரளவு சிறப்புத்தேர்ச்சி இயல்பைக் கொண்டது. பலநோக்குக் கொள்கையைவிட, ஒரு நோக்குக் கொள்கையையே அது அடிப் படையாகக் கொண்டுள்ளது. டேனிஷ் கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு பரவலாக்கப்பட்ட, சிறப்புத்தேர்ச்சி நடவடிக்கையில் நம்பிக் கையை வைத்துள்ளன. கூட்டுறவு நடவடிக்கையின் ஒவ்வொரு கிளையும் தன் சொந்த மண்டலக் கூட்டமைப்புகளையும், தேசியக் கூட்டமைப்புகளையும் வளர்ச்சி செய்துள்ளது. அத்தகைய சிறப்புத் தேர்ச்சிக் கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் நடவடிக்கை களைப் பெருக்குவதற்கு வகைசெய்து, பண்டங்களிலும், துணைப் பண்டங்களிலும் மிகவுயர்ந்த வாணிகத்தரத்தையும் குறைந்த உற்பத்திச் செலவையும் உண்டுபண்ணும் எல்லாப் பணிகளையும் ஆற்றுகின்றன.

கூட்டுறவு இயக்கம் பொதுவாக அரசிடமிருந்து எவ்வித நிதியுதவியையும் பெற்றதில்லை. கூட்டுறவுச் சங்கங்கள் கூட்டு றவு வங்கிகளிடமிருந்தும், வர்த்தக வங்கிகளிடமிருந்தும், மொத்த விற்பனைச் சங்கங்களிடமிருந்தும் தங்கள் நிதிகளைப் பெறுகின்றன. மற்றும், அவை பெருமளவிற்குத் தங்கள் சொந்த நிதியாதாரங் களின்மீது சார்ந்துள்ளன. தங்கள் அலுவல்களுக்காகத் தேவைப் படும் நடைமுறை மூலதனம், உறுப்பினர்களால் உத்திரவாதம் அளிக்கப்பட்ட கடன்கள்மூலம் எழுப்பப்படுகின்றன. விலை யுயர்ந்த இயந்திரங்களை அமைப்பதற்கான கடன்களைக்கூட வர்த்தக வங்கிகளிடமிருந்து சாதாரணமான நிபந்தனைகளின்மீது சங்கங்கள் பெறக்கூடும். உள்ளூர்ச் சங்கங்களும், தனிநபர் உறுப்பினர்களும் தங்கள் உத்திரவாதத்தைக் கூட்டாக உறுதி செய்கின்றனர். ஆனால், மையச் சங்கங்களில் ஒவ்வொரு சங்கமும் ஒரு குறிப்பிட்ட தொகைக்காகத் தன் உத்திரவாதத்தை உறுதி செய்கிறது. எனவே, டென்மார்க்கு நாடு ஒரு நல்ல நிதிமுறையை உருவாக்கியுள்ளது.

டேனிஷ் கூட்டுறவு, செய்முறைப் பயிற்சி அம்சத்தையுங் கொண்டுள்ளது. உறுப்பினர்கள் தங்கள் கூட்டுறவுச் சங்கங்களைக் காட்டிலும், அதிகமாகத் தங்கள் தொழிலின் தொழில்நுட்பச் செய்திகளைச் சிந்திக்கின்றனர். அவர்கள் பிரச்சாரத்தைவிடப் புதிய உறுப்பினர்களைக் கொண்டுவரும் செய்முறைப் பலன்களில் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

இயக்கம், சமயத்திற்கும் அரசியலுக்கும் நடுநிலையாகவுள்ளது.

உள்ளூர்ச் சங்கங்கள் இயக்கத்தின் முதுகெலும்பாக அமைந்துள்ளன. அவை தங்களைப் பல கூட்டமைப்புகளாக அமைத்துக் கொண்டாலும், அவை தங்கள் சுதந்திரத்தை விட்டுக்கொடுப்பதில்லை. மற்றும், பல்வேறு கூட்டமைப்புகளும் சுமுகமாகவே இயங்குகின்றன. உற்பத்தி, விற்பனை, விநியோகம் ஆகியவற்றிற்குச் சமமான கவனம் செலுத்தப்படுகின்றது. சங்கங்கள், மிக அண்மையானவை. அபிவிருத்திகளுடன் தொடர்பு வைத்துக் கொண்டு, உற்பத்தியைக் கூடுமானவரையில் ஏறக்குறையக் குறைவற்றதாகவும் நிறைவுள்ளதாகவும் வைக்கின்றன. அக் காரியத்திற்காக வல்லுநர்களை அவை நியமிக்கின்றன.

## டேனிஷ் கூட்டுறவின் வெற்றிக்கான காரணங்கள்

கூட்டுறவுத் துறையில் டென்மார்க் அடைந்துள்ள வெற்றிக்கான காரணங்களில் ஏற்கெனவே குறிக்கப்பட்டவையன்றியும், பின்வருவனவும் குறிக்கப்படலாம்.

டென்மார்க்கு நாடு ஒரே இனமான ஒரு மக்கள்தொகையையும், நிலங்கள் பெருமளவு சிறு குடியானவர்களால் உடைமையாகக் கொண்ட நிலவுரிமை முறையையுங் கொண்ட, ஒரு சிறு நாடாகவுள்ளது. உழவுத்தொழில், கலப்பு வகையானது; அது மிகவுயர்ந்த அளவில் அபிவிருத்தி செய்யப்பட்டுள்ளது. மற்றும், டென்மார்க்கு மக்கள், கூட்டுறவு நடவடிக்கைகளுக்காக ஓர் இயல்பான மனம் படைத்தவர்கள். தொன்றுதொட்டு அவர்கள் தங்கள் கிராம அலுவல்களைப் பொதுவில் நிருவாகம் செய்வதற்குப் பழக்கப்பட்டுள்ளனர். மற்றும், ஒருவரோடொருவர் ஒத்துழைக்கவும் கற்றிருந்தனர். அவர்கள் செய்முறைப் பயிற்சி அம்சத்தைப் பெற்றிருந்தனர். சங்கங்கள் குடியானவர்களை மோதும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குத் தயாராகவுள்ளன. குடியானவர்களும் தங்கள் ஆராய்ச்சியின் பலன்களை நடைமுறைப்

படுத்துகின்றனர். ஆய்வையும், செய்முறையின் அபிவிருத்தியை யும் வசதிப்படுத்தும் வகையில் குடியானவர்கள் தங்கள் பண்ணைக் கணக்குகளை நன்றாக வைத்துள்ளனர்.

இயக்கத்தின் வெற்றிக்கான முதன்மையான ஒரு காரணம் பொதுக் கல்வி முறையாகும். இதன் பெருமை நாட்டின் பிரதம விவசாயப் பள்ளிகளையும், மக்கள் பள்ளிகளையும் சாரும்.

அனைத்திற்கும் மேலாக வெற்றிக்குக் காரணம், இயக்கத்தில் மக்கள் எடுத்துள்ள தீவிர அக்கறையும், அவர்களின் ஆர்வமும், சுயகட்டுப்பாடும், சங்கத்தினிடத்தில் விசுவாசமும் ஆகும். அவர்கள் கூட்டங்களுக்கும், சொற்பொழிவுகளுக்கும் தவறாமல் சென்று தங்கள் பிரச்சினைகளை விவாதிக்கின்றனர். இயக்கத்தின் பரவலான தன்மையாலும், மக்கள்மீது அது கொண்டுள்ள பற்றினாலும் அந் நாடு 'கூட்டுறவு டென்மார்க்கு' என்று பெய ரெடுத்துள்ளது.

டேனிஷ் கூட்டுறவுச் சங்கங்கள், கலப்புவகைப் பண்ணைத் தொழிலைக்கொண்டும், விவசாய நடவடிக்கைகளுக்குக் கூட்டுற வைப் பயன்படுத்தியும் எவ்வாறு ஒரு சிறு குடியானவர்கள்கூட ஆண்டு முழுவதிலும் வருமானத்தைப் பெறக்கூடுமென்றும், செழிப்பாக இருக்கக் கூடுமென்றும் செயல்விளக்கம் செய்துள்ளன. மற்றும், அவை எவ்வாறு சிறு குடியானவர்கள்கூடப் பெரிய நிலச் சொந்தக்காரரைப்போன்று சிக்கனமாக வாங்கவும், விற்க வுங்கூடு மென்பதையும் காண்பித்துள்ளன. செய்பொருள்களைத் தரப்படுத்துவதன்மூலம், கூட்டுறவுச் சங்கங்கள் இதரத் தனியார் வர்த்தக நிறுவனங்களின்மீது நல்ல வகையானதொரு செல் வாக்கைச் செலுத்தியுள்ளன. டென்மார்க்கின் கூட்டுறவுச் சங்கங்கள் பற்றிய ஆழ்ந்த ஓர் ஆராய்ச்சியானது, நம் நாட்டிற்குப் பயன்தரவல்லது. ஏனென்றால், சிறு குடியானவர்களைக் கொண்ட தும், விவசாயத்தை மக்களின் பெரும்பான்மையான தொழி லாகக் கொண்டதுமாக நம் நாடு உள்ளது.

## (v) அமெரிக்க ஐக்கிய நாடுகள்
## (United States of America)

### அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம்

கூட்டுறவுக் கருத்தமைப்பு, அமெரிக்க ஐக்கிய நாடு களுக்கு — உண்மையில் அமெரிக்கக் கண்டத்திற்குத் தற்காலத்துக் கூட்டுறவுக் கொள்கைகள் இராக்டேல் முன்னோடிகளால் விளங்கச்

செய்யப்படுவதற்கு வெகுகாலத்திற்கு முன்பே, உள்நாட்டுப் பூர்வீக மானது என்று கூறப்படலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளில், இந்தியவாசிகள் தங்கள் வாடிக்கைகளைப் பெரிதும் ஒரு கூட்டுறவு அடிப்படையின்மீது அமைத்தனர். அவர்கள் தங்கள் சொத்துகளை ஒன்றுசேர்த்து அவற்றைச் சமுதாய முறையில் நிர்வகித்தனர். அம் முறையைக் கைவிடுவதற்கு அவர்களை அமெரிக்க அரசு கட்டாயப்படுத்தினவரை அவர்கள் அவ்வண்ணம் வாழ்க்கையை நடத்தினர். மேலும், அதிகமான ஒரு நவீன வடிவத்தில், வில்லியம் பிரின் (William Bryn) என்பவர் நியூயார்க் நகரில் 1830ஆம் ஆண்டில் ஒரு கூட்டுறவுத் தானியச் சேமிப்புக் கிடங்கை அமைத்தார். 1845ஆம் ஆண்டிற்குள், 'உழைப்பாளி மக்கள் பாதுகாப்புச் சட்டம்' (Working Men's Protection Society) பாஸ்டன் நகரில் அமைக்கப்பட்டது. அக் காலத்திலிருந்து, அம் மாதிரியான பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், மிகத் தொடக்கக் கூட்டுறவுக் கல்வியறிவுகூட இல்லாத காரணத்தால், அவை யாவும் தோல்வியுற்றன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான், உண்மையாகவே கூட்டுறவுக் கருத்துப் பரவி, அது பல்வேறு மக்கட் பிரிவுகளிடையே தன் நன்மைகளைப் பரப்பத் தொடங்கியது. கூட்டுறவு வளர்ச்சியை ஊக்குவித்த ஓர் அடிப்படையான காரணம், விவசாய உற்பத்தி உயர்ந்தும், விலைவாசிகள் குறைந்தும் இருந்தன என்பதே. பண்ணை விளைபொருள்களைச் சந்தை மையங்களுக்கு அனுப்பி வைப்பதற்காக இரயில்வே நிறுவனத்தால் விதிக்கப்பட்ட மிகவுயர்ந்த சரக்குக் கட்டணவிகிதங்களும் பண்ணை நில அடைமானங்களின்மீது வங்கித் தொழிலதிபர்களால் விதிக்கப்பட்ட உயர் வட்டிவிகிதங்களும், இயந்திரங்களுக்காகவும், விவசாயத் தேவைகளுக்காகவும் நுகர்பொருள்களுக்காகவும் வர்த்தகர்களால் விதிக்கப்பட்ட உயர்வான விலைவாசிகளும், பண்ணை விளைபொருள்களை நகர வர்த்தகர்களுக்கு விற்பனை செய்வதில் இடைத் தரகர்களால் ஈட்டப்பட்ட கொள்ளை இலாபங்களும், விவசாயிகளின் சிரமங்களை அதிகரிக்கச் செய்தன. 'கிரேன்ஞ்' (Grange), 'குடியானவர்களின் நேர்மை' (Farmers Equity), 'குடியானவர்களின் ஒன்றியம்' (Farmers Union) போன்ற ஏராளமான குடியானவர்களின் தொழிற்சங்கங்களும், அரசியல் நிறுவனங்களும் தோன்றின. அவை, உறுப்பினர்களின் பொருளாதார நிலைமையையும், சில சந்தர்ப்பங்களில் தம் சொந்த நிதியாதாரங்களையும், கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதன்மூலம் பலப்படுத்துவதற்கு முயற்சித்தன. ஆரம்ப நாள்களில், அவை கூட்டுறவு விற்பனையைவிட மேலான கூட்டுறவுக் கொள்முதலை வலியுறுத்தின. ஆனால், அவை வலிவுற்ற பிறகு, பண்ணை விளைபொருள்

களின் கூட்டுறவு விற்பனையானது அவற்றின் மிக முக்கியத் திட்டமாயிற்று. கூட்டுறவு விற்பனையை வளர்ச்சி செய்த ஒற்றையான பெருமையை அவை உரிமைகொண்டாட முடியாதானுலும், அவை இத் துறையில் ஒரு பாராட்டக்கூடிய பங்கைப் பெற்றிருந்தன. மற்றும், அமெரிக்காவில் குடிபுகுந்தவர்கள், தங்கள் சொந்த ஐரோப்பிய நாடுகளிலிருந்து, கூட்டுறவு முறையைப் பற்றிய ஒரு தெளிவான அறிவையும், நடைமுறை அனுபவத்தையும் தங்களுடன் கொண்டுவந்தனர். எனவே, கூட்டுறவானது, ஒரு சமுதாய உள்ளுறைப் பொருளைக்கொண்ட, ஒரு பொருளாதார நிறுவன வடிவத்தை ஏற்றது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவுச் சங்கங்கள், தற்போது நுகர்பொருள் விநியோகம், பண்ணை விளைபொருள்களின் விற்பனை, மின்சாரம், தொலைபேசி முதலிய பொருளாதார நிறுவனங்களின் மிக முக்கிய வடிவங்களனைத்தையும் தழுவுகின்றன. சேமிப்பு மற்றும், கடன் துறையைப் பற்றிச் சிறப்புக் குறிப்புச் செய்யப்படவேண்டும். 1964ஆம் ஆண்டில், அத் துறை, நாட்டில் மிக ஏராளமான சங்கங்களைக் கொண்டிருந்தது. 1964ஆம் ஆண்டில், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மொத்தத்தில் 35,777 சங்கங்களிருந்தன. அவற்றில் 4,60,10,190 உறுப்பினர்களிருந்தனர்.

## விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள்

**(i) விற்பனைக் கழகங்கள்** (Marketing Associations): கூட்டுறவு விற்பனைக் கழகங்கள் இதரவகைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கிடையே தலைமையிடம் கொண்டுள்ளது. அவை ஒரு பண்ட அடிப்படையில் அமைக்கப்படுகின்றன. ஏனென்றால், ஒரு கழகம் ஒரேமாதிரியான அக்கறைகளைக் கொண்ட விளைவிப்பவர்களைக் கொண்டிருந்தால் மட்டுமே — அதாவது, பொதுவான உற்பத்திப் பிரச்சினைகளையும், பொதுவான விற்பனைப் பிரச்சினைகளையும் கொண்டுள்ள விளைவிப்பவர்கள் — அது வெற்றிகரமாக இயங்கக்கூடும். எனவே, பால்பண்ணைப் பொருள்கள், தானியம், பருத்தி, எண்ணெய்ப் பொருள்கள், கால்நடை, கம்பளி, கோழி இனவகை, முட்டை, பழவகை, காய்கறிவகை முதலியவற்றிற்காகத் தனிப்பட்ட விற்பனைச் சங்கங்க ளுள்ளன. 1965ஆம் ஆண்டில், அத்தகைய கழகங்களின் மொத்த எண்ணிக்கை 7,835ஆக இருந்தது. மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 4.3 மில்லியன்களாகவும், மொத்த வர்த்தகப் புரள்வு 7411.1 மில்லியன் டாலர்களாகவும் இருந்தன.

**(ii) கூட்டுறவுப் பால்பண்ணை** : பால்பண்ணைப் பொருள்களின் கூட்டுறவு விற்பனையானது, மிகத் தொன்மையான நிறுவன வகையானதாகும். அவை வர்த்தகப் பருமம் கண்ணோட்டத்தில், மிக முக்கியமானவையாக உள்ளன. 1964-65ஆம் ஆண்டில், பால்பண்ணைச் செய்பொருள்கள் கழகங்களின் (Dairy Products Association) எண்ணிக்கை 1001ஆக இருந்தது. அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 2.94 இலட்சமாக இருந்தது. அவற்றின் மொத்த வர்த்தகப் புரள்வு 1370.3 மில்லியன் டாலர்களாக இருந்தது. பிராந்தியக் கழகங்களின் எண்ணிக்கை 289 ஆக இருந்தது. அவற்றின் வர்த்தகப் புரள்வு 2399.6 மில்லியன் டாலர்களாக இருந்தது. பால்பண்ணைத் துறையில் நான்குவிதமான கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. அவையாவன: உள்ளூர்ப் பாலாடைத் திரட்டுகள் (Cream Pools), உள்ளூர்க் கூட்டுறவுப் பாலாடைத் தொழிற்சாலைகள், கூட்டுறவு மையமாக்கப்பட்ட பாலாடைத் தொழிற்சாலைகள், வெண்ணெய் விற்பனை நிறுவனங்கள் ஆகும். முதல் வகையில், குடியானவர்கள் பாலாடையைச் சங்கத்திற்கு ஒப்படைக்கிறார்கள். மையமாக்கப் பட்ட வகையான ஒரு பாலாடைத் தொழிற்சாலைக்குப் பாலாடை வழக்கமாக விற்பனை செய்யப்படுகிறது. இரண்டாவது வகைக் கூட்டுறவுப் பாலாடைத் தொழிற்சாலைக்கு அதன் உறுப்பினர்கள் நாள்தோறும் இனிப்புப் பாலாடையை அல்லது முழுப்பாலை ஒப்படைக்கின்றனர். மூன்றாவது வகையில், சங்கங்கள் ஒரு பரவலான எல்லையிலிருந்து தங்கள் பொருள்களைப் பெறுகின்றன. நான்காவது வகைச் சங்கங்கள், வெண்ணெய் விற்பனையைச் செய்கின்றன. இவ் வகை நிறுவனம், உள்ளூர்ப் பாலாடைத் தொழிற்சாலைகளால் அமைக்கப்படுகின்றது. வெண்ணெய் விற்பனை பெரிய கூட்டமைப்பு நிறுவனங்களின் கையிலுள்ளது. பால் கழகங்களில், இரண்டு வகைகள் உள்ளன. ஒன்று, பாலைப் பெற்று அதைச் சில்லரை விற்பனையாளர்களுக்கு விநியோகிக்கின்றது. மற்றொரு வகை, வெறும் பேரம்பேசும் கழகமாக உள்ளது. அது பால் விநியோகத்தை வர்த்தகர்களுக்கு விட்டுவிடுகிறது. மேல் மட்டத்தில் 'கூட்டுறவுப் பால்பண்ணைகளின் தேசியக் கூட்டுறவுப் பால் உற்பத்தியாளர்கள் கூட்டமைப்பு' (National Co-operative Milk Producers Federation of Co-operative Dairies) உள்ளது. அது ஒரு வளர்ச்சி நிறுவனமாகவும், கல்வி நிறுவனமாகவும் செயற்படுகிறது.

**(iii) தானியக் கழகங்கள்:** தானியத்திற்கான பிரதமக் கூட்டுறவு விற்பனைக் கழகம், குடியானவர்கள் உறுப்பினர்களாக உள்ள உள்ளூர்க் கூட்டுறவு எலிவேட்டராகும் (Elevator).

தானியம் தயாராயிருக்கும்போது, குடியானவர்கள் அதை விற்பனைக்காவது, அல்லது தம்மிடமிருந்து மறு அறிவிப்புவரை தம் செலவில் சேமித்து வைப்பதற்காவது இச் சங்கத்திற்கு அனுப்பலாம். சேமித்து வைக்கும் காரியங்களுக்காகச் சங்கத்தால் எலிவேட்டர்கள் கட்டப்பட்டுள்ளன. அங்காடி விலைவாசி சாதகமாக இல்லாதிருந்தால், தானியத்தை உறுப்பினர்கள், உள்ளூர் எலிவேட்டரில் அங்காடிப் போக்குச் சாதகமாகும் வரை சேமித்து வைக்கின்றனர். சங்கங்கள் உறுப்பினர்களிடமிருந்தும், உறுப்பினரல்லாதவர்களிடமிருந்தும் தானியத்தை மொத்தக் கொள்முதல் செய்கின்றன. பின்னர், தானியம் முடிவிடக் கழகத்திற்கு (Terminal Association) அனுப்பப்படுகிறது. அந்தக் கழகம் தானியத்தை ஒரு தரகு அடிப்படையில் விற்பனை செய்கிறது. முடிவிடக் கழகமானது, உள்ளூர் எலிவேட்டர் சங்கங்களின் ஒரு கூட்டமைப்பாகும். அது பொதுவாக, ஓர் அங்காடிக் கேந்திரத்தில் தன் அலுவலகத்தைக் கொண்டது. முடிவிடக் கழகங்கள், சிகாகோ நகரில் தலைமை அலுவலகத்தைக் கொண்டுள்ள தானியக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பை (National Federation of Grain Co-operatives) அமைத்துள்ளன. அது ஏற்றுமதி அங்காடிகளை எதிர்பார்த்துள்ளது. இக் காரியத்திற்காக, அது தன் சொந்த அமைப்புகளை நிறுவியுள்ளது. அது உள்ளூர்த் தானியக் கழகத்திற்கும், முடிவிடக் கழகங்களுக்கும் கிரமமாக அங்காடி நிலவரங்களைத் தெரிவிக்கிறது. உள்ளூர்க் கழகங்களும், முடிவிடக் கழகங்களும் உறுப்பினர்களின் விதைகள், உரவகைகள் மற்றும் இதரத் தேவைகளை விநியோகம் செய்வதற்காகவுங்கூட ஏற்பாடு செய்கின்றன. 1964–65ஆம் ஆண்டில், இக் கழகங்களின் மொத்த எண்ணிக்கை 2,538ஆக இருந்தது. அவற்றின் வர்த்தகப் புரள்வு 2,143.6 மில்லியன் டாலர்களாக இருந்தது. அதே ஆண்டில், பிராந்தியக் கழகங்களின் எண்ணிக்கை 58 ஆக இருந்தது.

(iv) **பருத்தி, மற்றும் எண்ணெய்ப் பொருள்கள் கூட்டுறவுச் சங்கங்கள்** (Cotton and Oil Products Co-operative Societies): இச் சங்கங்கள் பருத்தியையும், எண்ணெய்ப் பொருள்களையும் விற்பனை செய்வதற்காக அமைக்கப்படுகின்றன. அவை அளவில் பலவிதமாக வுள்ளன. சில சங்கங்கள் ஒரு சிறிய எல்லையிலும், மற்றவை ஒரு மாநில முழுவதிலும் செயற்படுகின்றன. இவை, பருத்தியிலும் எண்ணெய்ப் பண்டங்களிலும் வாணிகஞ் செய்கின்றன. விற்பனையன்றியும், உற்பத்தி, பதப்படுத்துதல், விநியோகம் ஆகிய நடவடிக்கைகளையும் அநேக சங்கங்கள் மேற்கொண்டுள்ளன. அவை பருத்திக் கொட்டைகளிலிருந்து பஞ்சைப்

பிரிப்பதற்காக, பருத்திக்கொட்டையை நீக்கும் தொழிற்சாலைகளையும், சோயா பீன்சுகளுக்காக எண்ணெய் ஆலைகளையும் சொந்தமாக வைத்துள்ளன. சில சங்கங்கள் பருத்தி அமுக்குப் பொறிகளை (Compresser) நிறுவியுள்ளன. உயர்விளைச்சல் தரும் உயர்தர விதைகளை உற்பத்தி செய்வதிலும், விநியோகம் செய்வதிலும் சங்கங்கள் அக்கறை கொண்டுள்ளன. பெரிய சங்கங்கள் சேமிப்புக் கிடங்குகளையும், உர அமைப்புகளையும் சொந்தமாக வைத்துள்ளன. 'அமெரிக்காவின் பருத்திக் கூட்டுறவுக் கழகம்' (American Cotten Co-operative Association) என்று வழங்கப்படுகின்ற தங்கள் சொந்தத் தேசியக் கழகத்தைச் சங்கங்கள் அமைத்துள்ளன. இது கல்வி நடவடிக்கையிலும் வளர்ச்சி நடவடிக்கையிலும் ஈடுபட்ட ஒரு கூட்டமைப்பு நிறுவனமாகும். 1964–65ஆம் ஆண்டில், 295.4 மில்லியன் டாலர்கள் பெறுமானமுள்ள வர்த்தகப் புரள்வைக்கொண்ட 578 கூட்டுறவு விற்பனைக் கழகங்களும், 677.6 மில்லியன் டாலர்கள் பெறுமானமுள்ள வர்த்தகப் புரள்வைக்கொண்ட 29 பிராந்தியக் கழகங்களும் இருந்தன. அவை அமெரிக்காவின் பருத்திப் பயிரில் சுமார் 15 சதவீதத்தைக் கையாண்டன.

ஓர் உறுப்பினர் (i) சங்கத்திற்கு விளைபொருள்களை ஒப்படைத்து, உடனடியாக ரொக்கத்தைப் பெறலாம். அல்லது, (ii) பருத்தியைச் சங்கத்திற்கு ஒப்படைத்து, அதற்காக ரசீது பெற்று அங்காடி சாதகமாக இருக்கும்போது அதை விற்பனை செய்யலாம். அல்லது, (iii) தன் பருத்தியை இதர விளைவிப்பவர்களின் பருத்தியுடன் தொகுப்புச்செய்து, தொகுப்புவிலையைப் பெறலாம். குடியானவர்கள் தங்கள் விளைபொருள்களைச் சங்கத்திற்கு விற்பனை செய்வதற்கு முடிவு செய்தால், அவர்கள் தங்கள் பருத்தியின் தோராயமான அங்காடி விலையை, விளைபொருள்களை ஒப்படைக்கும்போது பெறுகின்றனர்.

விற்பனையாளருக்குச் செலுத்தப்படவேண்டிய விலையை நிர்ணயிக்கும்போது, சங்கம் விளைபொருள்களை விற்பனை செய்யக்கூடிய விலையைக் கவனத்தில் எடுத்துக்கொள்கிறது. அது, நடைமுறைச் செலவுகளுக்காகவும், காப்பிருப்புகளுக்காகவும் சில கழித்தல்களையுங்கூடச் செய்கின்றது. சங்கம் தன்னை எதிர்கால நட்டவச்சங்களிலிருந்து காப்பாற்றிக்கொள்வதற்கு, நட்டத் தடைப் பேர ஒப்பந்தங்களில் (Hedging Contracts) சேர்ந்துகொள்கின்றன. அவை கொள்முதல் செய்யும் பருத்தி, சேமிப்புக் கிடங்குகளில் சேமித்து வைக்கப்பட்டுப் பின்னர், தரப்படுத்தப்பட்ட பிறகு விற்பனை செய்யப்படுகின்றன. இச் சந்தர்ப்பங்களில்

தனிநபர் உறுப்பினர்களின் பருத்திக்கு ஒரு தனிப்பட்ட அடையாளம் கிடையாது. ஆனால், உறுப்பினர்களால் சங்கத்திற்கு ஒப்படைக்கப்பட்ட பருத்தியின் அளவிற்கேற்ப அவர்கள் ஆதரவு இலாப ஈவுகள் (Patronage devident) அளிக்கப்படுகின்றனர். இந்த இரண்டாவது முறையில், ஒவ்வோர் உறுப்பினரின் விளை பொருள்களின் அடையாளம் பராமரிக்கப்படுகிறது. அவற்றைக் கூட்டுறவுச் சங்கங்கள் முடிவிட அங்காடிகளில் உறுப்பினர்களின் செலவிலும், நட்டவச்சத்திலும் ஒரு பிரதிநிதியாகத் தரகுக்கு விற்பனை செய்கின்றன. ஒப்படைக்கப்படும் காலத்தில் பருத்திக்காக முன்பணம் கொடுக்கப்படுகிறது. எனினும், ஒவ்வோர் ஆண்டும் சூன் 30ஆம் நாளுக்கு முன்பு விற்பனை செய்வதற்கு உறுப்பினர் தம் விருப்பத்தைத் தெரிவிக்கவேண்டும். அந்த நாளுக்கப்பால் அதை வைத்திருப்பதற்குக் கூட்டுறவுச் சங்கம் கடமைப்பட்டிராது. எக் காலத்திலாவது பருத்தியின் விலை வீழ்ச்சியடைந்தால், கூட்டுறவுச் சங்கம் சம்பந்தப்பட்ட உறுப்பினரிடமிருந்து விளிம்பை வசூலிப்பதற்கு உரிமை பெற்றுள்ளது. மூன்றாவது முறையில் பல உறுப்பினர்களின் விளை பொருள்கள் நிர்ணயிக்கப்பட்ட தரங்கள் அடிப்படையில் தொகுப்பு அல்லது கலவை செய்யப்பட்டு, செலவுகளைச் செய்து விட்ட பிறகு உறுப்பினர்களுக்குச் சராசரிவிலைப் பட்டுவாடா செய்யப்படுகிறது. குடியானவர்களில் பலர் முதல்முறையை அதிகமாக விரும்புகின்றனர்.

**(v) கால்நடை விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள் :** கால்நடை விற்பனைக்காகவுங்கூட அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. உள்ளூர் மட்டத்தில் டிரக்கு வண்டிக் கூட்டுறவுச் சங்கங்களும் (Trucking Co-operatives), பெரிய எல்லைகளுக்கான பிராந்திய விற்பனை அமைப்புகளும் உள்ளன. டிரக்குவண்டிக் கூட்டுறவுச் சங்கங்கள் அங்காடிக் கேந்திரங்களுக்குத் தங்கள் கால்நடைகளை விற்பனைக் காரியத்திற்காகச் சும்மாய் அனுப்பிவைப்பதற்கு உறுப்பினர்களுக்கு உதவி செய்கின்றன. ஓர் ஏல அடிப்படையில் கால்நடைகளை விற்பனை செய்வதுகூட நாட்டில் சாதாரணமாக இருக்கிறது. அண்மை ஆண்டுகளில், கூட்டுறவுச் சிப்பங்கட்டும் இயந்திர அமைப்புகளும் (Co-operative Packing Plants), கால்நடை வெட்டும் தொழிற்சாலைகளும் தோன்றியுள்ளன. இக் கூட்டுறவுச் சங்கங்கள் கால்நடை வெட்டுதற்காகவும், இறைச்சி குளிர்பதனப்படுத்துதல், இறைச்சி குணப்படுத்துதல், இறைச்சி தீயிடுதல் முதலியவற்றிற்காகவும் ஏற்பாடு செய்கின்றன. இச் செய்பொருள்களை விற்பனை செய்வதற்காகவுங்கூட

அவை ஏற்பாடு செய்கின்றன. பெரிய அளவில் கால்நடை வெட்டுதலுக்காகவும், பதனப்படுத்துதலுக்காகவும், மையக் கூட்டுறவுச் சங்கங்களைக்கூட அவை நிறுவியுள்ளன. 1964–66ஆம் ஆண்டுகளில் 170.2 மில்லியன் டாலர்கள் வர்த்தகப் புரள்வைக் கொண்ட கால்நடைகளையும், கால்நடைப் பொருள்களையும் கையாளுகின்ற 436 உள்ளூர்க் கழகங்கள் இருந்தன. சிகாகோ நகரம் கால்நடைக்காக ஒரு தலைமையான விற்பனை மையமாக உள்ளது. சிகாகோவிலுள்ள தேசியக் கால்நடை விற்பனைக் கழக மானது, கால்நடைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கான தேசிய நிறுவன மாகும். அது கல்வி நடவடிக்கைகளிலும், வளர்ச்சி நடவடிக்கை களிலும் ஈடுபட்டுள்ளது.

**(vi) கம்பளிக் கூட்டுறவுச் சங்கங்கள்:** கம்பளி விற்பனை அமைப்பில் உள்ளூர்க் கழகங்களும், பிராந்தியக் கழகங்களும், மாநிலவாரிக் கழகங்களும், பாஸ்டனில் உள்ள தேசியக் கம்பளி விற்பனைக் கழகமும் உள்ளன. எல்லாப் பிராந்திய, மாநில ரீதிக் கழகங்களும், தங்கள் கம்பளியை உற்பத்தியாளர்களுடன் தொடர்புகொண்டுள்ள இந்தத் தேசியக் கழகத்தின்மூலம் விற்பனை செய்கின்றன. உள்ளூர்க் கழகங்கள் உறுப்பினர்களால் தயாரிக்கப் பட்ட கம்பளியைச் சேகரித்து, அதைப் பிராந்தியக் கழகங்களுக்கு அனுப்பிவைக்கின்றன. பிராந்தியக் கழகங்களில் கம்பளியானது பதப்படுத்தப்பட்டு ஒன்றுசேர்க்கப்பட்டுச் சேமித்து வைக்கப் படுகிறது. பிராந்தியக் கழகங்கள், கம்பளியை அதன் விற்பனையை ஏற்பாடு செய்யும் தேசியக் கழகத்திற்கு அனுப்புகின்றன. அவற் றால் தயாரிக்கப்பட்ட மொத்தக் கம்பளியில் கால்பாகம் கையாளப் படுகிறது. இக் கழகங்களுக்கு நிதி வழங்குவதற்காகத் 'தேசியக் கம்பளிக் கடன் கழகம்' (National Wool Credit Corporation) நிறுவப் பட்டுள்ளது. அது ஆட்டு ரோமம் வெட்டுவதற்கு முன்பாக முன்கடன்களையும், தயாரிப்பாளர்களிடமிருந்து பெற்ற கம்பளி யின்பேரில் கடன்களும் பிராந்தியக் கழகங்களுக்கு வழங்குகின் றது. 1964–65ஆம் ஆண்டில், 205 உள்ளூர்க் கழகங்களிருந்தன. 20.8 மில்லியன் டாலர்கள் பெறுமானமுள்ள மொத்த வாணிபத் தைக்கொண்ட 19 பிராந்தியக் கழகங்களு மிருந்தன.

**(vii) கோழி இன விற்பனையும், முட்டை விற்பனையும்:** இந் நடவடிக்கையுங்கூட ஒரு கூட்டுறவு அடிப்படையின் பேரில் மேற்கொள்ளப்படுகிறது. 20ஆம் நூற்றாண்டின் தொடக் கத்தில், கோழி இன வளர்ப்பும், முட்டை உற்பத்தியும் வர்த்தக அடிப்படையின்பேரில் மேற்கொள்ளப்பட்டன. 1964–65ஆம் ஆண்டில் இந் நடவடிக்கைக்காக 369 உள்ளூர்க் கூட்டுறவுக்

கழகங்கள் இருந்தன. அவற்றின் வர்த்தகப் பருமம் 170.2 மில்லியன் டாலர்களாக இருந்தது. 42 பிராந்தியக் கழகங்களு மிருந்தன. அவற்றின் மொத்த வர்த்தகம் 294.2 மில்லியன் டாலர்கள் பெறுமானத்திலிருந்தது. அவை அமெரிக்காவில் விற்பனை செய்யப்பட்ட மொத்த முட்டைகளில் சுமார் 12 முதல் 14 வரையான சதவீதத்தையும், கோழிக்குஞ்சுகளில் 40 முதல் 45 வரையான சதவீதத்தையும், டர்க்கிக் கோழிகளில் 14 முதல் 17 வரையான சதவீதத்தையும் கையாண்டன. முட்டைகள் பெருமளவு கீழ்த்திசை நாடுகளுக்கு அனுப்பப்படு கின்றன. அந் நாடுகளில் நேரடி விற்பனைகளை ஏற்படுத்துவதற்கு, 'பசிஃபிக் முட்டை உற்பத்தியாளர் கூட்டுறவுச் சங்கம்' (Pacific Egg Producers Co-operative Society) என்று வழங்கப்படும் ஒரு மையநிறுவனம் நியூயார்க் நகரில் நிறுவப்பட்டுள்ளது. சீட்டில் நகரத்திலுள்ள 'வாஷிங்டன் கூட்டுறவு முட்டை, கோழி இனக் கழகம்' (Washington Co-operative Egg and Poultry Association) ஒரு பரவலான எல்லையில் செயற்படும் ஒரு மையமான விற்பனை நிறுவனமாகும். அண்மையில், கூட்டுறவுக் கசாப்புக் கடைகள்கூட அமைக்கப்பட்டுள்ளன.

**(viii) பழவகைகள், காய்கறி வகைகள் விற்பனைக் கூட்டு றவுச் சங்கங்கள்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இயங்கும் எல்லா வகையான கூட்டுறவுச் சங்கங்களுள் இவை மிகப் பரவலாகப் பரவியுள்ள சங்கங்களாகவுள்ளன. மற்றும், அவை நாட்டில் மிக முக்கிய நிலையை வகித்துள்ளன. மேற்கு மாநிலங்களில், குறிப்பாகக் காலிஃபோர்னியாவிலுள்ள சங்கங்கள், தங்கள் சாறுள்ள பழங்களுக்காக உலகப் புகழை அடைந்துள்ளன. அவை, ஆப்பிள் பழங்கள், கிரேன் பேரிக்காய்கள் (Cran Berries) முதலியன போன்ற இதரச் சுவையுள்ள பழவகைகளையும், உருளைக் கிழங்குகள் போன்ற காய்கறிகளையுங்கூடக் கையாளுகின்றன. தொடக்கத்தில் அவை தரப்படுத்தல், சிப்பங்கட்டுதல், அங்காடி களுக்குப் பழங்களைக் கப்பல்மூலம் அனுப்பிவைத்தல் ஆகிய அலுவல் களைச் செய்தன. பின்னர், அவை மைய அங்காடிகளில் பண்டங் கள் விற்பனையை மேற்கொண்டன. அவை உறுதியான தரங் களையும், படித்தரங்களையும், ஒருபடித்தான சிப்பம் கட்டுதல் களையும் நிறுவுவதில் ஒரு பெயரைச் சம்பாதித்துள்ளன. சர்வ தேச அங்காடிகளில் தங்கள் பொருள்களுக்காக ஓர் உயர்ந்த புகழையும் அவை ஏற்படுத்தியுள்ளன. 'காலிஃபோர்னியா பழ வகைகள் விளைவிப்பவர்கள் கழகம்' (California Fruit Growers Exchange) மிகப் பெரிய கூட்டமைப்பு வகை விற்பனைக் கூட்டு றவுச் சங்கங்களில் ஒன்றாகும். அது தன் தலைமை அலுவலகத்தை

லாஸ் ஏஞ்சல்ஸ் (Los Angels) நகரத்திலமைத்து, காலிஃபோர்னியா நாட்டிற்குச் சேவை செய்கிறது. இக் கூட்டமைப்பில், 5,240 விளைவிப்பவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட 520 தன்னாட்சி உள்ளூர்ச் சிப்பங்கட்டும் கழகங்களுள்ளன. இவ் வுள்ளூர்க் கழகங்கள் 74 மாவட்டக் கழகங்களை அமைத்துள்ளன. இவையுங் கூடத் தன்னாட்சி உள்ளவையே. மாவட்டக் கழகங்கள் காலிஃபோர்னியா பழவகைகள் விளைவிப்பவர்களின் கழகமாகக் கூட்டமைக்கப்பட்டுள்ளன. பழவகைகள் விளைவிப்பவர்கள், பழவகைகளை வாங்குவதற்காக உள்ளூர்க் கழகங்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்கிறார்கள். உள்ளூர்க் கழகங்கள் அவற்றை நேரடியாக விற்பனை செய்வதற்கு உரிமையுள்ளவை. ஆனால், அவை மாவட்டக் கழகங்களின் அறிவுரைகளின்பேரில் அவ்வாறு செய்கின்றன. அவை பொதுவாகப் பழவகைகளை மாவட்டக் கழகங்களுக்கு வழங்குகின்றன. இம் மாவட்டக் கழகங்கள் மைய நிறுவனத்துடன் தொடர்பு கொண்டுள்ளன. மைய நிறுவனம் மொத்த விற்பனை வர்த்தகர்களுடன் வாணிபம் செய்கின்றது. அது விற்பனைக்கு ஏற்பாடும் செய்கிறது. அக் காரியத்திற்காக, அது முக்கிய அங்காடிக் கேந்திரங்களில் தம் சொந்தப் பிரதிநிதிகளை வைத்துள்ளது. அது நவீன விற்பனை முறைகளை உபயோகித்துத் தன் விற்பனைகளை உயர்த்திப் புதிய அங்காடிகளைக் கைப்பற்றுவதற்கு விரிவான பிரச்சாரத்தை நடத்துகிறது. வெளிநாட்டு அங்காடிகளில், அது விற்பனை முகவர்களுடன் நேரடியான வாணிபம் செய்கிறது. அது தன் சொந்தப் போக்குவரத்து இலாகாவைக் கொண்டுள்ளது. இந்த இலாகா, தன் வண்டிகளின் பயண வழிகளை நிர்ணயித்து எந்தக் கேந்திரத்திலும் தெவிட்டு நிலையை அல்லது பற்றாக்குறை நிலையைத் தவிர்க்கும்வண்ணம் விநியோகத்தை ஏற்பாடு செய்கிறது. நாடுமுழுவதிலும் அது தன் ஊதியம்பெறும் விற்பனைப் பிரதிநிதிகளை வைத்துள்ளது. அவர்களுடன் அது இடைவிடாத் தொடர்பை வைத்துள்ளது. ஒரு நல்ல விளம்பரம் செய்தல் முறையின்மூலம், அது தன் பழவகைகளுக்காக ஒரு கேட்பையும் உண்டுபண்ணுகிறது. பழவகைகளின் படித்தரப்படுத்தலுக்காக அது அதிக நடவடிக்கையை எடுத்துள்ளது. ஆரஞ்சுப் பழங்களுக்காக 'சன்கிஷ்ட்' (Sunkist), உலரவைத்த இலந்தைப் பழங்களுக்காக 'சன்சிவீட்' (Sunsweet), உலர்ந்த திராட்சைப் பழங்களுக்காக 'சன்மெய்ட்' (Sunmaid) போன்ற சிறப்பு வர்த்தகக் குறிகளை அது ஏற்படுத்தியுள்ளது. காலிஃபோர்னியா, அரிசோனா ஆகிய நாடுகளின் மொத்தப் பழவகைகள் உற்பத்தி வர்த்தகத்தில் அது சுமார் 75 முதல் 90 சதவீதத்தைக் கையாளுகிறது. அது வர்த்தகத்திலிருக்கும் தேவையற்ற இடைத்தரகர்களை அகற்றி, குளிர்பதனத் தகரப் பெட்டிகள், விஞ்ஞான

ரீதியான தரப்படுத்துதல், சிப்பங்கட்டுதல், கப்பலேற்றுதல் முதலியன போன்ற அநேக புதுமைகளைத் தொடங்கிவைத்துள்ளது. மையக் கழகம், கொள்கைகளை நிர்ணயித்து, உள்ளூர்க் கழகங்களுக்குப் பல்வேறு அங்காடிகளிலிருக்கும் கேட்பு நிலைமையை அறிவிக்கின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள இதரக் கூட்டமைப்புகள், தங்கள் முக்கிய நடவடிக்கைகளில் காலிஃபோர்னியா கழகத்தைப் பின்பற்றுகின்றன.

புகையிலை, அரிசி, சர்க்கரைப் பொருள்கள், தேன், உருளைக் கிழங்கு முதலியவற்றிற்காகவுங்கூடத் தனிப்பட்ட விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களுள்ளன.

**(ix) அமெரிக்க ஐக்கியநாடுகளில் விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களின் சிறப்பியல்புகள்:** அமெரிக்க ஐக்கிய நாடுகள், விவசாய விளைபொருள்களின் கூட்டுறவு விற்பனைக்கான மிகச் சிறந்ததும், நன்கு அமைக்கப்பட்டதும், வளர்ச்சியடைந்ததும், திறனுள்ளதுமான முறைகளில் சிறந்த ஒன்றாகக் காட்சியளிக்கிறது. நம்நாடு விவசாயக் கூட்டுறவு விற்பனைத் துறையில் இன்னும் அதிகமான முன்னேற்றத்தைச் செய்யவேண்டியிருப்பதால், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பின்பற்றப்படும் முறையைப் பற்றிய ஓர் ஆய்வு நமக்குச் சிறப்பு முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது. அமெரிக்க முறையின் ஒரு சிறப்புக்கூறு, ஓர் ஒற்றையான பண்டத்தில் சங்கங்கள் சிறப்புத் தோல்வியுறுகின்றன. இம் முறை, குடியானவர்களிடையே மேலான கூட்டுறவு அமைப்பிற்கும், திறனுக்கும் வழி செலுத்துகிறது. இரண்டாவதாக, கூட்டுறவுக் கழகங்கள் ஒரு பொது அமைப்பைப் பெற்றுப் பெரிய அலுவல்களைத் தழுவுகின்றன. பிரதய மட்டத்தில், உள்ளூர்க் கழகங்களும், உயர் மட்டத்தில் மாவட்டக் கழகங்களும், தலைமை மட்டத்தில் மைய நிறுவனங்களும் உள்ளன. மைய நிறுவனமானது தனக்குக் கீழேயுள்ள கழகங்களுக்குத் தேவையான வழிகாட்டுதலை வழங்குகின்றது. மூன்றாவதாக, ஒருசில உள்ளூர்க் கூட்டுறவுக் கழகங்கள் போதுமான விளைபொருள்கள் பருமத்தை நிச்சயப்படுத்தும்பொருட்டுத் தங்கள் உறுப்பினர்களிடமிருந்து விற்பனை ஒப்பந்தங்களைப் பெறுகின்றன. பல்வேறு மாநிலங்களிலுள்ள சட்டங்களும் இதை அனுமதிக்கின்றன. அவை, பொதுவாக மொத்தக் கொள்முதல் செய்து அதன் பின்னர் விற்பனை செய்கிறதில்லை. ஆனால், அவை ஒரு தரகுக்காக உறுப்பினர்களின் பிரதிநிதிகளாக மட்டுமே செயற்படுகின்றன. அவற்றில் பல, பதனப்படுத்தும் நடவடிக்கையையுங்கூட மேற்கொண்டுள்ளன. நான்காவதாக, அரசுங்கூடக் கூட்டுறவு விற்பனை

வளர்ச்சியில் தீவிர அக்கறைகொண்டு, கூட்டுறவுக் கழகங்களுக்குப் பல்வேறு வழிகளில் உதவி செய்து வந்துள்ளது. மாநிலங்களில் வேளாண்மை இலாகாவும், கூட்டரசின் (Federal Government) வேளாண்மை இலாகாவும், மாநில விவசாயக் கல்லூரிகளும் விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கும் பணியில் குடியான வர்களை ஊக்குவித்து வந்துள்ளன. 1929ஆம் வருடத்திய விவசாய விற்பனைச் சட்டத்தின்கீழ், அரசு ஒரு கூட்டாட்சிப் பண்ணைவாரியத்தை (Federal Farm Board) அமைத்துள்ளது. பண்ணை விளைபொருள்களின் கூட்டுறவு விற்பனைக்கு உதவிபுரிந்து, வளர்ச்சி செய்தல் இவ் வாரியத்தின் பணியாகும். கூட்டுறவுக் கழகங்களுக்கு எல்லாவிதமான காரியத்திற்காகவும் ஒரு குறைந்த வட்டிவீதத்தில் 20 ஆண்டுகள் வரை நீடிக்கும் காலவரைகளுக் காகக் கூட்டுறவுக் கழகங்களுக்கு முன்கடன்கள் அளிப்ப தற்காக இவ் வாரியத்திற்கு அரசு 500 மில்லியன் டாலர்களைக் கொண்ட ஒரு சுழலும் நிதியை (Revolving Fund) வழங்கி யுள்ளது. இக் கடன்கள் மூலதன முதலீட்டிற்காகவும், நடை முறை மூலதனத்திற்காகவுங்கூடக் கிடைக்கின்றன. 1933ஆம் ஆண்டில், புதிதாக ஏற்படுத்தப்பட்ட 'பண்ணைக் கடன் நிர் வாகம்' (Farm Credit Administration) இவ் வாரியத்தின் பணி களை ஏற்றுக்கொண்டது. மற்றும், வேளாண்மை இலாகாவி லுள்ள விவசாயப் பொருளியல் பற்றிய நிலையத்தின் மூலமாகவும், மாநிலத்து விவசாயக் கல்லூரிகள் மூலமாகவும் அரசு, வல்லுநர் ஆராய்ச்சியையும், ஆலோசனை வழிகாட்டுதலையும் வழங்கிற்று. ஒவ்வொரு துறையிலும், கூட்டுறவுக் கழகங்களின் நடவடிக்கைகளை ஒருமைப்படுத்தும்பொருட்டுக் கூட்டாட்சிப் பண்ணை வாரியம், 1929–30ஆம் ஆண்டில், 6 தேசியப் பண்ட விற்பனை நிறுவனங் களையும், ஒரு சேவை அமைப்பையும் அமைத்தது. அவை இன்றுங் கூடச் செயற்பட்டுக் கொண்டுள்ளன. கூட்டுறவு விற்பனைக் கழகங் களைப் பதிவு செய்வதற்காகவும், அவற்றின் சரியான செயற் பாட்டிற்காகவும் பல மாநிலங்கள் தனிப்பட்ட கூட்டுறவுச் சட் டங்களை நிறைவேற்றியுள்ளன.

(அ) **கொள்முதல் கழகங்கள்:** இக் கழகங்களின் முக்கியப் பணியானது, பண்ணைக் காரியங்களுக்காக விவசாயத் தேவைகளை வழங்குதலாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இக் கழகங்கள் சாதாரணமாக நுகர்வோர் சங்கங்களுடன் தொகுப்புச் செய்யப்படு கின்றன. ஏனென்றால், அவையுங்கூட மளிகைச் சரக்குகள், வீட்டுக் கருவிகள் மற்றும் இதர நுகர்பொருள்கள் போன்ற அன்றாடத் தேவைகளுக்கான பொருள்களை வழங்குகின்றன. இக் கழகங் களின் நிறுவன அமைப்புப் பாணி பெரும்பாலும் விற்பனைக்

கழகங்களைப்போன்று அதே மாதிரியாக உள்ளது. மைய நிறுவனங்களும், கூட்டாட்சி நிறுவனங்களும் அமைக்கப்பட்டன. கொள்முதல் கழகங்கள் இவ் வுயர் மட்டத்து நிறுவனங்களின் உறுப்பினராக உள்ளன. அவை உற்பத்தி நடவடிக்கையையும், பதனப்படுத்தும் நடவடிக்கையையுங்கூட ஏற்றுள்ளன. வேளாண்மை இயந்திரமய மாக்கப்பட்டபோது, அவை ஆவி (Gas), எண்ணெய் வழங்குதலையும் மேற்கொண்டன. பின்னர், தாங்களே இப் பொருள்களை உற்பத்தி செய்தலை மேற்கொண்டன. கொள்முதல் கழகங்களில் சில, கூட்டுறவு மன்றத்தில் (Co-operative League) உறுப்பினர்களாகவுங்கூட உள்ளன. இம் மன்றம், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நுகர்வோர் கூட்டுறவு வளர்ச்சியில் பிரதானமான அக்கறைகொண்ட ஒரு தேசிய நிறுவனமாகும். கொள்முதல் கழகங்கள், மொத்த விற்பனை வர்த்தகத்தை மட்டுமன்றி, சில்லரை விற்பனை வர்த்தகத்தையுங்கூடச் செய்கின்றன. இக் காரியத்திற்காக, அவை தங்கள் சொந்தப் பிரதிநிதிகளை நியமிக்கின்றன.

**(ஆ) கிராம சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள்:** இவை குடியானவர்களுக்குத் தங்கள் அன்றாட வாழ்க்கையில் பயனுள்ள சேவையைப் புரிகின்றன. அவற்றுள் முக்கியமானவை: ஈட்டுறுதியையும் தொலைபேசிச் சேவையையும், மின்சாரத்தையும், பாசன வசதியையும், நல்வாழ்வுத்துறைப் பணிகளையும் வழங்குகின்ற சங்கங்களாகும். ஈட்டுறுதிச் சங்கங்கள் பெரும்பாலும் தீ ஈட்டுறுதியில் அக்கறை கொண்டுள்ளன. மற்றும், சில சந்தர்ப்பங்களில் கால்நடை இழப்பு, விபத்து, புயற்காற்று ஆகியவற்றிற்காகவும் அவை ஈட்டுறுதியை மேற்கொள்கின்றன.

கிராம மின்வளக் கூட்டுறவுச் சங்கங்கள் (Rural Electric Co-operatives) மின்சார விநியோகத்தைக் குறித்த பண்ணைத் தேவைகளை நிறைவுசெய்யும்பொருட்டு அமைக்கப்பட்டன. அமெரிக்காவில் பண்ணை அமைவிடங்கள் கிராமங்களில் மட்டுமிருப்பதில்லை. பல்வேறு இடங்களில் அவை சிதறுண்டு கிடந்தன. எனவே, வர்த்தகக் கம்பெனிகள், பெரும் செலவில் பண்ணை அமைவிடங்களில் மின்சார வசதி அமைத்தலைச் சிறிய இலாப விளிம்புடன் மேற்கொள்வதற்கு விருப்பமில்லாமலிருந்தன. குடியானவர்களும், இக் காரியத்திற்காகத் தேவையான மூலதனத்தைப் பெறக்கூடவில்லை. 1935ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட கிராம மின்சார வசதி அமைக்கும் நிருவாகம் (Rural Electrification Administration) இக் காரியத்திற்கான கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கும் பணியை மேற்கொண்டது. அப் பணி

யில் அது பாராட்டுதலுக்குரிய பலன்களையும் விளைவித்தது. அத் தருணத்திலிருந்து கூட்டுறவுச் சங்கங்களில் ஒரு விரைவான விரி வாக்கம் ஏற்பட்டது. 1950ஆம் ஆண்டில், மின்சார விநி யோகத்திற்காக 980 கூட்டுறவுச் சங்கங்க ளிருந்தன. அவை ஏறத்தாழ 86 சதவீதக் குடியானவர்களுக்கு மின்சார வசதியளித் தது. கிராம மின்சார வசதி அமைக்கும் நிருவாகம் இச் சங்கங் களுக்கு மூலதனச் செலவுகளுக்காகவும் நடைமுறைச் செலவுகளுக் காகவும் கடன்கள் அளிக்கின்றது. இச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பான 'தேசியக் கிராமிய மின்வளக் கூட்டுறவுக் கழகம்' (National Rural Electric Co-operative Association) ஒரு வளர்ச்சி நிறுவனமாகவும் கல்வி நிறுவனமாகவும் செயற்படு கின்றது.

தொலைபேசி, போக்குவரத்து, சுகாதாரம் போன்ற பிற சேவைகளுக்காகவுங்கூட ஒருசில சங்கங்கள் உள்ளன. அவை மக்களுக்குப் பயனுள்ள சேவையைப் புரிகின்றன. சுகாதாரச் சங்கங்கள் குடியானவர்களுக்கு மருத்துவச் சேவையையும், மருத்துவமனைச் சேவையையும் வழங்குகின்றன.

**(இ) விவசாயக்கடன்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவுக் கடன்முறை உள்ளிட்ட விவசாயக் கடன்முறையனைத் தும் பண்ணைக் கடன் நிர்வாகத்தின் (Farm Credit Administration) பொறுப்பிலுள்ளது. இந்தப் பண்ணைக்கடன் நிருவாகம், 1933ஆம் ஆண்டில், குடியானவர்களுக்கும், குடியானவர் கூட்டுறவுச் சங்கங் களுக்கும் கடன்கள் வழங்குவதற்காக அரசால் அமைக்கப்பட்டது. அது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வேளாண்மை இலாகாவின்கீழ் உள்ளது; அது ஒரு சுதந்திர அந்தஸ்தையுங்கொண்டது. நான்கு தனிப்பட்ட நிதி நிறுவனங்கள்மூலமாக அது செயற்படுகின்றது. அவையாவன: நிலவங்கி (Land Bank), இடைநிலைக் கடன்வங்கி (Intermediate Credit Bank), உற்பத்திக் கடன் கழகம் (Production Credit Corporation), கூட்டுறவுச் சங்கங்களுக்கான வங்கி (Bank for Co-operatives) ஆகியவை. நிதிவசதிகள் அளிப்பு, கூட்டுறவுச் சங்கங்களுக்கு உதவியையும் வழிகாட்டலை யும் வழங்குதல் உட்பட, விவசாயத்தைக் குறித்த எல்லாப் பிரச்சினைகளையும் கவனிக்கும் ஒரு தேசிய நிறுவனமாக அது உள்ளது.

1916ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட கூட்டாட்சி நிலவங்கி (Federal Land Bank) தனிநபரான குடியானவர்களுக்கு நீண்ட காலக் கடன்கள் வழங்குகின்றது. அது, 12 பிராந்திய வங்கிகள் **மூலமாகவும்**, 'தேசியப் பண்ணைக் கடன் கழகங்கள்' என்று வழங்கப்

படும் 1,200 உள்ளூர்த் துணைக் கழகங்கள் மூலமாகவும் செயற்படுகின்றது. நீண்டகாலக் கடன் தேவைப்படுகின்ற குடியானவர்கள் உள்ளூர்க் கழகத்தின் உறுப்பினர்களாகச் சேர்ந்து தங்களுக்குத் தேவைப்படும் கடனில் 5 சதவீத அளவிற்குப் பங்குகளை எடுக்கின்றனர். இந்த உள்ளூர்க் கழகங்கள் பிராந்திய வங்கிகளிடமிருந்து நிதிகளைப் பெறுகின்றன. அவையுங்கூடப் பிராந்திய வங்கிகளில் பங்குகள் எடுக்கின்றன. உள்ளூர்க் கழகங்களின் நிருவாகம், தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் இயக்குநர் குழுவின்மூலமாகக் கடன் பெறும் உறுப்பினர்களால் நடத்தப்படுகின்றது. கடன்கள் 30 ஆண்டுகள்வரை நீடிக்கும் ஒரு காலவரைக்காக நிலத்தின் இயல்பான விவசாய மதிப்பில் 65 சதவீதம்வரை வழங்கப்படக்கூடும். இக் கடன்கள்மீது விதிக்கப்படும் வட்டிவீதம் கூட்டாட்சி நில வங்கிக்கு விதிக்கப்படும் வட்டிவீதத்தைவிடச் சிறிது உயர்வாக உள்ளது. பிராந்திய வங்கியின் அங்கீகாரமின்றி, எக் கடனும் வழங்கப்படக்கூடாது. கூட்டாட்சி நிலவங்கியின் மூலதனம் அரசால் அளிக்கப்படுகின்றது. அது கடன்பத்திரங்களையும், கடனீட்டுப் பத்திரங்களையும்கூட வெளியிடுகின்றது. அது வர்த்தக வங்கிகளிடமிருந்தும், கூட்டாட்சிப் பண்ணை அடைமானக் கழகத்தினிடமிருந்தும் குறுகிய காலத்திற்காக நிதிகளைப் பெறுகிறது. இம் முறையானது, கூட்டுறவு முறையன்று. ஆயினும், அது கூட்டுறவு ஏற்பாட்டிற்குத் தோராயமாக உள்ளது. மற்றும், அது குடியானவர்களின் தேவைக்கு மிக நல்ல முறையில் நன்ருகப் பணிபுரிகின்றன.

1923ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட இடைநிலைக் கடன் வங்கி, கூட்டுறவுச் சங்கங்களுக்குக் குறுகிய காலத்திற்காக மறுகழிவு வசதிகளை வழங்குகின்றது. அது குடியானவர்களுடன் நேரடியாக நடவடிக்கை வைத்துக்கொள்வதில்லை. அது 12 பிராந்திய வங்கிகள்மூலமாகக் செயற்படுகின்றது. பிராந்திய வங்கிகள் பொது வங்கித்தொழில் அலுவல்களை நடத்துகிறதில்லை.

1933ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட உற்பத்திக் கடன் கழகம் (Production Credit Corporation) குடியானவர்களுக்குக் குறுகிய காலக் கடன்களை வழங்குவதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளது. அது, 12 பிராந்திய வங்கிகளையும், ஏராளமான உள்ளூர்க் கழகங்களையுங் கொண்டுள்ளது. இக் கழகம் கூட்டாட்சி நில வங்கியைப்போல் அதே மாதிரியான முறைகளில் இயங்குகின்றது.

கூட்டுறவுச் சங்கங்களுக்கான வங்கி, 1933 ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. அது குடியானவர்களின் கூட்டுறவுச் சங்கங்களுக்காக உத்தேசிக்கப்பட்டுள்ளது; 12 பிராந்திய வங்கிகளைக்

கொண்டது. குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மட்டுமே கடன்கள் வழங்கப்படுகின்றன; தனிநபரான குடியானவர்களுக்கு வழங்கப்படுவதில்லை. உள்ளூர்க் கழகங்கள் கிடையா. கடன் வாங்கும் கூட்டுறவுச் சங்கங்கள் பிராந்திய வங்கிகளில் தங்கள் கடன்தொகை வீதத்தில் — கடன் வாங்கப்பட்ட நிதிகளில் தோராயமாக 5 சதவீதம் வரை — பங்குகள் எடுக்கின்றன. பண்டக் கடன்களைப் பொறுத்தமட்டில், அது ஏறக்குறைய ஒரு சதவீதமாக உள்ளது. பொதுவாக, மூன்றுவிதமான கடன்கள் அளிக்கப்படுகின்றன:— (1) மகசூல் ஈட்டுக்கடன் அல்லது பண்டக் கடன். இக் கடன்கள் ஈடு அல்லது வழங்கப்பட்ட பண்ணை மகசூல்களின்மீது குறுகிய காலங்களுக்காக அளிக்கப்படுகின்றன. (2) நடைமுறை மூலதனக் கடன்கள். இக் கடன்கள் ஒரு குறுகிய காலத்திற்காக அசையாச் சொத்து ஆதாரத்தின்மீது வழங்கப்படுகின்றன. கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழங்கப்படும் அத்தகைய கடன்களின் நோக்கம், நெரிசலான வாணிபக் காலங்களின்போது, அவற்றின் நிதியாதாரங்களுக்குத் துணை செய்தலாகும். (3) வசதிப்படுத்தும் கடன்கள் (Facility Loans). இக் கடன்கள் 20 ஆண்டுகளுக்கு வரையான ஒரு நீண்டகாலத்திற்காக வழங்கப்படுகின்றன. அவை தவணைகளில் திருப்பிச் செலுத்தப்படவேண்டும். நிலம், கட்டடங்கள் மற்றும் இதர நிலையான தளவாடங்கள் போன்ற நிலையான ஆஸ்திகளை வாங்குவதற்குக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வகைசெய்வதற்காக இவ்வகையான கடன் உத்தேசிக்கப்பட்டுள்ளது. அளிக்கப்பட்ட கடன் ஆதாரத்தின் 60 சதவீத மதிப்பீடு செய்யப்பட்ட மதிப்புக்கு இக் கடன்கள் வழங்கப்படுகின்றன.

நான்கு மையவங்கித் தொழில் நிறுவனங்களின் பிராந்திய வங்கிகள், ஒவ்வொரு பிராந்திய கேந்திரத்திலும் ஒரே கட்டடத்தில் அலுவலகங்களைக் கொண்டுள்ளன. மற்றும், அவை ஒரு கடன் கவுன்சில்மூலமாக ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளன. இக் கடன் கவுன்சில், கூட்டாட்சி நிலவங்கி, உற்பத்திக் கடன் கார்ப்பரேஷன், உற்பத்திக் கடன் கழகம், கூட்டுறவுச் சங்கங்களுக்கான வங்கி ஆகியவைகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையும், மூன்று அரசு நியமிகளையும், நிறுவனங்களின் நியமிகளிலிருந்து அரசால் அமர்த்தப்பட்ட ஒரு நபரையும் கொண்டுள்ளது.

## விவசாயமல்லாத கூட்டுறவுச் சங்கங்கள்

**(i) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளில், நகரக் கூட்டுறவு ஒப்பிடும் வகையில் குறிப்

பிடத்தக்க எந்த முன்னேற்றத்தையும் அடையவில்லை. முதலாவது உலகப் போருக்குப் பிறகுதான், நுகர்வோர் இயக்கம் வளர்ச்சிபெறத் தொடங்கியது. தனியார் வர்த்தகங்களுக்கும், கடைக்காரர்களுக்கும் இடையேயுள்ள மும்முரமான போட்டியானது, விலைவாசிகளைக் குறைந்த மட்டத்தில் வைத்திருந்தது. ஆகையால், நுகர்வோர் நிறுவனங்களுக்கான ஒரு தீவிரமான தேவை உணரப்படவில்லை. ஆயினும், இன்று அநேக சில்லரைப் பண்டசாலைகளும், மொத்த விற்பனைப் பண்டசாலைகளும் உள்ளன.

'சங்கிலிவகைச் சில்லரைப் பண்டசாலை' என்று வழங்கப்படும் ஒரு சிறப்பு வகையான சில்லரைப் பண்டசாலை உருவாக்கப்பட்டது. அது, ஏராளமான சில்லரைப் பண்டசாலைகளின்மீது கட்டுப்பாட்டு அதிகாரம் செலுத்துகின்ற ஒரு மைய நிறுவனமாகும். அத்தகைய பண்டசாலைகள் ஒரு சில மட்டுந்தான் உள்ளன. சில பண்டசாலைகள் பொது வாணிகச் சரக்குகளில் வாணிபம் செய்கின்றன; சில பண்டசாலைகள் சிறப்புத் தேர்ச்சித் தன்மையைப் பெற்றுள்ளன அல்லது ஒரு தனிப் பிரிவினர்க்குச் சேவை செய்கின்றன. மிகப் பெரிய சில்லரைப் பண்டசாலைகள், பல்வேறு இலாகாக்களையும், பெட்ரோல் நிரப்பும் நிலையங்களையும் பெற்றுள்ளன. இவை பெரும்பாலும் நகரக் கேந்திரங்களில் காணப்படுகின்றன. கிராமப் பகுதிகளில் கொள்முதல் கழகங்கள் இப்பணிகளை மேற்கொள்கின்றன. நகர நுகர்வோர் இயக்கத்தின் தனக்கேயுரிய ஓர் அம்சமானது, உறுப்பினர்களின் சார்பாகப் பண்டசாலைகள், தரகு ஒப்பந்தங்களின்மீது (Commission Contract) வாணிபம் செய்வது. பண்டசாலைகளின் வாணிபத்தில் 50 சதவீதத்திற்கும் அதிகமாக இவ் வகையான வாணிபம் செய்யப்படுகிறது. இம் முறையின்கீழ், பண்டசாலைகள், தங்களால் வழங்கமுடியாத சில பொருள்களையும், சேவைகளையும் வழங்குவதற்காக, நிலையான தனியார் சில்லரை விற்பனையாளர்களுடன் ஏற்பாடுகளைச் செய்கின்றன. தனியார் வர்த்தகர்கள், கூட்டுறவுப் பண்டசாலைகளின் உறுப்பினர்களுக்கு அத்தகைய பொருள்களையும், சேவைகளையும் வழங்கி, உறுப்பினர்களால் வாங்கப்பட்ட பொருள்களின் விலையின் ஓர் ஒப்புக்கொள்ளப்பட்ட சதவீதத்தைக் கூட்டுறவுப் பண்டசாலைகளுக்குச் செலுத்துகின்றனர். உறுப்பினர்களைப் பொறுத்தமட்டில், அத்தகைய வாணிபத்தின்மீதுங்கூட அவர்கள் ஆதரிப்பு இலாபஈவு (Patronage dividend) அளிக்கப்படுகின்றனர். இவ் வாணிபமானது அப்பட்டமான கூட்டுறவாக இல்லாவிடினும், அது விலைக் குறைப்புமூலம் பண்டசாலைகள் தங்கள் உறுப்பினர்களுக்கு முழுச் சேவையை வழங்குவதற்கு உதவு

கின்றன. சில்லரை விற்பனையாளர்களின் விற்பனைகளை அது அதிகரிக்கச் செய்வதால், அவர்களும் நலனடைகின்றனர்.

அண்மையில், நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள் தொழிலாளர் பிரிவுகளில், ஒரு விரிவான அளவில் அமைக்கப்படலாயின. தொழிலாளர் சங்கங்கள், அவற்றின் வளர்ச்சியில், ஒரு தீவிர அக்கறையை எடுத்துள்ளன. அதே காரியத்திற்காகக் கூட்டுறவு வளர்ச்சிக்கான ஓர் அவையும் நிறுவப்பட்டு, அதில் தொழிலாளர் சங்கங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது. பண்டசாலைகள் அமைக்கப்படவேண்டிய பகுதிகளில், 'உணவுச் சந்தைகள்' (Food Fairs) என்று வழங்கப்படும் ஒரு விற்பனைமுறை நடைமுறைப்படுத்தப்படுகிறது. இப் பகுதிகளுக்கு மளிகைச் சரக்குகள், நுகர்பொருள்கள் மற்றும் இதர வீட்டுத் தேவைகள், ஒரு மொத்த விற்பனைக் கூட்டுறவுச் சங்கத்திலிருந்து பெரிய அளவில் கொண்டுபோகப்பட்டு, ஒவ்வொரு வாரமும் ஒரு குறிப்பிட்ட நாள் அல்லது நாள்களில் பொதுமக்களுக்கு நியாய விலைகளில் விற்பனை செய்யப்படுகின்றன. அத்தகைய விற்பனைகள், மோட்டார் வண்டியிலேயோ ஒரு பொது இடத்திலோ நடத்தப்படுகின்றன. இம் முறையில் மக்கள் பழகி விட்டபோது, மற்றொரு முயற்சியானது ஊக்கத்தைப் பெற்று, அப் பகுதிகளில் நுகர்வோர் பண்டசாலையை அமைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

**மொத்த விற்பனைப் பண்டசாலைகள்:** மளிகைச் சரக்குகளையும், மற்றும் பல்வேறு இதர உள்ளூர்ப் பொருள்களையும் கையாளுகின்ற ஏராளமான மொத்த விற்பனைப் பண்டசாலைகள் உள்ளூர்ப் பண்டசாலைகளுக்கு உதவுகின்றன. உள்ளூர்ப் பண்டசாலைகளில் பெரும்பாலானவை மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு இணைக்கப்படுகின்றன. விச்கோன்சின் (Wisconsin) என்ற நகரத்திலுள்ள சுப்பீரியர் மையக் கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலையானது, மிகப் பெரிய மொத்த விற்பனைப் பண்டசாலையாகும். அது 120 பண்டசாலைகளின் ஒரு கூட்டமைப்பு. மொத்த விற்பனைப் பண்டசாலைகள் உறுப்பினரல்லாத கூட்டுறவுச் சங்கங்களுடனுங்கூட வாணிபம் செய்யக்கூடும். ஆனால், அவை உறுப்பினராகும்வரை ஆதரிப்பு இலாபஈவுகள் அளிக்கப்படுவதில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள மொத்த விற்பனைப் பண்டசாலைகள், ஆங்கிலேய மைய மொத்த விற்பனைப் பண்டசாலையைப் போன்று, ஒரு பெரிய போக்கில் பதனப்படுத்தும் நடவடிக்கையிலும், உற்பத்தி நடவடிக்கையிலும் ஈடுபடுவதில்லை. குளிர் பதனப் பெட்டிகள், வானொலிப் பெட்டிகள், உலோக அடுப்புகள்,

துவைக்கும் பொறிகள் போன்ற விலையுயர்ந்த கருவிகளையும், இதரச் சாமான்களையும் உற்பத்தி செய்வதற்காகத் தனியார் கம்பெனிகளுடன் அவை ஒப்பந்தங்கள் செய்துள்ளன. எனினும், இப் பொருள்கள் கூட்டுறவு வர்த்தகக் குறியுடன் விற்பனை செய்யப்படுகின்றன. மொத்த விற்பனைப் பண்டசாலைகள் ஒரு பரவலான எல்லையைத் தழுவுகின்றன. இணைக்கப்பட்ட பண்டசாலைகளின் எண்ணிக்கை அதிகரிக்கும்போது, அவை அப் பண்டசாலைகளுக்கு நன்கு சேவை புரிவதற்காகத் தங்கள் கிளைகளைத் திறக்கின்றன.

**சிறப்பு மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், தேசிய மொத்த விற்பனைப் பண்டசாலையும்** (Super Wholesales and National Whole sale) : கொள்முதல் கழகங்களிற் சில, தங்களை ஒரு சிறப்புப் பிராந்திய நிறுவனமாகக் கூட்டமைப்புச் செய்துகொண்டுள்ளன. இந் நிறுவனம், அதாவது ஐக்கியக் கூட்டுறவுச் சங்கங்கள் (United Co-operatives), 1930ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. அது மொத்த விற்பனைக் கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கு உயர்மட்டத்திலுள்ள ஒரு நிறுவனமாதலால், அது ஒரு சிறப்பு மொத்த விற்பனைப் பண்டசாலை என்று வழங்கப்படுகிறது. அது எண்ணெயையும், விவசாயப் பொறிகளையும், கருவிகளையும் விநியோகிக்கின்றது.

தலைமை மட்டத்தில் தேசிய மொத்த விற்பனைக் கூட்டுறவுப் பண்டசாலை உள்ளது. அது, 1933ஆம் ஆண்டில், கொள்முதல் கழகங்களாலும், நுகர்வோர் கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலைகளாலும் தங்கள் கொள்முதல்களைத் தொகுப்புச் செய்வதற்காக அமைக்கப்பட்டது. அதன் தலைமைச் செயலகம் சிகாகோ நகரில் உள்ளது. அது, விவசாயக் கொள்முதல் கழகங்களுக்கும், நுகர்வோர் மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கும் ஒரு தேசிய நிறுவனமாக உள்ளது. அது கூட்டுறவு வர்த்தகக் குறியின் பிரயோகத்திற்கான கட்டுப்பாட்டு அதிகாரியாகவும் உள்ளது. கூட்டுறவு நிறுவனங்களைக் குறிப்பாக, நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகளை வளர்ச்சி செய்யும் ஒரு தேசிய நிறுவனமாகிய கூட்டுறவு மன்றத்திற்கு (Co-operative League) அது, ஒரு பலம்பொருந்திய ஆதரவையளிக்கின்றது.

**(ii) சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள் :** இப் பிரிவின் கீழுள்ள கூட்டுறவுச் சங்கங்களுள் குறிப்பிடப்படக் கூடியவை: கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்களும், கூட்டுறவுச் சிற்றுண்டிச்சாலைகளும், உணவகங்களும், கூட்டுறவுச் சுகாதாரச் சங்கங்களும், கூட்டுறவு

ஈட்டுறுதிச் சங்கங்களும், சவம் புதைத்தல் கூட்டுறவுச் சங்கங்களும் ஆகும். ஆனால், வீட்டுவசதிக் கூட்டுறவுத் துறையில்தான் ஒரு மாபெரும் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. மாணவர் நலனுக்காகக் கல்லூரிகளில் பல்வேறு வகையான கூட்டுறவுச் சங்கங்கள் நடத்தப்படுகின்றன.

**(iii) கடன் ஒன்றியங்கள் :** ஒரு கடன் ஒன்றியம் என்பது, ஒரு பகுதியில் வசிக்கும் மக்கட் பிரிவுக்காக அல்லது ஒரே தொழில் சமூகத்தைச் சேர்ந்த மக்கட் பிரிவுக்காக அல்லது அரசு இலாகாக்கள், நகராட்சிக் கழகங்கள் முதலியவற்றின் பணியாளர்களுக்காக அமைக்கப்பட்ட ஒரு கூட்டுறவுக் கடன் சங்கமாகும். அதன் நோக்கம், கடன்கோரும் உறுப்பினர்களுக்கு நிதியுதவி வழங்குவதற்கு, உறுப்பினர்களின் நிதிவசதிகளைத் தொகுப்புச் செய்தலாகும். அத்தகைய நிறுவனத்தின் சாராம்சமானது, கடன் பெறுவதற்காகவும், சிக்கனத்தைக் கடைபிடிப்பதற்காகவும் கடன்கோருவோரின் இணையமாக அது இருப்பதே. இவ்வொன்றியங்கள் மாநிலச் சட்டங்களின் சரத்துகளுக் கிணங்க அல்லது 1934ஆம் வருடத்திய 'கூட்டாட்சிக் கடன் ஒன்றியங்களின் சட்டத்'தின்கீழ் (Federal Credit Union Act) அமைக்கப்படுகின்றன. கிராமப் பகுதிகளிலுள்ள ஒன்றியங்களாகவிருப்பினும், நகர எல்லைகளில்தான் அவை விரைவாக வளர்ச்சி பெற்றுக் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை யடைந்துள்ளன. ஒரு கடன் ஒன்றியமானது, ஒரு சுத்த வகையான கூட்டுறவு நிறுவனமாகும். ஒவ்வோர் உறுப்பினரும் 5 டாலர் பெறுமானமுள்ள ஒரு பங்கையாவது எடுக்கவேண்டும். பங்குத்தொகை மாதத் தவணைகளில் செலுத்தப்படலாம். உறுப்பினர்களின் பங்கு மூலதனத்திலிருந்தும், வைப்புகளிலிருந்தும் பூர்வ விவேகமுள்ள காரியங்களுக்காகவும், உற்பத்திக் காரியங்களுக்காகவும் உறுப்பினர்களுக்குக் கடன்கள் அளிக்கப்படுகின்றன. ஒரு கடன் ஒன்றியம், பொதுவாக வெளியேயிருந்து எப்பொழுதுமே கடன் பெறுவதில்லை. அது, வழக்கமாகத் தன் உறுப்பினர்களின் பணியிடங்களில் செயற்படுகின்றன. ஒரு பேரவைக் கூட்டத்தில் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர் குழுவால் அது நிர்வகிக்கப்படுகின்றது. கடன்களை ஒப்பளிப்பதற்காகவும், கணக்குகளைத் தணிக்கை செய்வதற்காகவும் முறையே, கடன் குழுக்களும், தணிக்கைக் குழுக்களும் உள்ளன. ஒன்றியங்களின் கணக்குகளை, அரசுகூடத் தணிக்கை செய்கிறது. ஒன்றியங்கள் உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்ட கடன்களின் பயன்பாட்டினை மேற்பார்வையுங்கூடச் செய்கின்றன. நாட்டில், மூன்று மில்லியனுக்கும் அதிகமான உறுப்பினர்களைக் கொண்ட, 10,000-க்கும் அதிகமான

ஒன்றியங்கள் இயங்குகின்றன. அவை; தங்கள் உறுப்பினர்களின் குறுகியகாலக் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு உதவி யாக உள்ளன. உறுப்பினர்களின் சேமிப்புத் தொகை 500 மில்லியன் டாலர்களுக்கும் அதிகமாக உள்ளது. ஒன்றியங்கள் ஒரு மைய அலுவலகத்தை, அதாவது கடன் ஒன்றியங்களின் தேசியக் கழகத்தைப் பெற்றுள்ளன.

## கூட்டுறவுக் கல்வியமைப்புகள்

பண்ணைக் கடன் நிர்வாகமும், மாநில விவசாயக் கல்லூரி களும், கூட்டுறவுக் கல்வி வளர்ச்சியிலும் பொதுவாகக் கூட்டுறவு வளர்ச்சியிலும் ஈடுபட்டுள்ளன. இப் பணியில் ஈடுபட்டுள்ள ஒரு சில தேசியக் கூட்டுறவு நிறுவனங்களும் உள்ளன. அவற்றுள், 1916ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட 'கூட்டுறவு மன்றம்' (Co-operative League) மிகப் பழமையானது. அது, கூட்டுறவுச் சங்கங் களின் ஒரு கூட்டமைப்பாகும். அது, நகரப் பகுதிகளிலும், நுகர் வோர் கூட்டுறவு இயக்கத்திலுமுள்ள கூட்டுறவு நடவடிக்கையில் அதிகமான அக்கறையைக் கொண்டுள்ளது. சிகாகோ நகரில் தலைமைச் செயலகத்தை வைத்துள்ளது. அநேக கொள்முதல் கழகங்களும், மொத்த விற்பனைப் பண்டசாலைகளும் அதன் உறுப் பினர்களாக உள்ளன. அது, அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன் றிணைப்பின் (International Co-operative Alliance) உறுப்பினராக உள்ளது. கூட்டுறவுப் பணியாளர்களுக்குப் பயிற்சி வழங்கும் இராக்டேல் நிலையத்தை (Rochdale Institure) அது அமைத் துள்ளது.

1925ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட 'அமெரிக்கக் கூட்டுறவு நிலையம்' (The American Institute of Co-operation) கூட, விவசாயக் கூட்டுறவுக் கருத்துகளை வளர்ச்சி செய்யும் பணியில் அக்கறை கொண்டுள்ளது. கூட்டுறவுப் பிரச்சினைகளை விவாதிப்ப தற்கு, அது வருடாந்திர மாநாடுகளை நடத்துகின்றது. அவ்வப் போது, அது கூட்டுறவுக்குத் தொடர்பான நடப்புப் பிரச்சினை களைப்பற்றிய துண்டு வெளியீடுகளையும், அறிக்கைகளையும் வெளியிடுகிறது. சுமார் 1,500 கூட்டுறவுக் கழகங்கள் அதன் உறுப்பினர்களாக உள்ளன.

1929ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட 'தேசியக் கூட்டுறவு அவை' (National Co-operative Council) கூட்டுறவு நிறுவனங் களின் ஒரு கூட்டமைப்பாகும். அதன் தலைமைச் செயலகம் வாஷிங்டனில் உள்ளது. அது உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச்

சங்கங்களுக்கு உதவுகிறது. குடியானவர்களின் விற்பனை மற்றும் கொள்முதல் கழகங்கள் அதன் உறுப்பினர்களாக உள்ளன. அது சுமார் 5,000 உள்ளூர்க் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பிரதிநிதியாக வுள்ள 111 உறுப்பினர் நிறுவனங்களைப் பெற்றுள்ளது. அது, குடியானவர்களின் கூட்டுறவுச் சங்கங்களை வளர்ச்சி செய்து, அவற்றின் நலன்களைப் பாதுகாப்பதற்கு முயற்சிக்கிறது. அது, 'குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் தேசிய அவை' (National Council of Farmers Co-operatives) என்றுங் கூட வழங்கப்படுகிறது. அதே மாதிரியான மாநில நிறுவனங் கள், அநேக மாநிலங்களில்கூட அமைக்கப்பட்டுள்ளன.

## அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவு இயக்கத்தின் சிறப்பியல்புகள்

(i) அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டுறவு இயக்கமானது, முதன்மையாக ஒரு குடியானவர்களின் இயக்கமாகவுள்ளது. நகர மக்களிடையேவிடக் குடியானவர்களிடையே அது அதி விரைவாகவும், பரவலாகவும் வளர்ச்சியடைந்துள்ளது. குடி யானவர்களின் கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் எண்ணிக்கை யிலும் அலுவலிலும், எல்லா இதர வகையான கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தலைமையாக வுள்ளன. பண்ட அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளதால், விற்பனைச் சங்கங்கள் மிக அதிகமான சிறப்புத் தேர்ச்சி பெற்றவையாக வுள்ளன.

(ii) இச் சங்கங்களின் அளவு மிகப் பெரியதாக உள்ளது. அதன் காரணமாக, அவற்றின்மீது 100 சதவீத சனநாயகக் கட்டுப்பாட்டதிகாரம் உறுப்பினர்களால் செலுத்த முடியாவிட் டாலும், அவை திறமையாகவும், சிக்கன முறையிலும் நடத்தப் படுகின்றன. அநேக கூட்டுறவு நிறுவனங்கள்—அவை விற்பனை நிறுவனங்களாக இருந்தாலும், அல்லது கொள்முதல் நிறுவனங் களாக இருந்தாலும் — சில அளவிற்கு மையமாக்கப்பட்டவை யாக அல்லது கூட்டாட்சித் தன்மையுள்ளவைகளாக வுள்ளன. அவை குறைந்த உள்ளூர்த்தன்மை யுள்ளவையாகவு முள்ளன. முடிவு எடுக்கின்ற முதன்மையான நிறுவனம், சாதாரணமாக,ஒரு மாநிலம் அல்லது பல மாநிலங்களைத் தழுவுகின்றது.

(iii) சுத்தக் கூட்டுறவுக் கொள்கைகளை அல்லது கருத்து களைப் புறக்கணித்துங்கூட, வாணிபத்தின்மீது மிக அதிகமான வலியுறுத்தல் விதிக்கப்படுகிறது. அவ்வாறு செய்வதன் நோக்கம்,

நிறுவனத்தில் திறமையைப் பெறுவதற்காகவும், உறுப்பினர்களுக்கு இடுக்கண் விளைவிக்காமல் இருப்பதற்காகவுமே. கூட்டுறவு நிறுவனங்கள் உறுப்பினரல்லாதவர்களுடனும் நடவடிக்கை வைத்துக்கொள்கின்றன. கொள்முதல் கழகங்கள், ஏராளமான குடியானவர்களையும், தனியார் வர்த்தகர்களையும், சில்லரை விற்பனைக்காக நியமிக்கின்றன. ஒரு சில கட்டத்திற்குப் பிறகு, விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களே தங்கள் பண்டங்களை விற்பனை செய்வதற்காக, தனியார் வர்த்தகர்களைச் சார்ந்துள்ளன. மற்றும் நுகர்வோர் நிறுவனங்கள், தங்களுடைய ஒரு பெரிய சதவீத வாணிபத்தைத் தனியார் சில்லரை விற்பனையாளர்களுடன் செய்யப்பட்ட தரகு ஒப்பந்த அடிப்படையின்பேரில் நடத்துகின்றன. இது, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நுகர்வோர் இயக்கத்தின் மிக அபூர்வமான ஓரம்சமாகும்.

(iv) இவ் வியக்கம், பல்கலைக் கழகங்களுடன், ஒரு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இயக்கத்தை நடத்துவதற்குக் கூட்டுறவு நிறுவனங்கள் பல்கலைக் கழகங்களின் அனுபவத்தையும், அறிவாற்றலையும், பயன்படுத்திக் கொள்கின்றன. பல்கலைக் கழகங்களும், கல்லூரிகளும், கூட்டுறவுத் துறையில் பயிற்சி வசதிகளை அளிப்பதன் மூலம், இயக்கத்திற்குப் பெருமளவு உதவி செய்கின்றன. அவை, இக் காரியத்திற்காகவே கூட்டுறவுப் பண்டசாலைகளையும், கடன் ஒன்றியங்களையும்கூட அமைத்துள்ளன.

(v) கூட்டுறவு வங்கித் தொழில் நிறுவனங்கள் அதிகமாக வளர்ச்சி பெறவில்லை. கூட்டுறவு நிறுவனங்கள், தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக, வர்த்தக வங்கிகள்மீது சார்ந்துள்ளன. குடியானவர்கள் கூட்டுறவு நிறுவனங்களைப் பொறுத்த மட்டில், அவை, கூட்டுறவு நிறுவனங்களுக்கான வங்கிகளிடமிருந்து நிதியுதவி பெறுகின்றன.

(vi) மாநில அரசுகளும், கூட்டரசும் இயக்கத்திற்குத் தங்கள் முழு ஆதரவையளிக்கின்றன. கூட்டரசிடமும், மாநில அரசுகளிடமும் இயக்கம் ஓர் உயர்ந்த அந்தஸ்தைப் பெற்றுள்ளதுடன், அவ் வரசுகளின் பொதுவான நிதியுதவியையும், உயர்ந்த தொழில்நுட்பத் தன்மையும் ஆய்வுரைத் தன்மையுங் கொண்ட உதவியையும் பெறுகின்றன.

(vii) நாட்டில் கூட்டுறவு நிறுவனங்களுக்காகக் கடன் நிறுவனங்கள் துறையில் தவிரக் கூட்டரசு சட்டம் எதுவுங் கிடையா. பல்வேறு வகையான கூட்டுறவுச் சங்கங்களுக்கான

ஓர் ஒருபடித்தான கூட்டுறவுச் சட்டம் இல்லாத காரணத்தால், இயக்கம் ஏறக்குறைய ஒரு சிக்கனத் தன்மையை ஏற்றுள்ளது. மற்றும், பெரிய அளவு நிறுவனங்களில் சில கம்பெனிகளிலிருந்து வேறுபடுத்தப்பட முடியாத வகையிலுள்ளன. ஒவ்வொரு மாநிலமும், தன் சொந்தச் சட்டத்தை இயற்றியுள்ளது. அச் சட்டங்களுங்கூட, பல்வேறு வகையான சங்கங்களுக்காகப் பல்வேறுவிதமாக உள்ளன. மற்றும், ஒவ்வொரு மாநிலமும் கூட்டுறவுச் சங்கங்கள் பதிவு செய்யப்படாமல் இயங்குவதை அனுமதிக்கின்றன. எனவே, அநேக கூட்டுறவுச் சங்கங்கள் இலாபமற்ற, பங்குத் தொகுப்பற்ற கழகங்களாகப் பதிவு செய்யப்பட்டுத் தேவையான நிதிகளைச் சுழலும் நிதிமுறைமூலம் பெறுகின்றன. அநேக சங்கங்கள் நடைமுறைச் செலவுகளுக்காக ஒரு சிறிய விளிம்பை மட்டும் சேர்த்து அடக்க விலையில் செயற்படுகின்றன; அல்லது அவை, காப்பிருப்புகளை ஏற்படுத்துவதற்குக் கவனம் செலுத்தாமல், உயர்ந்த ஆதரிப்பு இலாபஈவுகளை அளிக்கின்றன.

ஒரு முதலாளித்துவ ஆட்சிமுறையின்கீழ், கூட்டுறவு நிறுவனங்கள் சிறப்பாக வளர்ந்துள்ள ஒரு நாடாக அமெரிக்க ஐக்கிய நாடுகள் காட்சி தருகின்றன. மக்களின் மிகப்பரவலான வேலையின்மையை விளைவித்து, நாட்டில் ஏற்பட்ட பொருளாதார மந்தமானது, முதலாளித்துவ அமைப்பின் குறைபாடுகள் சிலவற்றை வெளிப்படுத்தியது. அச் சந்தர்ப்பத்தில் முதலாளித்துவ முறையின் தீமைகளைக் குறைக்கும் ஒரு சாதனமாகக் கூட்டுறவு ஏற்கப்பட்டது. கூட்டுறவு இயக்கம் பயனுள்ள ஒரு பணியைச் சிறப்பாகக் கிராமத் துறையில் ஆற்றி வந்துள்ளது. அமெரிக்காவின் கூட்டுறவு இயக்கமானது, முதலாளித்துவ நாடுகளிலுங்கூட கூட்டுறவுச் சங்கங்கள் ஆற்றுகின்ற முக்கியப் பணியைப் பற்றிய தெளிவான ஒரு செயல்விளக்கமாகவுள்ளது.

## (vi) சீனு
(China)

**சீனக் கூட்டுறவு இயக்கத்தின் ஆரம்ப வரலாறு**

திட்டமிட்ட கூட்டுறவுப் பொருளாதாரவமைப்புக் கருத்து, தேசியக் கொள்கையாகச் சீன மக்கள் குடியரசிற்குக் கால்கோளிட்ட டாக்டர் சன்யெட்சன் (Dr. Sun Yet Sun) அவர்களால் 1912-ல் ஆலோசிக்கப்பட்டது. சீனுவில் புரட்சி இயக்கத்தின் ஓர் அடிப்படைக் கொள்கையாக உழைப்பாளி மக்களுக்கும், குடியானவர்

களுக்கும் தேவையான எல்லா உதவியும் அளிக்கப்படவேண்டு மென்றும், ஏகாதிபத்தியத்திலிருந்தும், படைமானியத்திலிருந்தும் விடுதலை பெறுவதற்காகவும், உணவு மற்றும் இதரத் தேவைகள் துறையில் தன்னிறைவை வளர்ப்பதற்காகவும், அவர்களிடையே கூட்டுறவு தொடங்கி வைக்கப்பட வேண்டுமென்றும், பரிந்துரை செய்தவரும் அவர்தாம். அதன் விளைவாக, 1919ஆம் ஆண்டில், பேராசிரியர் சையா (Prof. Hsich) அவர்களால் 'ஷாங்கை தேசியக் கூட்டுறவுச் சேமிப்பு வங்கி' (Shangai National Co-operative Savings Bank) நிறுவப்பட்டது. இதர நாடுகளின் கூட்டுறவுக் கருத்துகளையும், அனுபவங்களையும் பிரச்சாரம் செய்வதற்காக அர்ப்பணிக்கப்பட்ட ஒரு வாரஇதழையுங்கூட அவர் வெளியிட்டார். ஆனால், இவ் வாரம்ப முயற்சிகள் எவ்வித முன்னேற்றத்தையும் செய்யவில்லை. 1921ஆம் ஆண்டில், நாடு முழுவதிலும் நிலவியிருந்த கடும் வறட்சியின் விளைவாக ஏற்பட்ட விவசாயிகளின் தொல்லைகளைப் போக்குவதற்கு, வடசீனாவில் குடியானவர்களின் கூட்டுறவுக் கடன் சங்கங்கள், 1922ஆம் வருடத்திய சர்வதேசப் பஞ்ச ஆணைக் குழுவின் முன்முயற்சிக்குப் பிறகு அமைக்கப்பட்டன. கடன் மற்றும், இதர விவசாயத் தேவைகளை வழங்குவதற்கான இச் சங்கங்கள் ரெய்ஃபெய்சன் முறைகளில் அமைக்கப்பட்டன. தொடக்கத்தில் அவை, அந்த ஆணைக்குழுவிடமிருந்தும், சீன வங்கிகளிடமிருந்தும் கடன்கள் பெற்றன. இச் சீன வங்கிகள், அதாவது, குடியானவர்கள் வங்கியும், சீனவங்கியும் (Farmers Bank and The Bank of China) கூட்டுறவு வங்கிகளல்ல. ஒவ்வொரு மாநிலத்திலும் கூட்டுறவுக்கான ஒரு நிலையம் அல்லது குழு இருந்தது. அது சுற்றுப்பயணம் செய்யும் ஆய்வாளர்களையும் அமைப்பாளர்களையும் கொண்ட ஒரு பணியாளர் தொகுதியைப் பெற்றிருந்தது. கூட்டுறவுக்கான நிலையம் அரசால் அமைக்கப்பட்ட ஓர் அரசாங்க நிறுவனமாக இருந்தது. கூட்டுறவுக்கான குழு அரசு பணியாளரல்லாதவர்களைக் கொண்டிருந்தது. குடியானவர்களின் வங்கிக்கு அல்லது ஒரு வர்த்தக வங்கிக்கு அவை கடன்கள் பரிவுரை செய்தன. 1931ஆம் ஆண்டில் நேர்ந்த யாங்ஸ்டே வெள்ளம் (Yangste Floods) கூட்டுறவு இயக்கத்திற்கு ஒரு வேகத்தை அளித்தது. அதன் அமைப்புகளாலும், வங்கிகளாலும், ஏராளமான தனியார் நிறுவனங்களாலும் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. 1938ஆம் ஆண்டில், 64,000-க்கு மதிகமான பதிவு செய்யப்பட்ட சங்கங்களிருந்தன. அவற்றுள் 85 சதவீதச் சங்கங்கள் கடன் சங்கங்களாகவும், எஞ்சியவை விநியோக, உற்பத்தி, விற்பனை, நுகர்வோர் மற்றும் பொதுநலச் சங்கங்களாகவு மிருந்தன. சர்வதேச மன்றம் (League of Nations) சீன அரசுக்கு

ஒரு கூட்டுறவு ஆலோசகரை அனுப்பிவைத்தது. அவர் பல ஆண்டுகளாக இயக்கத்தை வழிகாட்டியும், ஊக்குவித்தும் வந்தார். இயக்கம், முதன்மையாக ஒரு விவசாய இயக்கமாக இருந்தது. நகர்ப் புறங்களில் அதன் வளர்ச்சி மெதுவாக இருந்தது.

1937ஆம் ஆண்டில் நேர்ந்த சீன — ஜப்பான் போரினல் இயக்கத்திற்கு மேலும் ஒரு வேகம் அளிக்கப்பட்டது. இச் சமயம், அவ் வேகம் கடனல்லாத துறைகளிலிருந்தது. நுகர்வோர் சங்கங்களும், உற்பத்தியாளர் சங்கங்களும் போரின் போதும், அதற்குப் பிறகும் நுகர்வோர் பண்டசாலைகள் வளர்ச்சியடைந்து முக்கியத்துவத்தைப் பெற்றன. 1951ஆம் ஆண்டில், 4,435 பண்டசாலைகளிருந்தன. அவை நகர்ப் பகுதிகளிலிருந்தும், தொழிலாளர்கள் மற்றும் அரசு அலுவலர்களிடையே யிருந்தும் முக்கியமாகப் பெறப்பட்ட 6 மில்லியனுக்கு மதிகமான உறுப்பினர்களைப் பெற்றிருந்தன. வேறுபல கூட்டுறவுச் சங்கங்களுங் கூடத் தம் பணிகளுக்குக் கூடுதலாக வணிகச் சரக்குகளையும், நுகர்வுப் பொருள்களையும் விநியோகம் செய்தலை மேற்கொண்டிருந்தன. தேசியக் கூட்டுறவு மொத்த விற்பனை மற்றும் விற்பனையமைப்புகள் (National Co-operative Whole Sale and Marketing Agencies) தொழிற்சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள் ஆகியவைகளின் தேவைகளையும், விற்பனைப் பணிகளையும் கவனிக்கின்றது. பல மாநிலங்களில் அது கிளைகளைக் கொண்டுள்ளது.

## தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்
## இண்டஸ்கோஸ்
## (Indus-Cos)

1937ஆம் வருடத்திய சீன—ஜப்பான் போரின் நேரடியான விளைவாக ஏற்பட்ட ஒரு முக்கியக் கிளை நடவடிக்கையானது, 'இண்டஸ்கோஸ்' (Induscos) என்று அனைவராலும் வழங்கப்படும் உற்பத்தியாளர் கூட்டுறவுச் சங்கங்களை அல்லது தொழிற் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தலாக இருந்தது. இவை சீனவின் போர் முயற்சிக்குப் பெரிதும் உதவி செய்தன. இச் சங்கங்களின் சாதனை உலகெங்கும் பரந்த ஒரு விளம்பரத்தைப் பெற்றுள்ளது. இச் சங்கங்களின் தோற்றம் மிகச் சுவையுள்ளதாக உள்ளது. போரின்போது, சீன தன் நவீனத் தொழில்களனைத்தையும் பெரும்பாலும் இழந்தது. இத் தொழில்கள் ஒருசில கடலோர நகரங்களில் மையப்படுத்தப்பட்டிருந்தன. அகதிகளுக்கு வேலைவாய்ப்பு அளித்தல், இராணுவத்தில்

சேராத மக்கள்தொகையின் உடனடியான தேவைகளை வழங்கு தல், இராணுவத் தளவாடங்களுக்காகத் தேவைப்படும் சாமான் களை வழங்குதல், பகைமையுற்ற நாட்டினரால் செய்யப்பட்ட பொருள்கள் ஊடுருவலைத் தடுத்தல் ஆகிய பிரச்சினைகள் அரசை எதிர்நோக்கியிருந்தன. ஸ்காட்லாந்தில் கல்வி பயின்ற ஓர் உள்ளூர்ப் பிரமுகரான சி. எஃப். வூ (C. F. Wu) அவர்களின் உதவியைக் கொண்டு உலவும் சிறு பணிக்கூடங்களாக இருந்த தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள் பலவற்றை அரசு அமைத்தது. இவ்விதமாக அகதிகள், நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய் வதற்காகவும், நாட்டின் தொழில் உற்பத்தியையுங்கூடச் சீர மைப்பதற்காகவும் திரட்டப்பட்டனர். சுன்கின்ங் (Chunking) என்ற நகரில் ஒரு மைய இலாகா நிறுவப்பட்டது. கூட்டுறவு இயக்கத்தை வளர்த்தல் அதன் பணியாக இருந்தது. அரசிட மிருந்து கிடைத்த 5 மில்லியன் டாலர்களான ஓர் உதவித் தொகையிலிருந்து, கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியளிக்கப்பட்டன. அவை வங்கிகளிலிருந்து முன்பணங்களையும் தனியார் நன்கொடை களையுங்கூடப் பெற்றன. மையத் தலைமைச் செயலகத்தின்கீழ், 7 மண்டலத் தலைமைச் செயலகங்கள் இருந்தன. மாநில மட்டத்தில் பண்டகங்கள் இருந்தன. இந்தப் பண்டகங்கள் சீனத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்கான உண்மை யான ஆரம்ப முனைகளாக இருந்தன. டிப்போ மேலாளரின் பொறுப்பில் மண்டலத் தலைமை இருப்பிடம் இருந்தது. மண்டலத் தலைமை இருப்பிடம், மையத் தலைமை இருப்பிடத்தின் பொறுப்பி லிருந்தது. கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன்களை அளிப்பதற்கு முன், மையத் தலைமைச் செயலகம் மண்டலத் தலைமைச் செய லகத்துடன் கலந்தாலோசித்தது. மையத் தலைமைச் செயலகம், மண்டலத் தலைமைச் செயலகம், டிப்போக்கள் ஆகியவைகளின் சிப்பந்திகள், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் கணக்குகளைத் தணிக்கை செய்தும், அச் சங்கங்கள் இயங்குவதற்கு உதவிபுரிந்தும், அலுவல், தொழில்நுட்பப் பொருள்கள் பற்றிச் சங்கங்களுக்கு அறிவுரை செய்தும், தேவைப்பட்ட கருவிகளையும், பொறிகளை யும் கொள்முதல் செய்தும், பொதுவாகச் சங்கங்களின் உறுப்பி னர்கள், அலுவலர்கள், மேலாளர்கள், நவீனத் தொழில்நுட்பங் களைப் புரிந்துகொள்வதற்குப் பயிற்சி அளித்தும் வந்தனர். அவர் கள், குடிசைத் தொழில்களிலும் சிற்றளவுத் தொழில்களிலும் மகளிர் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதில் மகளிருக்குப் பயிற்சியுங்கூட அளித்தனர். மண்டலத் தலைமைச் செயலகங்கள் ஒவ்வொன்றிலும் தொழிலாளர்களுக்கான பயிற்சிப் பள்ளிகளு மிருந்தன. மையத் தலைமைச் செயலகம், சங்கங்களுக்குத் தொடர்பான கொள்கைகள் அனைத்தைப்பற்றியும் முடிவு எடுத்

தது. 1930ஆம் ஆண்டில், ஓர் எல்லையிலுள்ள சங்கங்கள் அல்லது தொழில்கள்வாரியான சங்கங்கள் தங்களை மாவட்டக் கூட்டமைப்புகளாகவும், மண்டலக் கூட்டமைப்புகளாகவும் அமைத்துக் கொண்டன. பிரதம சங்கங்கள், நாட்டு ஒன்றியங்களாகத் (Country Unions) தொகுப்புச் செய்யப்பட்டன. இவை, மாநில ஒன்றியமாக மேலும் கூட்டமைத்துக்கொண்டன. தலைமை மட்டத்தில், 1950ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட 'அனைத்துச் சீன கூட்டுறவுச் சங்கங்களின் இணையம்' (All China Federation of Co-operative) இருந்தது. இணைக்கப்பட்ட சங்கங்களின் நடவடிக்கைகளை வசதிப்படுத்துவதில் கூட்டமைப்புகள் நற்பணி புரிந்தன.

1942ஆம் ஆண்டில், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 1,590 ஆக இருந்தது. அவற்றில், 22,680 உறுப்பினர்களிருந்தனர். அவற்றின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் சுமார் ரூ. 45.5 இலட்ச சீன டாலர்களாக இருந்தது; மாதாந்தர உற்பத்தியின் பெறுமானம் சுமார் ரூ. 240 இலட்ச சீன டாலர்களாக இருந்தது. தேசிய ஆட்சியின்போது செழித்திருந்த சீனத் தொழிற் கூட்டுறவுச் சங்க இயக்கம், சீன மக்கட் குடியரசிலும் (Chinese People Republlc), மிக மாறுபட்ட ஒரு வடிவத்தில் இன்று உள்ளது. பழைய சங்கங்களில் பல, ஆட்சி மாறுதலின்போது கலைக்கப்பட்டன. தொழிற்கூட்டுறவு இயக்கம் அனைத்தும், அரசு கட்டளைகளுக்கிணங்கப் பெரும்பாலும் ஒரு புதிய தொடக்கத்தைச் செய்யவேண்டியிருந்தது. 1953ஆம் ஆண்டில், 3 இலட்ச உறுப்பினர்களைக்கொண்ட 4,813 சங்கங்களிருந்தன. 1957ஆம் ஆண்டில், 2 கோடி மொத்த எண்ணிக்கையுள்ள கைத்தொழிலாளிகள், கைவினைஞர்களில் சுமார் 50 இலட்சம் பேர்கள் தொழிற்கூட்டுறவுத் துறையில் வந்திருந்தனர். தச்சுவேலை, செருப்புத் தயாரித்தல், நெசவுத்தொழில், சுரங்க வேலை, தையல் வேலை முதலியன போன்ற பல்வேறு தொழில்களில் சங்கங்கள் ஈடுபட்டுள்ளன. சங்கங்கள் பெரும்பாலும், தொழிலாளர்களின் சமஉடைமை வாதத் தொகுப்புகளாக (Socialistic Groups) இருந்தன. சங்கத்தின் வருமானம் உறுப்பினர்களிடையே அவர்களால் செய்யப்படும் வேலையின் வீதத்தில் பகிர்வு செய்யப்படுகின்றது. உறுப்பினரல்லாதவர்கள் பணியாளர்களாகச் சங்கத்தில் அமர்த்தப்படவேண்டியிருந்தால், அவர்கள் முதலில் உறுப்பினர்களாக்கப்படுகின்றனர். எல்லா வேலையும் ஒரு கூட்டுறவு உற்பத்தி நிலையத்தில் செய்யப்படுகிறது. இச் சங்கங்களுக்கு அரசுதவி அளிக்கப்படுகிறது. சங்கங்களுக்குத் தேவைப்படுகின்ற கருவிகளும், பொறிகளும், அரசுக்குச் சொந்தமான தொழிற்

சாலைகளிலிருந்து மலிவான விலைகளில் வழங்கப்படுகின்றன. இல வசத் தொழில்நுட்ப ஆய்வுரைகளும், மேலாண்மை உதவிகளும் அளிக்கப்படுகின்றன. அரசு வங்கிகளாலும், தனிப்பட்ட வரி-நிவாரண நிறுவனங்களாலும், கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன் கள் மலிவான வட்டிவீதங்களில் அளிக்கப்படுகின்றன.

தொழிற் கூட்டுறவுச் சங்கத் துறையில், சீனு ஒரு பெரும் வெற்றியைப் பெற்றுள்ளது. இத் துறையில் அது உலகத் திற்கு ஒரு வழிகாட்டியாகவும் இருந்துள்ளது. சீனத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் மகத்தான வளர்ச்சியின்மூலம், தொழில் உற்பத்தியானது சிறு உற்பத்தியாளர்களால் ஒரு கூட்டுறவு அடிப்படையில் நடத்தப்பட்டபோது அது எவ்வளவு திறமை யுள்ளதாக இருக்கக்கூடும் என்பது நன்ருகச் செயல்விளக்கம் செய்யப்பட்டுள்ளது.

## விவசாயக் கடனும் விற்பனையும்

**(i) கடன் :** பெரும்பாலும் ஒவ்வொரு சியாங்கும் (Hsiang) (மாவட்டம் — Country) தற்போது ஒரு கடன் கூட்டுறவுச் சங்கத்தைப் பெற்றுள்ளது. மொத்தக் கிராமக் குடும்பங்களில் 77.2 சதவீதமுள்ள 91 மில்லியன் குடும்பங்கள் இச் சங்கங்களில் உறுப்பினர்களாக இருந்தன. இக் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன்கள் அளிப்பதற்காக, அரசால் மக்கள் வங்கிக்குச் செய்யப் பட்ட மொத்த நிதி ஒதுக்கீடு அதிகரித்து வந்துள்ளது. 1956ஆம் ஆண்டில், அது 2,200 மில்லியன்களாக இருந்தது. இக் கடன் கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் உறுப்பினர்களிடமிருந்து வைப்பு களையுங்கூட ஏற்கின்றன. 1956ஆம் ஆண்டுச் சூலையில், மொத்த வைப்புகள் 570 மில்லியன்களுக்கிருந்தன. நீர்ப் பாதுகாப்பு மற்றும், பாசனத் திட்டங்கள் போன்ற உற்பத்திப் பெருக்கத்திற் கான திட்டங்களில், கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் சேமிப்பு களை முதலீடு செய்வதற்கு ஊக்குவிக்கப்படுகின்றன.

**(ii) விற்பனை :** விற்பனையைக் குறித்த அரசு கொள்கை யானது விவசாய உற்பத்தி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்துள்ளது. உண்மையாகவே, நாடெங்கும் பரவியிருந்த, விவசாய விளைபொருள்களை அரசு கொள்முதல் செய்யும் ஒரு முறையானது கூட்டுறவுச் சங்கங்கள் அமைப்பதற்கு முன்னர் அமலிலிருந்தது. அரசு, விவசாய விளைபொருள்களின் விலையை நிர்ணயித்து, விதை விதைப்பதற்குப் போதுமானவரை முன்ன தாகவே, அவ் விலையை அறிவிப்புச் செய்கின்றது. இதனுல்,

விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள், மிக உயர்ந்த வருமானத்தைத் தங்களுக்கு அளிக்கும்வண்ணம் தங்கள் உற்பத்தியைத் திட்டமிடக் கூடும். நிருணயிக்கப்பட்ட இவ் விலைகளில், விளைபொருள்களின் கொள்முதலை அரசு மேற்கொள்கிறது. ஆகையால், அமித உற்பத்தியின் காரணமாக விலைகள் வீழ்ச்சியுறும் என்று சாகுபடியாளர்கள் அச்சப்படுவதில்லை. அரசுவீதப் பங்கு பூர்த்தியானவுடன், சாகுபடியாளர்கள் தங்கள் விளைபொருள்களைச் சாகுபடியாளர்களிடையே விற்பனை செய்வதற்கு உரிமையுடையவர்களாக இருக்கின்றனர். தங்கள் விளைபொருள்களுக்காக நிலவியிருக்கின்ற நியாயவிலையும், ஒரு சம மட்டத்தில் தொழிற்பண்டங்களின் விலை நிருணயமும், அவர்களின் உற்பத்திப் பொருள்கள் பெருக்கத்தின் வீதத்தில் அவர்களுக்கு ஒரு நல்ல உயர்கின்ற வாழ்க்கைத் தரத்தை நிச்சயப்படுத்துகின்றன.

## விவசாய உற்பத்தியாளர்கள் கூட்டுறவுச் சங்கங்கள்

உற்பத்திப் பெருக்கத்திற்காக நாட்டினரனைவரும் தம் விவசாயத்தைக் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் அமைக்கின்ற ஒரு மகத்தான முயற்சிக்கு ஒவ்வொரு தனிக்குடும்பமும் தன் முழு ஒத்துழைப்பைத் தருகின்ற ஒரு நாடாகச் சீனா காட்சியளிக்கிறது. விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சி பற்றிய வரலாறு மிகச் சுவையான ஒன்றாக வுள்ளது.

கடந்த காலத்தில் நிலச் சொந்தக்காரர்கள், அரசின் உள்ளூர்ப் பிரதிநிதிகளாகவுங்கூட இயங்கி, அடிக்கடி நீதிமன்ற அதிகாரங்களைச் செலுத்திவந்த ஒரு முறையின்கீழ், சீனக் குடியானவர்கள் பெரிதும் நசுக்கப்பட்டிருந்தனர். நிலச் சொந்தக்காரர்கள் குடியானவர்களின் விளைச்சல்களில் 50 முதல் 80 சதவீதம் வரை வேறுபடும் மிக அதிகமான குத்தகைகளை அவர்களிடமிருந்து கட்டாயப்படுத்தி வசூலித்து வந்தனர். அவர்கள் குடியானவர்களை இராணுவத்தில் பலவந்தமாகச் சேரச் செய்தும், அவர்களிடமிருந்து கடும் வட்டியையும் மற்றும், அநேக இதரச் சட்ட விரோதமான தொகைகளையும் வசூலித்து மற்றும், பிற வழிகளில் துன்புறுத்தியும் வந்தனர். 1949ஆம் ஆண்டில், சீனா விடுதலையடைந்ததும் நடைமுறைப்படுத்தப்பட்ட நிலச் சீர்திருத்தங்களுக்குப் (1950ஆம் வருடத்திய விவசாயச் சீர்திருத்தச் சட்டம்) பிறகு, நிலச் சொந்தக்காரர்களுடைய நிலம், நிலமில்லாத் தொழிலாளர்களுள்ளிட்ட ஏழைக் குடியானவர்களிடையே தலா அடிப்படையில் பகிர்வு செய்யப்பட்டு, கிராமத்திலுள்ள ஒவ்வொருவரும் நிலவுடைமையாளராக ஆயினர். ஆனால், அவர்

களுக்குப் பகிர்வு செய்யப்பட்ட நிலம் மிகச் சிறியதாக இருந்தது. அதன் காரணமாக, அவர்கள் பல சங்கடங்களை அனுபவித்ததால், கட்சித் தலைமையின்கீழ், அவர்கள் தொழிலாளர் பரிவர்த்தனை அகங்களாகவும், பரஸ்பர உதவிக் குழுக்களாகவும் தங்களை அமைத்துக்கொண்டு, அதன் பயனாகத் தங்களுடைய உற்பத்தியில் சில பெருக்கத்தைப் பெற்றனர். ஆனால், ஒவ்வொரு நிலவுடைமையாளரும் அதற்குப் பிறகும் தம் சொந்த நிலத்தைத் தாமே நிருவகித்ததனால், இவை எந்தக் கணிசமான பலன்களையும் பெறவில்லை. அடுத்த நடவடிக்கையானது, பிரதம வகையான கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தலாக இருந்தது (தொடக்கநிலை விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கம்—Elementary Agricultural Producers' Co-operatives). இம் முறையின்கீழ், நிலம் தொகுப்புச் செய்யப்பட்டுக் கூட்டுறவுச் சங்கத்தால் அதன் நிருவாகக் குழுவின்மூலம் நிருவகிக்கப்பட்டது. ஒவ்வொரு தனி நபர் உறுப்பினரும் நிலத்திலிருந்து ஒரு வருமானத்தைப் பெறுவதற்கு உரிமை பெற்றிருந்தார். இவ் வருமானம் ஒரு குறிப்பிட்ட தொகை அல்லது உற்பத்திச் செலவுகளைக் கழித்துக்கொண்ட பிறகு ஏற்படும் மொத்த விவசாய உற்பத்தியில் ஒரு குறிப்பிட்ட விகிதமாக இருந்தது. எஞ்சிய வருமானம் எல்லோராலும், ஒவ்வொருவரும் தந்த உழைப்பிற்கிணங்கப் பகிர்ந்துகொள்ளப்பட்டது. எனவே, உழைப்பிற்காக ஒரு வருமானமும், நிலவுடைமைக்காகவுங்கூட ஒரு வருமானமும் இருந்தது. அவற்றின் செயற்பாட்டிலும் அமைப்பிலும் அச் சங்கங்கள் நம் நாட்டின் கூட்டுப் பண்ணைச் சங்கங்களுக்கு ஒப்பிடப்படலாம். 1955ஆம் ஆண்டிறுதியில் இவ் வகையான 2 மில்லியன் கூட்டுறவுச் சங்கங்கள் சீனாவில் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றில் 70 மில்லியன் உறுப்பினர்கள் இருந்தனர். இவ் வகையான கூட்டுறவுச் சங்கங்கள் உண்மையாகவே பாதி, சமதர்ம உற்பத்தியாளர்களின் ஒரு சங்கத்திலிருந்து முழுமையான சமதர்ம உற்பத்தியாளர்களின் ஒரு கூட்டுறவுச் சங்கத்திற்கு நிலைமாறும் ஏற்பாடாக இருந்தது. முழுமையான சமதர்ம உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கங்கள், பிற்காலத்தில், 'மக்கள் பொதுவுடைமைக் குடியிருப்புகள்' (People's Communes) என்று வழங்கப்பட்டன.

அடுத்த கட்டமானது, பிரதமக் கூட்டுறவுச் சங்கம் ஒரு முன்னேற்ற வகையான சங்கமாக மாறினது (முன்னேற்றமடைந்த விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கம் — Advanced Agricultural Producers' Co-operative). தனிநபர் நிலப் பகுதிகளில் தனிநபர்ச் சொத்து எண்ணம் இன்னும் நீடித்து

வந்ததால், ஒருமைப்படுத்தப்பட்ட நிருவாகத்தின் முழுப் பலன்களைப் பெற முடிவதில்லை என்பதைச் சீனர்கள் கண்டனர். தங்கள் நிலப்பகுதிகளைப் பாதித்த நில அபிவிருத்தியை அது கூட்டுறவுச் சங்கத்திற்கு மொத்தத்தில் பயனுள்ளதாக இருந்தாலுங்கூடத் தனிநபர்கள் விரும்பாமலிருந்தனர். உண்மையில், நிலவுடைமைக்கான இலாபம் நீடித்திருந்தவரை உழைப்பிற்கான இலாபம் அதற்கொத்தவாறு குறைவாக இருந்தது; ஆகையால், உழைப்பிற்கான ஊக்கமும் குறைவாக இருந்தது. இக் காலவரையில், சீனப் பொருளாதார அமைப்பின் இதரத் துறைகளுங்கூட ஒரு சமதர்மப் பாணியில் மாற்றத்தை யடைந்தன. ஆகையால், முன்னேற்றமடைந்தவகை வளர்ச்சிக்கான இயக்கமானது, குடியானவர்களுள் மிகப் பெரும்பான்மையானவர்களின் ஆதரவைப் பெற்று, கடைநிலைக் கூட்டுறவுச் சங்கங்கள் உயர்நிலைக் கூட்டுறவுச் சங்கங்களாக மாற்றம் செய்யப்பட்டன. எனவே, ஒவ்வோர் உயர்நிலைக் கூட்டுறவுச் சங்கமும் (முன்னேற்றமடைந்த விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கம்) ஒரு பரஸ்பர நிறுவனம், ஒரு கடைநிலைக் கூட்டுறவுச் சங்கம் (தொடக்கநிலை உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கம்) ஆகிய கட்டங்களின் மூலமாகத் தப்பாது சென்றுவந்தது.

### முன்னேற்றமடைந்த விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கங்கள் (Advanced Agricultural Producers' Co-operatives)

இச் சங்கங்களில் மிகப் பெரும்பான்மையானவை, 1955ஆம் வருடத்திய இலையுதிர் காலத்திற்குப் பிறகு, சீன நாட்டுக் கிராமப் புறங்களில் விவசாயத்தின் சமதர்ம மாற்றமைப்பு வெள்ளம் பெருக்கெடுத்துப் பாய்ந்தபோது தலைவர் மோ (Chairman Mao) அவர்கள் வகுத்த வழிப்படி அமைக்கப்பட்டன. இந் நிறுவனம் சமதர்ம உற்பத்தியாளர்கள் கூட்டுறவுச் சங்கம் அல்லது தொகுப்புப் பண்ணை (Socialist Producers' Co-operative or Collective Farm) என்றுங்கூட வழங்கப்பட்டது. இந் நிறுவனத்தின்கீழ் ஒரு பகுதியானது, சுமார் 100 குடியானவர்கள் குடும்பங்களைக் கொண்டதாக இருந்தது; சிறு நிலவுடைமைகளைத் தவிர, நிலம், கால்நடைகள், கருவிகள் ஆகியவைகளில் தனியார் சொத்துரிமை கிடையா. நிலம் முழுமையாகவும் கூட்டாகவும் சங்கத்திற்குச் சொந்தமாக இருந்தது. நிலத்திற்காகப் பணம் எதுவும் பட்டுவாடா செய்யப்படுவதில்லை. ஒரு குறிப்பிட்ட செலவுத் தொகைக்குப் பிறகு, இலாபமனைத்தும் தொழிலாளர்களுக்கு ஊதியமாக விநியோகிக்கப்படுகிறது. இந்த ஊதியம் சாதாரணக் கால அளவு அடிப்படையில் அல்லது ஒப்பந்த அடிப்படையின்பேரில் தனிநபர்

மீக்கோள் தரம் அல்லது வேலைவீத அடிப்படையில் கணக்கிடப் படுகிறது. மேலான பண்ணைத் தொழில் முறைகள், மேலான பண்ணைத் தொழிற் கருவிகள், இரசாயன உரங்களையும், இதர உரவகைகளையும் ஒரு சரியான முறையில் உபயோகித்தல், தண்ணீர்ப் பாதுகாப்பு மற்றும் சிறு பாசனத் திட்டங்களை மேற் கொள்ளுதல், விதைகளை அபிவிருத்தி செய்தல் முதலியன குடியானவர்களின் வருமானத்தைப் பெருமளவு உயர்த்தின. தடைகள் நீக்கம், நிலங்களைச் சமன்படுத்துதல், நிலங்களின் குறுக்கே வாய்க்கால் வெட்டுதல் முதலியவற்றைத் தட்டுத்தடை யின்றி நிறைவேற்றுவதற்குச் சாத்தியப்பட்டது. மா-சே-துங் அவர்களின் கூற்றின்படி 1955ஆம் ஆண்டு, ஜூலையில் நடப்பி லிருந்த கூட்டுறவுச் சங்கங்களில் சுமார் 80 சதவிதம் தங்கள் உறுப்பினர்களின் முந்திய உற்பத்தி மட்டத்துடன் ஒப்பிடும்போது 10 சதவீதம் முதல் 30 சதவீதம் வரை தங்கள் உற்பத்தியைப் பெருக்கியிருந்தன. 1957ஆம் ஆண்டில், குடியானவர்களுள் 50 சதவீதத்தினர் இக் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்திருந்தனர். எல்லாக் குடியானவர்களும் 1960ஆம் ஆண்டிற்குள் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்திருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. 1956ஆம் ஆண்டில், 19,00,000 கூட்டுறவுச் சங்கங்களிருந்தன. அவற்றில் ஏறத்தாழ 1,00,00,000 குடியானவர்களிருந்தனர். அவர்களுள் 75,00,000 குடியானவர்கள் முன்னேற்றமடைந்த கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களாக இருந்தனர். அரசு கொள்கை, கூட்டுறவுச் சங்கங்களில் ஒரு தன்னிச்சையான அடிப் படையில் பங்கு கொள்ளுதல் என்ற அடிப்படையிலிருந்தது என்று கூறப்படுகிறது. ஆனால், உள்ளபடி நடைமுறையில் அவ்வாறு இல்லை. கூட்டுறவுச் சங்கங்களில் சேருகின்ற தனிநபர்கள், அவர்கள் விரும்பினால், ஒரு சங்கத்திலிருந்து வாபஸ் பெற்றுக் கொள்வதற்கு வகை செய்யப்பட்டிருந்தது. ஆனால், அவர்கள் நடைமுறையில் வாபஸ் பெற்றுக்கொள்ள முடியாமலிருந்தனர். விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதில், சீன அரசு சமதர்மத்தை நோக்கி முன்னேறும் தன் கொள்கையன்றியும், பலவிதமான உள்நோக்கங்களால் தூண்டப்பட்டிருந்தது. தொழில் வளர்ச்சிக்கு மூலதன முதலீடும், அந்நியச் செலாவணியும் தேவைப் பட்டது. இவை இரண்டும், தொழில்துறையில் வளர்ச்சிபெற்ற நாடுகளுக்குச் சீனாவால் செய்யப்படக்கூடிய ஏற்றுமதிகளின்மீது பெரிதும் சார்ந்திருந்தன. இந்த ஏற்றுமதிச் சரக்குகள் அரசு தன்வசம் எடுத்துக்கொள்வதற்குத் தயாராகவிருக்கவேண்டிய விவசாய விளைபொருள்களாகப் பெருமளவில் இருக்கும். உண்மை யாகவே, ஒரு மில்லியன் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் விற்பனை செய்யக்கூடிய உபரியை அரசு பெறுவதற்கு மிக எளிதாகவுள்ளது.

உற்பத்திப் பெருக்கத்திற்காகத் தேவைப்படும் பொருள்களின் விநியோகம் மிகவும் வசதி செய்யப்படுகிறது. உள்ளூர் முதலீடு களை எழுப்புவதற்குக் கூட்டுறவுச் சங்கங்கள் உதவுகின்றன. குடியானவர்களை அணுகி, அவர்களுக்குப் புதிய விவசாயத் தொழில்நுட்பங்களையும் மற்றும், இதரச் சமுதாயப் பொருளா தாரக் கருத்தமைப்புகளையும் விளக்கம் செய்வதற்குங்கூட எளிதாக வுள்ளது. அரசு நிருவாகத்தை எளிதுபடுத்தி, அதன் செலவை உதாரணமாக, வரிவசூலிப்பு விஷயத்தில் செலவைக் குறைப்பதி லுங்கூடக் கூட்டுறவுச் சங்கங்கள் அரசுக்கு உதவிபுரிகின்றன. சமூகவிரோதப் போர்வழிகளின்மீது ஒரு பயனுள்ள தடுப்பாகவுங் கூட அவை இயங்குகின்றன. கூட்டுறவுச் சங்கங்களின் சொத்து அல்லது பயிர்த்திருடு, அனைத்துச் சமுதாயத்தின் கண்டனத்திற்கு ஆளானது. இத் திட்டம் விவசாய உற்பத்திப் பெருக்கத்திற்குங் கூட உதவி செய்துள்ளது. அரசியல் துறையில் கூட்டுறவுச் சங்கங்கள் தொழிலாளர்களுக்கும் குடியானவர்களுக்குமிடை யிலான நேச உறவை வலுப்படுத்தியுள்ளன. மற்றும், அவை முதலாளித்துவத்தின் அடிப்படையை நாட்டிலிருந் தகற்றுவதன் மூலம், ஏழைக் குடியானவர்களுக்கும், நடுத்தரக் குடியானவர் களுக்கு மிடையிலான ஒற்றுமையை ஒருங்கிணைப்புச் செய்துள்ளன.

## சம உடைமைப் பண்ணைகள்
## (Socialist Farms)

**பொது உடைமைக் குடியிருப்புகளின் தோற்றம்** (Birth of Communes)

மேற்கொண்ட ஒரு நடவடிக்கையாக முன்னேற்ற விவசாய உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கங்கள், முழுமையான சமு தர்ம ரீதியான பொதுவுடைமைச் சங்கங்களாக மாற்றப்பட்டன. பொதுவுடைமைச் சங்கங்களுக்குச் சாதகமாக உறுப்பினர்கள் தங்கள் நிலத்தின் பாத்தியத்தை ஒப்புவித்துவிட்டனர். எனவே, நிலம், மக்களின் ஒரு கூட்டுச் சொத்தாக ஆயிற்று. அதிலிருந்து கிடைக்கும் வருமானம், பொதுவுடைமைச் சங்க எல்லையில் வசிப்பவர்களின் பொதுநலனுக்காகப் பயன்படுத்தப்பட்டது. சுமார் 9,000 குடும்பங்களைக் கொண்டதும், 27 குடியானவர்-உற்பத்தி யாளர்கள் கூட்டுறவுச் சங்கங்களை உள்ளடக்கியதும், 'ஸ்பூட்நிக்' (Sputnik) என்று வழங்கப்பட்டதுமான முதல் பொது வுடைமைக் குடியிருப்பு, 1958ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட திலிருந்து பொதுவுடைமைக் குடியிருப்புகள் அமைக்கும் நடவடிக் கையானது தொடங்கியது. பொதுவாக, ஒரு சையாங்கிலுள்ள

(Hsaing) (சீனாவில் நாட்டுப்பகுதி நிருவாக அடிமட்டத்து அலகு) எல்லாக் கிராமங்களும் ஒரு பொதுவுடைமைக் குடியிருப்பில் உள்ளடங்கியுள்ளன. சராசரி அளவுள்ள ஒரு பொதுவுடைமைக் குடியிருப்பின் உறுப்பினர் எண்ணிக்கை 4,797 குடும்பங்களாக வுள்ளது. 30,000 உறுப்பினர்களைப் பெற்றிருக்கும் பெரிய பொதுவுடைமைக் குடியிருப்புகளுங்கூட உள்ளன. பொது வுடைமைக் குடியிருப்புகளை அமைக்கும் நடவடிக்கையானது, தொடக்கத்தில் விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் பணிகளையும், 'இசாங்' (Hisang) (கிராம நிருவாகத்தின் அடித்தளப் பகுதி) பணிகளையும், ஒன்றிணைப்பதன்மூலம் ஆரம்பிக்கப்பட்டது. பொது வுடைமைக் குடியிருப்புகள் அரசியல் பணிகளையும், பொருளா தாரப் பணிகளையும் ஒன்றுசேர்க்க வேண்டும். உண்மையாகவே, அவற்றின் பொறுப்பில் விவசாயம், தொழில், வாணிகம், கலா சாரம் மற்றும் இராணுவ அலுவல் ஆகியவற்றைத் தழுவுகின்ற கிராம வாழ்க்கையனைத்தின் நிருவாகம் இருக்கும். விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் பொதுவுடைமைக் குடியிருப்புகளாக மாற்றப்பட்டபோது, மக்களின் சொத்துகளனைத்தும் அவற்றால் எடுத்துக்கொள்ளப்பட்டது. எல்லையிலுள்ள நிலம் அன்றியும், தொழில்களுங்கூடப் பொதுவுடைமைக் குடியிருப்புகளால் நிரு வகிக்கப்படவேண்டும். எனவே, விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் விவசாய உற்பத்தியில் மட்டும் அக்கறை கொண்டிருந்தன; ஆனால் பொதுவுடைமைக் குடியிருப்புகளோ, அரசியல், பொருளியல், கலாசாரம் மற்றும் இராணுவ அலுவல் முதலியன போன்ற உறுப்பினர்களின் நடவடிக்கைக ளனைத்தின் பொறுப்பையும் ஒரே சமயத்தில் ஏற்றுக்கொண்டன. ஆக, ஒரு பொதுவுடைமைக் குடியிருப்பானது, எல்லாம் அடங்கிய மிகப் பெரிய ஒரு நிறுவன மாகும். மற்றும், அது ருஷ்ய நாட்டின் கோல்கோஸை யுங் (Kolkhoz) கூட மிஞ்சுகிறது.

ஒரு பொதுவுடைமைக் குடியிருப்பின் உறுப்பினர்கள் வெறும் கூலிவாங்கும் பேர்வழிகளல்லர்; அவர்கள் சமுதாய உணவு (Communal Meals) வடிவத்தில் இலவச உணவு வழங்குதலை யுங்கூடப் பெறுகின்றனர். வேலைக்கான ஓர் ஊக்குவிப்பாகக் கூடுதல் ஊதியம் தகுதியுள்ளவர்களுக் களிக்கப்படுகிறது. பண்ணை நிருவாகம் மிகத் திறம்படச் செய்யப்படுகிறது. மற்றும், ஓர் உறுப்பினரால் செய்யப்படவேண்டிய வேலையின் குறுமஅளவு, சில படித்தரங்களுக்கேற்ப நிருணயிக்கப்படுகிறது. மந்தமாகவுள்ள வர்கள் தண்டனைக்குள்ளாவார்கள். குறைந்தபட்சச் செலவில் உயர்ந்தபட்ச உற்பத்தி பெறக்கூடிய வகையில் ஒவ்வொரு கட்டத் திலும் சேதாரம் தவிர்க்கப்படுகிறது. எனவே, விவசாயம்

'பிழைப்புப் பொருளாதார அமைப்பிலிருந்து' ஒரு 'வாணிகப் பொருளாதார அமைப்பிற்கு' மாற்றியமைக்கப்பட்டது. விவசாயத்தில் விஞ்ஞான முறைகள் கடைப்பிடிக்கப்படுவதில் ஒரு பெரிய முன்னேற்றம் நிகழ்ந்துள்ளது. சுத்தமான விதை, மேம்படுத்தப்பட்ட கருவிகள், உரவகைகள், பயிர்ப் பாதுகாப்பு முறைகள் ஆகியவை பிரபலியமாக்கப்பட்டுள்ளன. பண்ணைகளில் பெரிய எண்ணிக்கையில் சிறு பாசனப் பணிகள் நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளன. இவையாவும் விவசாய உற்பத்திப் பெருக்கத்தை விளைவித்துள்ளன.

நிருவாகத் துறையில், பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கத்தின் கீழுள்ள எல்லையின் நிருவாகமனைத்தும் அதற்கு ஒப்புவிக்கப்பட்டுள்ளது. அந்த எல்லையிலுள்ள அரசு பணியாளர்களும் பொதுவுடைமைக் குடியிருப்பின் பணியாளர்களாக உள்ளனர். மற்றும், அவர்கள் அதன் நிருவாகக் குழுவின் கட்டளைகளின்கீழ்ப் பணிபுரிகின்றனர். 1958ஆம் ஆண்டு செப்டம்பர் இறுதியில் 112 மில்லியன் உறுப்பினர் எண்ணிக்கையைக் கொண்ட 23,937 பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கங்கள் அமைக்கப்பட்டிருந்தன. 1961ஆம் ஆண்டில் 'ஒரு ஐசாங்' (Haisang), ஒரு பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கம்' பெற்றிருக்கவேண்டும் என்ற கருத்துப் பிரேரேபிக்கப்பட்டது. 1966ஆம் ஆண்டில், சீனாவிலிருந்த பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கங்களின் எண்ணிக்கை 70,000 முதல் 80,000 வரை இருக்குமென்று மதிப்பீடு செய்யப்பட்டது. உண்மையாகவே இந்தப் பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கங்கள், பொதுவுடைமையின் (Communism) மூலைகளாக இருந்தன.

பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கத்தின் செயற்பாட்டு முறையிலிருந்து ஒருவர் அதில் கூட்டுறவுக் கொள்கை யெதுவும் அடங்கியில்லை என்ற முடிவுக்கு வரலாம். பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கங்கள் மிகத் துரிதமாக அமைக்கப்பட்டிருந்ததால், அவை எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மக்களின் சொந்த விருப்ப அடிப்படையைக் கொண்டிருந்தனவென்று கூறுவதற்குக் கூட முடியாது. பொதுவுடைமைக் கட்சியின் ஒரு கொள்கை விஷயமாகவே அவை மக்களால் அமைக்கப்பட்டன.

## விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள், பொதுவுடைமைக் குடியிருப்பு ஆகியவற்றின் வெற்றிக்கான காரணங்கள்

(i) விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் நாட்டில் நிலச் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்பட்ட வுடனேயே வளர்ச்சியடைந்

தன. குடியானவர்களும் நிலமில்லாத் தொழிலாளர்களும், பல நூற்றாண்டுகளாக நிலவுடைமையாளர்களால் சொந்தமாக வைக்கப்பட்டு வந்திருந்த நிலத்தின் சொந்தக்காரர்களாகச் செய்யப்பட்டனர். ஆகையால், புதிய குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கக் கருத்தை எளிதாக ஏற்றுக்கொண்டு புதிய முயற்சிகளைக் கூட்டுறவு அடிப்படையின்பேரில் மேற்கொள்வதற்குத் தயாராக இருந்தனர்.

(ii) நாட்டில் பொதுவுடைமை எண்ணம் அலைபாயும் போதும், பொதுவுடைமைக் கட்சி அதிகாரத்திற்கு வந்த பிறகும் அது, மக்களின் வருங்கால மேம்பாட்டிற்கான தீவிரமான மாறுதல்களுக்காக மக்களின் நம்பிக்கையைப் பெறமுடிந்தது. அரசு ஆலோசனையின்பேரில் செயல்படுவதற்கு மக்கள் தயாராக இருந்தனர். பொதுவுடைமைக் கட்சித் தொண்டர்களும், அரசும் கூட்டுறவுப் பொதுவுடைமைக் குடியிருப்புச் சங்கங்களை அமைக்கும் திட்டத்தைச் செயல்படுத்துவதில் அதிகச் சிரமத்தைக் காணவில்லை.

(iii) கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசு ஊக்குவிப்புகள் பலவற்றை வழங்கிற்று. தொகுப்புப் பண்ணைகளுக்கு, உணவு தானியங்களுக்காகவும், இதர விளைபொருள்களுக்காகவும் ஒரு நிருணயமான விலையை உத்தரவாதம் செய்ததன்மூலம், அரசு அவைகளுக்குப் பாதுகாப்பு அளித்தது. கிராம நிதி யுதவியையும் அரசு அளித்தது. இந் நடவடிக்கைகள் அதிகமான உற்பத்தியைப் பெறுவதற்கான ஊக்குவிப்புகளாகச் செயற்பட்டன.

(iv) ஒரு நிறுவன வகையிலிருந்து மற்றொரு நிறுவன வகைக்கு நிலைமாறினதும், இறுதியாகச் சமூக உரிமைப் பொருளாதார அமைப்பு (Collectivisation) ஏற்பட்டதும், குடியானவர்களைப் புதிய நிலைமைகளுக்குச் சரிப்படுத்திக்கொள்ளவும், புதிய நிறுவன வகைகளைக் கடைப்பிடிப்பதற்கும் தேவையான பயிற்சியை அவர்களுக்கு அளித்தது. சமூக உரிமைப் பொருளாதாரத்தின் அனுகூலங்களைப் பற்றிய கல்விப் பிரச்சாரச் செயல்திட்டம் மக்களிடையே பரவலாகவும் விறுவிறுப்பாகவும் செய்யப்பட்டதுங்கூட, அதன் வெற்றிக்குப் பொறுப்பாக இருந்தது.

## சீனக் கூட்டுறவு இயக்கத்தின் பொது இயல்புகள்

சீனா-ஜப்பான் போருக்குப் பிறகு விவசாயமல்லாத துறையிலும் வளர்ச்சியிருந்தாலுங்கூட, சீனாவில் கூட்டுறவு இயக்கமானது முதன்மையாக ஒரு விவசாயக் கூட்டுறவு இயக்கமாக

உள்ளது. கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் சொந்த நிதிகளை அதிகமாக அமைத்து வளர்க்கவில்லை. அவற்றின் பங்குமூலதனமும், வைப்புகளும் கணிசமான அளவில் இல்லை. அவை, குடியானவர்கள் வங்கி, சீனவங்கி, இதர வர்த்தக வங்கிகள், சையின் வங்கிகள் (Hsien Banks) போன்ற வெளிநிதியாதாரங்களின்மீது பெரும்பாலும் சார்ந்துள்ளன. சங்கங்களுக்கே தணிக்கை விட்டுவிடப்பட்டுள்ளது. உறுப்பினர்கள் தங்கள் பொறுப்புகளை நன்கு புரிந்துகொண்டிருந்தனர். பிரதம சங்கங்களில் வேண்டுமென்றே நிகழும் தவணைத் தவறுதல் அபூர்வமாகவுள்ளது. தலைவர்களும்—பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களும்—விவசாயத்தைப் பற்றியும், மக்களைப் பற்றியும் நன்கு அறிந்திருந்ததால், மக்களின் நடத்தையின்மீது ஒரு பெரிய செல்வாக்கைச் செலுத்தி வந்துள்ளனர்.

விவசாயவிளைபொருள்களுக்காக அரசால் வழங்கப்படும் உத்தரவாத விலை, சீனாவில் குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங்களில் சேருவதற்கு ஒரு வலுவுள்ள தூண்டுதலாக அமைந்துள்ளது. ஏறத்தாழ, அதே மாதிரியான முறையானது இந்தியாவிலும் செயற்படுத்த முடிந்தால், விற்பனைச் சங்கங்களின் முன்னேற்றம் துரிதப்படுத்தப்படக்கூடும்; அதன் விளைவாகக் குடியானவர்களுக்கு அதிகமான வருவாயும் கிடைக்கக் கூடும். பரந்த உறுப்பினர் கல்வியும், தலைவர்களுக்கும் மக்களுக்கும் இடையிலான நெருங்கிய தொடர்பும், கூட்டுறவுத் துறையில் நல்ல பலன்களை அடைவதற்கு அவசியமாக உள்ளன. சீனாவின் தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள், இந் நாட்டுக் கூட்டுறவாளர்களுக்காக ஒரு பயனுள்ள ஆய்வுப் படிப்பினை நல்குகின்றன. இந்தியாவில் குடிசைத் தொழில், சிறுதொழில் நிறுவனங்களைப் பெருவாரியாக அமைப்பதன்மூலம், மக்களுக்கு வேலைவாய்ப்பை அளித்து அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக அவை தக்க மாறுதல்களுடன் பின்பற்றப்படலாம்.

## (vii) ஜப்பான்
(Japan)

**ஜப்பானில் கூட்டுறவு இயக்கத்தின் தோற்றம்**

ஜப்பான் நாடு ஒரு விசித்திரமான இடங்கொண்டிருப்பதால், ஜப்பானியர்கள் பஞ்ச பூதங்களுடன் போராடுவதற்கு ஒன்று சேரும்படி இயற்கை விதித்திருப்பதாகத் தெரிகிறது. அங்கு அணைகளும், அகழ்களும் கூட்டுறவு முறையில் கட்டப்பட்டுள்ளன.

அரிசிச் சாகுபடிக்காகத் தேவைப்படும் பாசன முறையின் காரண மாகக் கூட்டுழைப்புப் பரவியிருந்துள்ளது. மீன்வளத் துறையிலுங் கூட, மீன் பிடிக்கும் வலைகள், படகுகள் ஆகியவைகளின் உபயோகத்தில் ஜப்பானியக் கூட்டுறவு பயன்படுத்தப்பட்டுள்ளது. நிதித்துறையிலும் கூட்டுறவுச் சங்கங்களின் தோற்றத்திற்குக் 'கோ' (Ko) அல்லது 'முஜின்' (Mujin) என்று வழங்கப்பட்ட ஒரு பழங்கால முறை காரணமாக இருந்தது. அது, பிற்காலத்தில் அதைவிட மேலான முழுத் தேர்ச்சியடைந்த நிலைமையில், 'ஓட்டாகுசா' (Hotakusha) வடிவத்தில் தோன்றிற்று. முஜின் என்பது நம் நாட்டுச் சீட்டுநிதி முறைக்குச் சமமாக உள்ளது. சீட்டு, வாக்குப் பதிவுத்தாள் அல்லது ஏலத்தின்மூலம் எடுக்கப் பட்டு வந்தது. ஓட்டாகுசா என்பது முஜின் என்பதன் விளைவு. முஜினைப் போலல்லாது, ஓட்டாகுசா என்பது கடன்கோரும் உறுப்பினர்களுக்குக் கடனளிப்பதற்கான ஒரு சர்வாதிகாரமான நிறுவனமாகும். கடனுதவியானது, உறுப்பினர்கள் செலுத்தும் கட்டாய உதவித் தொகைகளையும், சுயேச்சையான உதவித் தொகைகளையுங்கொண்டு அமைக்கப்பட்ட ஒரு நிதியிலிருந்து அளிக்கப்பட்டது. ஜப்பானியர்கள், கூட்டுறவுக்கான ஓர் இயல் பான விருப்பத்தைப் பெற்றிருந்தனர். கூட்டுறவு உற்சாகம் ஜப்பானியர் வாழ்க்கையின் ஒவ்வொரு நடவடிக்கையிலும் நிலவு கின்றது.

இந்தியாவில் போன்று, ஜப்பானிலும், கூட்டுறவு இயக்க மானது, கடும் வட்டி வாங்குபவர்களும், அதர்மத்திற்கு அஞ்சாத வர்த்தகர்களும் இழைத்த கொடுமைகளிலிருந்தும், இதர முறைகேடுகளிலிருந்தும் குடியானவர்களை மீட்பதற்கு ஒரு நல்வாழ்வு நடவடிக்கையாக அரசால் தொடங்கிவைக்கப் பட்டது. அமைக்கப்பட்ட முதல்வகையான சங்கம் கடன் சங்க மாக இருந்தது. அது, பிற்காலத்தில் தோன்றிய எல்லா இதர வகையான கூட்டுறவுச் சங்கங்களுக்கும் ஒரு தொடக்க முனையாக இருந்தது. ஜப்பானில் தொடங்கி வைக்கப்பட்ட கடன் கூட்டுறவு இயக்கம் ஜெர்மனியின் ரெய்ஃபெய்சன் வங்கிகள் முறையில் இருந்தது.

ஜப்பானில் நவீனக் கூட்டுறவு இயக்கம், 1900ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் இயற்றப்பட்டபோது தொடங் கியது. இச் சட்டம் 4 வகையான கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கு அதிகாரமளித்தது. அதாவது, கடன் சங்கம், விற்பனைச் சங்கம், கொள்முதல் சங்கம் (Purchasing Society), உபயோகச் சங்கம் (Utility Society). உபயோகச் சங்கத்தின்

நோக்கம் உறுப்பினர்களுக்குப் பொறிகளை அல்லது தொழில் அபிவிருத்திக்கான வசதிகளை வழங்குவதும் அல்லது அவர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதுமாகும். ஆயினும், ஒரு சங்கம் மேற்குறிக்கப்பட்ட பணிகளில் ஒன்றுக்கு அதிகமான பணிகளுக்காக அமைக்கப்படலாம். ஒரு சங்கத்தின் சட்டப்படியான உறுப்பினர் எண்ணிக்கை 7 ஆக இருந்தது. சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பையாவது வரையறுக்கப்பட்ட பொறுப்பையாவது உத்தரவாதப் பொறுப்பையாவது மேற்கொள்ளலாம். எனினும், 1932ஆம் வருடத்திய ஒரு சட்டம், வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அல்லது உத்தரவாதப் பொறுப்புச் சங்கங்களாக மாற்றப்படவேண்டுமென்று விதித்தது. ஓர் உறுப்பினரின் உச்ச அளவுப் பங்கு மூலதனம் வரையறுக்கப்பட்டிருந்தது. சங்கங்களால் ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய வைப்புகளுக்குங்கூட வரம்புகள் உள்ளன. ஒவ்வோர் உறுப்பினரும் ஒரு வாக்கை மட்டுமே பெற்றிருந்தார். பதிலாள் வாக்களிப்பு, ஓர் உறுப்பினர் மூலமாகக் கையாளப்படுவதற்கு அனுமதிக்கப்பட்டது. சங்கங்கள், தங்கள் நிகர இலாபங்களில் குறைந்தபட்சம் கால் பாகத்தைக் காப்புநிதிக்கு ஒதுக்கீடு செய்யவேண்டுமென்பது அவசியமாக இருந்தது. பங்குகளின்மீதான இலாபஈவுகளின் விகிதம் குறைந்தபட்சம் 6 சதவீதத்திற்கும், விசேஷ சந்தர்ப்பங்களில் 10 சதவீதத்திற்கும் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. மற்றவர்கள் தங்கள் பெயர்களில் கூட்டுறவு என்ற சொல்லை உபயோகித்தல் தடைசெய்யப்பட்டது.

1903ஆம் ஆண்டில், பல்வேறு வகையான சங்கங்களின் எண்ணிக்கை 872-க்கு உயர்ந்தது. அதில், 549 கடன் சங்கங்களாக இருந்தன. 1905ஆம் ஆண்டில், மையக் கூட்டுறவு ஒன்றியம் என்ற அரசு சார்பற்ற நிறுவனம் நிறுவப்பட்டது. அந் நிறுவனம், நாடெங்கும் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கான ஒரு தீவிர இயக்கத்தைத் தொடங்கி வைப்பதற்கு, வைராக்கியமுள்ள தலைவர்களால் பயன்படுத்தப்பட்டது. 1906ஆம் ஆண்டில், கடன் சங்கங்கள் விற்பனை அலுவல் பற்றிய கூடுதலான பணியைப் புரிவதற்கு அதிகாரமளிக்கப்பட்டன. ஆக, இக்காலத்துவகையான பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களின் முக்கியப் பகுதி அமைக்கப்பட்டது. 1909ஆம் ஆண்டில் சங்கங்களின் எண்ணிக்கை 5,690-க்கு உயர்ந்தது. அவற்றில் சுமார் 3.8 இலட்ச உறுப்பினர்கள் இருந்தனர். பிரதம சங்கம், உயர்நிலை நிறுவனங்களை அமைப்பதற்கான அவசியத்தை விரைவில் உணர்ந்தது. ஆகையால், கூட்டுறவு ஒன்றியங்களும் கூட்டமைப்பு

களும் அமைக்கப்படுவதைச் சட்டப்படியாக்குவதற்காகக் கூட்டுறவுச் சட்டம் 1909ஆம் ஆண்டில் திருத்தப்பட்டது. அதற்குப் பிறகு, உடனடியாக நாட்டில் பல கூட்டமைப்புகள் நிறுவப்பட்டன. 1912ஆம் ஆண்டில் சங்கங்களின் எண்ணிக்கை 10,455 ஆக இருந்தது. அவற்றில் 11 இலட்ச உறுப்பினர்கள் இருந்தனர். 1923ஆம் ஆண்டில், தேசியக் கொள்முதல் கூட்டுறவுக் கூட்டமைப்பும் (National Purchase Co-operative Federation), மையக் கூட்டுறவு வங்கியும் அமைக்கப்பட்டன. 1930ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் ஏற்பட்ட வர்த்தக மந்தத்தைச் சமாளிக்கும்பொருட்டு ஐந்தாண்டுக் கூட்டுறவு விரிவாக்கச் செயல் திட்டம் ஒன்று தொடங்கப்பட்டது. அதன் நோக்கம் எல்லாப் பட்டினங்களிலும், கிராமங்களிலும் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தலும், அத்தகைய ஓர் இயக்கத்தில் எல்லாக் குடியானவர்களையும் பங்குகொள்ளத் தூண்டச் செய்தலும், சங்கங்களின் நடவடிக்கைகளை ஒரு கணிசமான விரிவாக்கம் செய்தலுமாக இருந்தது. எனினும், இயக்கம் முன்னேறிவந்தபோது வியாபாரிகள் கூட்டுறவு எதிர்ப்பு இயக்கத்தை நடத்தினர். இந்த எதிர்ப்பு இயக்கம் சீக்கிரத்தில் ஒரு கடுமையான உணர்ச்சி மிகுந்த அரசியல் பிரச்சினையாக ஆயிற்று. ஆயினும், கூட்டுறவுச் சங்கங்கள் அத்தகைய ஓர் எதிர்ப்பு இயக்கத்திற்கு விட்டுக்கொடுக்காமல், ஓர் இரண்டாவது விரிவாக்கத் திட்டத்தை மூன்று ஆண்டுகளுக்கு அமல்செய்து வந்தன. அதன் விளைவாக, கூட்டுறவுச் சங்கங்களில்லாத பட்டினங்களும், கிராமங்களும் மறைந்து, கூட்டுறவுச் சங்கங்களில் பங்குகொண்டவர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. இரண்டாவது உலகப் போர் ஆரம்பித்தவுடன் கூட்டுறவுச் சங்கங்கள், விவசாயக் கழகங்களுடன் ('நோக்கை' – Nokkai) சேர்ந்து, போர்க் காலத்துப் பொருளாதார அமைப்பின் தேவைகளைப் பூர்த்திசெய்யும்பொருட்டு, விவசாயச் சங்கங்களாக ('நோக்யோகை'–Nogyokai) அமைக்கப்பட்டன. இதைத் தவிர, கட்டாய அங்கத்துவம் என்ற கொள்கை இயக்கத்தின் கூட்டுறவுத் தன்மையைப் பெரிதும் மாறுதல் செய்தது. போருக்குப் பிறகு, இயக்கம் மீண்டும் சீரமைக்கப்பட்டது. 1947ஆம் ஆண்டில், ஜெர்மானிய மாதிரியை அடிப்படையாகக் கொண்ட பழைய கூட்டுறவுச் சட்டத்திற்குப் பதிலாகப் பல்வேறு வகையான சங்கங்களுக்காகப் புதிய கூட்டுறவுச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. ஆக, இப்போது, (i) 1947ஆம் வருடத்திய விவசாயக் கூட்டுறவுக் கழகச் சட்டம், (ii) 1948ஆம் வருடத்திய நுகர்வோர் கூட்டுறவுக் கழகச் சட்டம், (iii) 1948ஆம் வருடத்திய கூட்டுறவுத் தொழில்முயற்சிச் சட்டம், (iv) 1948ஆம் வருடத்திய மீன்வளத்துறைக் கூட்டுறவுச் சட்டம் ஆகிய சட்டங்கள் இருக்கின்றன.

போர்க்காலத்தின்போது, மாறுதல் அடைந்திருந்த கூட்டுறவுச் சங்கங்களின் தன்மையை இப் புதிய சட்டங்கள் முறைப்படுத்தின. இச் சீர்திருத்தங்கள் கூட்டுறவுச் சங்கங்களைக் கூட்டுறவு முறையில் வளர்ச்சியடைய வகைசெய்தன. கூட்டுறவுச் சங்கங்களும் தரத்திலும், எண்ணிக்கையிலும் நல்ல முன்னேற்றமடைந்தன. தற்போது, பிரதானமாக 5 வகையான கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன.

(i) விவசாயக் கூட்டுறவுக் கழகங்கள் (Agricultural Co-operative Associations)

(ii) மீன்வளக் கூட்டுறவுக் கழகங்கள் (Fisheries Co-operative Associations)

(iii) வன வளத்துறைக் கூட்டுறவுச் சங்கங்கள் (Forestry Co-operative Societies)

(iv) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் (Consumers Co-operatives)

(v) தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் (Industrial Co-operatives)

இவ் வகைச் சங்கங்களைப் பற்றிய ஒரு சுருக்கமான குறிப்புக் கீழே தரப்பட்டுள்ளது.

## விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள்–அவற்றின் அமைப்பு

### பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள்

(i) ஜப்பானில் பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள், நகரங்கள் மட்டத்திலும், பட்டினங்கள் மட்டத்திலும், கிராமங்கள் மட்டத்திலும் அமைக்கப்படுகின்றன. அவற்றின் அங்கத்துவம், குடியானவர்களை முறையான உறுப்பினர்களாகவும், விவசாயமல்லாத குடியிருப்பவர்களைத் துணை உறுப்பினர்களாகவும் உள்ளடக்கியிருந்தது. பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கம் இரண்டு வகையாகப் பிரிக்கப்படலாம். ஒன்று, பலநோக்குச் சங்கம்; மற்றொன்று, ஒரேநோக்குச் சங்கம். பலநோக்குச் சங்கங்கள், பல்வேறு விவசாய விளைபொருள்களை விற்பனை செய்தல், சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்களை வழங்குதல், கடன் வசதி, பரஸ்பர ஈட்டுறுதி, பதனப்படுத்துதல் முதலியன போன்ற நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன. அத்தகைய பலநோக்கு நடவடிக்கைகள், கலப்புப் பண்ணைத் தொழிலில் ஈடுபட்டிருக்

கின்ற ஜப்பானியக் குடியானவர்களின் தேவைகளுக்குப் பொருத்தப்பட்டுள்ளன. அவை, ஜப்பானிய விவசாயக் கூட்டுறவு இயக்கத்தின் முதன்மை அணிகளாக அமைந்துள்ளன. பழ வகைகள், காய்கறி வகைகள், மண்வளப் பாதுகாப்பு, கால்நடை வளர்ப்புப் போன்ற சில தனிப்பட்ட துறைகளிலுங்கூட இத் துறைகளிலிருந்து கிடைக்கின்ற பொருள்களை விற்பனை செய்வதில் முழுக் கவனம் செலுத்துவதற்காக அமைக்கப்பட்ட ஒரேநோக்குச் சங்கங்களும் உள்ளன. பெரும்பாலும், இச் சங்கங்களின் எல்லா உறுப்பினர் களும் பலநோக்கு விவசாயச் சங்கங்களின் உறுப்பினர்களாகவும் ஒரே காலத்தில் உள்ளனர்.

**(ii) ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த கூட்டமைப்புகளும், ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த ஒன்றியங்களும்** (Prefectural Federations and Prefectural Unions): பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் தங்களுக்கு ஒத்த கூட்டமைப்புகளை ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த மட்டத்தில் (Prefectural evel) அமைத்துள்ளன. இவை குறிப்பிட்ட பணிகளுக்கு ஏற்ப அமைக்கப்படுகின்றன. இக் கூட்டமைப்புகள் இரண்டு வகையாகப் பிரிக்கப்படலாம். (அ) ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த பொருளியல் கூட்டமைப்புகள், ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கடன் கூட்டமைப்புகள், ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த நல்வாழ்வுக் கூட்டமைப்புகள் முதலியன போன்ற பலநோக்கு விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களைப் பிரதானமாக உறுப்பினர்களாக்கொண்ட கூட்டமைப்புகள். (ஆ) பால்வளக் கூட்டுறவுக் கூட்டமைப்புகள், பட்டுப்புழு வளர்ப்புக் கூட்டுறவுக் கூட்டமைப்புகள், தோட்டக் கலைக் கூட்டுறவுக் கூட்டமைப்புகள் முதலியன போன்ற பிரதான மாக ஒரேநோக்கு விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களை உறுப்பினர் களாகக் கொண்ட கூட்டமைப்புகள். முதல்வகைக் கூட்டமைப்பு கள், இரண்டாவது வகைக் கூட்டமைப்புகளின் பணிகளை நிறைவு செய்கின்றன.

ஜப்பான் நாட்டிலுள்ள 47 ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கூட்டமைப்புகள் ஒவ்வொன்றும் விவசாயக் கூட்டுறவுச் சங்கங் களின் ஓர் ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த ஒன்றியத்தை அமைத்துள்ளது. இவ் வொன்றியத்தில் பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களும், ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கூட்டமைப்புகளும் உறுப்பினர்களாக வுள்ளன. அவை எவ்விதப் பொருளாதார அலுவலிலும் தங்களை ஈடுபடுத்திக் கொள்வதில்லை. ஆனால், அவை வழிகாட்டுதல், ஒருமைப்படுத்துதல், ஆய்வு செய்தல், விசாரணை மேற்கொள்ளுதல், பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின்

சார்பாகவும் ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த கூட்டமைப்புகளின் சார்பாகவும் கல்வியளித்தல், தகவல் வழங்குதல், தணிக்கை செய்தல் ஆகிய காரியங்களுக்காகச் செயற்படுகின்றன. மற்றும், அவை, ஒவ்வோர் ஆட்சி அரங்கத் தலைமையிலுமுள்ள விவசாயக் கூட்டுறவு இயக்கத்தின் நலன்களுக்கும், கருத்துகளுக்கும் பிரதிநிதியாக வுள்ளன.

**(iii) மத்திய ஒன்றியமும் தேசியக் கூட்டமைப்புகளும், பிறவும் :** ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த (Prefectural) மட்டத்தி லுள்ள ஒவ்வொரு கூட்டமைப்பும் தேசிய மட்டத்தில் தனக்குச் சரிநேரான நிறுவனத்தைப் பெற்றுள்ளது. தேசியக் கூட்டமைப்புகளுங்கூட இரண்டுவகையாகப் பிரிக்கப்படக்கூடும். (அ) விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு, விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் பரஸ்பர ஈட்டுறுதித் தேசியக் கூட்டமைப்பு, விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் செய்தித்தாள், தகவல் தேசியக் கூட்டமைப்பு முதலியனபோன்ற பலநோக்கு விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தொடர்புகொண்ட தேசியக் கூட்டமைப்புகள். (ஆ) கால்நடை வளக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு, பால்வளத் தேசியக் கூட்டமைப்பு, பட்டுப் புழு வளர்ப்புக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியக் கூட்டமைப்பு முதலியன போன்ற ஓரேநோக்கு விவசாயக் கூட்டுறவுச் சங்கங் களுக்குத் தொடர்புகொண்ட தேசியக் கூட்டமைப்புகள்.

இவையன்றியும், விவசாய வனத் துறைக்கான மையக் கூட்டுறவு வங்கி, விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் கடன் கூட்டமைப்புகளின் தேசியக் கழகமும், விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியச் சுற்றுப்பயணக் கழகமும், யூனிகூப் ஜப்பா னும் (Unicoop Japan) உள்ளன. விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் மத்திய ஒன்றியமானது, நாடெங்கும் பரவியுள்ள ஒரு நிறுவனமாகும். பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களும் ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கூட்டமைப்புகளும், விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த ஒன்றி யங்களும், பல்வேறு தேசியக் கூட்டமைப்புகளும் அதன் உறுப்பினர் களாக உள்ளன. அது வழிகாட்டுதல், ஒருமைப்படுத்துதல், ஆய்வு செய்தல், கல்வி, செய்தி பரப்புதல், தணிக்கை செய்தல் முதலியனபோன்ற பணிகளில் ஈடுபடுவதுடன் ஜப்பான் நாட்டு விவசாயக் கூட்டுறவு இயக்கத்தின் நலன்களுக்கும், கருத்துகளுக் கும் பிரதிநிதியாகவுங்கூட இயங்குகின்றது.

## பலநோக்குப் பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள்

**(i) அமைப்பு:** பலநோக்குப் பிரதம விவசாயச் சங்கத்தின் உறுப்பினர்கள், முறையான உறுப்பினர்களாகவும், வாக்குரிமை பெருத துணை உறுப்பினர்களாகவும் உள்ளனர். முறையான உறுப்பினர்கள் குடியானவர்களாவர். துணை உறுப்பினர்கள் கூட்டுறவுச் சங்கத்தின் அலுவலெல்லையில் உறைபவர்களாவர். ஒரு விவசாயக் கூட்டுறவுச் சங்கத்தின் பேரவைக் கூட்டம் அதன் உயர் அதிகாரியாகவும், முடிவு செய்யும் அமைப்பாகவும் உள்ளது. ஏராளமான உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பெரிய அளவுக் கூட்டுறவு விவசாயச் சங்கத்தைப் பொறுத்தமட்டில், முடிவு செய்வதற்காக அதிகாரம் ஒப்படைக்கப்பட்ட ஒரு பிரதிநிதிகள் கூட்டம் அமைக்கப்படுகிறது. பேரவைக் கூட்டம் இயக்குநர்களையும், தணிக்கையாளர்களையும் தேர்ந்தெடுக்கிறது. இயக்குநர் குழு, பேரவைக் கூட்டத்தால் நிர்ணயிக்கப்பட்ட கொள்கை முறைகளுக்கு இணங்கச் சங்கத்தின் இயல்பான அலுவல்களைக் கவனிக்கின்றது. தணிக்கையாளர்கள், இயக்குநர் குழுவின் செயல்கள்மீதும், சங்கத்தின் ஆஸ்திகள்மீதும் ஓர் ஆய்வைப் பராமரிக்கவும், குற்றங்குறைகளை எடுத்துக்காட்டவும், கூட்டுறவுச் சங்கம் சரியான பாதையில் வளர்ச்சியடைந்துவருவதை அவற்றின்மூலம் நிச்சயப்படுத்தவும் வேண்டும்.

ஒவ்வொரு பலநோக்குப் பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கமும், குக் கிராம மட்டத்தில் ஓர் உள்ளூர் நிறுவனத்தைப் பெற்றுள்ளது. இந் நிறுவனம், கூட்டுறவுச் சங்கமும், அதன் உறுப்பினரும் தொடர்புப் போக்குவரத்தையும், பரஸ்பர அறிவையும் பராமரிப்புச் செய்வதற்கான ஒரு மேடையை வழங்குகின்றது. மிக அண்மையில் உறுப்பினர்கள் பண்ணைத்தொழிலின் ஒவ்வொரு துறைக்காகவும் ஒரு நிறுவனம் அமைத்துள்ளனர். உதாரணமாக, நெற்பயிரிடுபவர்களின் ஒரு குழுவின் உறுப்பினர்கள் கூடி விவசாயத் தொழில்நுட்பங்களையும், பண்ணை நிருவாகத்தையும் வளர்க்க முடியும். ஒரு விவசாயக் கூட்டுறவுச் சங்கத்தின் நடவடிக்கைகளை அமல்படுத்துவதற்கான அமைப்பு, சாதாரணமாகப் பல இலாக்காக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வழிகாட்டுதல், விற்பனை செய்தல், கொள்முதல் செய்தல், கடனளித்தல், பரஸ்பர ஈட்டுறுதி செய்தல் முதலியன போன்ற அவற்றின் பணிகளுக்கேற்ப அவை அமைக்கப்படுகின்றன. இந்த இலாக்காக்களில் அன்றாடப் பணிகளுக்கான பொறுப்பு, முழுநேர ஊதியம் பெற்ற பொதுமேலாளர் வசமும், இதரப் பணியாளர்கள் வசமும் உள்ளது.

**(ii) நடவடிக்கைகள்:** ஒரு பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கம், விவசாயக் கூட்டுறவுச் சட்டத்திற்கிணங்க மேற்கொள்ளக் கூடிய நடவடிக்கைகளின் வகையானது, விற்பனை, கொள்முதல், கடன், பரஸ்பர ஈட்டுறுதி, பதனப்படுத்துதல், உபயோகித்தல், கல்வி, வழிகாட்டுதல் முதலியவையாக உள்ளது. பங்கு மூல தனத்தைக் கொண்ட எந்தப் பிரதம சங்கமும் இந் நடவடிக்கை களில் எல்லாவற்றிலும் அல்லது சிலவற்றிலும் அல்லது ஒன்றில் மட்டிலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளலாம். எனினும், பங்கு மூலதனம் பெற்றில்லாத எந்தப் பிரதம சங்கமும் எவ்விதமான வைப்புகளையும் பெறுவதற்கு அதிகாரமளிக்கப்படாது.

**(அ) வழிகாட்டுதல்:** வழிகாட்டுதல் நடவடிக்கையானது, பொருளியல் அலுவலிலிருந்து வேறுபடுத்தப்பட்டுள்ளது. வழி காட்டுதல் நடவடிக்கைகள், விவசாய உற்பத்தி, பண்ணை நிரு வாகம், உறுப்பினர்கள் பின்பற்றவேண்டிய வாழ்க்கை முறைகள் ஆகியவைகளைக் குறித்து வழிகாட்டலையும், கல்வியறிவையும் வழங்கி, அவற்றின்மூலம் உறுப்பினர்களின் பண்ணை நிருவாகத் தையும், வாழ்க்கை முறையையும் மேம்படுத்துவதற்கு உதவ உத்தேசிக்கப்பட்டுள்ளன. இக் காரியத்திற்காக, ஒவ்வொரு பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கமும் பண்ணை ஆலோசகர் களையும் வீட்டுவாழ்க்கை மேம்பாட்டிற்கான ஆலோசகர்களையும் பெற்றுள்ளது.

**(ஆ) விற்பனை:** விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் விற்பனை முறையானது, 'நிபந்தனையற்ற அனுப்புதல்' (Unconditional Consignment) என்று வழங்கப்படுகிறது. இம் முறை யின்படி, பொருள்கள் தொகுப்புச் செய்யப்பட்டு உறுப்பினர் களுக்குப் பணம் பட்டுவாடா செய்யப்படுகிறது. பிரதம விவ சாயக் கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் உறுப்பினர்கள் ஒருபடித் தான தரமும், படித்தரமுமுள்ள பொருள்களின் திட்டமிட்ட உற்பத்தியை மேற்கொள்ள வேண்டுமென்றும், அவர்களின் உற் பத்திப் பொருள்களைக் கூட்டுறவு முறையில் விற்பனை செய்தல் மீது அவர்கள் பிரத்தியேகமாகச் சார்ந்திருக்க வேண்டுமென்றும் கோரிக்கைவிடுக்கின்றன. விற்பனைச் செலவுகளை மேற்கொள் வதற்கு உறுப்பினர்களிடமிருந்து முன்னமே நிருணயிக்கப்பட்ட ஒரு தரகு விகிதத்தை அது வசூலிக்கின்றது. பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களால் சேகரிக்கப்பட்ட விவசாய உற்பத்திப் பொருள்களின் பெரும்பான்மையானவை, ஆட்சி அரங்கத் தலைமை சார்ந்த பொருளியல் கூட்டமைப்பின் மூலமும், தேசியக் கூட்ட மைப்பின் மூலமும், தேசிய அங்காடியில் விற்பனை செய்யப்பட்டு,

சில பகுதி உள்ளூர் அங்காடியில் விற்பனைசெய்யப்படும். இஃதன்றியும், தொழிற்சாலைகள் அல்லது மருத்துவமனைகள் போன்ற மொத்த உபயோகிப்பவர்களுக்கு ஓர் ஒப்பந்த அடிப்படையின் உற்பத்திப் பொருள்கள் விற்பனை செய்யப்படுகின்றன. மற்றும், பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களாலும், அவற்றின் கூட்டமைப்புகளாலும் நடத்தப்படும் கூட்டுறவுப் பண்டசாலைகளின் மூலமாகவும் தேசியக் கூட்டமைப்பின் விற்பனைக் கேந்திரங்களிலும் கூட விற்பனைகள் செய்யப்படுகின்றன.

(இ) **கொள்முதல்கள்:** பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள், உறுப்பினர்கள், உற்பத்திப் பொருள்களையும், நுகர் பொருள்களையும் கொள்முதல் செய்வதற்காக, முன்கூட்டித் திட்டமிடுதலை மேற்கொள்வதற்கு உதவிபுரிகின்றன. அதற்குப் பிறகு, பிரதம சங்கம் சரக்கு அனுப்ப உத்தரவுகளை ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த பொருளியல் கூட்டமைப்புகளுக்கு அனுப்புகிறது. அக் கூட்டமைப்புகள் முறையே அவ் வுத்தரவுகளை தேசியக் கொள்முதல் கூட்டமைப்பிற்கு அனுப்புகின்றன. தேசியக் கொள்முதல் கூட்டமைப்பு, அச் சரக்குகளை இறுதியான பொருள்கள் உற்பத்தியாளர்களிடமிருந்து பெறுகின்றது. முன்னரே தொகுப்புச் செய்யப்பட்டும், மையமாக்கப்பட்டுமிருக்கின்ற அம் மொத்தக் கொள்முதலின் விளைவாக, குடியானவர்களுக்குக் கீழ்க் காணும் நன்மைகள் உள்ளன:

*(1)* பிரதமக் கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் விவசாய ஆலோசகர்களுடனும், அரசு விரிவாக்கப் பணியாளர்களுடனும் கலந்தாலோசித்து, குடியானவர்களுக்கு மண்வளத்திற்கேற்ற சாகுபடியில் ஈடுபடுத்தப்படவேண்டிய மிகச் சிறந்த பொருள்களைத் திட்டமிடுவதற்கும், தெரிந்தெடுப்பதற்கும் உதவுகின்றன. குடியானவர்களின் இதரத் தேவைகளுக்குக்கூட இம் முறை அனுசரிக்கப்படுகிறது. *(2)* மையக் கொள்முதல் முறை விலைக்குறைப்பை மட்டுமன்றிச் சேமிப்புக் கிடங்குகளில் நீண்டகாலத்திற்குப் பொருள்களை வைப்பதாலுண்டான சங்கடத்தையும், செலவையும் குறைப்பதற்குக்கூடச் சாத்தியம் செய்கிறது. *(3)* திட்டப்படி குடியானவர்களின் குடும்பப் பொருளாதாரத்தை நிலையாக்கம் செய்து, அவர்களுடைய விவேகமற்ற செலவுகளை அகற்றுவதன் மூலம் துண்டு விழுதலிலிருந்து அவர்களை மீட்பதற்கு அது உதவுகிறது.

மேற் குறிக்கப்பட்ட ஏற்பாட்டின்கீழ் மேலான தரப் பொருள்கள் வழங்கப்படுதல், கீழ்க்காணும் வழிகளில் வளர்க்கப்

படுகிறது: (1) பிரதம சங்கங்களிலுள்ள கூட்டுறவுப் பணி யாளர்கள் குடியானவர்களால் கோரப்படுகின்ற பொருள்களைக் கொள்முதல் செய்வதில் பயிற்சியளிக்கப்படுகின்றனர். (2) சிபாரிசு செய்யப்படும் பொறிகளின் தரம், நெடுங்காலமிருக்கக்கூடிய தன்மை, திறன் முதலியவற்றைப் பரிசோதனை செய்கின்ற ஒரு பயிற்சி நிலையத்தையும் கொள்முதல் கூட்டமைப்பு நடத்துகின்றது. (3) இப் பயிற்சி நிலையம் பண்ணை இரசாயனப் பொருள்களுக்கான ஆராய்ச்சியையுங்கூட நடத்துகின்றது. (4) ஓட்டுநர்களாகவும், பண்ணைப் பொறிகளைப் பழுதுபார்ப்பதற்குங்கூட அது கூட்டுறவுப் பணியாள்களுக்குப் பயிற்சியளிக்கிறது. (5) தரத்திற்கும், விலைகளுக்கும் வகைசெய்யும்பொருட்டு, மூலதனம், முதலீடு, பணியாளர் தொகுதி, சரக்கு இருப்புவைத்தல், மூலப் பொருள்களை வழங்குதல் ஆகியவைகளின்மூலம், பண்ணைப் பொருள்களின் தனியார் தயாரிப்பாளர்களின் நிருவாகத்தில் கூட்டமைப்பு, கட்டுப்பாட்டு அதிகாரத்தை வகிக்கின்றது.

**(ஈ) கடனளிப்பு:** கூட்டுறவுக் கடன் அலுவலின் நோக்கமானது, உறுப்பினர்களின் நிதிகளைச் சாதகமான நிபந்தனைகளில் வைப்புகளாகப் பெறுதலும், இதர உறுப்பினர்களுக்கு ஒரு குறைந்த வட்டிவீதத்தில் நிதியுதவி யளித்தலுமாகும். ஒரு பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கத்தால் கையாளப்படும் வைப்புகள் மூன்று வகையாகப் பாகுபாடு செய்யப்படலாம்:— நடப்பு வைப்புகள், சாதாரண வைப்புகள், தவணைக்கால வைப்புகள். இவ் வைப்புகளைத் திருப்பிச் செலுத்துவதற்கான காப்பிருப்புகள் நீங்கலாக எஞ்சிய தொகை, உற்பத்திக்காகவும், உறுப்பினர்களின் வாழ்க்கைச் செலவுகளுக்காகவும், கடனளிப்பு நிதிகளாகப் பயன் படுத்தப்படலாம். நீண்டகாலக் கடன்களைப் பொறுத்தமட்டில், அரசிடமிருந்து வட்டிக்கான ஒரு மானியத்தைப் பெற்றுக் குறைந்த வட்டிவீதத்தில் தன் சொந்த நிதிகளை அளிக்கலாம்; அல்லது, அரசின் குறைந்தவட்டிக் கடன்களுக்காகப் பட்டுவாடா அமைப்பாகவும் செயற்படலாம். சங்கத்தில் உபரிநிதிகள் இருந்தால், அவை உள்ளூர்ப் பிரமுகர்களுக்குக் கடன்களாகவும், ஓர் ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கடன் கூட்டமைப்பு வைப்புகளாகவும் அல்லது வணிக நடவடிக்கைகளுக்காக நடைமுறை மூலதனமாகவும் உபயோகப்படுத்தப்படும். ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கடன் கூட்டமைப்புகள் வசமுள்ள நிதிகள், எந்தப் பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கமும் நிதிப் பற்றுக்குறை நிலைமையிலிருந்தால், அதற்குக் கடன்களாகவும், பல்வேறு ஆட்சி அரங்கத் தலைமைசார்ந்த கூட்டமைப்புகளின் வாணிகநடவடிக்கைகளுக்காக நிதிகளாகவும் அல்லது உள்ளூர்ப் பிரமுகர்களுக்குக் கடன்

களாகவும் பயன்படுத்தப்படலாம். எஞ்சியுள்ள நிதிகள் 'விவசாய வனவளத் துறைக்கான மையக் கூட்டுறவு வங்கியில்' (Central Co-operative Bank for Agricultural and Forestry) வைப்புத்தொகையாக வைக்கப்படுகிறது. இம் மைய வங்கிக் கடன் கூட்டமைப்புகளிலிருந்து வைப்புகளாகத் தான் பெற்ற நிதிகளைக் கடன்கோரும் வேறெந்தக் கடன் கூட்டமைப்புகளுக்கு உதவுதல் மட்டுமன்றி, தேசிய நிறுவனங்களால் செய்யப்படும் வாணிக நடவடிக்கைகளுக்கான நிதிகளாகவும் அல்லது விவசாயத்திற்குத் தொடர்பான தொழில்களுக்குக் கடனுகவுங்கூட ஒரு பெருந் தொகையைப் பயன்படுத்துகின்றது. மற்றும், விற்பனை, கொள்முதல் அலுவல்களுக்கான பட்டியல்களுங்கூடக் கடன் வாணிப நிறுவனங்கள் மூலமாகத் தீர்க்கப்படுகின்றன.

(உ) **பரஸ்பர ஈட்டுறுதி:** இத் தொழிலின் நோக்கம், ஒரு பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கத்தின் எந்த ஓர் உறுப்பினருக்கும் ஏற்பட்ட நட்டங்களுக்காகப் பரஸ்பர உதவியின்மூலம் ஈடுசெய்து அதன்மூலம் அவ் வுறுப்பினர் வாழ்க்கையில் பாதுகாப்பை நிச்சயப்படுத்தலாகும். இத் தொழில் இரண்டாவது உலகப் போருக்குப் பிறகுதான் தொடங்கப்பட்டது.

(ஊ) **உபயோகித்தலும், பதனப்படுத்துதலும்:** இதன் நோக்கமானது, விவசாய உற்பத்திக்காகவும், வாழ்க்கையை நடத்துவதற்காகவும் தனிநபர்களால் பெற்றிருக்க முடியாமல் ஒரு கூட்டுறவுச் சங்கம் பெற்றிருக்கும் வசதிகளை ஒப்பிடும் வகையில் ஒரு சிறிய செலவால் கூட்டாக உபயோகம் செய்வதற்கு உறுப்பினர்களுக்கு வகை செய்வதாகும். கூட்டுறவு வசதிகளின் உதாரணங்களாவன:— பெரிய அளவு இயந்திரக் கலப்பைகள், நாட்டுச் சேமிப்புக் கிடங்குகள், பழுது பார்க்கும் பணிமனைகள், பன்றி வளர்ப்பு நிலையங்கள் முதலியவற்றை உபயோகித்தலாம். இவ் வசதிகளின் கூட்டு உபயோகம் விவசாய உற்பத்திக்கு இணைக்கப்பட்டிருப்பது மட்டுமன்றி, அது திட்டமிட்ட ஒருங்கிணைந்த உற்பத்திக்காகவும், விற்பனைக்காகவுங்கூட அவசியமாக உள்ளது. வாழ்க்கைத் துறையில் கிடைக்கும் கூட்டு வசதிகளாவன:— மருத்துவ வசதிகள், சவரச் சாலைகள், திருமணக் கூடங்கள் முதலியன போன்றவை. கூட்டுறவுப் பதனிடுதலின் நோக்கமானது, விற்பனைக் காரியத்திற்காக விவசாய விளைபொருள்களின் பெறுமானத்தை அதிகரித்தல் மட்டுமன்றி ஒரு மலிவான வழங்குதலை நிச்சயப்படுத்த உற்பத்திச் சாதனப் பொருள்களைத் தாமே உற்பத்தி செய்வதற்கு ஊக்கமளிப்பதாகவுங்கூட உள்ளது.

**(எ) கல்வி பரப்புதல்:** பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் மின்சாரக் கம்பியிட்ட செய்தியனுப்பு இயந்திரப் பெட்டிகள், செய்தித்தாள்கள், சுவரொட்டிகள் முதலியன போன்ற சாதனங்களின் மூலமாகச் செய்தி அறிவிக்கும் பணிகளை மேற்கொண்டும் தங்கள் உறுப்பினர்களுக்காக வட்டமேஜை விவாதங்களை ஏற்பாடு செய்தும், பயிற்சிப் பாடப் படிப்புகளையும், படிப்புத் தொடர்பான பார்வையிடுதலையும் மற்றும் அது போன்றவைகளையும் நடத்துவதைக்கூட மேற்கொள்கின்றன. பல்வேறு சாதனங்கள் மூலமாக விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களிடையே கூட்டுறவு உணர்வை வளர்ப்பதே இதன் கருத்தாக உள்ளது.

**(iii) பொதுவான செயற்பாடு:** ஜப்பானில் பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கமானது, கூட்டுறவு இயக்கம் அனைத்திற்குமான சுரம் அமைக்கின்ற ஒரு சுறுசுறுப்பான நிறுவனமாக உள்ளது. ஜப்பானில் பலநோக்குப் பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டிலடைந்த அனுபவத்தின்மூலம், இந்திய நாடும் உண்மையாகவே நன்மையடையக்கூடும். 1971ஆம் ஆண்டு நிதியாண்டின் இறுதியில், ஜப்பானில் 5,688 பலநோக்கு விவசாயச் சங்கங்களிருந்தன. ஒவ்வொரு சங்கத்திலும் சராசரி உறுப்பினர் எண்ணிக்கை 1,262 ஆக, 7,37,000 மொத்த உறுப்பினர் எண்ணிக்கையை அவை பெற்றிருந்தன. 8,907 ஒருநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களுங்கூட அங்கிருந்தன. பலநோக்கு விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள், இயக்கத்தில் ஒரு பிரதானமான இடத்தைப் பெற்று ஜப்பானின் விவசாயக் கூட்டுறவு அமைப்பில் மிகச் சிறந்த ஒரு முக்கியத்துவத்தை வகித்துள்ளன. இச் சங்கங்கள், எல்லாக் கிராமங்களையும், பண்ணை மக்கள்தொகை யனைத்தையும் தழுவியுள்ளன. கூட்டுறவுச் சங்கங்கள் குடியானவர்களின் கடன் தேவைகளில் ஏறத்தாழ 50 சதவீதம் வழங்கின. வழங்கப்பட்ட கடன்களில், சுமார் 67 சதவீதம் குறுகியகாலக் கடன்களாக இருந்தன. நீண்டகாலக் கடன் 1 முதல் 15 வரையான ஆண்டுகள் காலவரைகளுக்கு அளிக்கப்படுகிறது. இந்தியாவில் இருப்பதுபோன்று தனிப்பட்ட நிலவள வங்கிகள் ஜப்பானில் கிடையா. ஜப்பானிய இயக்கத்தின் ஒரு மகிழ்ச்சிக்குரிய அம்சமானது, கூட்டுறவுச் சங்கங்கள் ஏராளமான வைப்புத் தொகைகளைப் பெறுகின்றன. இவ் வைப்புத் தொகைகள் சங்கங்களின் நடைமுறை மூலதனத்தின் ஒரு பெரும்பகுதியாக அமைந்துள்ளன. கூட்டுறவுச் சங்கங்களிலிருக்கின்ற வைப்புத் தொகைகள், குடியானவர்களின் மொத்த வைப்புகளில் 70 சதவீதத்திற்கும் மிக அதிகமாக உள்ளன. சங்கங்களிலுள்ள வைப்புத்

தொகைகள், உறுப்பினர்களுக்குச் சங்கங்களால் அளிக்கப்படும் கடன்தொகைகளை மிகவும் மிஞ்சுகின்றன. வைப்புகளை ஈர்க்கும் முறையானது, நாட்டின் உணவுக் கொள்முதல் முறைக்கு நெருக்க மாக இணைக்கப்பட்டுள்ளது. சட்டத்தின்படி, குடியானவர்கள் தங்கள் உபரி விளைபொருள்களை அரசுக்கு விற்பனை செய்யவேண் டும். கொள்முதல் பணியை விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசு ஒப்படைத்துள்ளது. ஓர் உறுப்பினர் தம் விளைபொருள் களைக் கூட்டுறவுச் சங்கத்திற்கு ஒப்படைத்தவுடன் அவற்றின் விலை அவருடைய வைப்புக் கணக்குக்கு வரவு வைக்கப்படுகிறது. இவ் வைப்புகள் உறுப்பினர்களுடைய கடன் பாக்கிகளுக்கு ஈடு செய்யப்படலாம். வைப்புகளின் ஒரு பகுதி உறுப்பினர் செலவு களுக்காகவுங்கூட வாபஸ் பெறப்படுகிறது. ஆனால், ஒரு கணிச மான பகுதி கூட்டுறவுச் சங்கத்தின் வசம் இருந்து வருகிறது. இம் முறையானது, குடியானவர்களை வைப்பு உணர்வு உள்ளவர் களாகச் செய்து, அவர்களின் வீணான செலவுகளைத் தவிர்த்து, முறையாகச் செலவு செய்வதற்கு உதவுகிறது. விற்பனை செய்தல் கூட விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் ஒரு முக்கிய நடவடிக்கை யாக உள்ளது. இச் சங்கங்கள் எவ்வாறு உறுப்பினர்களின் உற்பத்திப் பொருள்களையும் நுகர் பொருள்களையும் கொள்முதல் செய்கின்ற அமைப்புகளாகச் செயற்படுகின்றன என்பதை நாம் முன்னரே அறிந்தோம். எனவே, விவசாயக் கூட்டுறவுச் சங்கங் கள், கடன், விற்பனை, வழங்குதல், சேவைகள் முதலியவற்றை உள்ளடக்கிய ஒரு முழுமையாக ஒருங்கிணைந்த சேவையை வழங்கு கின்றன. கடன்கள் உண்மையான உற்பத்தித் தேவைகளுக்கு இணைக்கப்படுவதும், கடன் விற்பனையுடன் இணைக்கப்படுவதும் வலியுறுத்தப்படுகின்றன.

## மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள்

மீன்பிடிக்கும் தொழில் ஜப்பானியத் தேசியப் பொருளா தார அமைப்பில் ஒரு முக்கிய இடத்தை வகிக்கின்றது. ஜப்பான் நாடு, மீன் பண்ணைகளிலிருந்து ஏராளமான வருவாயைப் பெறு கின்றது. மீன் பண்ணைக் கூட்டுறவுச் சங்கங்கள் ஜப்பானில் மிக நெடுங்காலமாக இருந்துவந்துள்ளன. அவை 1948ஆம் வருடத்திய மீன்பண்ணைக் கூட்டுறவுச் சட்டத்தால் பரிபாலிக்கப் படுகின்றன. அவற்றில் பல, கூட்டுறவு விற்பனை, கொள்முதல், உற்பத்தி, போக்குவரத்து, பரிசோதனை ஆகிய நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கின்றன. அவை உறுப்பினர்களிடமிருந்து வைப்புகளைப் பெற்று அவர்களுக்குக் கடன்களை அளிக்கின்றன. மற்றும், அவை உறுப்பினர்களிடையே துணைத்தொழில்களை ஊக்கு

வித்தும், துறைமுகங்கள், சிறிய கடல் பிரிவுகள் ஆகியவைகளை அபிவிருத்தி செய்தும், கடல்துறைப் பொருள்கள் உற்பத்தியைப் பெருக்கியும், பொருள்களை அழிவிலிருந்து காப்பாற்றும் பணியையும் மேற்கொள்கின்றன. 1966ஆம் ஆண்டில் 12 இலட்ச உறுப்பினர்களைக்கொண்ட சுமார் 4,000 மீன்பண்ணைக் கூட்டுறவுச் சங்கங்கள் இருந்தன. 832 மீன்பண்ணை உற்பத்திக் கழகங்களும், 236 கடல்துறை உற்பத்திப் பொருள்கள் பதனப்படுத்தும் கழகங்களும் இருந்தன. எனினும், இக் கழகங்களின் உறுப்பினர் எண்ணிக்கை பெரியதாக இல்லை.

## வனத்துறைக் கூட்டுறவுச் சங்கங்கள்

இச் சங்கங்கள் இருவகையாக உள்ளன: ஒன்று, வனத்துறைக் கூட்டு வசதிச் சங்கங்கள்; மற்றொன்று, வனத்துறை உற்பத்திச் சங்கங்கள். 1966ஆம் ஆண்டில், 1.7 மில்லியன் உறுப்பினர்களைக்கொண்ட 3,158 கூட்டு வசதிச் சங்கங்கள் இருந்தன. அவற்றின் பிரதான அலுவல், உற்பத்தியும் கொள்முதலும் விற்பனையுமாக உள்ளது. அவை கடன்களையுங்கூட அளிக்கின்றன. ஆனால், அவை எவ்வித வைப்புகளையும் பெறுகிறதில்லை. இரண்டாவது வகைச் சங்கங்கள் கூட்டு அடிப்படையின்பேரில் காடுகள் நிருவாகத்தை மட்டும் மேற்கொள்கின்றன. அவை, வெட்டுமரம், அடுப்புக் கரி, விறகுக் கட்டை ஆகியவற்றின் உற்பத்தியையும், விற்பனையையும் மேற்கொள்கின்றன. அவை காடுவளர்ப்புப் பணியிலும் ஈடுபடுகின்றன. இப் பணிக்காக அவை அரசு உதவித் தொகைகளைப் பெறுகின்றன.

## நுகர்வோர் சங்கங்கள்

1948ஆம் வருடத்திய 'நுகர்வோர் வாழ்வுக் கூட்டுறவுச் சங்கங்கள்' பற்றிய சட்டத்தால் (Law on Consumers Livelihood Co-operative Association) இச் சங்கங்கள் பரிபாலிக்கப்படுகின்றன. 1969ஆம் ஆண்டில், 1,172 சங்கங்கள் இச் சட்டத்தின்கீழ்ப் பதிவுசெய்யப்பட்டிருந்தன. சில்லரை விற்பனைச் சங்கங்கள், ஈட்டுறுதிச் சங்கங்கள், சேவைச் சங்கங்கள், சில்லரை விற்பனை—ஈட்டுறுதிச் சங்கங்கள், சில்லரைவிற்பனை—ஈட்டுறுதி—சேவைச் சங்கங்கள் ஆகியவற்றை இச் சங்கங்கள் உள்ளடக்கி யிருந்தன. சுமார் 4,000 எண்ணிக்கையுள்ள நுகர்வோர் சில்லரை விற்பனைக் கடைகள் இருந்தன. அவற்றின் விற்பனைப் புரள்வு 1969ஆம் ஆண்டில் ரூ. 300 கோடிக்கும் அதிகமாக இருந்தது. இச் சங்கங்களில் பெரும்பான்மையானவை தொழிற்சாலைகளிலும், இதர

நிறுவனங்களிலும், வேலை கொடுப்பவர்களால் அவற்றிற்கு அளிக்கப்பட்ட சிறப்பு வசதிகளின் காரணமாக அமைக்கப்பட்டுள்ளன. மருத்துவக் கவனிப்பு, சலவைச் சாலை, சவரச்சாலை, உணவுச்சாலை அடகுகடை, மக்கள் குளிக்குமிடம் முதலியவற்றிற்கான சங்கங்கள் சேவைக் கூட்டுறவுச் சங்கங்களில் உள்ளடங்கியுள்ளன. இச் சங்கங்களின் மொத்த விற்பனைப் புரள்வு சுமார் ரூ. 205 மில்லியன்களாக இருந்தது. மக்கள் சுகாதாரச் சங்கங்கள் ஜப்பானிய இயக்கத்தின் ஒரு சிறப்பு அம்சமாக வுள்ளன. அத்தகைய சங்கங்கள், 29 மருத்துவமனைகளையும், ஒரு பெரிய எண்ணிக்கையுள்ள சிறு மருத்துவச்சாலைகளையும் நிருவகிக்கின்றன. அத்தகைய ஒவ்வொரு மருத்துவ மனையும் 30 முதல் 50 வரையிலான படுக்கைகளைக் கொண்டுள்ளது. இச் சங்கங்கள் ஆண்டொன்றுக்கு சுமார் ரூ. 35 மில்லியன் பெறுமானமுள்ள சேவைகளைப் புரிகின்றன. மற்றொரு சிறப்பு அம்சமானது, பல்கலைக்கழக மாணவர்கள் கூட்டுறவுச் சங்கங்களாகும். இச் சங்கங்கள் 35,000 பேராசிரியர்களையும், பணியாளர்களையும் உள்ளிட்ட 5.2 இலட்ச உறுப்பினர்களால் அமைக்கப்பட்டன. அவை மாணவர்களுக்குத் தேவையான பொருள்களிலும், சில வீட்டுப் பொருள்களிலுங் கூட வர்த்தகம் செய்கின்றன. 1967ஆம் ஆண்டில், அவற்றின் வருடாந்திரச் சில்லரை விற்பனை வர்த்தகம் ரூ. 200 மில்லியன் டாலர்களாக இருந்தது.

ஆயினும், நுகர்வோர் கூட்டுறவு இயக்கம் தேசியப் பொருளாதார அமைப்பில் வலிவு பெற்றுள்ளது என்று கூறமுடியாது. அவற்றின் உறுப்பினர்-எண்ணிக்கை மொத்தக் குடும்பங்களில் 15 சதவீதம் மட்டுந்தான் உள்ளது. அவற்றின் விற்பனைப் புரள்வு நாட்டின் மொத்த விற்பனைப் புரள்வில் 10 சதவீதம் மட்டுந்தான் உள்ளது. நாட்டில் சில்லரை விற்பனைக் கடைகளின் எண்ணிக்கை மிக ஏராளமாக இருப்பதும், இச் சங்கங்கள் நிதிகளை எழுப்புவதற்குச் சங்கடப்படுவதுமே பெருமளவு இதற்குக் காரணமாக உள்ளன. அண்மையில், அவை 'தொழிலாளர் கடன் கூட்டுறவு வங்கி'யிடமிருந்து (Labour Credit Co-operative Bank) கடன் பெறுவதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. அண்மையாண்டுகளில், வீட்டில் கொடுத்தல்சேவை (Home Delivery), முன்ஆணைகள் (Advance Orders), கூட்டுக் கொள்முதல் முதலியன போன்ற சில்லரை விற்பனை வர்த்தகத்தில் புதிய தொழில்நுட்பங்களை நுகர்வோர் பண்டசாலைகள் அபிவிருத்தி செய்துள்ளன. அவை சிறப்பு அங்காடிகளையும், சுய-சேவைக் கடைகளையும் (Self Service Shop) அமைத்துள்ளன. சங்கங்கள் தொழிலாளர்களுக்கு, அவர்கள் ஊதியத்தில் 20 சத

வீதம் முதல் 50 சதவீதம் வரை கடன் விற்பனைகளையும் அனுமதிக்கின்றன. அவர்களின் வேலை கொடுப்போர்கள் அவர்கள் சம்பளத்திலிருந்து கடன் தவணைகளைப் பிடிக்கவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் கடன் விற்பனைகள் அனுமதிக்கப்படுகின்றன. இச் சங்கங்களில் சில, தங்கள் சொந்த ரொட்டித் தயாரிப்புச் சாலைகள், அரிசித் தூய்மை ஆலைகள் முதலியனவற்றைப் பெற்றுள்ளன. நுகர்வோர் சங்கங்கள் 23 மாவட்டங்களில் தங்கள் ஒன்றியங்களைக்கூட அமைத்துள்ளன. தேசிய மட்டத்தில் மூன்று கூட்டமைப்புகள் உள்ளன, அதாவது, நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் சங்கங்களும், ஈட்டுறுதிச் சங்கங்களும், பல்கலைக் கழக மாணவர் சங்கங்களும் தங்களுக்காகக் கூட்டமைப்புகளை அமைத்துள்ளன. தலைமை மட்டத்தில் ஜப்பானிய நுகர்வோர் கூட்டுறவு ஒன்றியம் உள்ளது. அவ் வொன்றியம், தன் உறுப்பினர் சங்கங்களுக்காக ஒரு மத்தியக் கொள்முதல் நிறுவனமாகச் செயற்படுகிறது. 1966ஆம் ஆண்டில், அதன் மொத்த வருடாந்திர விற்பனைப் புரள்வு சுமார் 70 மில்லியன் டாலர்களாக இருந்தது. மக்கள் தொடர்பு, உறுப்பினர் கல்வி, பிரச்சாரம் ஆகியவை ஒன்றியத்தின் இதரப் பணிகளாக உள்ளன. அவசியமான காலங்களில் அது விலைவாசி ஏற்றத்தைத் தடுப்பதற்காகத் தொழிலாளர் சங்கங்களுடன் சேருகின்றது. அது தன் சொந்த நிதியாதாரங்களின்மீது சார்ந்துள்ளது; அரசிடமிருந்து எந்த விதமான உதவியையும் அது பெறுகிறதில்லை.

## தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்

1948ஆம் வருடத்திய கூட்டுறவுத் தொழில் முயற்சிச் சட்டம் (Co-operative Enterprise Law) இச் சங்கங்களைப் பரிபாலிக்கின்றது. பொதுவான உற்பத்திக் குணும்சங்களைக் கொண்ட நபர்களை மட்டுமே இச் சங்கங்கள் சேர்த்துக் கொள்ளக்கூடும். ஆனால், உறுப்பினர் ஆவதற்குத் தகுதியற்றவர்கள் சங்கத்தின் சேவைகளைக் கோரினுல், அவர்கள் வாக்குரிமையில்லாத துணை உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படலாம். தொழில்களை அமைப்பதிலும், புதிய தொழில்நுட்பங்களைத் தொடங்கிவைப்பதிலும், மூலப் பொருள்களை வழங்குவதிலும், உற்பத்திப் பொருள்களை விற்பனை செய்வதிலும் இச் சங்கங்கள் உதவிபுரிகின்றன. அவை, உற்பத்திப் பொருள்களின் தரத்தின்மீதும், அளவின் மீதும் ஒரு கண்டிப்பான காவலைப் பராமரித்து, உள்ளூர் அங்காடிகளுக்கான விற்பனை விலைகளையும் நிர்ணயிக்கின்றன. கிராமப் பகுதிகளிலுள்ள விவசாய, மீன் பண்ணை, வனத்துறைச் சங்கங்களுடன் அவை தொடர்பு கொண்டுள்ளன. தொழில்களை

அமைப்பதற்காகவும், வளர்ச்சி செய்வதற்காகவுமான திட்டங்களைச் சமர்ப்பிக்கும்போது, மையக் கூட்டுறவு வங்கி, கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதிகளை வழங்குகின்றது. 1947ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில், ஜப்பானில் 7,553 தொழிற் கூட்டுறவுச் சங்கங்களிருந்தன. அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 8,09,456 ஆக இருந்தது. உலோகத் தொழில்கள், இயந்திரங்கள், இரசாயனங்கள், மண்பாண்டங்கள், துணிவகைகள், புத்தகம் கட்டுதல் முதலிய தொழில்களில் உறுப்பினர்கள் ஈடுபட்டுள்ளனர். ஜப்பானில் ஒரு பெரிய எண்ணிக்கையுள்ள தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள், வீட்டுத் தொழிற்சாலையைச் சுற்றி அமைக்கப்பட்டிருப்பினும், அவற்றில் பல சங்கங்கள் சிற்றளவுத் தொழில்துறை தொழிலாளர்களுக்காகத் தொழிற்சாலைகளாகவுங் கூட இருக்கின்றன. மகளிர்களுங்கூடக் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்க்கப்பட்டு, வீட்டு வேலை ஒப்பந்தக்காரர்களின் கைப்பிடியிலிருந்து மீட்கப்பட்டுள்ளனர்.

## விவசாயமல்லாத கடன் வசதிச் சங்கங்கள்

1948ஆம் வருடத்திய கூட்டுறவுத் தொழில்முயற்சிச் சட்டம், விவசாயமல்லாத கடன் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்படுவதை அனுமதிக்கிறது. இக் கூட்டுறவுச் சங்கங்கள் வைப்புகளைப் பெறலாம்; கடன்களை வழங்கலாம்; உண்டியல்களை மாற்றலாம்; மற்றும், பொதுவான வங்கித் தொழில் அலுவல்களை மேற்கொள்ளலாம். ஆனால், உறுப்பினரல்லாதவர்களுடைய வைப்புகளும், கடன்களும், நிலுவையிலிருக்கும் மொத்த வைப்புகளிலும், கடன்களிலும் 20 சதவீதத்திற்கு மேற்படக்கூடாது. அவை கடனளிப்பையும் வங்கித் தொழிலையுந்தவிர, வேறு எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ளக்கூடாது.

## யூனிகோஆப்—ஜப்பான்
(Unicoop – Japan)

இவ் வமைப்பு, 1961ஆம் ஆண்டில், ஜப்பானிய விவசாய மீன்பண்ணை வனத்துறைக் கூட்டுறவுச் சங்கங்களால், அமெரிக்க ஐக்கிய நாடுகள், சீனு, இங்கிலாந்து, ஜெர்மனி, ஆஸ்திரேலியா, ருஷ்யா, தாய்லாந்து மற்றும் இந்தியா போன்ற நாடுகளுடன் வெளிநாட்டு வர்த்தகம் செய்வதற்காக அமைக்கப்பட்டது. இக் காரியத்திற்காக, சில முக்கிய நாடுகளில் கிளைகளை அது அமைத்துள்ளது. உணவுப் பொருள்களையும், தானிய வகைகளையும், கனிப் பொருள்களையும், இயந்திரங்களையும், இரசாயனங்களையும்

அது இறக்குமதி செய்கின்றது; பழவகைகளையும், காய்கறி வகைகளையும், மீன் வகைகளையும், துணி வகைகளையும், உர வகைகளையும், இரசாயன வகைகளையும், வானொலிப் பெட்டிகளையும், தொலைக்காட்சிப் பெட்டிகளையும் (Television Sets), எஃகு செய்பொருள்களையும் அது ஏற்றுமதி செய்கிறது. 1964ஆம் ஆண்டில், அதன் வருடாந்திர விற்பனைப் புரள்வு 14 மில்லியன் அமெரிக்க டாலர்களுக்கு மதிகமாக இருந்ததென்று மதிப்பிடப் படுகிறது.

## ஜப்பானில் கூட்டுறவுக் கல்வி

### (அ) உறுப்பினர் கல்வி

**(i) வருடாந்திரப் பேரவைக் கூட்டம்:** பிரதமக் கூட்டுறவுச் சங்கத்தின் வருடாந்திரப் பேரவைக் கூட்டம் உறுப்பினர் கல்விக்கான ஓர் அரிய வாய்ப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. நாட்டிலுள்ள ஏராளமான விவசாயக் கூட்டுறவுத் தொலைக்காட்சி வானொலிப் (டெலி-ரேடியோ) போக்குவரத்துச் சாதனமானது கிராமங்களில் பரவலான விளம்பரத்திற்காகப் பயன்படுத்தப்படுகிறது. கூட்டத்தின் நோக்கத்தைப் பற்றிய அச்சிட்ட குறிப்பு முன்னதாகவே வழங்கப்படுகின்றது. பேரவைக் கூட்டத்திற்குப் பின்பு விரிவுரைகளும், சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன.

**(ii) புராக்கு விவாதம்** (Buraku Discussion): ஒவ்வொரு புராக்குவிலும் அல்லது கிராமங்கள் தொகுப்பிலும் ஆண்டிற்கிரு முறை இது ஏற்பாடு செய்யப்படுகிறது. கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களும், அலுவலர்களும் மற்றும், வேளாண்மைத் துறை, விரிவாக்கப் பணித்துறை அலுவலர்களுங்கூடப் பண்ணைத்தொழில் நுட்பம் முதல் சமுதாயப் பிரச்சினைகள் வரையிலான பல்வேறு பொருள்களைப் பற்றிய விவாதங்களில் கலந்துகொள்கின்றனர். பண்ணைப் பொருளியலுக்கு ஒரு நேரடித் தொடர்புகொண்ட நடப்பு அரசியல் பிரச்சினைகளுங்கூட விவாதங்களில் விலக்கப்படுகிறதில்லை. அச் சமயங்களில் திரைப்படங்கள் காட்டப்படுகின்றன; சிறு வெளியீடுகள் முன்னதாகவே விநியோகிக்கப்படுகின்றன; மாதர்களின் வருகை ஊக்குவிக்கப்படுகிறது; கூட்டுறவுச் சங்கச் சேவைகளைப் பற்றிய முறையீடுகளும், தனிப்பட்ட நபர் குறைகளும் பேசப்பட்டு, தொழில்நுட்பத்தைப் பற்றியும் இதரப் பிரச்சினைகளைக் குறித்தும் தகவல் பரிமாறிக்கொள்ளப்படுகின்றது.

**(iii) பாட வகுப்புகளும், பாடப் படிப்புகளும்:** பண்ணை நிருவாகம், உற்பத்தி, குடும்ப நிருவாகம், மேலான வாழ்க்கை

நடத்துதல் முதலியவை பற்றிய குறுகியகாலப் பாடப்படிப்பு களையும், பாடவகுப்புகளையும் பிரதமக் கூட்டுறவுச் சங்கங்கள் அடிக்கடி நடத்துகின்றன. மாதர்கள் இவற்றில் சேருவதற்கு ஊக்குவிக்கப்படுகின்றனர்.

**(iv) படிப்போர் சரகங்கள்** (Readers' Circles): 'குடும்ப ஒளி' (Light of Home) கழகத்தால் நடத்தப்படுகின்ற இச் சங்கங்கள் சிறு நூலகங்களையும் நடமாடும் நூலகங்களையும் நடத்துகின்றன.

**(v) திரைப்படக் காட்சிகள்:** விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் ஆட்சியரங்கத் தலைமைசார்ந்த ஒன்றியங்கள் சுற்றுப் பயணம் செய்யும் திரைப்படக்காட்சிப் படைகளைப் பராமரித்து, அவற்றைப் பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களின் உபயோகத்திற்குத் தருகிறது.

**(vi) தொகுதி விவாதங்கள்** (Group Discussions): இவை கால முறையாக ஏற்பாடு செய்யப்படுகின்றன. உற்பத்தித் தொழில்நுட்பங்களுடன் நேரடியான அக்கறை கொண்டதொகுதி கள், பொருள்களையும் வசதிகளையும் இதரச் சாதனங்களையும் பெறுகின்றன.

**(vii) செய்தி அறிவித்தலும், விளம்பரமும்:** காலமுறை விவர அறிக்கைகளும், சிறு வெளியீடுகளும், துண்டு விளம்பரங் களும் அச்சிடப்பட்டு வீட்டுக்கு வீடு கொடுக்கப்படுகின்றன. உள்ளூர், தேசிய, சர்வதேசக் கூட்டுறவு இயக்கத்திற்குத் தொடர் புள்ள முக்கிய விஷயங்களைப் பற்றிய செய்திகளும் உண்மைகளும் அவற்றில் அடங்கியிருந்தன. தொலைக்காட்சி வானொலியின் மூலம் கூட்டுறவு நிகழ்ச்சிகள் அறிவிக்கப்படுகின்றன. தகவல் பரிவர்த்தனைக்காகவும், அன்றாடத் தொடர்புகொள்வதற்காகவும் தொலைக்காட்சிவானொலி தாராளமாக உபயோகிக்கப்படுகிறது.

**(viii) மாதர் கல்வி:** அநேக பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் மாதர் பிரிவுகளைப் பெற்றுள்ளன. இப் பிரிவுகள் கூட்டுறவுக் கல்விக்கு மிகப் பயனுள்ள வாய்க்காலாக வுள்ளன. மாதர்களால் பாட வகுப்புகள் ஏற்பாடு செய்யப்பட்டு நடத்தப் படுகின்றன. கூட்டுறவு இயக்கத்தைக் குடும்ப மட்டத்திற்குக் கொண்டுபோக உதவும் மாதர் பிரிவின் வெற்றிக்குக் கூட்டுறவுச் சங்கம் தாராளமாக உதவியளிக்கின்றது.

**(ix) இளைஞர் பிரிவு:** கூட்டுறவு அதிகாரிகளும், பள்ளி ஆசிரியர்களும், சிறுவர்களின் பிரதம மற்றும் நடுநிலைப் பள்ளிகளில், 'பள்ளிச் சிறுவர்கள் கூட்டுறவுச் சங்கத்தை' (School Childrens' Co-op) நிறுவுவதற்குக் கூட்டாக உதவி செய்கின்றனர். 'பள்ளி அறிவியல்' பாடமுறைத் திட்டத்தின்கீழ், கூட்டுறவைப் பற்றிய சிறப்பு வகுப்புகள் நடத்தப்படுகின்றன. சிறுவர்கள், கூட்டுறவு அலுவலகங்களைப் பார்வையிடுவதற்குப் படிப்புச் சுற்றுப்பயணங்கள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. எளிதில் வாசிக்கக்கூடியதும், கவர்ச்சிகரமானதுமான கூட்டுறவைப் பற்றிய இலக்கியம் கூட்டுறவுச் சங்கங்களால் மாணவர்களுக்கு விநியோகிக்கப்படுகின்றது. தொகுப்பு வித்துப் பண்ணைகளையும், பரிசோதனைப் பண்ணைகளையும் நிருவகிப்பதற்குக் கல்லூரி மாணவர்கள் ஊக்குவிக்கப்படுகின்றனர்.

**(x) குடும்ப ஒளி இயக்கம்** (Light of Home Movement): விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் 46 ஆட்சியரங்கத் தலைமைசார்ந்த ஒன்றியங்களால் அமைக்கப்பட்ட இவ் வியக்கமானது, ஜப்பானில் கிராம சமுதாயத்தின் ஒளியாகவும் உயிராகவும் கருதப்படுகிறது. அது கூட்டுறவு இயக்கத்தைப் பற்றி, ஒரு தொடர்ச்சியான கல்வி இலக்கியத்தை வெளியிட்டுக் குடியானவர்களிடையே கூட்டுறவு உணர்வை எழுப்புவதற்கு முயற்சிக்கிறது.

**(ஆ) அலுவலர் கல்வி:** குறுகியகாலப் பாடப்படிப்புகளும், ஆய்வுப் பிரிவுகளும், பெரியதும், சிறியதுமான படிப்போர் மன்றங்களும் (Readers' Clubs), கூட்டுறவு ஆட்சியரங்கத் தலைமைசார்ந்த ஒன்றியங்களாலும், மைய ஒன்றியத்தாலும் திட்டமிடப்பட்டு ஏற்பாடு செய்யப்படுகின்றன. ஜப்பான் நாடு முழுவதிலும் 'விவசாயக் கூட்டுறவுச் சிப்பந்திகள் தகுதிச் சான்று அளிக்கும் முறை' (The Agricultural Co-operative-Staff Qualifications Certifying System) பின்பற்றப் படுகிறது. கடந்த 40 ஆண்டுகளாகவும் அதற்கு மேலாகவும் விவசாயக் கூட்டுறவுச் சிப்பந்திப் பயிற்சியில் ஈடுபட்டிருக்கும் டோக்கியோவிலுள்ள கூட்டுறவுக் கல்லூரி விவசாயக் கூட்டுறவுத் துறையில் அநேக குறிப்பிடத்தக்க தலைவர்களைத் தயாரித்துள்ளது.

**(இ) பிரச்சாரம்** (Propaganda): மேற்கண்டவையன்றியும், ஆட்சியரங்கத் தலைமைசார்ந்த ஒன்றியங்களும், மைய ஒன்றியமும், ஆட்சியரங்கத் தலைமைசார்ந்த கூட்டமைப்புகளும், தேசியக் கூட்டமைப்புகளும், வானொலி மற்றும் தொலைக்காட்சி ஒலிபரப்புத் திட்டங்களிலும், திரைப்படத் தயாரிப்பிலும்,

பொருள்கள் வழங்குதலிலும் ஈடுபட்டுள்ளன. 'விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியச் செய்தி, மற்றும் தகவல் கூட்டமைப்பு' (The National Press and Information Federation of Agricultural Co-operatives) 'ஜப்பான் விவசாயம்' (The Japan Agriculture) என்பதை வெளியிடுகிறது. கல்வி யளிப்பதற்காகவும், பிரச்சாரங்களுக்கான திட்டங்களுக்காகவுமான வசதிகள் ஜப்பானில் நன்கு வளர்ச்சி செய்யப்பட்டுள்ளன.

## ஜப்பானில் கூட்டுறவு இயக்கத்தின் பொது இயல்புகள்

முன்னர்க் கூறியபடி, பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் ஜப்பானில் கூட்டுறவு இயக்கத்தின் பிரதான சக்தியாக அமைந்துள்ளன. இந்த விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் முக்கிய அம்சமானது, அவை தங்கள் உறுப்பினர்களுக்குப் பல்வேறு சேவைகளைப் புரிகின்ற பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களாக முழுமையாகச் செயற்படுகின்றன. பலநோக்கு நடவடிக்கைகளின் மற்றும், வரையறுக்கப்பட்ட பொறுப்புக் கொள்கையின் மகத்தான உட்கருத்துகளின் வெற்றியை ஜப்பானியக் கூட்டுறவு இயக்கம் நிரூபிக்கிறது. பிரதம சங்கங்கள் உறுப்பினர்களிடமிருந்து வைப்புகளை ஈர்க்கும் நிலையிலுள்ளன. இத் துறையில் அவை தன்னிறை வுள்ளவையாக வுள்ளன. அவை உறுப்பினர்களுடன் தொடர்ச்சியான தொடர்பை வைத்திருக்கின்றன. நம் நாட்டில் அண்மையாண்டுகளில் முயற்சிக்கப்பட்டுவரும் கடன் விற்பனை இணைப்பு நீண்டகாலமாக ஜப்பானில் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது. உணவுத் தானியங்கள் கொள்முதல் வடிவத்தில் அவைகளுக்கு அளிக்கப்படுகின்ற அரசு ஆதரவுங்கூட இயக்கத்தைப் பெருமளவு வலிவுபெறச் செய்துள்ளது. சங்கங்களின் செயற்பாடு வெற்றிக்குக் காரணம்,கூட்டுறவுச் சங்கங்களின் தெளிவுபெற்ற, கல்வியறிவு பெற்ற, நன்குணர்ந்த உறுப்பினர்களே. விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களின் கொள்முதல் நடவடிக்கைகள் உண்மையாகவே வியக்கத்தக்கவையாக வுள்ளன. உறுப்பினர்களின் கல்விக்கான ஏற்பாடுகளுங்கூடப் பாராட்டப் படத் தக்கவையாக வுள்ளன. அண்மையாண்டுகளில் நுகர்வோர் இயக்கம் ஒரு புதிய பாதையைத் தேடிக்கொண்டுள்ளது. இத் துறையில் ஜப்பானியர்களின் அனுபவத்திலிருந்து இந்தியக் கூட்டுறவு இயக்கம் பெரிதும் தெரிந்துகொள்ள வேண்டியுள்ளது. ஏனென்றால், நம் நாட்டிலுங்கூட இவ் வியக்கம் ஏறக்குறைய அதே மாதிரியான முறைகளில் இயங்குகின்றது. 'ஜப்பானில் குடிசைத் தொழில்களும், விவசாயமும்' (Cottage Industries and Agriculture in Japan) என்ற தம் புத்தகத்தில், ஜப்பானியக்

கூட்டுறவைப் பற்றி எழுதுகையில் திரு. சிமன்லால் (Shri Chimanlal) அவர்கள், 'நான் உலகத்தைச் சுற்றி எட்டுத் தடவை சென்றுள்ளேன். மக்களிடையே — பணக்காரர்கள் அல்லது ஏழைகள், தொழிலதிபர்கள் அல்லது தொழிலாளர்கள், கடைக்காரர்கள் அல்லது அரசு பணியாளர்கள் — இருக்கின்ற அவ்வளவு அதிகமான கூட்டுறவை வேறெந்த நாட்டிலும் நான் காணவில்லை' என்று கூறுகிறார். மற்றும், 'ஒவ்வொரு மக்கள் நடவடிக்கைத் துறைக்காகவும் ஒரு கூட்டுறவுச் சங்கம் உள்ளது; அதை ஆதரிப்பதற்கு ஒரு சட்டமும் உள்ளது' என்றும், 'விவசாயத்தையும் தொழில்களையும் முறைப்படுத்தும் கூட்டுறவுச் சங்கங்கள் ஜப்பானில் ஒருவித அரசாங்கமாக வுள்ளன' என்றும் அவர் கூறியுள்ளார்.

# 3. இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் வரலாறும் வளர்ச்சியும்

(History and Growth of The Co-operative Movement in India)

## (அ) விடுதலைக்கு முந்திய காலம்

(Pre-Independence Era)

**அறிமுகம்**

பல்வேறு நாடுகள் கூட்டுறவு இயக்கத்தை அவ்வவற்றின் பொருளாதாரப் பிரச்சினைகளுக்கான ஒரு தீர்வாகத் தழுவியுள்ளன. இங்கிலாந்து நாடு, நுகர்வோர் நலன்களைப் பாதுகாத்து வளர்ப்பதற்காகக் கூட்டுறவுப் பண்டசாலைகளை அமைப்பதற்காகக் கூட்டுறவைத் தழுவியது. டென்மார்க்கு நாடு, வேளாண்மை விளைபொருள்களை விற்பனை செய்வதற்காகக் கூட்டுறவுப் பால்பண்ணைகளையும், கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களையும் அமைத்தது. ஜெர்மானிய நாடு, விவசாயிகளுக்குக் கடன் வசதி யளிக்கும்பொருட்டுக் கூட்டுறவுச் சங்கங்களை நிறுவியது. இந்தியாவில் கிராமக் கடன் பிரச்சினைக்கு ஒரு பரிகாரமாகக் கூட்டுறவு தொடங்கப்பட்டது. நம் நாடு பிரதானமாக ஒரு விவசாய நாடாக இருக்கிறபடியால், ஒரு கடன் வசதி இயக்கமாக நம் நாட்டில் தொடங்கப்பட்ட கூட்டுறவு இயக்கம், இதுவரை பிரதானமாகக் கடன் வசதி இயக்கமாகவே இருந்து வந்துள்ளது. ஆகையால், இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் வரலாறு, பெருமளவு, வேளாண்மைக்கான கூட்டுறவுக் கடன் வசதிகளின் ஒரு வரலாறாக உள்ளது.

### தோற்றம்

(Origin)

இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், கிராமக் கடன் பிரச்சினையானது மிகவும் நீடித்தகாலமானதும், கடினமானதுமான பிரச்சினைகளுள் ஒன்றாக இருந்தது. அந்தப்

பிரச்சினை ஓரளவு தொழிற் புரட்சியின் பின்விளைவுகள் காரணமாகவும், ஓரளவு ஆங்கிலேயர்களால் ஆரம்பிக்கப்பட்ட நிருவாக முறையின் காரணமாகவும் எழுந்தது. தொழிற் புரட்சியின் காரணமாக, சுதேசக் கிராமத் தொழில்கள் நலிவுற்று, அதன் விளைவாக விவசாய நிலங்களின்மீது நெருக்கம் அதிகரித்தும், ஏற்கெனவே கீழ்நிலையிலிருந்த குடியானவர்களின் வருவாய் குறைந்தும் வந்தது. ஆங்கிலேய நிருவாக முறையின் காரணமாகக் குடியானவர்கள் கையிலிருந்து விவசாய நிலங்கள் வட்டிக்குக் கடன் கொடுப்பவர்களின் கையில் போக ஆரம்பித்தன. அதனுல், வட்டியில் கடும்வட்டி வீதங்கள் துரிதமாக அதிகரிக்க ஆரம்பித்தன. 1880ஆம் வருடத்திய பஞ்சம் ஆணைக்குழு (Famine Commission), இந்தப் பிரச்சினைக்குக் கவனம் செலுத்தி, இந்தியாவில் மூன்றில் ஒரு பங்குக் குடியானவர்கள் கடனில் ஆழமாகவும், மிகச் சிக்கலான முறையிலும் அழுந்தியிருந்தனர் என்று கூறினர்.

## விவசாயக் கடன்களை மீட்பதற்காக எடுக்கப்பட்ட ஆரம்பக் காலத்து முயற்சிகள்

(Earlier Attempts to Relieve Agricultural Indebtedness)

இந்தியாவில், கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்களை அமைப்பதற்காக, 1904ஆம் வருடத்திய சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னர், பாரமான கடன் சுமையிலிருந்து விவசாயிகளை மீட்கும் நோக்கத்துடன், சில யோசனைகள் அரசாங்கத்திற்கு வழங்கப்பட்டிருந்தன. உதாரணமாக, சர் சையத் அகமது என்பவர், 1880ஆம் வருடத்திய பஞ்சம் ஆணைக் குழுவிற்குத் தாம் அனுப்பிய குறிப்பில், ஒவ்வொரு மாவட்டத்திலும் விவசாயிகள் நிவாரணவங்கிகளை அமைக்கலாம் என்ற யோசனையைக் கூறியிருந்தார். அத்தகைய வங்கிகளின் நோக்கங்கள் வருமாறு:

(i) விதைகள், கால்நடைகள், கலப்பைகள் முதலியவைகளை வாங்குவதற்காகவும், பயிரிடுபவர்களும் அவர்களுடைய குடும்பங்களும் வாழ்க்கை நடத்துவதற்காகவும், விவசாயிகளுக்குக் கடன் வழங்குதல்.

(ii) பயிரிடுபவர்களுக்குத் தானியம், கால்நடை, கலப்பை மற்றும் இதர விவசாயக் கருவிகள் ஆகியவற்றை விற்பனைக்கு வழங்குதல்.

பின்னர், 1882ஆம் ஆண்டில், உயர்நீதிபதி சர் ரானடே, சர் வில்லியம் வெட்டர் பர்ன் (Justice, Sir Ranade

and Sir William Wedder Burn) ஆகியவர்களின் முன் முயற்சியால், பூனு மாவட்டத்தில் புரந்தர் தாலுக்காவில், இந்திய அரசாங்கம் விவசாய வகுப்பினர்களுக்கு நியாயமான நிபந்தனைகளின்பேரில் மூலதனத்தை வழங்குவதற்காக, ஒரு விவசாய வங்கியைப் பரிசோதனை ரீதியாக அமைக்க வேண்டுமென்று பம்பாய் மாநில அரசாங்கத்திற்கு யோசனை கூறினர். இந்த யோசனையின்படி, முதன்முதலாக அரசாங்க உதவியைக்கொண்டு நடப்பிலிருக்கும் கிராமக் கடன்கள் தீர்க்கப்படவேண்டும்; பிறகு, கிராமக் கடன்களைத் தீர்த்துவைத்ததனாலுண்டான அரசாங்க உரிமைக் கோரிக்கையை (Claims) எடுத்துக்கொள்வதற்காக, ஒரு வங்கியை யமைத்து, மக்களுக்கு மேற்கொண்டு கடன்களை வழங்குதல்வேண்டும். அரசினரின் உரிமைக் கோரிக்கையை எடுத்துக்கொண்ட பிறகு, அந்த வங்கியானது, தன் பாக்கிகளை இதர வழிகளின்மூலம் வசூல் செய்ய எல்லா முயற்சியையும் செய்துவிட்ட பிறகு, அந்தப் பாக்கிகளை நிலவரியாக (Land Revenue) வசூல் செய்வதற்கு உரிமை பெற்றிருக்கவேண்டும். இந்தத் திட்டத்தின்கீழ், தேவைப்படும் நிதிகளில் பெரும்பகுதி அரசினரிடமிருந்து கிடைக்கவேண்டும். அரசு அதிகாரிகள் பெயரளவில் மட்டுமன்றி உண்மையாகவே வங்கியின் அதிகாரிகளாக இருப்பார்கள். தனியார் தொழில் முயற்சியானது, தலைமை அலுவலக நிருவாகத்திற்கு ஏறக்குறைய அடைக்கப்படும். இந்தக் காரணங்களுக்காகவும், இதுபோன்ற காரணங்களுக்காகவும், சர் வில்லியம் வெட்டர் பர்ன் அவர்களின் இந்தத் திட்டம் தகுதியற்றதாகக் கருதப்பட்டது. இந்திய ஆட்சிச் செயலர் (Secretary of State for India) இந்தத் திட்டத்தை அங்கீகரிக்கவில்லை. எனவே, அது கைவிடப்பட்டது.

எனினும், மேற்கூறிய விவசாய வங்கியின் அத்தியாவசியமான அம்சங்கள் யாவும் நிலச் சீர்திருத்தக் கடன்கள் சட்டத்திலும் (1883) – (Land Improvements Loans Act), விவசாயக் கடன்கள் சட்டத்திலும் (1884) (Agricultural Loans Act) சேர்க்கப்பட்டன. அந்தச் சட்டங்கள், அரசினரால் அங்கீகரிக்கப்பட்ட உற்பத்திக் காரியங்களுக்காகக் குடியானவர்களுக்கு ஒரு குறைந்த வட்டிவீதத்தில் கடன்களைப் பெறுவதற்கான வசதியளித்தன. ஒவ்வொரு கடனுக்கும், நபர் ஜாமீன் அல்லது நிலத்தின்மீது ஒரு பற்றுப் பொறுப்பு (Charge) ஆதாரமாக இருக்கவேண்டும். அரசு வருவாய்த் துறை அதிகாரிகள், கடன் உபயோகத்தை மேற்பார்வை செய்தனர்; சரியான கணக்குகள் வைக்கப்படவேண்டும்; கடன்களைத் திருப்பிச் செலுத்துவதில் காலம் தவறாமையும் வற்புறுத்தப்படுத்தப்பட்டது. இந்தத் தக்காவிக்

(Takkavi) கடன்கள் முறைக்கும், விவசாய வங்கி முறைக்கும் இடையேயுள்ள முக்கிய வேறுபாடுகள், இந்த இரண்டு முறைகளிலும் அரசாங்கம் நிதி வழங்கி, நட்டவச்சத்தை (Risk) எடுத்திருந்தனராஞலும், தக்காவிக் கடன்முறையின்கீழ், கடன்கள் அளிப்பதும், அதற்கான கணக்குகள் வைப்பதும் அரசு அதிகாரிகள் வசம் இருந்தது. ஆனல், விவசாய வங்கி முறையின்கீழ், இந்தப் பணிகள் யாவும் வங்கியால் செய்யப்படும். இந்த இரண்டு முறைகளிலும், கடன் முதலையும் வட்டியையும் வசூலித்தல் அரசு வருவாய்த்துறைக் கீழ்த்தரப் பணியாளர்களுக்கு ஒப்படைக்கப்பட்டுள்ளது. குடியானவரின் கண்ணேட்டத்தில் அரசினரிடமிருந்து கடன் வாங்குதலுக்கும், விவசாய வங்கியிடமிருந்து கடன் வாங்குதலுக்கு மிடையேயுள்ள வேறுபாடு ஒரு சிறிதுதான். இந்த இரண்டு முறையிலும் கடன் வாங்கும் குடியானவன், கடன் அளிப்பவரின் நல்வாழ்விலோ தோழமைக் கடன் வாங்குபவர்களின் நல்வாழ்விலோ யாதொரு அக்கறையும் கொண்டவனல்லன். மற்றும், இலாபத்தில் பங்கும், நிருவாகத்தில் கண்காணிப்பும் அவனுக்குக் கிடையா.

## சர் ஃபிரடெரிக் நிக்கல்சன் அவர்களின் ஆய்வுகள்
## (Sir Frederic Nicholson's Investigations) (1895–97)

1892ஆம் ஆண்டில், சென்னை அரசாங்கம் தன் உயர் அதிகாரிகளில் ஒருவரான சர் ஃபிரடெரிக் நிக்கல்சன் அவர்களை ஐரோப்பிய நாடுகளில் நிலவியிருந்த நில வங்கிகள், விவசாய வங்கிகள் முறைகளை ஆராய்ச்சி செய்து, கிராமக் கடன்களை மீட்கும்பொருட்டு அந்த முறைகள் இந்திய நிலைமைகளுக்குக் குறிப்பாக, சென்னை இராஜதானிக்கு எந்த அளவிற்குப் பொருந்துதல் செய்யப்படலாம் என்பதுபற்றி அறிவிக்கும்படி அனுப்பி வைத்தது. அவருடைய விசாரணைகள், 'சென்னைக் (மாநிலத்து) குடியானவனல் சுமக்கப்படும் கடன்சுமை பாரமாயுள்ளது; அதன் வட்டி உயர்வாக இருக்கிறது; இலாபத்தில் ஒரு குறைந்தபட்ச விளைவுடன் அது பயன்படுத்தப்பட்டிருக்கிறது' என்று வெளிப்படுத்தின. 'முழுமையாகப் பார்க்குமிடத்து, கடனுடைமை (Indebtedness) பொதுவாக இருக்கிறது; அதன் சுமை கனமானதாக இருக்கிறது; தனி நபர்கள் மீதும், வகுப்புகள்மீதும் குறிப்பாக அது அம்மாதிரியுள்ளது. குடியானவர்களுக்கு உதவியளிக்குங்கால், அவர்களுக்குச் சிக்கனப் பொருளாதாரத்தைக் கற்பிக்கும் முறையானதும், எழுச்சியுண்டுபண்ணக் கூடியதுமான வங்கி வகைகளிலும், அடிக்கடி வாதாடப்பட்டவகையில், கிராமப் பொருளாதார அமைப்பின் மெய்ம்மைகளுக்குச் சிறப்புக் கவனம்

செலுத்துகின்ற ஒரு சாதாரண வகையான பொதுக் கல்வியை அவர்களிடையே பரப்புவதிலும்தான் பரிகாரங்கள் அடங்கியுள் ளன' என்பது அவருடைய முடிவுகள்.

நிக்கல்சன் அவர்களின் முடிவின்படி சென்னை இராஜதானி யில் கிராமக் கடன் வசதிக்கு மிகப் பொருத்தமான மாற்று முறை யமைப்புகளுள், சென்னை மாவட்டங்களில் கடன் வசதிப் பணிக்காக எது முக்கியமாகத் தேவைப்பட்டது என்றால், சிறிய உள்ளூரான, உள்ளூர் மக்களால் நடத்தப்பட்ட நிறுவனங்க ளாகும். ஏனென்றால், அத்தகைய நிறுவனங்கள், அண்மை (Proximity), பாதுகாப்பு (Security), வசதி (Facility), உள்ளூர் நம்பிக்கை (Local confidence) என்பவற்றை உண்டு பண்ணுதல் என்ற நிபந்தனைகளைப் பூர்த்திசெய்யு (Postulates) மாகையால், உள்ளூர் மூலதனத்தை ஈர்த்து, மலிவாகவும் ஏறக்குறைய ஊதியம் பெறுத வகையிலும் இயங்கி, அந்த வகை யில் மலிவாகக் கடன் வழங்கி ஒப்பந்தத்திற்கிணங்கக் கடன்கள் பயன்படுத்தப்படுவதைக் கவனித்துச் சிக்கனம், ஒன்றுசேர்தல், தன்னுதவி என்ற விஷயங்களில் அறிவைப் பரப்பும் செல்வாக் கினைச் செலுத்திப் பொதுவாழ்வில் தனிநபர் திறமை, நாட்டுப் பற்றுப் பண்பு ஆகியவைகளின் உயர்ந்த வடிவங்களை வளர்க் கின்றன.

விவசாய உற்பத்திக்காகக் கடன் வசதியின் அவசியத்தைப் பற்றி, சர் ஃபிரடெரிக் நிக்கல்சன் அவர்கள் 'உலக முழுவதும் விவசாய வரலாற்றின் படிப்பினையாவது, விவசாயத்தின் ஓர் அத்தியாவசியமான தேவையாக இருக்கிறது கடன்வசதியே என்பதாகும். விவசாயிகள் கடன் வாங்கியே தீரவேண்டும் என்ற ஒரு பெரிய மெய்ம்மையை, நில உரிமை முறைகளோ (Land tenures) அல்லது விவசாய நிலைமைகளோ பாதிக்கமாட்டா. இந்த அவசியத் தேவைக்குக் காரணம், ஒரு விவசாயியின் மூல தனம், அவனுடைய நிலங்களிலும், இருப்புச் சரக்குகளிலும் பூட்டப்பட்டிருப்பதே. எனவே, கடன்வசதி அவசியமாகவே ஆட்சேபனைக்குரியதன்று; கடன் வாங்குவதும் அவசியமாகவே பலவீனத்தின் ஓர் அறிகுறியன்று. ஒரு குடியானவனுக்குத் தன் நிலத்திற்குப் பயன்படுத்துவதற்கான மூலதனம் தேவைப்படும் போது, அவனிடத்தில் அது வழக்கமாக இருப்பதில்லை. இலட்சிய ரீதியில், உண்மையாகவே அவன் சேமிப்புகளைச் சேர்த்து வைத்தி ருக்கத்தான் வேண்டும். ஆனால், மெய்ம்மையில், ஒரு நியமமாக அது அவனிடமில்லை. அதற்குக் காரணம், சில சமயங்களில் சேமிப்புச் செய்யமுடியாமல், மெய்ம்மையாகவே அவன்

மிகவும் ஏழ்மையில் இருக்கிறான். சாதாரணமாகவே, அவன் சிக்கனத்தின் பயன்பற்றி எப்பொழுதுமே கற்பிக்கப்படாமல் இருந்து வந்துள்ளான். மேலும், சேமித்து வைக்கக்கூடிய சிறிய தொகைகளை அவன் சேர்த்து வைப்பதற்கான அனுகூலமுள்ள வசதிகளும்கூட அவனுக்குக் கிடைக்கவில்லையென்பதும் அதற்குக் காரணம். ஆகவே, அவன் கடன்வாங்கவேண்டியே யிருக்கிறது' என்று கூறியுள்ளார். ஐரோப்பாவில் நிலவியிருந்த மக்களுக்கான (Popular) மற்றும், அடைமானக் கடன்வசதி முறைகளைப்பற்றிய ஒரு விவரமான ஆராய்ச்சியைச் செய்த பிறகு, சர் ஃபிரடெரிக் நிக்கல்சன் அவர்கள் உபயோகமான, விரிவானதொரு அறிக்கையைச் சமர்ப்பித்தார். அந்த அறிக்கையின் முதன்மையான பரிந்துரையானது ஏறக்குறைய ஜெர்மானிய நாட்டு 'ரெய்ஃபெய்சன்' (Raiffeisen) சங்கங்கள் பாணியில் நியாயமான நிபந்தனைகளின் பேரில் கடன் வசதி யளிப்பதற்காகவும், கிராம மக்களிடையே சிக்கனத்தை வளர்ப்ப தற்காகவும், கிராமக் கூட்டுறவுச் சங்கங்களை ஆரம்பித்தலே யாகும். மற்றும் அவர், 'ரெய்ஃபெய்சனைக் கண்டுபிடி.' (Find Raiffeisen) என்ற அறிவுரையுடன் அவருடைய அறிக்கையை முடித்தார். அதன்மூலம் அவர் எண்ணியது, 'கிராமக் கடன் வசதியின் எதிர்காலமானது, மக்களாக இருந்து, மக்களிடையே வாழ்ந்துகொண்டு தங்கள் அறிவினாலும், முன்னறிதலாலும், சக்தியினாலும் மக்களைவிட உயர்ந்த நிலையை வகித்து, கிராம முன்னேற்றப் பணியில் ஆர்வத்தையும், பலத்தையும், பொறுமை யையும் தொடர்ந்த சிரத்தையையும் காட்டும் இயல்புடைய நபர்களிடத்திலிருந்தது.

இரண்டு தொகுதிகளில் (2 Volumes) தயாரிக்கப்பட்டிருந்த நிக்கல்சன் அவர்களுடைய அறிக்கை (1895—97) சென்னை அரசினரால் 1899ஆம் ஆண்டில் ஆய்வு செய்யப்பட்டது. சென்னை இராஜதானியில் கிராமக் கடன் பிரச்சினையானது, மிக அவசரமானதான ஒன்றாக இருக்கவில்லை என்ற கருத்தை அரசினர் வெளியிட்டனர். கண்டிப்பான ரெய்ஃபெய்சன் பாணியில் ஒரு சில கிராம வங்கிகளை ஆரம்பித்து ஒருசில ஆண்டுகள் அவற்றின் செயற்பாட்டினைக் கவனித்து வந்தால், அதற்குப் பிறகு அவர்கள் பரிந்துரைகள் செய்வதற்கான நிலைமையில் இருக்கலாம் என்று அவர்கள் எண்ணங்கொண்டனர். இந்த அறிக்கை 1900ஆம் ஆண்டில் இந்திய அரசின் பார்வைக்கும்கூட வந்தது. ஏறக்குறைய அதே காலத்தில், ஐக்கியமாகாணத்தின் ஓர் அதிகாரியான, எச். டியூபர்நெக்ஸ், ஐ. சி. எஸ். (H. Dupernex, I.C.S.) என்பவர் இந்தப் பிரச்சினையைத் தீர ஆராய்ச்சி செய்த பிறகு,

ஐக்கிய மாகாணத்தில் இந்தியக் கம்பெனிகள் சட்டத்தின்கீழ் (Indian Companies Act.) பதிவு செய்யப்பட்ட 'கிராம வங்கிகள்' என்ற பரிசோதனைத் திட்டத்தை ஆரம்பித்தார். 1900ஆம் ஆண்டில், 'வட இந்தியாவிற்காக மக்கள் வங்கிகள்' (Peoples' Banks for Northern India) என்ற தலைப்புள்ள ஒரு புத்தகத்தை அவர் வெளியிட்டார். இந்தப் புத்தகமும் இந்திய அரசினரின் பார்வைக்கு வந்தது. அதன் விளைவாக, இந்தியாவில் கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்களை ஆரம்பிக்கும் பிரச்சினை 1900ஆம் ஆண்டு டிசம்பரில் கல்கத்தாவில் கூடிய ஒரு குழுவால்ஆலோசிக்கப் பட்டது.

ரெய்ஃபெய்சன் வகைச் சங்கங்கள் தக்கவையாக இருக்கக் கூடும் என்று இந்தக் குழுவினர் கருத்துக் கொண்டனர். பின்னர், 1901ஆம் ஆண்டு, மே மாதத்தில் பஞ்சம் ஆணைக்குழுவின் (Famine Commission) அறிக்கை வெளிவந்தது. அந்தக் குழு, 'பரஸ்பரக் கடன் வசதிச் சங்கங்கள்' (Mutual Credit Associations) ஆரம்பிக்கப்படலாம் என்று பரிந்துரை வழங்கினர். மெக்டானல் பிரபு (Lord Macdonnel) அவர்கள் தலைமை வகித்த இந்தக் குழுவில் சர் ஃபிரடெரிக் நிக்கல்சன் அவர்களும் உறுப்பினர்களுள் ஒருவராக இருந்தார். இந்தக் குழுவினர், 'குடியானவர்கள் கடுமையான வட்டிவீதங்களைச் செலுத்தாமலும், கடன் படுவதற்காகத் தகாத வசதிகள் அவர் களுக்கு அளிக்கப்படாமலும், அவர்கள் தொழிலை நடத்துவதற்கு அவசியப்படும் பண உதவியைப் பெறக்கூடும் வகையில் சில நிறுவனம் அல்லது முறை அமைக்கப்படுவதற்கு அதிமுக்கியத் துவத்தை நாங்கள் அளிக்கிறோம்' என்று எழுதியிருந்தனர். பிறகு, அக் குழுவினர் இந்தக் கடன் வசதிச் சங்கங்கள் தொடங்கப்பட வேண்டிய அடிப்படையான ரெய்ஃபெய்சன் கொள்கைகளைக் கூறிச் சென்றனர்.

## சர் எட்வர்டு லா குழு (1901)
## (Sir Edward Law Committee, 1901)

நிக்கல்சன் அவர்களின் அறிக்கையில் அடங்கியிருந்த பரிந்துரைகளுக்கு அமல் கொடுப்பதன் சாத்தியக்கூற்றைப் பற்றி யும், புத்திமதியைப் பற்றியும் மாநில அரசாங்கங்களின் கருத்து களை இந்திய அரசினர் வரவழைத்தனர். அவற்றின் பதில்கள், 1901ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் இந்திய ராஜப்பிரதிநிதி கர்சான் பிரபு (Lord Curzon, Viceroy of India) அவர்களால் நியமிக்கப்பட்ட ஒரு குழுவினரால் ஆலோசிக்கப்பட்டன. இந்திய

அரசாங்கத்தின் நிதி உறுப்பினர் சர் எட்வர்டு லா (Sri Edward Law) அவர்கள் இந்தக் குழுவிற்குத் தலைமை வகித்தார். சரியான ஓர் அடிப்படையில் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்காக அவசியமான ஒரு செயல்திட்டத்தை அறிவிக்குமாறு அந்தக் குழு கேட்கப்பட்டது. அந்தக் குழுவின் அறிக்கையின் பேரில்தான், ஒரு விவரமான செயல்திட்டத்திற்கான உத்தேசங்கள் உருவெடுத்தன. இந்த உத்தேசத் திட்டம் மாநில அரசாங்கங்களின் கருத்திற்காகச் சுற்றனுப்பப்பட்டது. 1901ஆம் வருடத்திய பஞ்ச ஆணைக் குழுவின் பரிந்துரைகளையுங்கூட இந்தக் குழு பரிசீலனை செய்தது. சட்டமியற்றுதலன்றி, வேறு எந்தவித உண்மையான முன்னேற்றமும் சாத்தியமில்லை என்று இக் குழுவினர் கருதினர். 256 பிரிவுகளைக் கொண்டும், சிக்கலான விரிந்த சரத்துகளைக் கொண்டுமிருந்த கம்பெனிகள் சட்டம் (Companies Act), தாங்கள் ஊக்குவிக்க விரும்பும் சங்கங்களுக்குப் பொருத்தமற்றதென்று அவர்கள் கருதி ஒரு மாதிரிச் சட்டத்தையும், மாதிரி விதிகளையும் தயாரித்தனர்; கூட்டுறவுச் சங்கங்களை ஆரம்பித்துப் பேணி வளர்க்கவேண்டும் என்றும் அவர்கள் பரிந்துரை செய்தனர். இந்தக் காரியத்திற்காகச் சங்கங்களை ஒழுங்குபடுத்தவும், அவைகளுக்குச் சில விசேஷ உரிமைகளை வழங்கவும் ஒரு தனிப்பட்ட சட்டத்தை இயற்றுவதற்கு யோசனையையும் கூறினர். அதற்கிணங்க, இந்திய அரசினரால் ஒரு தனிப்பட்ட சட்டமியற்றப்பட்டது. ஒரு மாதிரிச் சட்டம் சட்டசபையில் கொண்டுவரப்பட்டு, 1904ஆம் வருடத்திய 'கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்களின் சட்டம்' என்று அது பின்னர் நிறைவேற்றப்பட்டது (Co-operative Credit Societies Act of 1904). (Act X of 1904)

## 1904ஆம் வருடத்திய கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்களின் சட்டம்

### (The Co-operative Credit Socities Act of 1904)

கடன் வசதிக்காக மட்டுமே கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதன்மூலம், விவசாயக் கடன் வசதிக்கு உதவி செய்யும் பொருட்டு, இந்தச் சட்டம் உத்தேசிக்கப்பட்டது. அது, பெருமளவு இங்கிலாந்து நாட்டுத் 'தோழமைச் சங்கங்களின் சட்டத்தின்' (English Friendly Societies' Act) அடிப்படையில் உருவாக்கப்பட்டுக் கடன்வசதிக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு எல்லைப்படுத்தப்பட்டது. இந்தச் சட்டம் இங்கிலாந்து நாட்டுத் தோழமைச் சங்கங்களின் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டி

ருந்தாலும், அது ஜெர்மானிய நாட்டு ரெய்ஃபெய்சன் அவர்களின் பரிசோதனைத் திட்டங்களிலிருந்தும், இத்தாலிய நாட்டு ஷூல்சு-டெலிட்சு அவர்களின் சோதனைகளிலிருந்தும் (experiments) கருத்துணர்வைப் பெற்றிருந்தது. ஏனெனில், இந்தியாவில் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்த கிராமப் பொருளாதார அமைப்பிற்கும், ஜெர்மனியில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் மையத்திலிருந்த கிராமப் பொருளாதார அமைப்பிற்குமிடையே அநேக பொதுவான அம்சங்களிருந்தன.

1904ஆம் வருடத்திய சட்டத்தினால், உத்தேசிக்கப்பட்ட சங்கங்களின் நோக்கம் மிகச் சிறப்புள்ளதாகவும் வரையறுக்கப் பட்டுள்ளதாகவும் இருக்கும் என்றும், சாமானியமான தேவைகளையுடையவர்களும், சிறிய தொகைகளை மட்டும் கோருகின்றவர்களுமான சாமானிய மக்களுக்காகச் சிறிய கடன் வசதிச் சங்கங்கள் அமைக்கப்படுமென்றும், அச் சங்கங்களின் மிகப் பயனுள்ள வகையான வாணிபம் குறுகிய காலவரைகளுக்குச் சிறு கடன்களை யளிப்பதும் அக் கடன்களைத் தாமதமின்றி வசூலிப்பதும் என்றும் அரசினர் தெளிவுபடுத்தினர். அச் சட்டம், எளிமை, நெகிழ்ச்சி ஆகிய நோக்கங்களுடன் நிறைவேற்றப்பட்டது; பொதுவான ரூபக் குறிப்புகளை (Outlines) மட்டும் நிருணயித்து, விவரங்களைத் தோல்வி அல்லது வெற்றி அனுபவத்தையும் சங்கங்களின் இயல்பான வளர்ச்சியையும் சுட்டிக்காட்டும் வகையிலும், நாட்டின் ஒவ்வொரு பகுதிக்கும் மிகத் தகுதிவாய்ந்தவையென்ற வழிகளிலும், படிப்படியாகப் பூர்த்தி செய்ய விட்டுவிடுவதே அரசினரின் விருப்பமாகவிருந்தது. மேல்அனுபவத்தைப் பெறும் வரைக்கும், சுயேச்சையான வளர்ச்சி பலவீனப்படுத்தப்படாமல் விட்டுவிடும் வகையில், அரசினர் தலையீடு மிக இன்றியமையாக் காரியங்களுக்கு மட்டுமே வரையறுக்கப்படவேண்டுமென்று இந்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களுக்குத் தெரிவித்தது.

1904ஆம் வருடத்திய கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்களின் சட்டத்தின் பிரதான அம்சங்களைச் சுருக்கமாகக் கூறலாம். அச் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப்பட்ட ஒரு கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கமானது, ஒரே இடத்தில் வசிக்கின்ற 18 ஆண்டுகளுக்கு மேற்பட்ட வயதுள்ள, 10 அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களைக் கொண்டதாகும். சங்கங்கள், கிராமச் சங்கங்கள் என்றும், நகரச் சங்கங்கள் என்றும் இரண்டு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. மற்றும், ஒரு கிராமச் சங்கத்தில் 4/5 உறுப்பினர்கள் விவசாயிகளாக இருக்கவேண்டுமென்றும், அதே விகிதத்தில் ஒரு

நகரச் சங்கத்தின் உறுப்பினர்கள் விவசாயிகளல்லாதவர்களாக இருக்கவேண்டுமென்றும் அச் சட்டம் விதித்தது. ஒரு கிராமச் சங்கத்தில் சங்கத்தால் வாங்கப்பட்ட கடன்களுக்காக உறுப்பினர்களின் பொறுப்பு ஒரு கட்டாய விதியாக, வரையறுக்கப்படாததாக இருந்தது. ஒரு நகரச் சங்கத்தைப் பொறுத்தமட்டில், பொறுப்பு வரையறுக்கப்பட்டதாகவும் அல்லது வரையறுக்கப்படாததாகவும் இருக்கலாம். இந்த இரண்டுவகைச் சங்கங்களிலும் ஒரு காப்புநிதி (Reserve Fund) இருக்கவேண்டுமென்றும், அந்த நிதி மொத்தப் பொறுப்புகளுக்கு ஒருசில விகிதத்தை யடைந்தபோது, மேல்இலாபங்கள் மொத்தத்தில் $\frac{3}{4}$-க்கு மேற்படாமல், போனசு (Bonus) வாயிலாக உறுப்பினர்களிடையே விநியோகிக்கப்படலாமென்றும் அச் சட்டம் விதித்தது. ஒரு நகரச் சங்கத்தில் வருடாந்திர இலாபத்தில் குறைந்தபட்சம் கால் பகுதி காப்புநிதிக்குக் கொண்டுபோகப்படவேண்டும் என்ற நிபந்தனையைத் தவிர, இலாபங்களைப் பட்டுவாடா செய்வதைக் குறித்துக் கட்டுப்பாடு எதுவுமில்லாமலிருந்தது. கடன்கள் உறுப்பினர்களுக்கு மட்டும் அல்லது பதிவாளரின் அனுமதிக்குட்பட்டு ஒரு கிராமச் சங்கத்திற்கு அளிக்கப்படவேண்டுமென்றிருந்தது. கடன்கள் அசையாச் சொத்து ஆதாரத்தின்மீதிலாவது, நபர் ஜாமீன் ஆதாரத்தின்மீதிலாவது சங்கங்களால் வழங்கப்படலாம். ஆனால், சாதாரணமாக அசையும் சொத்துகள் ஆதாரங்களின்மீது கடன்கள் கொடுக்கக்கூடாது. கூட்டுறவுச் சங்கத்தில் ஓர் உறுப்பினர் தாம் வைத்திருக்கும் பாத்தியதையின்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. பங்குகளை மாற்றுவதிலும் கட்டுப்பாடுகள் இருந்தன. அரசினரால் அனுப்பப்படும் அலுவலர்களால் செய்யப்படும் தணிக்கைக்கும், ஆய்வுக்கும் சங்கங்கள் உட்பட்டிருந்தன. வருமானவரி, முத்திரைவரி போன்ற சில சட்ட விதிப்புகளிலிருந்து விலக்குகள் போன்ற சில சலுகைகளும் வரி வசூலிப்பதற்காக ஓர் உறுப்பினரின் பங்கு மூலதனம் நீதிமன்றத்தினால் கைப்பற்றப்படுவதிலிருந்து ஒரு விலக்குங்கூடச் சங்கங்களுக்கு அளிக்கப்பட்டன. மாநில அரசாங்கத்திற்குச் செய்யப்படும் மேல்முறையீட்டுக்குட்பட்டுப் பதிவாளரால் சங்கங்கள் கலைக்கப்படலாம். சங்கங்களைக் கலைப்பதற்காக, ஓர் எளிய நடைமுறை நிருணயிக்கப்பட்டிருந்தது. மாநில அரசாங்கங்கள் விதிகளைச் செய்யும் விரிவான அதிகாரங்கள் அளிக்கப்பட்டிருந்தன. இவ்வாறு, இந்தியாவில் கடன்வசதி இயக்கத்திற்கான ஒரு கடைகால் போடப்பட்டது. ரெய்ஃபெய்சன் வகைக் கடன்வசதிச் சங்கங்கள் நீண்டகாலமாக இயக்கத்தின் பிரதான பகுதியாகத் தொடர்ந்திருந்தன.

# 1912ஆம் ஆண்டின் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம்

## (Co-operative Societies Act II of 1912)

1906ஆம் ஆண்டிலிருந்து 1911ஆம் ஆண்டிற்கிடையே, சங்கங்களின் உறுப்பினர்களிலும், நடவடிக்கைகளிலும் ஏறக்குறைய ஓர் அற்புதமான வளர்ச்சியிருந்தது. 1904 வருடத்திய சட்டம், இயக்கத்தில் அதிகரித்துவரும் தேவைகளைத் தீர்ப்பதற்குப் போதாததாகக் காணப்பட்டது. முதன்முதலாக, அந்தச் சட்டம், அதன் அமைப்பின்படி, கடன் வசதி தவிர, இதரக் காரியங்களுக்காக அமைக்கப்பட்ட சங்கங்களுக்கு ஒரு சட்டப் பாதுகாப்பை யளிக்காமலிருந்தது. விற்பனை மற்றும், உற்பத்தி போன்ற அத்தகைய நோக்கங்களுக்காகச் சங்கங்கள் ஆங்காங்கே தோன்றின. அத்தகைய சங்கங்களுக்கு, அந்தச் சட்டத்தின் கட்டமைப்பிற்குள் இடமில்லாமலிருந்தது. இரண்டாவதாக, சங்கங்களின் எண்ணிக்கையில் வளர்ச்சியும், கிராமப் பகுதிகளிலிருந்து உள்ளூர் மூலதனத்தைத் திரட்டுவதில் ஏற்பட்டிருந்த கஷ்டங்களும், உள்ளூர்ச் சங்கங்களை மேற்பார்வை செய்து அவைகளுக்குப் போதுமான மூலதனத்தை வழங்குவதற்காகச் சிலவகை மத்திய நிறுவனங்களை உண்டு பண்ணும் பிரச்சினையை எழுப்பின. இந்தக் குறைபாடுகள், 1912ஆம் வருடத்திய கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தால் பரிகாரம் செய்யப்பட்டன. அந்தச் சட்டம், முதன்முதலில் விற்பனை வசதி, உற்பத்தி வசதி, விநியோக வசதிச் சங்கங்களுக்கும், பல்வேறு வகையான மத்திய நிறுவனங்களுக்கும் சட்ட ஏற்பை அளித்தது. பரஸ்பர மேற்பார்வை மற்றும், நிதியளித்தல் போன்ற காரியங்களுக்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் சம்மேளனங்களைப் பதிவு செய்வதற்கும் அது அனுமதியளித்தது.

இந்தப் புதிய சட்டம், கிராமச் சங்கங்களுக்கும், நகரச் சங்கங்களுக்குமிடையே யிருந்த பழைய வேற்றுமையை ஒழித்தது. ஆனல், அவைகளுக்குப் பதில் வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களென்றும், வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்களென்றும் பாகுபாட்டை ஏற்படுத்தியது. எனவே, மத்தியக் கடன் வசதிச் சங்கங்களமைப்பதற்காக மட்டுமன்றி, பல்வேறு காரியங்களுக்கான பல்வேறு வகையான கூட்டுறவு நிறுவனங்களை அமைப்பதற்காக ஏற்பாடு செய்திருந்த 1912ஆம் வருடத்திய சட்டம் 1904ஆம் வருடத்திய சட்டத்திற்குப் பதிலாய் நிறைவேற்றப்பட்டது.

## சர் எட்வர்டு மாக்லகன் குழுவினரின் அறிக்கை, 1915
(Sir Edward Maclagan Committee's Report, 1915)

1912ஆம் வருடத்திய புதிய சட்டத்தின் உடனடியான பலன் இயக்கத்தின் வளர்ச்சியை எழுப்பி, இயக்கத்திற்குள் ஒரு புதிய சக்தியைப் புகுத்துவதாக இருந்தது. சங்கங்களின் எண்ணிக்கை, அவைகளின் உறுப்பினர்கள் எண்ணிக்கை, அவைகளின் நடைமுறை மூலதனம் ஆகியவை நிலையான முறையில் அதிகரித்தன. விளைபொருள்களின் விற்பனைக்காகவும் உரங்கள், விதைகள், கருவிகள் ஆகியவைகளை வாங்குவதற்காகவும் குடும்பத் தேவைகளை வழங்குவதற்காகவும் நெசவுத் தொழில் போன்ற குடிசைத் தொழில்களை வளர்ப்பதற்காகவும் புதியவகைச் சங்கங்கள் பதிவு செய்யப்பட்டுச் செழிப்பான நிலைக்கு வர ஆரம்பித்தன. கடன் வசதிச் சங்கங்களின் எண்ணிக்கைகூடத் துரிதமாக உயர்ந்தது. 1914ஆம் ஆண்டில் இந்திய அரசினர் கூட்டுறவு இயக்கத்தின் நிலவர இருப்பு நிலையை மதிப்பீடு செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது என்று முடிவு செய்து, மாண்புமிகு சர் எட்வர்டு மாக்லகன் (Hon'ble Sir Edward Maclagan) அவர்களின் தலைமையில் அதிகாரிகளையும், அதிகாரப்பற்றற்றவர்களையும் கொண்ட ஒரு குழுவை அமைத்தனர். கூட்டுறவு இயக்கம், குறிப்பாக, அதன் உயர்வான கட்டங்களிலும், அதன் நிதி சம்பந்தமான அம்சத்திலும், சரியான முறையில் முன்னேறிக் கொண்டிருந்ததா? என்பது பற்றியும் பரிசீலனை செய்யவும், அவசியமாகத்தோன்றும் ஏதாவது அபிவிருத்தி நடவடிக்கைகளுக்கு யோசனை கூறவும்' அக் குழுவினர் கேட்டுக்கொள்ளப்பட்டனர். விரிவான ஆய்விற்குப் பிறகு, அக் குழுவினர் பின்வரும் கருத்தை வெளியிட்டனர். 'இயக்கம் ஏற்கெனவே அடைந்திருந்த வளர்ச்சியின் அளவைக் குறித்து யாராலும் ஆச்சரியப்படவும் அல்லது, இயக்கம் உறுதியான வேரெடுத்து விட்டதைக் குறித்து நம்பவும் தவற முடியாது' என்றும், 'அக் காலத்தில் சங்கங்கள் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் பரவியிருந்ததையும், அவைகளின் உறுப்பினர்கள் பெற்றுக்கொண்டிருந்த நன்மைகள் தெளிவாக இருந்ததையும் நோக்குமிடத்து, இயக்கம், இறுதியாக அமையப் போகும் அளவை ஒத்திட்டுப் பார்க்குமிடத்து, அக் காலத்தில் அது அடைந்திருந்த அளவு மிகச் சிறியதாகக் காணப்படும் என்பது பற்றிச் சந்தேகிப்பதற்குச் சாத்தியமில்லை' என்றும், அக் குழுவினர் மொழிந்தனர். இயக்கத்தின் மேல்அபிவிருத்திக்காகவும், வளர்ச்சிக்காகவும் குறிப்பாக, அதன் உயர்மட்ட நிதி அமைப்பைக் குறித்து, அடிப்படையானதும், தூரவிளைவுள்ளதுமான முக்கியத்துவமுமுள்ள பல்வேறு பரிந்துரைகளையுங்கூட அக் குழுவினர்

வழங்கினர். அக் குழுவினரின் அறிக்கை, 1915ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. அந்த அறிக்கை இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்கள் செயற்பாட்டினைப் பற்றிய மிக முந்திய காலத்து ஒரு தஸ்தாவேஜாக உள்ளது. இன்றும்கூட அந்த அறிக்கை கூட்டுறவுக் கொள்கைகளைப் பற்றியும் அதன் வளர்ச்சியின் நடைமுறை வழிகளைப் பற்றியும் ஒரு பிரமாணமாகக் (Authority) கருதப்படுகிறது.

மாக்லகன் குழுவினரின் முக்கியப் பரிந்துரைகளுள் சில பின்வருமாறு: கடன்கள் உற்பத்திக் காரியங்களுக்காக மட்டுந்தான் கொடுக்கப்படவேண்டும்; கடன்கள் எக் காரியங்களுக்காகக் கொடுக்கப்பட்டாலும் அக் காரியங்களை நிறைவேற்றுவதில் சரிவரப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றனவா? என்பதை அதிகாரிகள் பார்வையிடவேண்டும். கடன்கள் உறுப்பினர்களுக்கு மட்டுமே வழங்கப்படவேண்டும். எந்தச் சந்தர்ப்பத்திலும் உறுப்பினர்களல்லாதவர்களுக்குக் கடன்கள் வழங்கப்படக்கூடாது. சங்கங்களின் அலுவலர்-நிருவாகக் குழுவினர், நிறுவனங்களுக்குச் சம்பளமில்லாத சேவையைப் (Honorary Service) புரியவேண்டும். மற்றும், அவர்களுக்கு எந்த வடிவத்திலும், எந்த ஊதியமும் வழங்கப்படக்கூடாது. நாணயமானது (Honesty) கூட்டுறவுக் கடன் வசதி இயக்கத்தின் பிரதானமான பலகையாகக் (Plank) கருதப்பட்டு வந்தது. ஒரு சங்கத்தின் பிரதான எல்லையானது, சிறியதாகவும், வரையறுக்கப்பட்டதாகவும் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் கூட்டுறவுச் சங்கத்தின் வழிகாட்டும் கொள்கைகளாகக் கருதப்பட்டிருந்த ஒருவரொருவரைப் பற்றிய பரஸ்பர அறிவு, சமுதாய ஒட்டுகை (Social cohesion), உறுப்பினர்களிடையே நெருங்கிய தொடர்பு ஆகியவை பின்பற்றப்பட்டுப் பராமரிக்கப்பட முடியும். ஒரு பெரிய எல்லையில் இந்தக் காரணிகள் படிப்படியாக மறந்துவிடப்பட்டுச் சங்கத்தின் அடித்தளம் அழிவுறும் என்று அக் குழுவினர் கருத்துத் தெரிவித்தனர். கூட்டுறவுக் கொள்கைகளைப் பற்றிய ஓர் அறிவின்மீதும், உறுப்பினர்களைச் சரியாகத் தேர்ந்தெடுத்தல்மீதும் எல்லாம் சார்ந்துள்ளது. அங்கத்துவம் எல்லோருக்கும் திறந்ததாக வைக்கப்படவேண்டியது அவசியமே. ஆனால், சங்கத்திற்கு உறுப்பினர்களைச் சேர்க்கும்போது, விரும்பத்தகாத நபர்களை விலக்குவதில் கவனம் செலுத்தப்படவேண்டும். ஏனென்றால், காரியத்தில் நேர்மையும், நன்னடத்தையும் கொண்டில்லாத மக்கள், சங்கத்திற்கு நட்டம் விளைவிக்கக் கூடியவர்களாகித் தீர்வார்கள். ஊகவாணிக உணர்வு அடிப்படையைக் கொண்ட, தடைபாடில்லாத வர்த்தகத்தைச் செய்தல் ஒரு சங்கத்தில் அனுமதிக்கப்படக்கூடாது. உள்ளே

யிருந்து உறுப்பினர்களிடையே அதிகமான பங்கு மூலதனத்தை வசூலிக்கும் ஒரு நோக்கத்துடன் சிக்கனப் பழக்கத்தின்மீதும், சேமிப்புப் பழக்கத்தின்மீதும் அதிக வலியுறுத்தல் விதிக்கப்பட வேண்டும். கூட்டுறவுக் கடன் வசதி, அதன் முக்கியச் சாரத்தை இழக்கும்வண்ணம் மிக மலிவாகவும், எளிதாகவும் இருக்கக் கூடாது. கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கும் போக்கு மிகத் துரிதமானதாகவும், அல்லது வெளியேயிருந்து வேகப்படுத்தப் படுவதாகவும் இருக்கக்கூடாது. ஒரு கூட்டுறவு வாழ்க்கை முறை காணத் தூண்டுதல், மேலேயிருந்து விதிக்கப்படுகிறதற்குப் பதி லாகக் கீழேயிருந்து வரவேண்டும். தேவையானவர்களுக்குக் கடன் களைக் காலத்தில் விநியோகம் செய்தல் எப்படி முக்கியமோ அதற்குச் சமமான முக்கியத்துவம் வாய்ந்தது, சங்கங்களுக்குச் சேரவேண் டிய பாக்கிகளைக் கிரமமாகவும், குறித்த காலத்திலும் வசூல் செய்தல். விற்பனைக் கொள்முதல் வசதிச் சங்கங்கள், கால்நடை ஈட்டுறுதிச் சங்கங்கள் முதலியன போன்ற கடன் பற்றற்ற சங்கங்கள் அமைக்கப்படுதல் ஊக்குவிக்கப்படவேண்டும். எல்லாச் சங்கங்களும், தங்கள்வசம் காப்புநிதி ஏற்படுத்துவதைப் பற்றி, மிக்க கவனம் செலுத்தவேண்டும். பொதுமக்களிடையே இயக்கத்தில் அவசியமான நம்பிக்கையை உண்டுபண்ணும்பொருட் டும், கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சாதகமான ஒரு சூழ்நிலையை உண்டுபண்ணும்பொருட்டும், சிரமமானதும் ஒரு விஷயத் தையும் விட்டுவிடாததுமான தணிக்கையின்மூலமும், மற்றும் அறிவுரைகளைத் திரும்பத் திரும்ப அளிப்பதன்மூலமும், தவறான தும், நேர்மையற்றதுமான நிருவாகம் தவிர்க்கப்பட்டுத் தள்ளி விடப்படவேண்டும்.

இவ் வாலோசனைகளையும், பரிந்துரைகளையும் அமல்படுத்து வதன் விளைவாகவும், 1912ஆம் வருடத்திய சட்டப் பரிபால னத்தின் விளைவாகவும், 1912ஆம் ஆண்டிற்கும், 1920—21ஆம் ஆண்டிற்குமிடையே இயக்கம் ஒரு பெரிய விரிவாக்கத்தையடைந்து எல்லாவிதமான கூட்டுறவுச் சங்கங்களும் வளரத் தொடங்கின.

1920—21ஆம் ஆண்டுகளுக்கிறுதியில் இந்தியாவில் 19,74,290 மொத்த உறுப்பினர்களைக் கொண்ட 52,182 சங்கங்க ளிருந்தன. 1911—12ஆம் ஆண்டில், 4,03,318 உறுப்பினர் களைக் கொண்ட 8,177 சங்கங்கள் மட்டுமே யிருந்தன. இந்தக் காலவரையில் மொத்த நடைமுறை மூலதனம் 411 சதவீதம் அதிகரித்தது.

ஆனால், அக் குழுவினரின் எல்லாப் பரிந்துரைகளையும், யோசனைகளையும் மத்திய அரசு அமல்படுத்துவதற்கு முன்னர்,

1919ஆம் வருடத்திய மாண்டெகு—செம்ஸ்ஃபோர்டு அரசியல் சீர்திருத்தங்களின் (Montagu-Chelmsford Reforms) கீழ்க் கூட்டுறவு ஒரு 'மாற்றப்பட்ட துறையாக' (Transferred subject) ஆயிற்று. இவ்வாறாக, ஒரு புதிய வளர்ச்சிக் கட்டத்திற்குள் கூட்டுறவு இயக்கம் நுழைந்தது.

## மாநில அரசுகளின்கீழ்க் கூட்டுறவின் முன்னேற்றம்
## (Progress under Provincial Governments)

1919ஆம் வருடத்திய அரசியல் சீர்திருத்தச் சட்டத்தின் கீழ்க் கூட்டுறவு ஒரு மாகாணத் துறையாக ஆகி, ஒரு மாகாண மக்கள் அமைச்சர் பொறுப்பின்கீழ் ஒப்படைக்கப்பட்டது. சீர்திருத்தப்பட்ட அரசியலமைப்பின் முந்திய ஆண்டுகளில் பல்வேறு மாகாணங்கள் தங்கள் தனித் தேவைகளுக் கேற்ப, மிகத் தகுந்த வகையில் முன்னேற்றமடைந்தன. மற்றும், பல்வேறு மாகாண அரசுகள், கூட்டுறவு இயக்கத்தின் நிலைமையை மறுபரிசீலனை செய்தல் அவசியமென்று கண்டன. பம்பாய் மாகாணம் 1928ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்களுக்கெனத் தனியொரு சட்டத்தை நிறைவேற்றி, இதர மாகாணங்களுக்கு ஒரு வழி காட்டியது. இதர மாகாணங்கள் இயக்கத்தின் முன்னேற்றத்தை விசாரணை செய்வதற்குக் குழுக்களை அமைத்தன. 1928ஆம் வருடத்திய விவசாயத்தைப் பற்றிய இராயல் ஆணைக் குழுவின் (Royal Commission on Agricultural) அறிக்கையும், 1931ஆம் வருடத்திய மத்திய, மாகாண வங்கித் தொழில் விசாரணைக் குழுக்களின் அறிக்கையும், கூட்டுறவுச் சிந்தனைக்கும், நடைமுறைக்கும் ஒரு குறிப்பிடத்தக்க பயன்படும் செயலைச் செய்தன. 1927ஆம் ஆண்டில் சென்னை அரசு, 'டவுன்செண்ட் குழு' (Townsend Committee) என்ற ஒரு குழுவை, மாகாணத்தில் கூட்டுறவு இயக்கம் அடைந்திருந்த முன்னேற்றத்தைப் பரிசீலனை செய்வதற்கும்,அதன் எதிர்காலவளர்ச்சி வழிகளுக்கு யோசனை கூறுவதற்கும் அமைத்தது. அக் குழுவினர், இதர விஷயங்களுக்கிடையே 1912ஆம் வருடத்திய கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் மெய்ம்மையான செயற்பாட்டில் காணப்பட்டிருந்த குறைபாடுகளைப் பரிகாரம் செய்வதற்காகத் தக்க வகையான சட்டமியற்றுதல் மேற்கொள்ளப்படவேண்டுமென்று பரிந்துரை வழங்கினர். அக் குழுவினரின் யோசனைகளை அமலபடுத்தியும், இயக்கத்தின் அனுபவ விளைவுகளை உள்ளடக்கியும் ஒரு மாதிரிச் சட்ட மசோதா தயாரிக்கப்பட்டு, 1932ஆம் ஆண்டில் அது ஒரு

சட்டமாகச் சென்னைச் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டத்தின் சரத்துகளும், அதற்குப் பின்னர் நிறைவேற்றப் பட்ட 1961ஆம் வருடத்திய சட்டத்தின் சரத்துகளும் விவர மாகக் 'கூட்டுறவுச் சட்ட வரலாறும், நடைமுறையும்' என்ற தலைப்புள்ள எங்கள் நூலின் பாகம் 1, அத்தியாயம் vi-ல் விளக்கப்பட்டுள்ளன. 1912ஆம் வருடத்திய சட்டத்தின் விளைவாக, 1929ஆம் ஆண்டுவரை இயக்கத்தின் வளர்ச்சி துரித மாக இருந்தது. 1929ஆம் ஆண்டில் பொருளாதார மந்தம் ஏற்பட்டு, மாக்லகன் குழுவினரால் கவனிக்கப்பட்டும், விலை யேற்றமும், செழிப்பும் நிலவியிருந்த காலத்தின்போது ஓரளவு மறைந்துமிருந்த பல்வேறு குறைபாடுகள் வெளிப்படையாகக் காணப்படத் தொடங்கின.

1930—31ஆம் ஆண்டில் நேர்ந்த பொருளாதார மந்தப்பிடி யில் இயக்கம் சிக்கிக்கொண்டு, அதன் முன்னேற்றத்தில் ஒரு தடை யேற்பட்டது; உறுப்பினர்களின் திருப்பிச் செலுத்தும் சக்தி குறைந்தது; சங்கங்களுக்குச் செலுத்தப்படவேண்டிய தவணை தவறிய பாக்கிகளும், ஒரு பெரிய விகிதத்தையடைந்தன. இவ் விளைவுகளை எதிர்த்துச் செயற்படுவதற்குப் பல்வேறு பரிகார நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால், பொருளாதார மந்தம், புதிய கஷ்டங்களையும், பிரச்சினைகளையும் உண்டாக்கி யது; இயக்கத்தைச் சரியான முறையில் வளர்ப்பதற்காக இக் கஷ்டங்களுக்கும், பிரச்சினைகளுக்கும் தீர்வுகாண வேண்டியிருந் தது. இந்திய ரிசர்வு வங்கியின் விவசாயக் கடன் இலாகாவாலும், மற்றவர்களாலும், கூட்டுறவு அமைப்பில் ஒரு தீவிர மாற்றத்திற் கான பல்வேறு பிரேரேபணைகள் செய்யப்பட்டன. பல்வேறு மாகாணங்களிலும், மாநிலங்களிலும் இயக்கத்தைச் சீரமைப்ப தற்கான வழிவகைகளுக்கு யோசனைகூற, விசாரணைக் குழுக்கள் பல அமைக்கப்பட்டன. விரிவாக்கத்தைக் காட்டிலும், அரசினர் கண்காணிப்பிற்கு வழிசெலுத்தும் இயக்க ஒருங்கிணைப்பும் (Consolidation), சீர்திருத்தமும் (Rectification), மறுவாழ்வு வசதியும் (Re-habilitation) இரண்டாம் உலகப் போர் தொடங்கும் வரையிருந்த காலத்தின் பிரதான அம்சங்களாகவிருந்தன. சென்னையில், 1939ஆம் ஆண்டில், சர் டி. விசயராகவாச் சாரியார் அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவை, மந்தத்தின் விளைவாக இயக்கத்தை நோக்கியிருந்த பல்வேறு பிரச்சினைகளைப் பரிசீலனை செய்வதற்கும், யோசனைகளைக் கூறு வதற்கும் அரசினர் அமைத்தனர். இக் குழு, 1940ஆம் ஆண்டில் தன் அறிக்கையை வெளியிட்டது.

இதற்கிடையில் இரண்டாம் உலகப் பெரும்போர் தொடங்கிற்று. அப் போருக்குப் பிறகு நேரிட்ட விவசாய விலைகளின் ஏற்றம், விவசாயிகளுக்குச் சங்கடமான நிலவரத்தைப் போக்கி, வட்டிக்குக்கடன்கொடுத்தவர்களுக்கும்,கூட்டுறவுச் சங்கங்களுக்கும் கூட்டுறவுச்சங்கங்களின் உறுப்பினர்கள் தங்கள் கடன்களைத் திருப்பிச் செலுத்தமுடியாத ஒரு சங்கடமான நிலைமையையும் போக்கியது. மற்றும், நன்கு நிர்வாகம் செய்யப்பட்ட கூட்டுறவு வங்கிகளில் வைப்புகள் அதிகரித்தன. ஆனால், பொதுவாக இணைக்கப்பட்ட சங்கங்களிலிருந்து கடன்களுக்கான கேட்புகள் மிகக் குறைந்தன. ஆகையால், அநேக வங்கிகள் உபரியான நிதிகள் என்ற பிரச்சினையைத் தீர்க்கவேண்டி யிருந்தது. அப் போரின் விளைவாகவும், பொருளாதாரக் கட்டுப்பாடுகள், உணவுப் பங்கீடு ஆகியவை புகுத்தப்பட்டதன் விளைவாகவும், நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலை, கூட்டுறவு விற்பனை வசதி ஆகியவற்றின் வளர்ச்சிக்கு ஓர் எழுச்சி உண்டாகியது. போர்க்காலம், கூட்டுறவு இயக்கச் செயற்பாட்டின் பரப்பை விரிவடையச் செய்தது. உற்பத்தி, விநியோகம் ஆகிய பணிகள்மீதும், இயக்கத்தின் பலநோக்குச் சாத்தியச் சக்தியின்மீதும் அதிகமான வலியுறுத்தல் இடப்பட்டது. உணவுக் கொள்முதல் விநியோகத் துறையிலுள்ள பல்வேறு பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவும், நகர்ப் புறங்களிலும், கிராமப் புறங்களிலும் வீட்டுவசதிப் பற்றாக்குறைக்கு நிவாரணம் காணவும், நெசவாளிகளுக்கு நூல் வழங்கிக் கைத்தறி நெசவுத் துணிகளை விற்பனை செய்யவும், முன்னாள் இராணுவ வீரர்களுக்குப் புனர்வாழ்வு அளிக்கவும் கூட்டுறவு நிறுவனங்கள் பயன்படுத்தப்பட ஆரம்பிக்கப்பட்டன.

1919ஆம் ஆண்டிலிருந்து, கூட்டுறவு ஒரு மாகாண விஷயமாகி யிருந்தாலும், இந்திய அரசு இயக்கத்திற்கு வழிகாட்டல் செய்வதைத் தொடர்ந்து வந்தது; அதனால் அங்கீகரிக்கப்பட்ட வளர்ச்சித் திட்டங்களை அமல்படுத்துவதற்காக, மாகாண அரசுகளுக்கு நிதியுதவியும் அளித்து வந்தது. பல்வேறு திசைகளில் வளர்ச்சியடைந்திருந்த கூட்டுறவு இயக்கம், யுத்தத்திற்குப் பிந்திய காலத்தில், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கான பொதுத் திட்டங்களுக்குள் பொருத்தப்படவேண்டுமென்ற விசாரத்தையும் இந்திய அரசு பெற்றிருந்தது. 1944ஆம் ஆண்டில், திட்டமிடுதல் (Planning) என்ற கொள்கையானது பல்வேறு நடவடிக்கைத் துறைகளிலும் முக்கியத்துவம் பெற்றது. இந்தியாவில் கூட்டுறவுப் பதிவாளர்களின் 14ஆவது மாநாடு, கூட்டுறவுத் துறையிலுங்கூட, இயக்கத்தின் சுயேச்சைத் தன்மையில் அரசு தலையீடு இல்லாத வகையில், ஒருசில அளவிற்குத் திட்டமிடுதல்

விரும்பத்தக்கது என்றும் இந்திய அரசு கருதினது. எனவே, 1945ஆம் ஆண்டில் இந்திய அரசு காலஞ்சென்ற பேராசிரியர் டி. ஆர். கேட்கில் (Professor D. R. Gadgil) அவர்களைத் தலைவ ராகக் கொண்ட 'விவசாய நிதி பற்றிய உதவிக் குழு' (Agricultural Finance Sub-Committee), பம்பாய் மாநிலக் கூட்டுறவு வங்கியின் தலைவரான திரு. ஆர். ஜி. சராய்யா (Mr. R. G. Saraiya) அவர் களைத் தலைவராகக் கொண்ட 'கூட்டுறவுத் திட்டக் குழு' ஆகிய இரண்டு குழுக்களை அமைத்தது.

விவசாய நிதி பற்றிய உதவிக் குழு, கிராமக் கடன்சுமை குறைக்கப்படுவதற்காகவும், குறுகியகால, நீண்டகால நிதியுதவி, வேளாண்மைக்காகவும், கால்நடை வளர்த்தலுக்காகவும் உறுதிப் பயனுள்ள கட்டுப்பாட்டின்கீழ் வழங்கப்படுவதற்குமான வழிகளைப் பற்றி ஓர் அறிக்கையைச் சமர்ப்பிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டது. அக் குழுவினர் 1945ஆம் ஆண்டில் தாங்கள் சமர்ப்பித்த தங்கள் அறிக்கையில் குறிப்பாக, விவசாயக் கடன் பிரச்சினைக்கும் பொதுவாக, கிராமப் பொருளாதார அமைப்பின் பல பிரச்சினைகளுக்கும், ஒரு சிறந்த மிகவும் நீடித்த தீர்வு கூட்டுறவின் விரிவாக்கமாகும் என்று கூறினர். எனினும், கூட்டுறவு இயக்கம் விவசாயிகளின் கடன் தேவைகள் அனைத்தை யும் வழங்குவதற்குச் சாத்தியப்படாது என்று அவர்கள் கருதினர். அக் குழுவினரின் மையப் பரிந்துரையானது, கிராமக் கடன் வசதித் திசையில், கடந்த காலத்தில் கொடுக்கப்பட்டிருந்ததைவிட, மிக அதிக அளவில் அரசு உதவி கொடுக்கப்படவேண்டுமென்றது. இக் காரியத்திற்காக ஒரு விவசாயக் கடன் வசதிக் கழகம் (Agricultural Credit Corporation) நிறுவப்படவேண்டுமென்றும், அக் கழகத்திற்கு நடைமுறை மூலதனத்தில் ஒரு பகுதியையும், நிருவாகச் செலவுகளையும் அரசு வழங்கவேண்டுமென்றும் யோசனை கூறி ஒவ்வொரு மாகாணமும், மாநிலமும் அத்தகைய கழகத்தை அமைப்பதற்கான தன் தனிப்பட்ட திட்டத்தைத் தயாரிக்க வேண்டுமென்றும் பரிந்துரை வழங்கினர். மேலும், அவர்கள், 'கூட்டுறவு நிதிவழங்கும் அமைப்புகள், மிகப் பலமாக விருந்து, தங்களால் சுட்டிக்காட்டப்பட்ட எல்லா வேலைகளை யும் மேற்கொள்ளக்கூடிய பரந்த வாய்ப்பும் அவைகள் பெற்றிருக் கின்றனவென்று அரசு கருதுகின்ற ஒரு மாகாணத்தில் கடன் தகுதி யுள்ள கடன் பெறுபவர்கள் அனைவர்களுக்கும் கிடைக்கும்வண் ணம் கூட்டுறவு நிறுவனங்கள்மூலம் நிதி வழங்குவதற்கான வழி கள் உள்ளன என்ற நிபந்தனையில் ஒரு தனிப்பட்ட கடன் வசதிக் கழகம் அமைக்கப்படாவிட்டால் தங்களுக்கு யாதொரு ஆட்சேபனை யும் இராது' என்றும் பரிந்துரை வழங்கினர்.

கூட்டுறவு வளர்ச்சிக்கு ஒரு திட்டத்தைத் தயார் செய்யும் பணி ஒப்படைக்கப்பட்ட கூட்டுறவுத் திட்டக்குழு (1945) (Co-operative Planning Committee) தன் அறிக்கையை 1946ஆம் ஆண்டில் வெளியிட்டது. கடன் வழங்குதலானது குடியானவன் வாழ்க்கையில் ஒரு பகுதியை மட்டுந்தான் தழுவி யிருப்பதால், அவன் வாழ்க்கை அனைத்தையும் தழுவும் வகையில் பிரதம கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகள் விரிவுபடுத்தப் படவேண்டுமென்றும், அவைகளின் உறுப்பினர்களின் பொது வான பொருளாதார வளர்ச்சிக்கான நிலையங்களாக அவை சேவை புரியும் வகையில் சங்கங்கள் சீர்திருத்தப்படவேண்டுமென்றும், சீரமைக்கப்படவேண்டுமென்றும் அக் குழுவினர் முக்கியமான பரிந் துரையை வழங்கினர். தங்கள் உறுப்பினர்களின் கடன் தேவைகளை மட்டும் வழங்குவதோடு, விதைகள், உரங்கள், விவசாயக் கருவிகள், குடும்பப் பொருள்கள் ஆகியவற்றை வழங்கியும், அவர் களின் விவசாய விளைபொருள்களையும், உற்பத்தியான பாலையும், குடிசைத் தொழிற் பொருள்களையும் விற்பனை செய்து உறுப்பி னர்களின் இதர விவசாயத் தேவைகளனைத்தையும் வழங்கும் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களாகப் (Multi Purpose Co-operative Societies) பிரதம கூட்டுறவுச் சங்கங்கள் சீரமைக்கப்பட வேண்டுமென்றும் அக் குழுவினர் பரிந்துரை வழங்கினர். மேலும், இரண்டு ஐந்தாண்டுகள் காலவரைகளில் ஒரு பத்தாண்டுக் காலத் திற்குள் சீரமைக்கப்பட்ட பிரதம சங்கங்களின் நடவடிக்கை களுக்குள் 50 சதவிகிதக் கிராமங்களையும் 30 சதவீதக் கிராம மக்களையும் கொண்டு வருவதற்கு ஒரு முயற்சி எடுக்கப்பட வேண்டுமென்றும் அவர்கள் சிபாரிசு செய்தனர். இந்தியாவில் பல மாகாணங்கள் (இப்பொழுது மாநிலங்கள்) இந்த இலக்கை ஏற்றுக்கொண்டன. சென்னை, பம்பாய் போன்ற அநேக மாநிலங்களில், 1954ஆம் ஆண்டிற்குள்கூட அந்த இலக்கு ஏறக் குறைய நிறைவேற்றப்பட்டது.

1947ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற கூட்டுறவுச் சங்கங்கள் பதிவாளர்களின் XVஆவது மாநாடு, கேட்கில் குழுவின் (Gadgil Committee) முக்கியப் பரிந்துரைகளையும், கூட்டுறவுத் திட்டக் குழுவின் முக்கியப் பரிந்துரைகளையும் ஆலோ சித்தது. அந்த மாநாடு விவசாயக் கடன் சங்கங்கள் அமைக்கப் படவேண்டும் என்ற கேட்கில் குழுவினரின் யோசனையை ஆதரிக்க வில்லை. ஆனல், அவ் விவசாயக் கடன் கழகங்களுக்காக உத்தேசிக் கப்பட்ட பணிகள் யாவும் மாகாணக் கூட்டுறவு வங்கிகளால் மேற்கொள்ளப்படவேண்டுமென்றும், அவசியப்படின் அக் காரி யத்திற்காக மாகாணக் கூட்டுறவு வங்கிகள் சீரமைக்கப்படலா

மென்றும், விவசாயக் கடன் கழகங்களுக்காகப் பரிந்துரை செய்யப் பட்டிருந்தது போன்ற அரசுதவி அதே அளவிலும் அதே வகையிலும் அவைகளுக்கும் அளிக்கப்படவேண்டுமென்றும் மாநாடு பரிந்துரை செய்தது. விவசாயக் கடன் வசதிச் சங்கங்களின் சீரமைப்பைப் பற்றிய பரிந்துரைகளுட்படக் கூட்டுறவுத் திட்டக் குழு செய்திருந்த சிபாரிசுகள் பலவற்றையும் மாநாடு ஆதரித்தது. எனினும், கூட்டுறவுத் திட்டக் குழுவால் யோசனை கூறப்பட்ட வளர்ச்சி இலக்குகள் குறைந்தபட்சமானவை என்று கருதி, கூட்டுறவு நிறுவனங்களின் இறுதியான குறிக்கோளானது, சீரமைக்கப்பட்டுச் சரியாக இயங்குகின்ற பிரதம சங்கங்களின் நடவடிக்கைகளுக்குள் எல்லாக் கிராமங்களையும், நூறு சதவீதக் கிராமக் குடும்பங்களையும் கொண்டு வருவதாகும் என்று மாநாடு பரிந்துரை செய்தது.

இந்தியாவில், கூட்டுறவு இயக்கம் தொடக்கக் காலத்திலிருந்தும், மற்றும் இன்றுங்கூடச் சீர்த்திருத்தம் (rectification), ஒருங்கிணைப்பு (consolidation), விரிவாக்கம் (expansion), பரிசோதனை (experiment) என்ற கட்டங்கள் (phases) வாயிலாகச் சென்றுகொண்டுவந்துள்ளது. 1904ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் இயக்கத்திற்கு அரசு ஏற்புஅளிக்கப் பட்டதும், 1912ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் அதன் அமைப்பின் விரிவும், அதன் நோக்க எல்லையின் விஸ்தரிப்பும் 1915ஆம் ஆண்டில் எதிர்கால வளர்ச்சிக்கான சில உருப்படியான திட்டங்களை வகுத்த 'கூட்டுறவு பற்றிய மாக்லகன் குழு'வினரின் சிறந்த புனராய்வும், 1919ஆம் வருடத்திய இந்திய அரசாங்கத்தின் சட்டத்தின்கீழ், கூட்டுறவு, மாகாண அரசுகளின் மாற்றப்பட்ட இலாகா'க்களின் (Transferred half) கண்காணிப்பிற்கு மாற்றம் செய்யப்பட்டதும், 1930ஆம் ஆண்டு வரை இயக்கத்தின் செயற்பாட்டில் நிகழ்ந்த துரிதமான விரிவாக்கமும், உலகப் பொருளாதார மந்தம் ஆரம்பமானதும், அதன் விளைவாக நேர்ந்த விவசாய விலைகளின் செங்குத்தான வீழ்ச்சியும், இரண்டாம் உலகப் பெரும்போர்ச் சம்பவமும், அதன் விளைவுகளும், 1947ஆம் ஆண்டில் இந்தியா பூரண விடுதலையடைவதற்கு முந்திய கால வரையில் நிகழ்ந்த கூட்டுறவு இயக்க வளர்ச்சி, அதன் முன்னேற்றம் ஆகியவை பற்றிய பிரதானமான நிகழ்ச்சிக் கட்டங்களாக இருந்தன.

விடுதலைக்கு முந்திய காலத்தில் கூட்டுறவு இயக்க முன்னேற்றத்தின் விவரங்களைக் காட்டும் ஓர் அட்டவணை எதிர்ப்புறம் தரப்பட்டுள்ளது.

| ஆண்டு | சங்கங்களின் எண்ணிக்கை (ஆயிரக் கணக்கில்) | பிரதம சங்கங்களின் உறுப்பினர்கள் எண்ணிக்கை (இலட்சக் கணக்கில்) | நடைமுறை மூலதனம் (ரூபாய். கோடிக் கணக்கில்) |
|---|---|---|---|
| 1906—10 | 1.93 | 1.62 | 0.68 |
| 1911—15 | 11.79 | 5.48 | 5.48 |
| 1916—20 | 28.48 | 11.29 | 15.18 |
| 1921—25 | 57.71 | 21.55 | 36.36 |
| 1926—30 | 93.94 | 36.89 | 74.89 |
| 1931—35 | 105.71 | 43.22 | 94.61 |
| 1936—40 | 116.96 | 50.77 | 104.68 |
| 1941—45 | 148.89 | 72.18 | 124.35 |
| 1946—50 | 159.61 | 107.28 | 188.73 |
| 1950—51 | 181.18 | 137.15 | 275.85 |
| 1951—52 | 185.65 | 137.9 | 305.89 |

1946—50ஆம் ஆண்டுகளுக்கு மேலே குறிக்கப்பட்டுள்ள எண்கள் அந்த ஐந்தாண்டுக் காலங்களுக்கான சராசரி எண்களாகும். கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியை ஐந்து கட்டங்களாகப் பிரிக்கலாம் என்று இந்த அட்டவணையிலிருந்து புலனாகிறது. (1) கூட்டுறவு இயக்கத்தின் தொடக்க ஆண்டிலிருந்து 1915ஆம் ஆண்டுவரையுள்ள காலம் முதற் கட்டமாகக் கருதப்படலாம். இந்தக் காலவரையில், இயக்கம் பாராட்டுதலுக்குரிய எந்த முன்னேற்றத்தையும் காட்டவில்லை. ஏனெனில், அமைக்கப்பட்ட சங்கங்களின் எண்ணிக்கை சுமார் 12,000 மட்டுமே இருந்தது. அவைகளில் மொத்த உறுப்பினர்கள் 5.5 இலட்சம்தாம் இருந்தனர். எல்லாச் சங்கங்களின் மொத்த நடைமுறை மூலதனத்தின் தொகை 5.5 கோடி ரூபாய்கள் மட்டுமே இருந்தது. (2) இந்தக் காலவரைக்குப் பிறகு முதல் உலகப் போர் நிகழ்வுற்றது. ஏறக்குறைய, 1925ஆம் ஆண்டு வரைக்குமுள்ள பத்து ஆண்டுகள் காலவரையில், இந்தியாவில் அநேக பொருளாதார, அரசியல் மாறுதல்களிருந்தன. கூட்டுறவு இயக்கம், மாகாண அரசுகளுக்கு ஒப்படைக்கப்பட்டு அது ஒரு மக்கள் அமைச்சரால் பாலிக்கப்பட்டது. இந்தக் காலவரையில் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 5.5 இலட்சத்திலிருந்து 21.5 இலட்சத்திற்கும், சங்கங்களின் நடைமுறை மூலதனம் 5.5 கோடியிலிருந்து 36.5

கோடிக்கும் அதிகரித்தன. (3) 1940ஆம் ஆண்டுவரைக்குமுள்ள காலவரையை, இயக்கத்தின் மூன்ருவது காலக்கட்டமாக எடுத்துக் கொள்ளப்படலாம். இந்தக் காலவரையில், கூட்டுறவு இயக்க முன்னேற்றத்தில் அநேக ஏற்றத் தாழ்வுகள் இருந்தன. 1930ஆம் வருடத்திய அனைத்துலகப் பொருளாதார மந்தம் (Great depression) கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றத்தைப் பெரு மளவு பாதிக்கச் செய்தது. இந்தக் காலவரையில் கூட்டுறவின் இலட்சியமானது விரிவாக்கமாக இல்லை; ஆனுல், இயக்கம் ஏற் கெனவே அடைந்திருந்த முன்னேற்றத்தைத் தொகுத்துப் பலப் படுத்துதலாக இருந்தது. 1937ஆம் ஆண்டில் மாகாண சுயாட்சி யின் தொடக்கம், கூட்டுறவு இயக்கக் கதியுடன் ஒரு முக்கியத் தொடர்பைக் கொண்டிருந்தது. இந்தக் காலவரையில், சங்கங் களின் எண்ணிக்கை 58,000-லிருந்து 1,17,000-த்திற்கும், உறுப்பினர்களின் எண்ணிக்கை 2.5 இலட்சத்திலிருந்து 1 கோடிக் கும் அதிகரித்தது. நடைமுறை மூலதனமுங்கூட ரூ. 36.5 கோடியி லிருந்து கிட்டத்தட்ட 1,059 கோடிக்குப் பெருமளவு அதிகரிப்பைக் காட்டின. (4) இயக்கத்தின் நான்காவது முன்னேற்றக்கட்டம் 1946ஆம் ஆண்டுவரையுள்ள காலமாக எடுத்துக்கொள்ளப்பட லாம். இக் காலம் இரண்டாவது உலகப் பெரும்போர் ஏற் படுத்திய சக்தியினுல் அதிகமாக இயக்கப்பட்டது. போர் காரண மாக, இயக்கம் ஒரு புதிய சமநிலையையும், மேலும், முன்னேறு வதற்கான ஓர் அடிப்படையையும் கண்டுபிடிப்பதற்கு முயற்சி செய்தது. சில மாகாணங்களில் கொள்ளை இலாபம் அடித்தலைத் தடுக்கும் ஒரு பாதுகாப்பாக நுகர்வோர் பண்டசாலைகளை அமைப்பதற்கும், மற்றும், விவசாய உற்பத்தியாளர்கள் விலையுயர் வின் பலனைப் பெறுவதை நிச்சயமாக்கும்பொருட்டுக் கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களை அமைப்பதற்கும், ஓர் எழுச்சியையும் போர்க்காலம் அளித்தது. அயல்நாட்டுப் போட்டிக் குறைவின் காரணமாகச் சிறு தொழில்களின் நிலைமையில் ஒரு மேம்பாடுங் கூடப் போரினுல் ஏற்பட்டது. இக் காரணிகள் அனைத்தும், கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த எண்ணிக்கையை 1,48,000-க்கு அதிகப்படுத்துவதற்கும், சங்கங்களின் உறுப்பினர்களின் எண்ணிக் கையை 72,00,000-க்கும், சங்கங்களின் மொத்த நடைமுறை மூலதனத்தை ரூ. 124 கோடிக்கும் அதிகரிக்கச் செய்வதற்கும் ஒரு பெரும் பலனைக் கொடுத்தன. (5) இயக்க முன்னேற்றத்தின் கடைசிக் கட்டம், 1947ஆம் ஆண்டில் விடுதலையடைவதற்குப் பிந்தியதாகவும், 1950ஆம் ஆண்டில், இந்திய அரசு, திட்டக் குழுவை அமைத்துக் கூட்டுறவு வளர்ச்சியானது பொதுவான திட்ட வளர்ச்சியின் ஒரு பகுதியாக விரிவடைந்த காலமாகும். இந்தக் காலவரையில், சங்கங்களின் எண்ணிக்கை 25 சதவீதம் அதிகரித்

துச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கையும், நடைமுறை மூல தனமும் இரட்டிப்புக்கு மேல் அதிகரித்தும் இருந்தன. சங்கங்களின் எண்ணிக்கை 1,59,610-க்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கை 107 இலட்சத்திற்கும், நடைமுறை மூலதனம் 188 கோடி ரூபாய்களுக் கும் உயர்ந்தன. பொதுவான விரிவாக்கம் மட்டுமன்றி, இயக்கம் முன்னைவிட அதிகமாக வெவ்வேறான பணிகளை ஏற்றது. கூட்டு றவு பல்வேறு வாழ்க்கைத் துறைகளில் பரவி எல்லா அரசியல் கட்சிகளின் கவனத்தையும், திட்டக் குழுவின் கவனத்தையும் ஈர்த்தது. திட்டக் குழுவினாலும், இந்திய அரசாலும் அளிக்கப் பட்ட ஊக்குவித்தல் விளைவாகக் கூட்டுறவு நம் பொருளாதார அமைப்பில், குறிப்பாக விவசாயம், கால்நடைவளம், குடிசைத் தொழில், சிற்றளவுத் தொழில்கள், வீட்டு வசதி, நுகர்பொருள் விநியோகம் முதலியன போன்ற துறைகளில் ஒரு முக்கியத் துறை என்ற நிலைமையை வகித்தது.

## (ஆ) விடுதலைக்குப் பிந்திய காலத்து வளர்ச்சி

(Post Independence Development)

விடுதலைக்குப் பிந்திய கால ஆண்டுகளில், நம் நாட்டில் கூட்டுறவு வளர்ச்சித் தன்மையின்மீதும், கதியின்மீதும் ஒரு நீண்ட காலப் பலனைக் கொடுத்த இரண்டு பெரிய நிகழ்ச்சி களாவன: (1) அனைத்திந்தியக் கிராமக்கடன் விசாரணை அறிக்கை யின் வெளியீடும் (1951—54), (2) இந்திய அரசால் 1950ஆம் ஆண்டில் திட்டக்குழு அமைத்தலும், தொடர்ந்துவந்த ஐந் தாண்டுத் திட்டங்களில், அத் திட்டக் குழுவால் கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஒப்படைக்கப்பட்ட ஒரு முக்கியப் பணியுமாகும் (Role). இவற்றுள் ஒவ்வொன்றைப் பற்றியும் சுருக்கமாக விளக்கம் கூறுவது அவசியமாகும்.

## அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை (1954)

(All India Rural Credit Survey Committee Report)

கிராமக் கடன் விசாரணைக் குழுவானது, 1951ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில், நாட்டில் கிராமக் கடனுக்குத் தொடர்பான பிரச்சினைகளைப் பற்றி ஒரு விசாரணை நடத்தி, அந்த விசாரணை யின் பலன்களை விளக்கி, பரிந்துரைகளை வழங்குவதற்காக, இந்திய ரிசர்வ் வங்கியால் அமைக்கப்பட்டது. அதன் அறிக்கை 1954ஆம்

ஆண்டு டிசம்பர் மாதத்தில் வெளியிடப்பட்டது. அக் குழுவினரின் முக்கியக் கூற்றுகளும், பரிந்துரைகளும் பின்வரும் பத்திகளில் பேசப்பட்டிருக்கின்றன.

**கிராமக் கடன் வசதித் துறையில் கூட்டுறவு அமைப்புகளின் சாதனைகளை மதிப்பீடு செய்தல் (Assessment of the achivements of Co-operative agencies in the field of Rural credit):** கிராமக் கடன் விசாரணைக் குழுவினரால் சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களின்படி, கிராம மக்கள் வாங்கும் மொத்த வருடாந்திரக் கடன்களுக்குக் கூட்டுறவு கடன்களின் விகிதம், 3.1 சதம் மாத்திரந்தான் இருந்தது. மற்றும், கூட்டுறவு நிதி விநியோகம் பெரிய குடியானவர்களுக்கே பெருமளவு சாதகமாக இருந்தது. அதன் காரணமாக, அக் குழுவினர் கிராம நிதி வழங்குதலில் கூட்டுறவுக் கடனின் பங்கு மிகவும் முக்கியமின்மையானதாகவும், சிற்றளவினதாகவும் இருந்தது என்ற முடிவுக்கு வந்தனர். பிரதம கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கமானது, கிராமக் கடன் வசதியமைப்புச் சங்கிலியில் மிகப் பலவீனமான ஒரு வளையமாக உள்ளது. சரியான கூட்டுறவு அல்லது பலம்பொருந்திய கடன் வசதியின் தேவைகள் யாதும் அதனுல் பூர்த்தி செய்யப்படவில்லை. சிக்கனத்தையும் சேமிப்புகளையும் வளர்ப்பதற்கும் அது தவறியுள்ளது. போதுமானதும், தாமதமில்லாததும், உற்பத்திக்கானதுமான ஒரு கடன்வசதி முறையை ஏற்படுத்துவதற்கும்கூட அது தவறியுள்ளது. நிலவுடைமை, கடனுக்கான ஓர் அடிப்படையாக வலியுறுத்தப்படுவதன் காரணமாக, உறுப்பினர்களின் காலாந்திர வருமானத்திலிருந்து, காலந்தவருது கடன் வசூல்செய்தல் புறக்கணிக்க நேரிடுகிறது. அது உற்பத்திக் காரியத்தை நிபந்தனையாகக் குறிக்கவோ அதை மேற்பார்வை செய்யவோ கிடையாது.

**கூட்டுறவு அமைப்புகளின் தோல்விக்குக் குற்றம் கூறப்பட்ட காரணங்கள் (Reasons alleged for the failure of Co-operative Agencies):** கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்கள் எண்ணிக்கையளவிலும், தரத்தினளவிலும் தோல்வியடைந்ததற்கு முக்கியமாக மூன்று காரணங்கள் சாட்டப்படுகின்றன. (i) ஒரு கிராமத்தார் தம் பயிர் ஆதாரத்தின்மீதும், அல்லது தாம் திருப்பிச் செலுத்தும் சக்தியின் பேரிலும், தமக்குப் போதுமான கடன் தொகையை உடனே கொடுத்துத் தம் விளைபொருள்களுக்கு விற்பனை வசதிகளையும் அளித்துவருபவரான தனியார் துறை வட்டிக்கடன் கொடுப்பவரை அல்லது வர்த்தகரைக் கூட்டுறவுச் சங்கத்தைக் காட்டிலும் மேலானவராக மதிக்கிருர். (ii) சக்தி படைத்த தனியார் அமைப்புகளிலிருந்து கூட்டுறவுச் சங்கங்கள்

அனுபவிக்கின்ற உண்மையாகவே எதிர்ப்பு அல்லது போட்டி. (iii) கூட்டுறவு இயக்கத்திற்குள் பின்பற்றப்பட்டு வந்த ஏற்பாடு களின்படியும், நடைமுறைகளின்படியும், கடன்பெறும் தகுதி யானது, நன்னடத்தையும் திருப்பிச் செலுத்தும் சக்தியும் என்ப தற்குப் பதிலாக, நிலமுடைமைக்குச் சார்பான போக்கிலிருந் தது.

**பரிந்துரைக்கப்பட்ட பரிகாரங்கள்** (Remedies Suggested): கிராமக் கடன் வசதிச் சங்கத்தின் தவறுகளைப் பொருட்படுத்தா மல், அனைத்திந்திய கிராமக் கடன் விசாரணைக் குழுவினர், கிராம மட்டத்தில் கூட்டுறவுச் சங்கத்தைத் தவிர வேறு எவ்வகை யான கடன் வசதி நிறுவனமும் தகுதியுள்ளதாக இரா தென்று கருதினர். அக் குழுவினரின் கூற்றுப்படி, 'கூட்டுறவு தோல்வியுற்றது; ஆனால், வெற்றி பெறுவதற்கு அது சரிப்படுத்தப் படவேண்டும்.' 1928ஆம் வருடத்திய 'விவசாயத்தைப் பற்றிய இராயல் ஆணைக்குழு'வுங்கூட அதே மாதிரியான ஒரு கருத்தைக் கூறியிருந்தது. அதாவது, 'கூட்டுறவு தோல்வியுற்றால், கிராம இந்தியாவின் மிகச் சிறந்த நம்பிக்கை தோல்வியடை கிறது' (If Co-operation fails the best hope of Rural India fails). ஆகவே, கூட்டுறவுக் கடன் வசதி யமைப்புப் பலப்படுத்தப்படவேண்டும். கிராமக் கடன் விசாரணைக் குழு வினரின் கருத்துப்படி, அந்த அமைப்பின் உள்ளான பலவீனத்தை மட்டும் சீர்படுத்த எடுத்துக்கொள்ளப்பட்ட முந்திய முயற்சிகள், கிராம அமைப்பு முழுவதிலும் இருந்த பலவீனத்தைக் கணக்கி லெடுக்காமலும், நகர வர்த்தகம், நகர நிதி ஆகியவற்றின் வெளி யான இயந்திர அமைப்பிற்குப் பொருந்தாத தன்மையைக் கணக்கி லெடுக்காமலும் செய்யப்பட்டன. எனவே, கிராமப் பொரு தார அமைப்பிற்கும், நகரப் பொருளாதார அமைப்பிற்கு மிடையே யிருந்த பொருந்தாத் தன்மையைச் சரிப்படுத்துவதற் காகத் தேவைப்பட்ட முந்திய ஏற்பாடுகள் ஒன்றுமில்லாமலே சிக்கனம், மேலான வாழ்க்கை, பலநோக்குச் சங்கம் முதலிய விஷயங்களின்மீது மட்டுமே முழு முயற்சிகள் செய்யப்பட்டன. இந்த நிலைமையைச் சரிப்படுத்துவதே நம் முதற்பணியாக இருக்க வேண்டும். அதாவது, கூட்டுறவுச் சங்கங்கள் சரியான முறையில் பணியாற்றக்கூடிய நிலைமை முதலில் உண்டுபண்ணப்படவேண்டும். கூட்டுறவு இறுதியான நிலையில் தன்னைத்தான் உதவி செய்து கொள்வது மட்டுமல்லாமல், பிறர் உதவியை நாடாமல் இருக்கும் வண்ணம் கூட்டுறவுச் சங்கம் உதவி செய்யப்படவேண்டும். இந்த உதவியானது அரசினரிடமிருந்து மட்டுந்தான் வரமுடியும் என் றும், கூட்டுறவு நிறுவனங்கள் ஊன்றிய நலமிகளின் எதிர்ப்பைச்

சமாளிப்பதற்கு வசதிசெய்யும்பொருட்டுத் தேவைப்படும் பெரும் அளவிலும், வகையிலும் அந்த அரசு உதவியிருக்கவேண்டுமென்றும் அக் குழுவினர் கருதினர். உதவியின் விதம் வெறும் நிருவாகத் தன்மையதாக இருக்கக்கூடாது. இதுவரை அரசினர் செய்து வந்த உதவியின் விதமானது, 'மிகையான ஆட்சியும், குறைவான நிதியளிப்பும்' (Over administer and underfinance)' என்ற வகையிலிருந்தது. இதுவரை, அரசினர்க்கும் கூட்டுறவு நிறுவனங்களுக்குமிடையே யிருந்த ஒத்துழைப்பின் போக்கானது நெருங்கியதானதாக இல்லாமல், இடையிடையானதாகவே சில சமயங்களில் மட்டுமே இருந்தது. அரசினர் உதவியும், அரசினர் வழிகாட்டுதலும் மட்டுமே போதா. எது தேவைப்படுகிறதென்றால், கூட்டுறவுக் கடன் வசதி, விற்பனை வசதிச் சங்கங்களில், அரசினர் கூட்டாளித்துவமும், பங்குகொள்ளுதலுமே.

கிராமக் கடன்வசதிச் சங்கங்களின் சீரமைப்பிற்கான மூன்று அத்தியாவசியமான கொள்கைகள் (The three fundamental principles of re-organisation of Rural Co-operative Credit Societies). இந்தக் கொள்கைகள் பின்வருமாறு இருக்கவேண்டும்.

(i) பல்வேறு மட்டங்களில் அரசினர் பங்குகொள்ளுதல். (நிதிக் கூட்டாளித்துவம் உள்பட)

(ii) கடனளிக்கும் நடவடிக்கைக்கும், இதரப் பொருளாதார நடவடிக்கைகளுக்கும் குறிப்பாகப் பதனப்படுத்துதலுக்கும், விற்பனைக்குமிடையே ஓர் இணைப்பு ஏற்படுத்துதல்.

(iii) கிராம மக்களின் தேவைகளுக்கேற்ப, போதுமானதான பயிற்சி பெற்ற பணியாளர் தொகுதியின் மூலம் நிருவாகம்.

**குழுவினரால் உத்தேசிக்கப்பட்டவாறு அரசு பங்குகொள்ளுதல்** (State participation as designed by the committee): குழுவினரின்கருத்துப்படி, அரசினர் பங்குகொள்ளுதல் கீழ்க்காணும் வழிகளில் ஏற்பாடு செய்யப்படுகின்றது.

(i) அது, புதிய கொள்கைகளுக்குகந்ததாக இருப்பதை நிச்சயப்படுத்தப்படவேண்டும். அதே சமயத்தில், அரசினர் பங்காளித்துவம் கொள்ளும் நிறுவனத்தின் அத்தியாவசியக் குணும்சத்தைப் பாதுகாக்கும்பொருட்டு ஒவ்வொரு முன்னுலோசனையும் செய்யப்படவேண்டும். மற்றும், அன்றாடச் செயற்பாட்டில் தலையீடு தவிர்க்கப்படவேண்டும்.

(ii) தலைமை மட்டத்திலும், நடுமட்டத்திலும் அரசினர் பங்குகொள்ளுதலின் நோக்கம், பிரதம சங்கங்களுக்குப் போதுமானதும், நிலையானதும், சக்தியுள்ளதுமான ஆதரவை வழங்குவதேயாகும். விஸ்தீரணத்தில், அது பெரிய பங்காளித்துவமாக (Major partnership) இருக்கவேண்டும். தலைமை மட்டத்திலும், மாவட்ட மட்டத்திலும் அரசினர் பங்காளித்துவம் நிலையானதாகவும், பிரதம மட்டத்தில் பொதுவானதாகவும், கூட்டுறவு நிறுவனங்களின் பங்கு மூலதனம், 51 சதவீதத்திற்குக் குறையாத அளவும், அரசினரால் வைத்திருக்கப்படவேண்டும் அல்லது அரசினரிடமிருந்து பெறப்பட்டிருக்கவேண்டும்.

(iii) தலைமை மட்டத்தில் மாகாண அரசு சம்பந்தப்பட்ட கூட்டுறவு நிறுவனங்களின் பங்குமூலதனத்திற்கு நேர்முகமாக உதவித்தொகை யளிக்கும்; மாவட்டமட்டத்திலும், பிரதம மட்டத்திலும் அந்த உதவி மறைமுகமாக இருக்கும். அதாவது, மாகாண அரசு தலைமை நிறுவனங்களுக்கு வழங்கும் நிதிகளிலிருந்து (கூடுதலான பங்குமூலதன வடிவத்தில்), தலைமை நிறுவனங்கள் மாவட்ட மட்டத்திலுள்ள நிறுவனங்களுக்கு உதவித்தொகை யளிக்கும்; மாவட்ட நிறுவனங்கள் முறையே பிரதம சங்கங்களின் பங்குமூலதனத்திற்கு உதவித்தொகை யளிக்கும்.

(iv) பிரதம மட்டத்தில், அரசினரின் பங்குமூலதனத்தை ஓர் அளவுள்ள காலவரைக்குள் தன் சொந்த உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைக்கொண்டு திருப்பிச் செலுத்துவதன்மூலம் சங்கம் ஒரு முழுக் கூட்டுறவு நிறுவனமாக இயங்குவதற்கு வாய்ப்பு இருக்கவேண்டும். மேல்மட்டங்களில், அரசினர் கூட்டாளித்துவம் அடித்தளத்திலுள்ள நிறுவனம் தனியார் ஊன்றிய நலமிகளின் எதிர்ப்பையும் போட்டியையும் சமாளிப்பதற்காகவும், வெல்வதற்காகவும் தேவைப்படும் பலம் வளர்ச்சியடையும் வரை தொடர்ந்திருக்கவேண்டும்.

(v) பெரிய பங்காளித்துவத்தின் (Major partnership) ஊகம், அரசின் வசம் பெரிய வாக்களிப்புச் சக்தியுடையதாக இருக்க வேண்டுமென்பதாக இருப்பினும், சாதாரணமாக, மாநிலக் கூட்டுறவுவங்கியின் இயக்குநர் குழுவில் மூன்றில் ஒரு பாகத்திற்கு மேற்பட்ட இடங்கள் அரசினருக்கு ஒதுக்கப்படக்கூடாது.

(vi) அதே சமயத்தில், சில குறிப்பிடப்பட்ட துறைகளில், இயக்குநர் குழுவின் முடிவுகளைத் தள்ளிவிடுதல், மாற்றிப் போடுதல், திருத்துதல் அல்லது தம் சொந்த முடிவுகளை விதித்தல் போன்ற அடித்துப்போடும் அதிகாரங்கள் (Over-riding Powers) அரசினருக்கு இருக்கவேண்டும். அத்தகைய குறிப்பிடப்பட்ட துறை-

களைப் பற்றிய உதாரணங்களாவன: நிதிவழங்கும் கொள்கைகள் சரியானவையாக இருத்தல், உற்பத்திக்கும் விற்பனைக்கும் கொடுக்கப்படும் கடன்களை இணைத்தல், நடுத்தர உற்பத்தியாளர்களுக்கும் சிறு உற்பத்தியாளர்களுக்கும் பெருந்தொகையான கடன்களைக் கொடுத்தல் போன்றவை. இவையனைத்தும், கடன்வழங்கும் கொள்கைகளின் மேலான குறிக்கோள்களாகும்.

(vii) அரசினரின் அங்கீகாரத்திற்குட்பட்டு, மாநிலக் கூட்டுறவு வங்கி தன் தலைமைச் செயல்அதிகாரியை அமைத்தல்.

(viii) மாநிலக் கூட்டுறவு விற்பனைச் சங்கத்திலும்கூட (அது நிறுவப்பட்டபோது), அதேமாதிரியான வகையில் அரசினர் பங்காளித்துவம் கொள்ளவேண்டும். ஆனால், தற்சமயம், மாவட்ட விற்பனை வசதிச் சங்கங்களும், தலைமை விற்பனைவசதிச் சங்கங்களும் இல்லாமலும், அல்லது திறமையற்றும் இருக்கின்ற காரணத்தினால், பிரதம விற்பனை வசதிச் சங்கங்களில் அரசினர் பங்காளித்துவம் நேர்முகமாக இருக்கலாம்.

**விற்பனை வசதியுடன் கடன் வசதியை ஒருங்கிணைத்தல்** (Co-ordination of Credit with Marketing): பிரதம சங்கங்களின் கடன்வழங்கும் நடவடிக்கைகளில், பயிர்க்கடன் (Crop loan) மீது வலியுறுத்தல் கொடுக்கப்படவேண்டும். அதாவது, நிலவுடைமையைப் பாராமல், பயிர்களை விளைவிப்பதற்காகத் தக்க பாதுகாப்புகளுக்குட்பட்டுக் கடன்கள் வழங்கப்படவேண்டும். ஆனால், கூட்டுறவுக் கடன், கூட்டுறவு விற்பனையுடன் ஒன்றிணைக்கப்பட்டாலொழிய, இந்தக் கடன்முறையானது தானாகவே பயனுறுதியானதாகவும், முழுமையானதாகவும் இருக்க முடியாது. விவசாயக் கடன்வசதிச் சங்கங்களுக்கும், விற்பனை வசதிச் சங்கங்களுக்கும் இடையே ஒரு நெருங்கிய இணைப்பு இருக்கவேண்டும். கடன்வசதிச் சங்கம், உறுப்பினர்கள் தங்கள் விளைபொருள்களை விற்பனைவசதிச் சங்கத்தின்மூலம் விற்பனை செய்ய வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில்தான், தன்உறுப்பினர்களுக்குக் கடனளிக்கவேண்டும். கடன் வசதிச் சங்கமானது, விற்பனை வசதிச் சங்கத்தின் பிரதிநிதியாகச் செயற்பட்டுத் தன் உறுப்பினர்களின் விளைபொருள்களைச் சேகரித்து அவற்றை விற்பனைவசதிச் சங்கத்திற்குக் கொண்டுசெல்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

**பெரியஅளவுப் பிரதம சங்கம்** (Large-sized Primary Society): பிரதம சங்கம் இத் திட்டத்தைப் பயனுறுதியாக அமல்படுத்தி, திட்டத்தின் நோக்கத்தை நிறைவேற்ற வேண்டுமாயின், அது

ஒரு கிராமங்கள் தொகுப்பைத் தழுவும் மிகப் பெரியதான ஓர் அமைப்பாகச் சீரமைக்கப்படவேண்டும்; மற்றும், அது ஒரு முழு நேர, தகுதிபடைத்த, ஊதியம்பெறுகின்ற செயலாளரை வேலையில் அமர்த்தவேண்டும்; தன் விவகார எல்லையில் வசிக்கும் எல்லா நபர்களுக்கும் தன் அங்கத்துவத்தைத் திறந்துபோடுதல்மூலம் தன் உபயோகத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். ஒருவருக்கு அங்கத்துவம் மறுக்கப்படும்போது, கூட்டுறவுப் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்யும் ஓர் உரிமை அவருக்கு இருக்கவேண்டும்.

**பயிற்சிபெற்ற பணியாளர் தொகுதியின் மூலம் நிருவாகம்** *(Administration through trained personnel) :* *தங்கள் திட்டங்களினுல் எதிர்பார்க்கப்படும் கடன்வசதி, விற்பனை வசதி நடவடிக்கைகளின் பரந்த விரிவாக்கத்தின் காரணமாக, எல்லா மட்டங்களிலும் நிருவாகச் சிப்பந்திகள், தொழில்நுட்பச் சிப்பந்திகளின் பயிற்சிக்காக இந்திய அரசால் பம்பாயில் அமைக்கப்பட்ட கூட்டுறவுக் கல்வி, பயிற்சிக்கான மத்தியக் குழுவின் வழிகாட்டுதலின்கீழ், சரியான ஏற்பாடுகள் செய்யப்படவேண்டுமென்று கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் பரிந்துரை வழங்கினர்.*

**நிதிகள்** *(Funds): கீழே குறிக்கப்பட்ட பல்வேறு அமைப்புகளின்கீழ், பின்வரும் நிதிகள் அமைக்கப்படவேண்டுமென்று கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் சிபாரிசு செய்தனர்:*

**(i) இந்திய ரிசர்வ் வங்கியின் கீழ்**

*(அ) 'தேசிய விவசாயக் கடன்வசதி (நீண்டகால நடவடிக்கைகள்) நிதி'* (National Agricultural Credit (Long-term operations) Fund)

*(ஆ) 'தேசிய விவசாயக் கடன்வசதி நிலைபேறுக்க நிதி'* (National Agricultural Credit Stabilisation Fund)

*இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டமானது, இந்த இரண்டு நிதிகளை அமைப்பதற்கான சரத்தை ஏற்படுத்தும் நோக்கத்துடன் திருத்தம் செய்யப்பட்டது. இந்தத் திருத்தத்தின்படி, ஆரம்பத்தில் ரூபாய் 10 கோடியான ஒரு தொகை ரிசர்வ் வங்கியால் தேசிய விவசாயக் கடன்வசதி (நீண்டகால நடவடிக்கைகள்) நிதிக்கு வரவு வைக்கப்படவேண்டும். மற்றும், அதற்குப் பிறகு, முதல் ஐந்து ஆண்டுகளுக்கு, வருடாந்திரம் ரூபாய் 5 கோடியான ஓர் உதவித்தொகை வரவு வைக்கப்படவேண்டும். இந்த நிதியின் நோக்கமானது, (அ) கூட்டுறவுச் சங்கங்களின் பங்குமூலதனத்*

திற்கு உதவிபுரிய வசதிசெய்யும்பொருட்டு, மாநில அரசுகளுக்குக் கடன்களையும், முன்பணங்களையும் அளித்தல். (ஆ) விவசாயக் காரியங்களுக்காக மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு மத்தியக் காலக் கடன்களை வழங்குதல். (இ) மத்திய நிலவள வங்கிகளுக்குக் கடன்களையும், முன்பணங்களையும் அளித்தல். (ஈ) மத்திய நிலவள வங்கியின் கடன்பத்திரங்களை (Debentures) விலைக்கு வாங்குதல்.

தேசிய விவசாயக் கடன்வசதி நிலையாக்கும் நிதிக்கு, ஆரம்பத்தில் ரிசர்வ் வங்கி ரூபாய் ஒரு கோடியையும், அதன் பின்னர், ஒவ்வோர் ஆண்டும் ரூபாய் ஒரு கோடியையும் வரவுவைக்க வேண்டும். இந்த நிதியின் நோக்கமானது, வறட்சி, பஞ்சம், அல்லது இதர இயற்கையான விபத்துகள் போன்ற காரணங்களால் மாநிலக் கூட்டுறவு வங்கி தன் குறுகியகாலக் கடன் தவணைகளைத் திருப்பிச்செலுத்த இயலாமலிருக்குங்கால், அக் குறுகிய காலக் கடன்களை மத்தியக் காலக் கடன்களாக மாற்றிக்கொள்வதற்குக் கடன்களை வழங்குதலாகும்.

**(ii) இந்திய அரசின் உணவு, வேளாண்மைத் துறையின்கீழ்** (Under the Ministry of Food and Agriculturel Government of India): தேசிய விவசாயக் கடன் நிவாரணம், மற்றும், உத்திரவாத நிதி (National Agricultural Credit Relief and Guarantee Fund). இந்திய அரசு, இந்த நிதிக்குக் குறைந்தபட்சம் ஒரு கோடிரூபாயை ஒதுக்கவேண்டும். இந்த நிதியின் நோக்கமானது, மிகப் பரவலானதும், நீடித்த காலமானதுமான பஞ்சம் போன்ற காரணங்களால் எழுகின்ற வசூலிக்க முடியாத கூட்டுறவுப் பாக்கிகளைத் தள்ளுபடி செய்வதற்காகக் கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்களுக்கு நிவாரண உதவியாக மாநில அரசினரால் உதவித்தொகைகள் (Grants) அளித்தலாகும்.

**(iii) மாநில அரசின் கீழ்** (Under The State Government):

(அ) 'மாநில விவசாயக் கடன் (நிவாரணமும், உத்திரவாதமும்) நிதி' (The State Agricultural Credit (Relief and Guarantee) Fund)

(ஆ) 'மாநிலக் கூட்டுறவு வளர்ச்சி நிதி' (State Co-operative Development Fund)

இந்த நிதிகள் மாநில அரசுகளால் அமைக்கப்படவேண்டும். மாநிலக் கூட்டுறவுக் கடன் (நிவாரணமும், உத்திரவாதமும்) நிதிக்கான வரவுகள் பின்வருமாறு: (அ) மாநில அரசின் வருடாந்

தர வரவு-செலவுத் திட்டத்திலிருந்து உதவித்தொகை. (ஆ) கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்களில் மாநில அரசால் முதலீடு செய்யப் பட்ட தன் மூலதனத்தின்மீது கிடைத்த இலாபஈவில் மூன்று சதவீதத்திற்கு மேற்பட்ட ஒரு பகுதியிலிருந்து ஒதுக்கல் செய்தல். இந்த நிதியானது, தேசியக் கடன் நிவாரண உத்தரவாத நிதி யானது பயன்படுத்தப்படும் அதேமாதிரியான காரியங்களுக்காகப் பயன்படுத்தப்படவேண்டும். மேலும், அது, விவசாயக் காரியங் களுக்காக ரிசர்வ் வங்கியால் மாநில அரசுக்கு வழங்கப்பட்ட மத்திய காலக் கடனுதவியைக் குறித்து மாநில அரசால் அளிக்கப் பட்ட உத்தரவாதத்திலிருந்து எழுகின்ற ஏதாவது பொறுப்பு களைச் சரிப்படுத்துவதற்கும்கூடப் பயன்படுத்தப்படவேண்டும்.

மாநிலக் கூட்டுறவு வளர்ச்சி நிதி, அரசால் வழங்கப்படும் வருடாந்தர உதவித்தொகைமூலமும், கூட்டுறவு விற்பனைவசதிச் சங்கங்களிலும் கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்களிலும் முதலீடு செய்யப்பட்ட அரசினர் பங்கு மூலதனத்திற்குச் செலுத்தப்பட வேண்டிய இலாபஈவு அனைத்தின்மூலமும் அமைக்கப்படவேண்டும். இந்த நிதி, கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்கள், கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்கள் ஆகியவைகளின் பங்குமூலதனத்திற்கு உதவித்தொகை வழங்குவதற்காகப் பயன்படுத்தப்படவேண்டும். இந்த நிதி, தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதிக்கு ஒரு துணைநிதியாக இருக்கிறது.

**(iv) இந்திய அரசின்கீழ்** (Under The Government of India)

**(அ) தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி** (National Co-operative Development Fund) மற்றும்,

**(ஆ) தேசியக் கிடங்கு வசதி வளர்ச்சி நிதி** (National Ware Housing Development Fund)

இந்த நிதிகளின் நோக்கம், விவசாய விளைபொருள்களின் பதனப்படுத்துதல், விற்பனை செய்தல் ஆகிய நடவடிக்கைகளை வளர்ச்சி செய்தலாகும். கிராமக் கடன் வசதி விசாரணைக் குழு வினர், 'தேசியக் கூட்டுறவு வளர்ச்சி மற்றும் தானியக் கிடங்கு வசதி வாரியம்' (National Co-operative Development and Ware Housing Board), 'அனைத்திந்தியத் தானியக்கிடங்கு வசதிக் கழகம்' (All India Ware Housing Corporation), 'மாநிலத் தானியக்கிடங்கு வசதிக் கழகங்கள்' (State Ware Housing Corporations) போன்ற அனைத்திந்திய மட்டத்திலும் மாநில மட்டத்திலும் பல்வேறு நிறு வனங்களை அமைக்கவேண்டுமென்றும், மேற்குறிக்கப்பட்ட இரண்டு

நிதிகளின் நிறுவனங்களேயும் அமைக்கவேண்டுமென்றுங்கூடப் பரிந்துரை செய்தனர்.

**(v) மாநிலக் கூட்டுறவு வங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகள், பெரியஅளவுக் கடன் வசதிச் சங்கங்களின்கீழ்** (Under The State Co-operative Bank, Central Co-operative Banks and Large-sized Societies)

விவசாயக் கடன்வசதி நிலேபெருக்க நிதி : இது பின்வருமாறு அமைக்கப்படவேண்டும். (அ) கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்களில் முதலீடு செய்யப்பட்ட பங்கு மூலதனத்தின்மீது அரசுக்குச் செலுத்தப்படவேண்டிய இலாபஈவில் மூன்று சதவீதத்திற்கு மேற்பட்ட ஒரு பாகத்தின்மூலம். மற்றும், (ஆ) மற்றவர்களின் பங்குமூலதனத்தின்மீது செலுத்தப்படவேண்டிய இலாபஈவிலிருந்து ஒரு குறிப்பிட்ட வரம்புக்கு மேற்பட்ட தொகையைக் கட்டாயமாகக் கழித்துக் கொள்வதன்மூலம். இந்த வரம்பு அரசுக்காக நிருணயிக்கப்பட்ட வரம்பைக் காட்டிலும் சிறிது அதிகமாக இருக்கும். இந்த நிதி, தேசிய விவசாயக் கடன்நிலேப்படுத்தும் நிதியானது பயன்படுத்தப்படும் காரியங்களுக்காகப் பயன்படுத்தப்படவேண்டும்.

அரசு பங்காளித்துவக் கொள்கையையும், வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின் பேரில் பெரியஅளவு கடன் வசதிச் சங்கங்களே அமைத்தலும், கிராமக் கடன் விசாரணேக் குழுவினரால் நிறுவப்பட்ட பிரதானக் கருத்து அமைப்புகளாகும். கிராமப் பொருளாதார அமைப்பு அனேத்தையும் தழுவிய கூட்டுமயமாக்கப்படுதலேத் துரிதமாக ஏற்பாடு செய்வதற்கும், விவசாயிகளுக்கு எல்லாவிதமான உற்பத்திக் கடன் வசதிகளே வழங்குவதற்கான ஒற்றையான நிறுவன அமைப்பாகக் கூட்டுறவு அமைப்பை வளர்ச்சி செய்வதற்காகவும், 'கிராமக் கடன் வசதியின் ஒருங்கிணேந்த திட்டம்' (Integrated Scheme of Rural Credit) என்ற ஒரு திட்டத்தைத் தொடங்கவேண்டுமென்றுங்கூட அக் குழுவினர் பரிந்துரை வழங்கினர். பிரதம கடன்வசதிச் சங்கங்களின் மற்றும், இதரக் கூட்டுறவு நிறுவனங்களின் பொருளாதாரத் தன்னிறைவின்மீதும், கிராம மக்கள் தொகை அனேத்தையும் பயனுறுதியாகத் தழுவும்வண்ணம் விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசு வழங்கும் தீவிரமான நிதியுதவி ஆதரவுமூலம் அவைகள் ஒரு மேலான செயற்பாட்டுத் திறமையைச் சாதிப்பதன்மீதும் அக் குழுவினர் பெருமளவு வலியுறுத்தலிட்டனர்.

கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் யோசனைகள், அநேக விதங்களில் ஓர் ஆழ்ந்த தன்மையானவையாக இருக்கின்றன. அவர்களின் யோசனைகளில் சில, பொதுவாகக் கருதப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளிலிருந்தும், குறிப்பிடத்தக்க ஒரு விலகலாக இருந்தன. கூட்டுறவு நிறுவனங்களில் பங்கு மூலதனத்தின் 51 சதவீதத்தை அரசு பெற்றிருக்கவேண்டும் என்ற அர்த்தத்தில் அரசு பங்குகொள்ளுதலும், கூட்டுறவு நிறுவனங்களின் மெய்மையான நிருவாகத்தில் அரசினரின் நியமிகள் பங்குகொள்ளவேண்டுமென்பதும், சில விஷயங்களில் அரசுக்குத் தள்ளிப்போடும் அதிகாரங்கள் (Over riding powers) இருக்கவேண்டுமென்பதும், கூட்டுறவு நிறுவனங்களின் ஜனநாயகப் பண்புக்கு முரண்பாடானவை என்று சொல்லக்கூடிய சில அம்சங்களாகும். மற்றும், பெரியஅளவுச் சங்கங்களை அமைத்தலானது, கிராமக் கடன்வசதிச் சங்கங்களுக்கு நெருங்கிய தொடர்புள்ள சமீபம் அல்லது அண்மை, உறுப்பினர்களிடையே தங்களைப்பற்றிய பரஸ்பர அறிவு ஆகிய கொள்கைகளிலிருந்து ஒரு விலகலை ஏற்படுத்தச் செய்யும். மற்றும், அது, சங்கத்தின் பொறுப்பில் ஒரு மாறுதலைக் கூட, அதாவது வரையறுக்கப்படாத பொறுப்பிலிருந்து வரையறுக்கப்பட்ட பொறுப்பு மாறுதலுக்கு இடம் தரும் — இது வரையிருந்த ரெய்ஃபெய்சன் வகைச் சங்கத்திலிருந்து இது ஒரு விலகலாகும்.

1955ஆம் ஆண்டில் பாட்னு நகரில் நடைபெற்ற இரண்டாவது இந்தியக் கூட்டுறவுக் காங்கிரஸ் அரசு கூட்டாளித்துவக் கொள்கையை ஏற்றுக்கொண்டது. ஆனால், அரசு கூட்டாளித்துவத்தின் பரப்பும், காலவரையும் தனி நிறுவனங்களின் திறமைகளின்மீது சார்புகொண்டதும், நெகிழ்ச்சியுடையதுமாக இருக்க வேண்டும். மற்றும், அரசினரால் மாநிலக் கூட்டுறவு வங்கியின் இயக்குநர் குழுவுக்கு அனுப்பப்படும் மாநில அரசு நியமிகள், மூன்று நபர்களுக்கு மேற்படக்கூடாதென்றும்; சங்கங்களின் உள்ளான நிருவாகம், ஊதியம் பெறும் சிப்பந்திகளை அமைத்தல் முதலியவைகளைக் குறித்து அரசு நியமிகளின் அதிகாரங்கள் கையாளப்படக்கூடாதென்றும்; அரசினரிடமிருக்கும் தள்ளிப்போடும் அதிகாரங்கள் நிறுவனங்களின் கடன்வழங்கும் கொள்கைகளுக்கு மட்டுமே கண்டிப்பாக வரையறுக்கப்பட வேண்டுமென்றுங்கூட அந்தக் காங்கிரஸ் தீர்மானம் செய்தது. 1955ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற மாநில அமைச்சர்கள்—கூட்டுறவுப் பதிவாளர்கள் மாநாடு, பாட்னு காங்கிரஸ் தெரிவித்திருந்த கருத்துகளை ஆதரித்தது.

கூட்டுறவுச் சங்கங்களால் பொதுவாக ஏற்றுக்கொள்ளப் பட்ட கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் இதரச் சிபாரிசு களாவன: பிரதம விற்பனை வசதிச் சங்கங்களின் பங்குமூலதனத் தில் நேர்முகமாக முதலீடு செய்தல், வரையறுக்கப்பட்ட பொறுப்பின்பேரில் பெரிய அளவுச் சங்கங்களையமைத்தல், எதிர் பார்க்கப்படும் பயிர்கள் ஆதாரத்தின்பேரில் கடன்களை வழங்கு தல், கடன்வசதியையும் விற்பனை வசதியையும் ஒருங்கிணைத்தல், நன்கு பயிற்சிபெற்ற பணியாளர்கள் தொகுதியின்மூலம் சங்கம் நிருவாகம் செய்யப்படுதல் முதலியன. இந்தப் பரிந்துரைகள் அமல் செய்யப்படுங்கால், ஏதாவது மாறுதல் செய்யப்பட்டிருந் தால், அவற்றைக் குறித்துத் தக்க இடங்களில் விளக்கம் கூறப் படும்.

## தேசியத் திட்டக்குழு (1950)
(National Planning Commission)

முன்னமே கூறியபடி, இயக்க வரலாற்றில் இரண்டாவது பெரிய நிகழ்ச்சியானது 1950ஆம் ஆண்டில், இந்திய அரசு தேசியத் திட்டக்குழுவை அமைத்ததாகும். விடுதலை பெற்ற பிறகு, அரசினர் கடமைகளைப் பற்றிய கருத்தமைப்பில் ஒரு முக்கியமான மாறுதல் ஏற்பட்டது. அரசினரின் எல்லா நடவடிக்கைகளிலும், 'மக்கள் நல்வாழ்வு அரசு' (Welfare State) என்ற ஒரு குறிக்கோள் செயற்பட்டது. இந்த இலட்சியத்தை யடையும் நோக்கத்துடன், உற்பத்தியைப் பெருக்குவதற்கும், சமநிலை நேர்மையான விநியோகத்தையும் சமுதாய நீதியையும் உறுதிப்படுத்துவதற்கும், வேலைவாய்ப்பு வசதிகளை அதிகரிக்கச் செய்வதற்கும், தொழில்மயமாக்குவதன்மூலம் சரிநிலையான பொருளாதார அமைப்புக்கான கடைகால் போடுவதற்கும், நாட்டு மக்களின் பொருளாதார வாழ்வை ஒழுங்குபடுத்துவதற் கும் திட்டமிட அவசியமேற்பட்டது. ஆகையால், இந்த இலட்சியங்களை அடைவதற்கான தக்க திட்டங்களை வகுப்பதற் கும், அத் திட்டங்களின் அமல்பாட்டைஇயக்குவதற்கும்1950ஆம் ஆண்டில் தேசியத் திட்டக்குழு அமைக்கப்பட்டது. தேசியப் பொருளாதார அமைப்பின் வளர்ச்சிக்காகத் திட்டமிடுதலானது அடிப்படையாக 1951–52ஆம் ஆண்டிலிருந்து தழுவப்பட்டது. திட்டங்களை வகுக்குங்கால், நாட்டின் பொருள்வள ஆதாரங்களை யும், தொழில்நுட்பவள ஆதாரங்களையும் வளர்ச்சி செய்வதற்கு உகந்த திட்டங்கள் — குறிப்பாக, உணவு உற்பத்தியும் கச்சாப் பொருள்கள் உற்பத்தியும் ஒப்பிடும் வகையில் ஒரு குறுகிய காலத் திற்குள் ஏற்படுவதற்கான திட்டங்கள் — இதரத் திட்டங்களைக்

காட்டிலும் அதிகமாக ஆதரவு கொடுக்கப்படவேண்டும் என்றும், அப்பொழுதுதான் போரின் விளைவாகவும் துணைக்கண்டம் பிரிவினையின் விளைவாகவும் இந்தத் திசைகளில் உற்பத்தியில் ஏற்பட்ட பற்றுக்குறைகளைச் சரிப்படுத்த முடியும் என்றும், மற்றும், சாதாரணமாக இதரத் திட்டங்கள் மேற்கொள்ளப்படக்கூடாது என்றும் மத்திய அரசு அறிவுரை வழங்கிற்று. இந்தத் திசைகளில் ஏற்கெனவே அமல் செய்யப்பட்டுவந்த திட்டங்கள் மட்டுமே முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் அடங்கியிருந்தன. அத்தகைய திட்டங்களுள் முக்கியமானதான ஒன்று, கிராமங்களில் 50 சதவீதத்தைத் தழுவியும், கிராம மக்கள்தொகையில் 30 சதவீதத்தைத் தழுவியும் கிராமக் கூட்டுறவுக் கடன்வசதி இயக்கத்தைப் பெருக்கம் செய்வதாகும். இந்தத் திட்டத்தை அமல்படுத்துவதற்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகள், கூடுதலான மேற்பார்வையாளர்களை வேலையில் அமர்த்துவதற்கு வசதி செய்யும்பொருட்டு மானியத்தொகைகள் அளிக்கப்பட்டன.

எனினும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் ஆசிரியர்கள், 'முன்முயற்சி, பரஸ்பர அனுகூலம், சமுதாய நோக்கம் ஆகியவை கலந்த ஜனநாயகத் திட்டமிடுவதன் ஒரு கருவியாகக்' கூட்டுறவை ஏற்றனர். 'திட்டத்தின் நோக்கம், நாட்டின் பொருளாதார அமைப்பை ஒரு தனியார் சுவாதீனக் கொள்கை அடிப்படையிலிருந்து (Individualistic), சமுதாய ரீதியில் ஒழுங்குமுறைப் படுத்தப்பட்டதும், கூட்டுறவுக் கொள்கையுடையதுமான ஓர் அடிப்படைக்கு மாற்றுதல் செய்வதே' என்றும், 'திட்டத்தின் வெற்றியை, இதர விஷயங்களுக்கிடையே அது கூட்டுறவு நிறுவனங்கள்மூலம் அமல்படுத்தப்பட்ட அளவினால் தீர்ப்புச் செய்யவேண்டும்' என்றும் திட்டக் குழுவினர் மொழிந்தனர்.

விவசாய உற்பத்தி, குடிசைத் தொழில்கள், சிறிய அளவுத் தொழில்கள், விவசாய விளைபொருள்களை விற்பனை செய்தல், வசிப்பதற்கு இடவசதிகள், மொத்த வர்த்தகம், சில்லரை வர்த்தகம் என்ற துறைகளில் கூட்டுறவு வகை நிறுவனங்களுக்குத் திட்டக் குழுவினர் சிறப்பான வலியுறுத்தலை அளித்தனர். 'இந்தப் பல்வேறு நடவடிக்கைகளுக்காகக் கூட்டுறவின் விரிவாக்கமானது, இந்த நாட்டில் ஏற்கெனவே தொடங்கப்பட்டிருக்கிறது. ஆனால், அத்தகைய விரிவாக்கம், உற்பத்திப் பெருக்கம், வாடகை, இலாப விளிம்புகளைக் குறைத்தல், பொருளாதார அமைப்பில் தவிர்க்க முடியாத உபரிகளை ஏற்படுத்துதல் ஆகியவைகளின்மூலம், மிகச் சிறந்த பலன்களைச் சாதிக்கும் ஓர் உறுதிப்பாட்டைப் பெற்றிருக்

கின்றது என்பது நிச்சயம் என்று தோன்றுகிறது. மிகப்படியான அதிகார மையமாக்குதலேயும், ஆட்சிவர்க்கத்தின் கண்காணிப்பை யும் தவிர்ப்பதும், அதேசமயத்தில் தனக்காகச் செயல்படும் தனிப் பட்ட உற்பத்தியாளர், வர்த்தகர் ஆகியவர்களின் தன்னலப் பற்றையும் உரிமைபெறல் சுபாவத்தையும் கட்டிப்போடுவதுமே திட்டமிடுதலானதென்றல், கூட்டுறவுத் தொழில்முயற்சியை ஊக்கு விப்பதற்கு மிகவுயர்வான முதன்மை கொடுக்கப்படவேண்டும். கூட்டுறவு அமைப்புகளின்மூலம் கிராமப் புறங்களில் விவசாய உற்பத்தியையும், பதனப்படுத்துதல் தொழில்களேயும் முன்னேறும் வகையில் சமுதாய மயமாக்குவதற்கு நாங்கள் அளிக்கும் முக்கியத் துவத்தைக் குறிப்பாக நாங்கள் வலியுறுத்த விரும்புகிறோம்'. விவசாய நிதியைப்பற்றித் திட்டக் குழுவினர் கூறியதாவது: 'இந்த நாட்டில் விவசாய உற்பத்தியானது, கோடிக்கணக்கான சிறிய குடியானவர்கள்மீது சார்புகொண்டிருக்கிறது. பற்றுக்குறை நிதி ஆதாரங்கள் காரணமாகவும், நியாயமான விகிதங்களில் காலதாமதமற்ற கடன்வசதிகள் இல்லாமை காரணமாகவும், குடியானவர்களில் அநேகர், வேறு வகையில் விருப்பப்பட்டாலும் மேலான விதைகளேயும் உரங்களேயும் வாங்குவதற்கு அல்லது மேலான முறைகளேயும் அல்லது தொழில்நுட்பங்களேயும் தொடங் குவதற்கு முடியாத நிலேயில் இருக்கின்றனர். ஆகையால், போதுமானதும், காலதாமதமற்றதுமான கடன்வசதிகளே நியாயமான வட்டிவீதத்தில் வழங்குதல், திட்டத்தின் ஒருங் கிணைந்த ஒரு பகுதியாகக் கருதப்படவேண்டும். இந்த வசதி களுக்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் உள்பட, தற்போது இயங்கி வரும் எல்லா அமைப்புகளும் ஒருங்கிணைக்கப்பட்டு, ஒரு பொது வான நோக்கத்திற்குப் பயன்படுத்தப்படவேண்டும்' என்பதாகும்.

ஆகையால், கூட்டுறவானது, தனியார் முன்முயற்சியைப் பரஸ்பர சகாயத்துடனும், சமுதாய நோக்கத்துடனும் இணைக்கும் ஜனநாயகத் திட்டமிடுதலின் ஒரு கருவியாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது என்று சொல்லலாம். இந்திய மக்களின் வாழ்க் கைத் தரத்தை உயர்த்துவதற்கான மிக முக்கிய முறைகளில் ஒன்றுகவுங்கூட அது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. உண்மை யாகவே, தனிநபரின் அமைப்புச் சிறியதாக இருக்கிறதும், எண் ணிக்கைகள் பெரியதாக இருக்கிறதுமான நம் நாட்டைப் போன்ற ஒரு நாட்டில் பெருவாரி உற்பத்தியின் அல்லது விநியோகத்தின் சிக்கனங்களேப் பெறக்கூடியதும், அதேசமயத்தில் தனிநபரின் அக்கறையையும், முன்முயற்சியையும் பலியிடாமலிருக்கக்கூடியது மான மிகச் சிறந்த முறையை இயல்பாகவே கூட்டுறவு தரு கிறது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், கூட்டுறவு வளர்ச்சிக்கான பெரிய திட்டங்கள் எதுவும் சேர்க்கப்படாமலிருந்தன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் (1956–61), விவசாய, தொழில் துறைகளுக்குத் தொடர்பான கூட்டுறவுத் திட்டங்களும், நகர வீட்டுவசதி, கிராம வீட்டுவசதித் துறைகளில் கூட்டுறவுத் திட்டங்களும் சேர்க்கப்பட்டிருந்தன. விவசாயத் துறையில் தயாரிக்கப்பட்ட திட்டங்கள் – குறிப்பாக, விவசாயக் கடன் வசதி, விற்பனை வசதித் துறைகளுக்குத் தொடர்பான திட்டங்கள்- கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் பரிந்துரைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தன. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலீடு (Financial outlay) 7 கோடிரூபாயாக இருந்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அது ரூ. 48.71 கோடியாக இருந்தது. மூன்றாவது, நான்காவது ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவு வளர்ச்சிக்கான திட்டங்கள் பல அடங்கியிருந்தன. அத் திட்டங்களின் முதலீடு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 80 கோடி ரூபாயாகவும், நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 206 கோடி ரூபாயாகவும் இருந்தது. ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலீடு ரூ. 400 கோடிக்கு மேலிருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. எனவே, கூட்டுறவு வளர்ச்சி பொதுவான திட்டத்தின் ஒரு பகுதியாக ஏற்பட்டுவிட்டது; அதன் விளைவாக அது அரசிடமிருந்து பாராட்டக்கூடிய உதவியைப் பெற்றுவருகிறது; அதன் வளர்ச்சியில் ஓர் எழுச்சியும் ஏற்பட்டிருக்கிறது. பல்வேறு ஐந்தாண்டுத் திட்டங்களில் தயாரிக்கப்பட்ட கூட்டுறவு வளர்ச்சிச் செயல்திட்டங்களையும் அவைகள் அடைந்த முன்னேற்றத்தையும் ஒரு தனி அத்தியாயத்தில் விவரமாக விளக்கியுள்ளோம்.

## பிற சிறப்பு நிகழ்ச்சிகள்

விடுதலைக்குப் பிந்திய சகாப்தத்தின் முக்கிய நிகழ்ச்சிகளுள், கீழ்க்காணும் குழுக்களில் ஆணைக்குழுக்களின் அமைப்பும் ஒன்றாகும். இந்தக் குழுக்களின் ஆய்வுமுடிவுகளும் பரிந்துரைகளும், கூட்டுறவு வளர்ச்சியின் கொள்கைகளையும் செயல்திட்டங்களையும் உருவாக்குவதில் மிகப் பயனுள்ளவையாக இருக்கின்றன.

(i) கூட்டுறவுக் கடன் வசதி பற்றிய குழு (1960) (Committee on Co-operative Credit)

(ii) தக்காவிக் கடன்கள் மற்றும் கூட்டுறவுக் கடன்வசதி பற்றிய குழு (1962) (Committee on Taccavi Loans and Co-operative Credit)

(iii) கூட்டுறவு பற்றிய மீர்தாக் குழு (Mirdha Committee on Co-operation (1965)

(iv) அனைத்திந்தியக் கிராமக் கடன் புனர்ஆய்வுக்குழு (1969) (All India Rural Credit Review Committee)

(v) வங்கித்தொழில் ஆணைக்குழுவும் (1972), விவசாயத்தைப் பற்றிய தேசிய ஆணைக்குழுவும் (1972) (Banking Commission & National Commission on Agrıculture).

கூட்டுறவுக் கடன்வசதித் தொடர்பான மற்றொரு முக்கிய நிகழ்ச்சியானது, 1969ஆம் ஆண்டில் பெரும் வாணிப வங்கிகளை நாட்டுடைமையாக்கியது. விவசாயக் கடன்வசதித் துறையில், வாணிப வங்கிகளின் நுழைவு, சில அளவிற்கு ஒரு முதன்மையான அடிப்படையிலுங்கூட, விவசாயப் பண்ணைக் கடன் வழங்குவதற்கான ஒரு கூடுதலான நிறுவன அமைப்பாகப் பொருள்பட்டது. மற்றும், நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளின் சூழ்நிலையில் கூட்டுறவுச் சங்கங்களின் நிலைமை ஒரு புதிய முக்கியத்துவத்தை வகித்தது. இது பற்றிப் பின்வரும் அத்தியாயத்தில் கூறுவோம்.

## கூட்டுறவுக் கடன் வசதி பற்றிய மேத்தா குழு (1960)

1959ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில் மைசூரில் நடைபெற்ற மாநிலக் கூட்டுறவு அமைச்சர்களின் மாநாடு, கிராமச் சங்கங்களின் அங்கத்துவத்தை அனைவர்க்குமானதாகச் செய்வதற்குரிய காலம் வந்துவிட்டது என்றும், எல்லா உறுப்பினர்களும் அவர்கள் சொந்தமான சொத்துடையவர்களாக இருந்தாலும்சரி, இல்லாவிட்டாலும்சரி, அவர்களுடைய உற்பத்தி வேலைதிட்டத்தின் அடிப்படையின்பேரில் அவர்கள் கடன்களைப் பெறுவதை நிச்சயப்படுத்துவதற்கான ஏற்பாடுகள் அவசியமென்றும் எண்ணினர். கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களுக்குப் போதுமான நிதியுதவியை வழங்குவதற்காகப் பல்வேறு மட்டங்களிலுள்ள கடன்வசதியமைப்புகளின் கடன்வரம்புகளும் புனராய்வு செய்யப்பட்டுத் தக்கவாறு மாற்றியமைக்கப்படவேண்டும் என்றும் அந்த மாநாடு கருதியது. பெரிய அளவுச் சங்கங்களைப் பொறுத்தமட்டில், அவைகளின் செயல்திறன் மதிப்பீடு செய்யப்பட்டுத் தற்போதைய கொள்கையானது, அத்தகைய மதிப்பீட்டின் விளைவாக அவசியப்படின் மாற்றப்படவேண்டுமென்றும் மாநாடு குறிப்புச் செய்தது. பிரதம சங்கங்களின் பங்குமூலதனத்தில் அரசு பங்குகொள்ளுதல் பிரச்சினையுங்கூடப் புனராய்வு செய்யப்பட்டது. பிரச்சினை அனைத்தையும் பரிசீலனை செய்வதற்கும், பெருமளவில் விவசாய

உற்பத்திக்கான கடன்வசதியை எந்த வகையில் விரிவுபடுத்த வேண்டும் என்பதுபற்றி உருப்படியான யோசனைகளைக் கூறுவதற்கும், இந்திய அரசு ஒரு நிபுணர் குழுவை அமைக்கவேண்டுமென்றும் அந்த மாநாடு பரிந்துரை செய்தது. அந்தப் பரிந்துரையின்படி, 1959ஆம் ஆண்டுச் செப்டம்பர் மாதத்தில், ஸ்ரீவைகுந்தலால் மேத்தா (Sri Vaikuntalal Metha)) அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவை இந்திய அரசு அமைத்தது. அந்தக் குழுவின் அறிக்கை 1960ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

அக் குழுவினர் கருத்தின்படி, முதலாவதாகக் குடியானவர் விவசாயத் திட்டங்களின் முழுப் பயனைப் பெறுவதற்கும், விவசாய உற்பத்திப் பெருக்கத்திற்காகக் கிடைக்கும் வசதிகளைப் பெறுவதற்கும் வகை செய்ய, விவசாயக் கடன்வசதி, விநியோகம் பற்றிய ஒரு சுறுசுறுப்பான வேலைத்திட்டம் அவசியமாக இருக்கிறது. ஆகையால், நிதிநிலைமையிலும், மற்ற வகையிலும் தங்களைப் பலப்படுத்திக்கொண்டு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த விவசாய வளர்ச்சித் திட்டங்களின் கீழ் ஏற்படுத்தப்பட்டிருந்த வசதிகளின் முழுப் பயனை எல்லாக் குடியானவர்களும் பெறுவதற்கு வகைசெய்யுமாறு கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் கடன், விநியோக நடவடிக்கைகளின் பரப்பை விரிவு செய்யவேண்டும்; இரண்டாவதாக, பிரதம கூட்டுறவுச் சங்கங்களைக் குறித்த மிக முக்கியப் பரிந்துரையாவது: ஒரு பிரதம கூட்டுறவுச் சங்கம் பொருளாதாரத் தன்னிறைவானதாக இருக்கவேண்டுமென்பது. அதாவது, பிரதம சங்கம் மிகப் பெரியதாகவோ மிகச் சிறியதாகவோ இல்லாமல், ஊதியம்பெறும் சிப்பந்தியுடன் பங்குமூலதனத்தின்மீது ஒரு நியாயமான விளைவுத் தொகையைச் செலுத்துவதற்குப் போதுமான இலாபத்தைச் சம்பாதிப்பதற்குத் தக்க பலத்துடன் இருக்கவேண்டுமென்பது. பொருளாதாரத் தன்னிறைவு போன்று கூட்டுறவுப் பண்பும் முக்கியமானது என்றும், கூட்டுறவுச் சங்கம் ஒரு பொதுமுறையான (Impersonal) நிறுவனமாகத் தன்னை விரிவுசெய்துகொள்ளக் கூடாதென்றும் அக் குழு வலியுறுத்தியது. அக் குழுவின் கருத்துப்படி, உறுப்பினர்களின் எண்ணிக்கை மிகப் பெரியதாக இருக்கக் கூடாது; மற்றும், விவகார எல்லை மிகப் பரந்ததாக இருக்கக்கூடாது; ஒரு சங்கத்தில் சேர்க்கப்பட்ட எந்தக் கிராமமும், கிராமத் தலைமையிடத்திலிருந்து மூன்று அல்லது நான்கு மைல்களுக்கு மேற்பட்ட தூரத்தில் இருக்கக்கூடாது; சங்கத்தால் தழுவப்பட்ட மக்கள் தொகை 3000, அல்லது 600 குடும்பங்கள், அல்லது 500 பயிரிடுங் குடும்பங்களுக்கு மேற்படக்கூடாது. இந்தப் பரிந்துரையானது, கிராமக்கடன் விசாரணைக் குழுவினரால் சிபாரிசு செய்யப்பட்ட

பெரிய அளவுச் சங்கங்களை அமைக்கும் கொள்கையின் ஒரு மாற்றுதலாக மட்டுமன்றி, கிராமச் சங்கங்களின்மூலம் கடன் வழங்குதலுக்காக விருப்பப்படவேண்டிய ஒரு குறிக்கோள், 'ஒரு கிராமம், ஒரு சங்கம்' என்று ஒரு சாராரால் ஆதரிக்கப்பட்ட கொள்கையின் மாற்றுதலாகக்கூட இருந்தது. தங்களால் சிபாரிசு செய்யப்பட்ட தன்னிறைவுள்ள அமைப்புகளின் மாதிரி வகைகளுக்கு அணுகுவதில் நெகிழ்ச்சியுடைமைக்குத் தேவையிருக்கும் என்றும் அக் குழுவினர் எண்ணினர். பிரதம கூட்டுறவுச் சங்கத்தில் அரசு பங்காளித்துவத்தைக் குழுவினர் சிபாரிசு செய்தனர். ரூபாய் 1000-த்திலிருந்து ரூ. 10,000 வரை பங்கு மூலதன உதவித்தொகையாக, சரிசம அடிப்படையில் (matching basis) அரசு வழங்கலாம். பிரதம கடன் சங்கங்களுக்கு 5 வருடங்களுக்கு மேற்படாத ஒரு காலவரைக்கு ஒவ்வொரு சங்கத்திற்கும் ரூபாய் 1,200 அளவிற்கு மானியங்கள்கூடக் கொடுக்கப்படவேண்டுமென்று அக் குழுவினர் பரிந்துரை வழங்கினர்.

அக் குழுவினர், கடன்வழங்கும் கொள்கைக்குத் தொடர்பாகவும் சிபாரிசுகள் செய்திருந்தனர். அதாவது, பயிரிடும் உறுப்பினர்களுக்காகக் கடன்வழங்குதலைக் குறித்துப் பயிரிடுவதற்காகக் கடன் தேவைப்படுகிறது என்பதில் வலியுறுத்தல் இருக்க வேண்டும். அதாவது, உற்பத்திக் காரியத்திற்காகக் கடன் கொடுக்கப்பட்டதாக இருக்கவேண்டும். சொந்த நிலமில்லாமல் பயிரிடும் குடியானவர்களும், நாணயமாகவும் அவசியமான திருப்பிச் செலுத்தும் சக்தியை உடையவர்களாகவும் நபர்ஜாமீன் களை அளிப்பவர்களாகவும் இருந்தால், அவர்களுக்குங்கூடக் கடன்கள் வழங்கப்படவேண்டும். எனினும், நபர்ஜாமீன்கள் கட்டாயமாக நிலமுடையவர்களாக இருக்கத் தேவையில்லை. அத்தகைய பயிரிடுங் குடியானவருக்கு அவர் பயிரிடும் நில அளவின்பேரிலும், விவசாய உற்பத்திக்காக அவருடைய தேவைகளின் அடிப்படையின் பேரிலும் அவருக்குச் சங்கம் கடன் வழங்கலாம்; கடன் வாங்குபவர் கொடுக்கக்கூடிய ஆதாரத்தைவிட—நிலவுடைமை ஆதாரம் அல்லது இதர வகை ஆதாரம் — மேலான முக்கியத்துவம் வாய்ந்தது, அவருடைய கடன் வாங்கும் தகுதி. பிரதம கடன்வசதிச் சங்கங்கள்மூலம் விதைகள், உரங்கள், விவசாயக் கருவிகள் போன்ற பொருள்வடிவத்தில் சாத்தியப்படும் வரைக்கும் கடன்கள் கொடுக்கப்பட்டால் ஓரளவிற்குக் கடன்களின் துர்ப்பிரயோகத்தைத் தவிர்க்க முடியும்; சங்கத்தில் செலுத்தப்பட்ட பங்குமூலதனத்திற்கு 8 மடங்குகளிலிருந்து 10 மடங்குகளுக்கு மேற்படாமல் உறுப்பினர்கள் கடன்கள் கொடுக்கப்படலாம்

ஒரு பொதுவிதியாக ரூபாய் 500-க்குக் குறைந்த கடன்களுக்காக அடைமான ஆதாரம் கட்டாயப்படுத்தத் தேவையில்லை; ரூபாய் 500-க்கும், ரூபாய் 1,000-த்திற்கும் இடையே யுள்ள தொகைக் கடன்கள், நிலத்தின்மீது ஒரு பற்றுப்பொறுப்பை (Charge) ஏற்படுத்தும் கடன் வாங்குபவர்களுக்கு வழங்கப்படலாம்; ரூபாய் 1,000-க்கு மேற்பட்ட கடன்களுக்காக அடைமான ஆதாரத் தைப் பெறுவது விரும்பத்தக்கதாக இருக்கும்.

மூன்றாவதாகப் பிரதம கூட்டுறவுச் சங்கங்கள், மத்திய வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் ஆகியவைகளின் கடன் வரம்புகளைத் தாராளமாக்குதலைக் குறித்தவையாகும். பிரதம கடன் சங்கங்களைக் பொறுத்தவரை, அக் குழுவினர் பொதுவாக வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கத்திற்கு — குறிப்பாகத் தன்னிறைவுள்ள வகை அமைப்புகளுக்கு—சாதகமாக இருந்தனர். தற்போதுள்ள வரம்புகள் போதுமானவையாக இருக்கலா மென்று அக் குழுவினர் கருதினாலும், விசேஷச் சூழ்நிலையில் வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்க விஷயத்தில் கடன்வரம்பு அதன் சொந்த நிதிகளில் 10 மடங்குக்கும், 12 மடங்குக்கும் இடையே உயர்த்தப்படலாமென்றும், வரையறுக்கப்படாத சங்க விஷயத்தில் கடன் வரம்பு அதன் நிகர ஆஸ்திகளின் மதிப் பில் 1/16 வரைக்கும் உயர்த்தப்படலாம் என்றும் பரிந்துரை செய்த னர். மற்றும், சங்கத்தில் ஒருசில உறுப்பினர்கள் கடன் தவணை யைச் செலுத்தத் தவறிய காரணத்திற்காகத் தவணைப்படி நடக் கிற மற்ற நல்ல உறுப்பினர்கள் கடன்கொடுக்கப்படாமல் அவதிப் படக்கூடாது என்றும் அக் குழுவினர் சிபாரிசு செய்தனர். அதே சமயத்தில், கடன் வழங்கும் ஒரு வங்கியானது, தவணை தவறிய பாக்கிகள் அதிகமாகவுள்ள ஒரு சங்கத்திற்கு நிதிகளைத் தொடர்ந்து வழங்கமுடியாதாகையால் அக் குழுவினர், உள்ளூர் நிலைமைகளை அனுசரித்து ஒவ்வொரு மாநிலமும் தக்கதான தரங்களை (standards) நிர்ணயிக்க வேண்டுமென்று அறிவுரை கூறினர். மத்திய வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகளைப் பொறுத்தவரை யில் அப்போதிருந்த தரங்களாவன: மத்தியக் கூட்டுறவு வங்கி களைப் பொறுத்தமட்டில் அவைகளின் சொந்த நிதிகளுக்கு 10-லிருந்து 12 மடங்குகள் வரைக்கும் என்றிருந்ததும், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் விஷயத்தில், அவைகளின் சொந்த நிதி களுக்கு 15 மடங்குகள் என்றிருந்ததும் போதுமானவையே என்றும் கருதினர். ஆனால், தனிப்பட்ட சந்தர்ப்பங்களிலும், விசேஷத் திட்டங்கள் அல்லது நிதிகளுக்கான தேவை என்ற சந்தர்ப்பங்களிலும், இந்தக் கடன் வரம்பு மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் 12-லிருந்து 15 மடங்கு வரைக்கும், மாநிலக்

கூட்டுறவு வங்கிகளைப் பொறுத்தவரையில், 15-லிருந்து 20 மடங்கு வரைக்கும் உயர்த்தப்படலாம் என்றும் குழுவினர் சிபாரிசு செய்தனர்.

நான்காவதாக, அக் குழுவினர் பரிந்துரைகளின் அடுத்த வரிசையானது, கூட்டுறவுச் சங்கங்களின் நிதி ஆதாரங்களை அதிகப் படுத்தும் பிரச்சினைக்குத் தொடர்பானதாகும். பெருகியுள்ள கடன் தேவைகளின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்வதற்காக, உள்ளான நிதி ஆதாரங்களும் (Internal resources), வெளி யான நிதி ஆதாரங்களும் (External resources) மிகைப்படுத்தப் படவேண்டும். உள்ளான செல்வாதாரங்களைப் பெருக்குவதற் காகப் பிரதம சங்கங்கள் ஒரு பலமான பங்கு மூலதன அடித் தளத்தை அமைக்கவேண்டும். மற்றும், தேவைப்படும் கடன் தொகைகளின் பத்து சதவிகித மட்டத்திற்கப்பாலும், பங்கு மூலதனத்தை அதிகரிப்பதற்குத் தக்க ஏற்பாடுகளும் செய்யப்பட வேண்டுமென்றும், அதற்கான கூடுதலான தொகையானது, ஓர் உறுப்பினர் அறுவடைக் காலத்தில் தம் விளைபொருள்களை விற்கும் சமயத்திலோ அவருடைய சேமிப்பிலிருந்து சில பகுதியைக் கொடுப்பதற்குச் சௌகரியப்படும் வேறு எந்தச் சமயத்திலோ வசூல் செய்யப்படவேண்டும் என்றும் அவர்கள் யோசனை கூறினர். மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் பங்கு மூலதனமும்கூடப் பலப்படுத்தப்படவேண்டும்; பிரதம கடன் வசதிச் சங்கங்கள் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் பங்கு மூல தனத்திற்குத் தங்கள் கடன் தொகையில் 1/20 பகுதியைச் செலுத்தவேண்டும்; மற்றும், அரசு பங்காளித்துவத் திட்டத்தின் கீழ், அத்தகைய பங்காளித்துவம் சாதாரணமாகச் சங்கத்தின் தனிநபர் உறுப்பினர்களால் செய்யப்படும் முயற்சிகளுக்கு ஒத்திருக்கவேண்டும்; அரசிடமிருந்து வழங்கப்படும் பங்கு மூலதன உதவித்தொகை ரூ. 1,000-லிருந்து 10,000-க்கு இருக்கலாம்; அரசிடமிருந்து குறைந்தபட்சப் பங்கு மூலதன உதவித்தொகை ரூபாய் 1,000-த்தை அது பெறவேண்டுமானால், 3,000-க்குக் குறையாமல் கூடுதலான பங்கு மூலதனத்தை 3-லிருந்து 5 ஆண்டுகள் காலத்தில் சங்கம் வசூலிக்க வேண்டு மென்றும் கூறினர். உள்ளான செல்வாதாரங்களின் இதர வகையானது வைப்புகளாகும் (Deposits). ஒரு கிராமச் சங்கம் முன்னைவிட அதிகமான கிராம வைப்புகளைத் திரட்ட முடியவேண்டும். பெருகிவரும் கடன்கோரிக்கைகளை நிறைவு செய் வதற்காக நகர்ப்புறங்களிலிருந்து வைப்புகளைத் திரட்டுவதற்கான முயற்சிகளை, மாநில வங்கிகளும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் எடுக்கவேண்டிய அவசியத்தையுங்கூட அவர்கள் வலியுறுத்தி

னர். இது குறித்து, அவர்கள் கூறிய யோசனைகளாவன: மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் ஆகியவை தங்கள் பங்கு மூலதனத்திற்கு, அரசு உதவித் தொகையைப் பெறுதல்; வைப்புகளுக்குப் போட்டியில் வெல்லக்கூடிய வட்டிவீதங்களை வழங்குதல்; உள்ளாட்சி நிறுவனங்கள், கல்வி நிறுவனங்கள் முதலியவை தங்கள் நிதிகளைக் கூட்டுறவு வங்கிகளில் வைப்புகளாக முதலீடு செய்வதற்காக அரசால் விதிக்கப்பட்ட தடைகளை விலக்குதல்; நடப்புக் கணக்குகளைத் தொடங்குதல், காசோலைகளையும் உண்டியல்களையும் வசூலித்தல், கேட்புப் பணவிடைகளை வழங்குதல் முதலியன போன்ற நியாயமான முறையில் வங்கித்தொழில் வசதிகளைத் தனி நபர்களுக்கு வழங்குதல்; மத்திய வங்கிகள் தக்க இடங்களில் தங்கள் கிளைகளைத் தொடங்குதல் முதலியன போன்ற பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்பவை. வெளியான செல்வாதாரங்களைப் பெருக்குவதற்காக நிதிகளைத் திரட்டுவதைப் பொறுத்தமட்டில், ரிசர்வ் வங்கியும், மாநில வங்கியும் ஒரு முக்கியப் பணியைப் புரியவேண்டும்; ரிசர்வ் வங்கியிலிருந்து மிக அதிகமான உதவி தேவைப்படுகிறது; ரிசர்வ் வங்கி, விவசாய வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதற்கும், கூட்டுறவுக்கடன் அமைப்புகளின் பலத்தையும் செயல் திறமையையும் அதிகப்படுத்துவதற்கும், அநேக ஆண்டுகளுக்கு ஓர் உன்னதமான பங்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் கூறி, விவசாயக் காரியங்களுக்காக மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சார்பில், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குக் குறுகியகாலக் கடனுதவி அளிப்பதற்காக, ரிசர்வ் வங்கி பின்பற்றவேண்டிய புதிய தாராளமாக்கப்பட்ட விதிமுறையினையும் அவர்கள் யோசனை கூறினர். அவ்வாறு ரிசர்வ் வங்கி கூட்டுறவு மத்திய வங்கிகளின் சார்பில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு முன்னைவிட அதிகமான மத்தியகால நிதிகளை வழங்குவதற்கு ஒரு புதிய விதிமுறையினையுங்கூட (formula) யோசனை கூறினர். ரிசர்வ் வங்கிக்கு அடுத்தாற்போல், குறிப்பாக, விற்பனை வசதித் திட்டங்களுக்கும் உணவுத் தானியங்கள் கொள்முதல்—விநியோகத்திற்கும் நிதி வழங்கும் விஷயத்திலும், மாநில நிலவள வங்கிகள் முதலியவைகளுக்குத் தாற்காலிகக் கடன்வசதி வழங்கும் விஷயத்திலும், நம் நாட்டில், மிகப்பெரிய நிதி வழங்கும் அமைப்பு இந்திய தேசிய வங்கி (State Bank of India) ஆகும். பிரதம சங்கங்களின் நிதி ஆதாரங்களைப் பெருக்குவதற்கும், விவசாயக் காரியங்களுக்காகக் கொடுக்கப்படும் தக்காவிக் கடன்கள், சமுதாய வளர்ச்சித் துறையால் வழங்கப்பட்ட கடன்கள், மற்ற எல்லாக் கடன்களும் கிராமச் சங்கங்கள்மூலம் வழிப்படுத்தப்படவேண்டுமென்றும்;

ஆயுள் ஈட்டுறுதிக் கழகம் (L.I.C.), மாநில நிலவள வங்கிகளின் கடன்பத்திரங்களுக்குப் பெருமளவான தொகைகளை முதலீடு செய்யவேண்டுமென்றும் குழுவினர் யோசனை கூறினர்.

ஐந்தாவதாக, குழுவினரின் பரிந்துரைகளின் அடுத்த வரிசை, கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களுக்குத் தொடர்பானதாகும். கடனை விற்பனையுடன் இணைப்பதற்கான அவசியத்தையும், நாடு முழுவதிலும் இந்த ஏற்பாட்டைப் பலப்படுத்துவதற்கான அவசியத்தையும் குழுவினர் வலியுறுத்தினர். விற்பனைவசதிச் சங்கம், உற்பத்தியாளர்களிடமிருந்து அவர்களின் விளைபொருள்களை மொத்தமாகக் கொள்முதல் (outright purchase) செய்ய வேண்டுமென்றும், அவ்வாறு மொத்தமான கொள்முதல் பெருமளவில் செய்வதில் ஏற்படும் நட்ட ஆபத்திலிருந்து சங்கங்களைக் காப்பாற்றுவதற்காக, மாநில அரசு, கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து, தான் கொள்முதல் செய்வதற்குத் தயாராக இருக்கும் ஒருசில குறைந்தபட்ச விலையை (minimum price) நிர்ணயிக்க வேண்டும் என்றும் கூறினர்.

ஆறுவதாக, தங்கள் பரிந்துரைகளை அமல்படுத்துவதற்காக வகை செய்யும்பொருட்டுச் சில சட்டமியற்றுதல், நிருவாகம், அமைப்பு ஏற்பாடுகளையுங்கூட அவர்கள் யோசனை கூறினர். அத்தகைய யோசனைகளில் முக்கியமானதான ஒன்று, சங்கத்தின் உறுப்பினர், தாம் எழுத்தில் ஓர் உறுதிமொழியைக் கையொப்பமிடுவதன் மூலம், தம் சொத்தின்மீது ஒரு பற்றுப்பொறுப்பை (charge) ஏற்படுத்துவதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் அவசியப்படின் திருத்தப்படலாம் என்பதாகும். இவ்வாறு செய்வதன் மூலம், ஓர் உறுப்பினர், அடைமானப் பத்திரம் பதிவு செய்வதிலுண்டான செலவிலிருந்தும் தொந்தரவிலிருந்தும் காப்பாற்றப்படுகிறார். உறுப்பினரால் விளைவுசெய்யப்பட்ட பயிர்களின்மீது சங்கத்திற்குச் சாதகமாக ஒரு பற்றுப்பொறுப்பை ஏற்படுத்துவதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் ஒரு சரத்தையும், அந்தப் பற்றுப்பொறுப்பை நிறைவேற்றுவதற்காக விதிகள் அமைப்பதையுங்கூட அவர்கள் யோசனை கூறினர். கடன்களைப் பயனுறுதியான வகையில் வசூல் செய்வதற்காக மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு மேற்பார்வை அதிகாரங்களையும், கூட்டுறவு இலாக்காவிற்கு நிறைவேற்றுதல் அதிகாரங்களையும் (execution powers) ஒப்படைத்தலுக்கு அவர்கள் சாதகமாக இருந்தனர். சங்கங்களின் நிருவாகங்களை ஒழுங்குபடுத்துவதற்காகத் தணிக்கைச் சிப்பந்திகளும் நிருவாகச் சிப்பந்திகளும் பலப்படுத்தப்பட வேண்டுமென்றும் அவர்கள் பரிந்துரை செய்தனர்.

ஏழாவது வரிசையாகவும் மிக முக்கியமானவையுமாக இருந்த அக் குழுவினரின் பரிந்துரை, சிறப்பு நிதிகளை ஏற்படுத்துவதற்கும், சங்கங்களின் நலன்களையும் மத்திய வங்கிகளின் நலன்களையும் பாதுகாப்பதற்கான உத்தரவாதங்களை ஏற்படுத்துவதற்கும் தொடர்பானது. நிதிவழங்கும் வங்கிகளும், கடன்வசதிச் சங்கங்களும், தங்கள் 'விவசாயக் கடன்களை நிலைப்படுத்தும் நிதியைக்' கூடுமான அளவு வரை அமைத்து, அந்த நிதி பயன்படுத்தப்படவேண்டிய காரியங்களையும் வகைகளையும் தெளிவுபடுத்துவது அவற்றின் கடமையாகும் என்றும் அவர்கள் கருதினர். ரிசர்வ் வங்கியும், தன் தேசிய விவசாயக் கடன் நிலைபேருக்க நிதியைப் பரிபாலனம் செய்வதற்கான விதிகளை வகுக்கவேண்டும். அப்போதுதான் கூட்டுறவு நிதிவழங்கும் அமைப்புகள் தங்களுக்கு அந்த நிதியிலிருந்து உதவி கிடைக்க முடியும் என்பதைத் தெரிந்துகொள்ள முடியும். அரசுகள், நிவாரண உத்தரவாத நிதியை (Relief & Gurantee Fund) அமைப்பதற்கான அவசியத்தையுங்கூட அவர்கள் கூறினர். இந்தச் சந்தர்ப்பத்தில், அவர்கள் செய்த பரிந்துரையின்படி, கூட்டுறவுச் சங்கங்களின் வராக்கடன் காப்பு இருப்புக்கு அரசு ஒரு மொத்தமான உதவித் தொகையை அளிக்கவேண்டும்; பயிரிடும் குடியானவர்களுக்கும் இறுதிநிலைப் பயிரிடும் குடியானவர்களுக்கும், கீழ் இறுதிநிலைப் பயிரிடும் குடியானவர்களுக்கும் கடன்களைக் கொடுப்பதற்கு நிர்ப்பந்தப்படுத்தப்படுமாகையால், ஒரு வெறும் உத்தரவாதம் நிதி வழங்கும் நிறுவனங்களில் அதிகமான அக்கறையை உண்டுபண்ணுகிறதில்லை. மேலும், அத்தகைய அரசு உத்தரவாதமானது, வசூல் முயற்சிகள் பூர்த்தி செய்யப்பட்டு அவை வீணுகமுடியும் சமயங்களில் மட்டுந்தான் பெறமுடியும். நிதி வழங்கும் வங்கிகள் ஒரு துணிச்சலான விரிவாக்கத் திட்டத்தை மேற்கொள்ளுவதற்காக அதன் உத்தரவாதத்தைவிட உருப்படியானதும் நேரடியானதுமான ஓர் உற்சாகமூட்டுதல் அவசியம் என்று கருதி, ஒவ்வொரு சங்கத்தின் நிதிகளுக்கும், ஒரு வருடத்தில் அதற்கு முந்திய வருடத்தில் கொடுக்கப்பட்டிருந்த கடன்களுக்கு மேற்பட்ட அளவில் அதனுல் கொடுக்கப்பட்ட கடன்களின் 3 சதவீதத்தில் ஒரு மொத்தமான உதவித் தொகையை (outright contribution) அரசு கொடுக்கவேண்டுமென்றும் யோசனை கூறினர். அவ்வாறே மத்திய வங்கிகளுக்கும் 1 சதவீதம் மொத்தமான உதவித்தொகை யளிக்கப்படவேண்டும். சங்கங்களாலும், மத்திய வங்கிகளாலும் வாங்கப்பட்ட இந்த உதவித்தொகைகள் ஒரு 'சிறப்பு வராக்கடன் காப்பிருப்புக்கு' (Special bad debt reserve) வரவு வைக்கப்படவேண்டும். இந்தச் சிறப்புக் காப்பிருப்பானது, சங்கங்களின் இலாபங்களி

லிருந்து ஏற்படுத்தப்படும் 'வராக்கடன் காப்பிருப்பிலிருந்து' (bad debt reserve) வேறுபட்டதாகும்.

எட்டாவதாகவும் இறுதியாகவும், அக் குழுவினர் ஒரு நலன் தருகின்ற கொள்கையைத் தெரிவித்தனர். அதாவது, கூட்டுறவுக் கொள்கையில் அடிக்கடியான மாற்றங்கள் நிறைவேற்றப் படக்கூடாது. இந்தக் கூற்று, பிரதம கூட்டுறவுச் சங்கங்களுக்கு விசேஷத் தொடர்புள்ளது. முழு ஆலோசனைக்குப் பிறகு ஒரு கொள்கை ஒரு தடவை ஏற்றுக்கொள்ளப்படின், அந்தக் கொள்கை ஒரு நியாயமான நீண்டகால வரைக்கும் பின்பற்றப் படுவது அத்தியாவசியமாகும். அப்பொழுதுதான் ஒரு நியாய மான காலவரையில், அந்தக் கொள்கையின் செயற்பாட்டிற்கு வாய்ப்பிருப்பது மட்டுமன்றி, அத்தகைய கொள்கையின் பலன் களையும் மதிப்பீடு செய்ய முடிகிறது.

அக் குழுவினரின் பரிந்துரைகள், பொதுவாகக் கூட்டுற வாளர்களிடையேயும், அரசுகளிடையேயும் ஏற்றுக்கொள்ளப் பட்டன; வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறு அளவுக்கு அந்தப் பரிந்துரைகள் அமல் செய்யப்பட்டன. ஒரு பிரதம கடன் சங்கம், தன்னிறைவான ஓர் அமைப்பாக இருக்கவேண்டு மென்ற கருத்தமைப்பு இன்றுங்கூட நடைமுறையில் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. வெவ்வேறு மாநிலங்களில் இந்த வழிகளில் பிரதம கடன் சங்கங்களைச் சீரமைப்பதற்கும் அல்லது புதிய பிரதம கடன் சங்கங்களை அமைப்பதற்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. வைப்புகளைச் சேகரிப்பதற்காக, மத்திய வங்கிகள் பெருகிவரும் எண்ணிக்கையில் தங்கள் கிளைகளை நிறுவி வருகின்றன. குழுவினர் சிபாரிசு செய்த வழிகளில் ரிசர்வ் வங்கி அதிகமான கடனுதவியைக் கொடுத்து வருகிறது. உண்மை யாகவே, அக் குழுவினரின் அறிக்கையானது நாட்டில் சரி யானதும் திறனுள்ளதுமான முறைகளில், கூட்டுறவு இயக்கத் தின் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் குறிப்பிடத்தக்க ஒரு பயன்படும் செயலைப் புரிந்திருக்கிறது.

## தக்காவிக் கடன்கள், கூட்டுறவுக் கடன்கள் ஆகியவை பற்றிய குழு (1962)

(Committee on Taccavi Loans and Co-operative Credit)

இந்தக் குழு, 1962ஆம் ஆண்டில், இந்திய அரசின் சமுதாய வளர்ச்சி மற்றும் கூட்டுறவுத் துறையால் அமைக்கப் பட்டது. குடியானவர்களுக்குத் தக்காவிக் கடன்கள் விழங்குதலுக்கான அப்போதிருந்த ஏற்பாடுகளைப் பரிசீலனை செய்து, கூட்டுறவு நிறுவனங்களின்மூலம் தக்காவிக்

கடன்களை வழங்கும் கொள்கையின் பயனுறுதியான அமல் பாட்டை உறுதியாக்கவல்ல நடவடிக்கைகளைக் கூறவும் அது கேட்டுக்கொள்ளப்பட்டது. அதே ஆண்டில், அக் குழு, தன் அறிக்கையை அளித்தது. தக்காவிக் கடன் வசதியை விரிவாக்கு வதற்கான பரப்பு (scope) மிகவும் வரையறுக்கப்பட்டதான ஒன்ருக இருந்தது என்றும், கூட்டுறவு முறையில் கடன் வழங்குவதே அனுகூலமாக இருந்தது என்றும் கூறியது. அதற்குக் காரணம், கூட்டுறவு முறையானது உள்ளூர்ச் சேவைகளையும், சேமிப்புகளை யும் சேகரிக்க முடிந்து, பயன்பெறுபவர்களால் (கடன் பெறுபவர் களால்) அதில் நேரடியான பங்குகொள்ளுதலுக்கு வாய்ப்புகளை யும் அது அளிக்கிறது என்பதாகும். தக்காவிக் கடன்கள் கூட்டுறவு நிறுவனங்களின்மூலம் வழிப்படுத்தப்படவேண்டியது என்றும், ஆபத்துக் கடன்கள் (Distress loans) மட்டுமே அரசால் நேரடி யாக வழங்கப்படவேண்டுமென்றும் அக் குழு சிபாரிசு செய்தது. மற்றும், கூட்டுறவு அமைப்பு, தேவையான பலத்தை யடைந்தில் லாத மாநிலங்களில், அங்குக் கூட்டுறவு அமைப்புப் போதுமான அளவு பலப்படுத்தப்படாமலிருக்கும்வரை அரசு நேரடியாகக் கடன் களைத் தொடர்ந்து கொடுத்து வரலாம் என்றுங்கூட அது பரிந் துரை செய்தது. உண்மையாகவே, இந்தப் பரிந்துரை கூட்டுறவுக் கடன்பற்றிய அனைத்திந்தியக் குழுவின் பரிந்துரைகளில் ஒன்ருகவுங் கூட இருந்தது. அந்தக் காரியத்திற்காக, கூட்டுறவுக் கடன் அமைப்புகள்வசம் குறுகியகால, மத்தியகால நிதிகள் தக்காவிக் கடன்களாகப் பட்டுவாடாச் செய்யும்பொருட்டு ஒப்படைக்கப்பட வேண்டுமென்றும் அக் குழுவினர் யோசனை கூறியிருந்தனர். ஏனென்ருல், அவர்கள் கருத்தில் கிராம மட்டத்தில் கடன் வழங் வதற்காக ஒரேவொரு நிறுவன அமைப்பு மட்டுந்தான் இருக்க வேண்டும் — அது கூட்டுறவுச் சங்கம் ஆகும் — என்பதும் இந்த விளைவுக்கு இறுதியாக வழிசெலுத்தும் வகையில் அரசு கொள்கை இருக்கவேண்டும் என்பதும் ஆகும். இந்தப் பரிந்துரைகளை முன் னிட்டு, இந்திய அரசு, தக்காவிக் கடன்களைக் கூட்டுறவுச் சங்கங் களின்மூலம், கட்டங்களைக் கொண்ட செயல்திட்டத்திற்கிணங்க வழிப்படுத்த முடிவுசெய்திருக்கிறது. தக்காவிக் கடன்கள் வழங்கு வதை எல்லா மாநிலங்களிலும் கூட்டுறவுச் சங்கங்களால் மேற் கொள்ளப்படு மென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## கூட்டுறவைப் பற்றிய மீர்தாக்குழு (1965)

(Mirdha Committee on Co-operation)

1964ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில், இராஜஸ்தான் சட்டப் பேரவைத் தலைவராகவிருந்த ஸ்ரீ இராம் நிவாஸ்

மீர்தா (Shri Ram Nivas Mirdha) அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவை இந்திய அரசு அமைத்தது. பல்வேறு வகையான கூட்டுறவு நிறுவனங்களின் உண்மையான தன்மையை அறிவதற்காகத் தரங்களையும், சூத்திரங்களையும் நிர்ண யிப்பதற்கும், உண்மையல்லாத போலிச் சங்கங்களைக் களைந்து விடுவதற்கும் (Weed out), அத்தகைய சங்கங்கள் பரவுதலைத் தடுப்பதற்கும் தக்க நடவடிக்கைகளை யோசனை கூறுவதற்கும் அக் குழுவினர் கேட்டுக்கொள்ளப்பட்டனர். அப்போதிருந்த கூட்டுறவுச் சட்டத்தைப் புனர்ஆய்வு செய்து, கூட்டுறவு நிறு வனங்களில் ஊன்றிய நலமிகளிருப்பதைத் தடுப்பதற்கும், அவர் களை நீக்குவதற்கும் தேவைப்படும் சட்ட நடவடிக்கைகளையும், நிருவாக நடவடிக்கைகளையும் யோசனைகளைக் கூறவுங்கூட அக் குழுவினர் கேட்டுக்கொள்ளப்பட்டிருந்தனர். மற்றும், கூட்டுறவு இயக்கத்தின் தற்சார்புத் தன்மையையும், தன்னொழுங்குபடுத்தும் தன்மையையும் (Self reliance and Self regulation) வளர விடாமல் தடுக்கின்ற காரணிகளைப் பரிசீலனைசெய்து, தக்க பரி காரங்களை யோசனை கூறவும் அவர்கள் எதிர்பார்க்கப்பட்டனர். அக் குழுவின் அறிக்கை 1965ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் வெளியிடப்பட்டது. அக் குழுவின் முக்கியமான பரிந்துரைகள் பின்வரும் தலைப்புகளின்கீழ்த் தொகுக்கப்படலாம். (i) கூட்டுறவு நிறுவனங்களின் உண்மையான தன்மையை நிச்சயப்படுத்து வதற்கும், உண்மையல்லாத போலிக் கூட்டுறவு நிறுவனங் களின் அமைப்பையும் வளர்ச்சியையும் தடுப்பதற்கும் அவசிய மான நடவடிக்கைகள். (ii) கூட்டுறவு நிறுவனங்களில் ஊன்றிய நலமிகளை நீக்குவதற்கான நடவடிக்கைகள். (iii) கூட்டுறவு நிறுவனங்களுக்காக நிதி ஆதாரங்களைத் திரட்டுதல். (iv) கூட்டுற வுக் கல்வி. இதரப் பரிந்துரைகள், தணிக்கைக்கும் மேற்பார்வைக் கும் தொடர்புகொண்டவை.

முதலாவதாக, கூட்டுறவின் பொதுவான கொள்கைகளை யும் ஓர் அமைப்பானது உண்மையான கூட்டுறவு நிறுவனமா? இல்லையா? என்பதைத் தீர்மானிப்பதற்கு மேற்கொள்ளப்பட வேண்டிய சோதனைகளையும் சொல்லிவிட்டு, அக் காரியத்திற் கான தக்க சட்டமியற்றுதலையும் அக் குழுவினர் பரிந்துரை செய்தனர். உத்தேசிக்கப்படும் எந்தச் சட்டமியற்றுதலிலும் எளிய மனிதர்கள், சக்தி படைத்தவர்களின் சுரண்டலிலிருந்தும் பணக்காரர்கள் சுரண்டலிலிருந்தும் காப்பாற்றப்படவேண்டு மென்ற ஒரு தெளிவான சரத்து ஏற்படுத்தப்படவேண்டு மென்றும், சங்கங்கள், 'சமஉடைமை வகைச் சமுதாயத்தை' (Socialistic pattern of Society) நிறுவுவதற்கு வசதி செய்யும்

வகையில் செயற்படவேண்டுமென்றும் அவர்கள் வலியுறுத்தினர். கூட்டுறவு நிறுவனத்தின் உண்மையான தன்மையை நிச்சயப் படுத்தும்பொருட்டு, வட்டிக்கடன் கொடுப்பவர்கள் (Money-lenders) உறுப்பினர்களாகச் சேர்க்கப்படக்கூடாது என்ற ஒரு விலக்குக்கு மட்டுமுட்பட்டு, விவகார எல்லைக்குள் உள்ள எல்லாக் கிராம மக்களையும் உறுப்பினர்களாக ஒரு விவசாயக்கடன் சேவா சங்கம் சேர்த்துக்கொள்ள வேண்டும்; விவசாய விற்பனைவசதிச் சங்கம் விவசாயிகளை மட்டுந்தான் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும்; ஒரு தொழில் ஒப்பந்தக் கூட்டுறவுச் சங்கம் ஒப்பந்தக்காரர்களை (Contractors) உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளக்கூடாது; போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்களில் தொழிலாளிகள், வர்த்தகர்கள், வியாபாரிகள் மட்டுமே சேர்க்கப் படவேண்டும்; தங்கள் சொந்தப் போக்குவரத்து வியாபாரத்தை யுடைய நபர்கள் அத்தகைய சங்கங்களில் உறுப்பினர்களாகச் சேர்த் துக்கொள்ளப்படக்கூடாது; வீட்டுவசதிச் சங்கங்களில், சிறிய வருவாயுள்ள மக்கள் மட்டுந்தான் கூட்டுறவு வீட்டுவசதிச் செயல் திட்டங்களின் நன்மையை அடையவேண்டும்; நுகர்பொருள் களில் வர்த்தகம் செய்பவர்கள், நுகர்வோர் சங்கங்களில் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படக்கூடாது; தொழில்துறைச் சங் கங்களில், தொழிலாளிகள், கைவினைஞர்கள், மற்றும், தொழில் துறைச் சங்கத்தில் உண்மையாகச் சேவைசெய்ய விரும்பும் இதர நபர்கள் மட்டுமே உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட வேண்டுமென்று அவர்கள் பரிந்துரை வழங்கினர்.

இரண்டாவதாகக் கூட்டுறவு நிறுவனங்களில், ஊன்றிய நலமிகளை நீக்குவதற்காகத் திறந்த அங்கத்துவம் உறுப்பினராகச் சேர மறுக்கப்பட்டால் மேல்முறையீட்டிற்கான ஏற்பாடு; கடன் வசதிச் சங்கத்தின் நிருவாகக்குழு அங்கத்தினர்களுக்கும், அவர் கள் உறவினர்களுக்கும் கடன்கள் ஒப்பளிப்பதைச் சங்கத்தின் பேரவைக்குத் தெரிவித்தல்; முறையான இடைவேளைகளில் கூட்டங் களை நடத்துதல்; நிருவாகக் குழு அங்கத்தினர்களையும், அலுவலர் நிருவாகக் குழு அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுத்தல் போன்ற சில சீர்திருத்தும் நடவடிக்கைகளை (Corrective measures) அக் குழுவினர் பரிந்துரை செய்தனர். எனினும், சங்கத்தின் நிருவாகக் குழுவில் ஒரு நபரின் பதவிக்கால எண்ணிக்கையைக் குறித்தும் அல்லது ஒருநபர் ஒரே சமயத்தில் பதவி வகிக்கும் சங்க எண்ணிக்கையைக் குறித்தும், எந்தவிதமான சட்டத் தொடர்பான தடைகளை விதிப்பதற்கு அவர்கள் சாதகமாக இல்லை. ஏனென்றால், கூட்டுறவுச் சங்கங்கள் சுயஆட்சி நிறு வனங்களாக இருப்பதால், ஒரே நபரை அல்லது நபர்களைத்

தொடர்ந்து பல பதவிக் காலங்களுக்காகத் தேர்ந்தெடுப்பது சங்கத்தின் நலத்திற்கு உகந்ததா? இல்லையா? என்பதற்கு இறுதியான அதிகாரம் சங்கத்தின் பேரவை வசம்தானிருக்க வேண்டும் என்று அவர்கள் கருதினர். அத்தகைய விஷயங்களை முடிவு செய்வதற்காக இறுதியான அதிகாரி ஒவ்வொரு சங்கத்தின் பேரவையாக இருக்கவேண்டும். எனினும், இந்தத் திசையில், இயக்கத்திற்குள்ளிருந்தே ஒரு சில மரபு (convention) படிப்படியாக உருவாக்கப்பட்டால் அது ஒரு வரவேற்கத்தக்க நடவடிக்கையாக இருக்கும்.

மூன்றாவதாகக் கூட்டுறவு நிறுவனங்களுக்காக நிதி ஆதாரங்கள் சேகரித்தலைப் பொறுத்தமட்டில், அக் குழுவினர், கூட்டுறவுச் சங்கங்களில் தற்போதுள்ள அரசு பங்காளித்துவக் கொள்கை தொடர்ந்திருக்க வேண்டுமென்று வலியுறுத்திக் கூட்டுறவு நிறுவனங்களின் உதவிக்கு மத்திய அரசும், மாநில அரசுகளும் ஒரு பெருத்த வழியில் முன்வரவேண்டும் என்று பரிந்துரை செய்தனர். குறிப்பாகக் கூட்டுறவுச் சங்கங்களின் கடன் தேவைகளை நிறைவேற்றுவதற்கு, மத்தியகால நிதி ஆதாரங்களும், நீண்டகால நிதி ஆதாரங்களும் அதிகப்படுத்தப்படவேண்டும். நிதி வழங்கும் நிறுவனங்கள்பால் பொதுமக்கள் நம்பிக்கையை நிச்சயப்படுத்தும்பொருட்டு, வைப்புகளை ஈட்டுறுதி செய்தல் அல்லது உத்தரவாதம் செய்தலான தக்க ஒரு முறை உருவாக்கப்படவேண்டுமென்று அவர்கள் பரிந்துரை செய்தனர். நாட்டில் நிதிவழங்கும் கூட்டுறவு அமைப்புகளின் தலைமை நிறுவனமாக அமையும் ஒரு 'தேசியக் கூட்டுறவு வங்கி' (National Co-operative Bank) அமைக்கப்படவேண்டுமென்றும் சிபாரிசு செய்தனர். மத்திய அரசாலும் ரிசர்வ் வங்கியாலும் வழங்கப்படவிருக்கும் எல்லா நிதியும், இந்தத் தேசிய நிறுவனத்தின்மூலம் கூட்டுறவு இயக்கத்திற்குப் பாயவேண்டுமென்று அவர்கள் கருதினர்.

நான்காவதாகக் கூட்டுறவுக் கல்வியைப் பொறுத்தமட்டில், கூட்டுறவு இயக்கம் தற்சார்புடையதாகி, சரியானதும், நலன் தருகிறதுமான முறைகளில் வளர்ச்சியடைவதற்காகக் கூட்டுறவுக் கல்விச் செயல்திட்டங்களில் மிக அதிகமான வலியுறுத்தல் செலுத்தப்படவேண்டும்; கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றத்தில் உறுப்பினர் கல்விச் செயல்திட்டம் அடிப்படை முக்கியத்துவத்தையுடையது; சங்கங்களமைப்புச் செயல்திட்டத்தை அமல்படுத்துவதற்கு முன்பு, உறுப்பினர் கல்விச் செயல் திட்டம் அமல்படுத்தப்பட்டால், உண்மையல்லாத சங்கங்கள் அமைத்த

லுக்கு அது ஒரு தடைச் செயலாகவும் இருக்கும். கூட்டுறவு இயக்கமானது, அரசு பணியாளர்களல்லாதவர்களால் நடத்தப் படும் ஓர் இயக்கமாக (Deofficialisation of the Movement) இருக்கவேண்டும் என்ற கண்ணோட்டத்தில், கூட்டுறவு ஒன்றி யங்களைப் பலப்படுத்துவது முக்கியமாக இருக்கிறது; கூட்டுறவுப் பயிற்சியானது, உறுப்பினர்களிடையே தலைமை வகிப்புப் பண்புகளை வளர்ப்பதற்கு முயற்சிக்கவேண்டும். கூட்டுறவு ஒன்றியங்கள், கூட்டுறவுத் தலைவர்களைத் தயாரிக்கும் குழந்தை வளர்ப்பிடங் களாக (Nurseries) இயங்கவேண்டும் என்ற எதிர்நோக்கப் பட்ட பணியின் முக்கியத்துவத்தை இது அடிக்கோடிடுகிறது.

மீர்தாக் குழுவின் பரிந்துரைகள், 1965ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் நடைபெற்ற மாநிலக் கூட்டுறவு அமைச்சர் களால் பரிசீலனை செய்யப்பட்டுப் பொதுவாக ஆதரிக்கப் பட்டன. பரிந்துரைகளின்மீது, அவசியமாகத் தோன்றுகிற பொழுதெல்லாம் தக்க நடவடிக்கைகளை எடுப்பது மாநிலங் களின் பொறுப்பு. எனினும், அக் குழுவினர், ஊன்றிய நலமி கள் தொடர்பான பிரச்சினை விஷயத்தில் பிரதானமான அக் கறை கொண்டிருந்தனர் என்பது சுட்டிக்காட்டப்படவேண்டும். வெவ்வேறு மாநிலங்களும், இந்தப் போக்கு எங்கெங்குக் காணப் படுகிறதோ அங்கு அதைத் தடுப்பதற்குத் தக்க நடவடிக்கை களை — சட்டமியற்றுதல் மற்றும் பிறவகை முயற்சிகளை—எடுத்துக் கொண்டிருக்கின்றன.

## அனைத்திந்தியக் கிராமக் கடன் புனராய்வுக் குழு (1969)

## (All India Rural Credit Review Committee)

இந்தக்குழு, 1966ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில், திரு. பி. வெங்கட்டப்பையா(Thiru. B.Venkattappiah) அவர்கள் தலைமையின் கீழ், கிராமக்கடன் அமைப்பை மறுமதிப்பீடு செய்து பரிந்துரை களைச் செய்வதற்கு ரிசர்வ் வங்கியால் அமைக்கப்பட்டது. அக் குழுவினரின் அறிக்கை 1969ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில் வெளியிடப்பட்டது. அதில், நாட்டில் பொதுவாகவும்—குறிப் பாகத் தனிப்பட்ட மாநிலங்களிலும்—இருந்துவரும் கிராமக்கடன் பிரச்சினைகள் ஆய்வு செய்யப்பட்டிருக்கின்றன. விசாரணையின் போது காணப்பட்ட குறைகளைப் பரிகாரம் செய்வதற்காகப் பரிந்துரைகளைக் குழு செய்திருக்கிறது. இப் பரிந்துரைகளில் சில அமல் செய்யப்பட்டு வருகின்றன. இக் குழுவின் முதன்மையான பரிந்துரைகள் கீழே தரப்பட்டுள்ளன.

விவசாயத்தின் முன்னேற்றம், கூட்டுறவுக் கடன்வசதியின் முன்னேற்றத்துடன் முடிபோடப்பட்டிருக்கக்கூடாதென்று வலியுறுத்தியதுடன், அக் குழு 'பன்முகமை அணுகல்' — Multi-Agency Approach—என்று தற்போது வழங்கப்பட்டுவரும் இதர அமைப்புகளையுங்கூட யோசனை கூறியது. எனினும், சாத்தியப்படும் இடங்களிலெல்லாம் குடியானவர்களின் கடன் தேவைகளை நிறைவேற்றவேண்டிய அமைப்புகளுள் ஓர் அமைப்பாகக் கூட்டுறவு நிறுவனத்திற்கு முதலிடத்தை அது தந்துள்ளது. ஆகையால், அது, விவசாயக் கடன் வசதியை வழங்குவதற்காக அரசால் ஆதரிக்கப்பட்ட மிகத் தகுதிவாய்ந்த நிறுவனங்களாகக் கூட்டுறவு நிறுவனங்கள் ஏற்றுக்கொள்ளப்படவேண்டுமென்று பரிந்துரை செய்தது.

அண்மையாண்டுகளில், விவசாயத் துறையின் கடன் தேவைகள் பெருமளவு அதிகரித்துள்ளன வென்பதைக் குறிப்புச்செய்து, 1973–74ஆம் ஆண்டிற்குள் விவசாயத்தின் குறுகியகாலக் கடன்தேவை சுமார் ரூ. 200 கோடியளவிற்கும், மத்தியகாலக் கடன்முதலீடு ரூ. 500 கோடியளவிற்கும், நீண்டகாலக் கடன் முதலீடு 4ஆவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தின்போது ரூ. 1,500 கோடியளவிற்கும் இருக்குமென்று அக் குழுவினர் மதிப்பீடு செய்தனர்.

### கூட்டுறவு அமைப்பைப் பலப்படுத்துவதற்காகச் செய்யப்பட்ட பரிந்துரைகள்

கூட்டுறவுக் கடனமைப்பைப் பலப்படுத்துவதற்காக அக் குழுவினர் பல வரிசையான பரிந்துரைகளைச் செய்தனர். அவற்றுள் முக்கியமானவை பின்வருமாறு:

(i) கூட்டுறவு நிறுவனங்கள் நன்றாக இயங்கிக் கொண்டிருக்கும் இடங்களில், அவைகள் அரசு மானியங்களின்மூலமும் உதவிகள்மூலமும் மேலும் பலப்படுத்தப்படவேண்டும்.

(ii) கூட்டுறவுக் கடன்வசதியைக் கூட்டுறவு விற்பனை வசதியுடன் ஒன்றிணைக்கப்படுவதற்கு முயற்சிகள் எடுக்கப்படவேண்டும்.

(iii) ஊழியர்களின் பயிற்சிச் செயல்திட்டம் தீவிரப்படுத்தப்படவேண்டும்.

(iv) பங்கு மூலதன வடிவிலும், நிலவள வங்கிகளின் கடன்பத்திரங்களுக்கு அளிக்கும் ஆதரவு போன்ற வடிவத்திலும்

நிலவள வங்கிகளுக்கு மிகப்படியான நிதி ஆதாரங்கள் திருப்பப் படவேண்டும்.

(v) 1970–71ஆம் ஆண்டு இறுதியில், தன்னிறைவுள்ள அல்லது வருங்காலத்தில் தன்னிறைவாகக்கூடிய பிரதம விவ சாயக் கடன்வசதிச் சங்கங்கள் மட்டுமே, இயக்கத்திலியங்கி யிருக்கும் வண்ணம் சீரமைப்புப் பணித்திட்டம் துரிதமாக நிறை வேற்றப்படவேண்டும்.

(vi) பிரதம மட்டத்தில், 4ஆவது திட்டத்தின் இறுதி வரையிலாவது கடன் வசதியமைப்பைக் குறித்து ஏற்றுக்கொள்ளப் பட்ட கொள்கையில் எந்தப் பெரிய மாறுதலும் இருக்கக் கூடாது.

(vii) தக்காவிக் கடன்கள் தொடர்பாக, ஒரு கண்டிப்பான கொள்கை பின்பற்றப்படவேண்டும். பொதுவாக, கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர்களுக்கும், எந்தச் சந்தர்ப்பத்திலும் கூட்டுறவுத் தவணை தவறிய பாக்கிதாரர்களுக்கும் தக்காவிக் கடன்கள் கொடுக்கப்படக்கூடாது; வழங்கப்படுகின்ற தக்காவிக் கடன்கள் நிபந்தனைகள், கூட்டுறவுக் கடன்களுக்கான நிபந்தனை களைக் காட்டிலும் மேலான சாதகமானவையாக இருக்கக் கூடாது; கூட்டுறவுக் கடன் வசதியமைப்பு அல்லது அதன் புத்துயிரளிப்பு அல்லது நிறுவன அமைப்புமூலம் துணைக்கடன் வசதி ஏற்பாடுகளின் வளர்ச்சி, கடன் ஆதரவில்லாக் காரணத்தி ஞல் நடப்பு விவசாயப் பணித் திட்டங்கள் பாதிக்கப்படும் வண்ணம் நீண்டகாலம் செல்லுமென்று இருக்கக்கூடிய இடங் களில், தக்காவிக் கடன்கள், குறுகியகால வசதியாக வழங்கப் படலாம்; எனினும், இது, கண்டிப்பாகத் தாற்காலிகமானதும் வரையறுக்கப்பட்டதுமான ஓர் ஏற்பாடாகக் கருதப்படவேண் டும்; வெள்ளம், பஞ்சம் முதலியவை போன்ற மிகப்பரந்த ஆபத்து நிலவரங்களைச் சமாளிப்பதற்காகத் தவிர, தக்காவிக் கடன் கள் வழங்கப்படக்கூடாத ஒரு நாளை ஒவ்வொரு மாநிலமும் நிருணயிக்கவேண்டும்.

(viii) ரிசர்வ் வங்கியின்மீது கூட்டுறவு வங்கிகள் சார்ந் திருத்தல், எவ்விதமான பாராட்டக்கூடிய அளவுக்கும் குறை யாமலிருந்ததை அக் குழு குறித்தது. எனவே, கூட்டுறவு வங்கிகளால் வைப்புகள் சேகரிப்பதைத் தீவிரமாக்குவதற்கான உருப்படியான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டுமென்று அக் குழுவினர் பரிந்துரை செய்தனர். அத்தகைய முயற்சிகளுள், திறமையானதும் பல்வேறு வகையானதுமான வங்கித் தொழிற் சேவைகளை எதிர்பார்க்கப்படும் வைப்புத்தொகையாளர்களுக்கு

வழங்குதலும், வங்கிக் கிளைகளைத் திறத்தலுமாகும். கிராமப் புறங்களில் பெருமளவு வைப்புகளைச் சேகரிக்கும் வாய்ப்பு இருப் பதை அக் குழுவினர் குறிப்புச் செய்து, கிராமப்புறங்களில் எங்கெங்குச் சரியாகத் தோன்றுகிறதோ அங்கெல்லாம் வைப்பு களின்மீது மேலான வட்டிவிகிதங்களிருக்க வேண்டுமென்று யோசனை கூறினர். அதேமாதிரி, அவசியப்பட்டால் கடன் வழங்கப்படும் வட்டிவீதங்களையும் உயர்த்துவதற்கு ஒரு விருப்ப மும் இருக்கவேண்டும்.

(ix) ரிசர்வ் வங்கியைப் பொறுத்தமட்டில், அக் குழுவினர் ரிசர்வ் வங்கியானது, துணைக்கடன் வசதி ஏற்பாடுகளின் வளர்ச்சி, கடன் ஆதரவில்லாத காரணத்தினுல் நடப்பு விவசாயப் பணித் திட்டங்கள் பாதிக்கப்படும்வண்ணம் நீண்டகாலம் செல்லும் என்று இருக்கக்கூடிய இடங்களில், தக்காவிக் கடன்கள், குறுகிய கால வசதியாக வழங்கப்படலாம். எனினும், இது ஒரு கண்டிப் பாகத் தாற்காலிகமானதும் வரையறுக்கப்பட்டதுமான ஏற்பாடா கக் கருதப்படவேண்டும்; வெள்ளம், பஞ்சம் முதலியவை போன்ற மிகப் பரந்த ஆபத்து நிலவரங்களைச் சமாளிப்பதற்குத் தவிர, தக்காவிக் கடன்கள் வழங்கப்படக்கூடாத ஒரு தேதியை ஒவ்வொரு மாநிலமும் நிருணயிக்கவேண்டும்.

ரிசர்வ் வங்கியானது, கிடைக்கிற தொடர்புள்ள புள்ளி விவரங்களின் அடிப்படையின்பேரிலும், ஒப்பிடத்தக்க வகையில் ஓர் ஆரம்ப வளர்ச்சிக் கட்டத்தில் இருக்கின்ற வங்கிகளுக்காகத் தனிச் சலுகையின் பேரிலும், ஓர் ஆண்டில் ஒவ்வொரு கூட்டுறவு வங்கியும் எந்தத் தொகைக்குத் தன் வைப்புகளை அதிகப்படுத்த வேண்டும் என்பதைக் குறித்து, ஓர் இலக்கை (Target) அமைக்கவேண்டுமென்று யோசனை கூறினர். இந்த இலக்கு நிறைவேற்றப்பட்டிருந்தால், சம்பந்தப்பட்ட வங்கிக்கு, ரிசர்வ் வங்கி, ஒரு வருடத்தில் ஒரு கூட்டுறவு வங்கிக்கு அது வழங்கும் கடன்களின்மீது அத்தகைய கடன்களுக்காக விதிக்கப்படும் சலுகை வட்டிவீதத்திற்கு $\frac{1}{2}$ சதவிகிதம் குறைவான வட்டி விதிக்கவேண்டும்; எனினும், அந்தக் கூட்டுறவு வங்கி இலக்கை நிறைவேற்றத் தவறி, இலக்கின் குறைவு 50 சதவீதத்திற்கும் கீழிருந்தால், அத்தகைய கூட்டுறவு வங்கி, ரிசர்வ் வங்கியி லிருந்து வாங்கும் கடன்களுக்குச் சலுகை வட்டிவிகிதத் திற்கும் மேற்பட்ட ஒரு கூடுதலான $\frac{1}{2}$ சதவிகிதம் உயர்ந்தவட்டி விதிக்கப்படும்; இலக்கின் குறைவு 50 சதவிகிதத்திற்கு மேற் பட்டிருந்தால், அந்தக் கூடுதலான வட்டி விகிதம் 1 சதவிகித மாக இருக்கும்; மற்றும் சலுகை வட்டிவிகிதமும் 2 சதவிகிதத் திலிருந்து $1\frac{1}{2}$ சதவிகிதத்திற்குக் குறைக்கப்படவேண்டுமென்றும்,

அதாவது ரிசர்வ் வங்கியின் வட்டிவிகிதம் (Bank rate) 5 சதவிகிதமாகவிருந்தால், அத்தகைய கூட்டுறவு வங்கிக்குச் சலுகை வட்டிவிகிதமானது 3 சதவீதத்திற்குப் பதிலாக $3\frac{1}{2}$ சதவிகிதமாக இருக்குமென்றும் அவர்கள் யோசனை கூறினர். ஆனால், இந்த ஏற்பாட்டின்கீழ், வலுவற்ற வங்கிகள் நட்டமடையக்கூடாது; எனவே, அக் குழுவினர், நாடு முழுவதற்குமான ஒருபடித்தான ஒரு வைப்புகள்மட்டத்தைச் சிபாரிசு செய்யாது விட்டனர். வலுவற்ற மாநிலங்களிலும், பிற்பட்ட நிலப்பகுதிகளிலும் இந்த விஷயத்தில் வலுவற்ற கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஒரு தனிமுறை கையாளப்படவேண்டும் என்றும், அத்தகைய வங்கிகளுக்கு வைப்புகள் இலக்கு ஒரு நியாயமான குறைந்த மட்டத்திலிருக்க வேண்டுமென்றும் யோசனை கூறினர். இந்தப் பரிந்துரையானது ரிசர்வ் வங்கியின் ஆலோசனையின்கீழ் இருக்கிறது.

(x) விவசாயக் கூட்டுறவுக் கடன்வசதியில் ஒரு பருவகால ஏற்பாடு பின்பற்றப்படுவதை வளர்க்கும் நோக்கத்துடன் பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும் (Seasonal agricultural operations) பயிர்களை விற்பனை செய்வதற்காகவும் (Marketing of crops) தனிப்பட்ட கடன் வரம்புகளை ரிசர்வ் வங்கி நிருணயிக்கவேண்டுமென்றும், ஒவ்வொரு கூட்டுறவு வங்கிக்கும், ஓர் ஆண்டில் எந்த மாதங்களில், ரொக்கக் கடன் வரம்புகளிலிருந்து (Cash credit limits) கடன்கள் அனுமதிக்கப்படாது என்பதையும் ரிசர்வ் வங்கி குறிப்பிடவேண்டுமென்றும் குழுவினர் யோசனை கூறினர். இந்த யோசனை ரிசர்வ் வங்கியால் ஏற்றுக்கொள்ளப்பட்டு 1971–72ஆம் ஆண்டிலிருந்து அமல் செய்யப்பட்டு வருகிறது. அந்த ஆண்டிலிருந்து குறுகியகாலக் கடன்வரம்புகள், பருவகால விவசாய நடவடிக்கைகளுக்குக் கடன் உதவுவதற்காக மட்டுமே உபயோகப்படுத்தப்படும்; பிரதம கடன்வசதிச் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு விளைபொருள் அடைமானக் கடன்கள் வழங்குவதற்காகத் தேவைப்படும் கடன் வசதியையும் சேர்த்துப் பயிர்களை விற்பனை செய்வதற்குக் கடனுதவி செய்வதற்காகக் கூட்டுறவு மத்திய வங்கிகளுக்குத் தனிப்பட்ட கடன் வரம்புகள் ஒப்பளிக்கப்படுகின்றன.

(xi) மாநில அரசு, கூட்டுறவு மத்திய வங்கிகளுக்குப் பொருத்தமான உதவித்தொகைகள் (Grants) அல்லது வைப்புகள்மூலம் போதுமான ஆதரவைக் கொடுக்கவேண்டும்; கூட்டுறவுக் கடன்வழங்குதல் நடவடிக்கையானது தாழ்வாக

இருக்கும் நிலப்பகுதிகளில், மாநிலக் கூட்டுறவு வங்கிகள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ஆகியவற்றின் பங்குமூலதனத்திற்குச் செலுத்தப்படும் மாநில அரசின் உதவித்தொகையானது, விரிவாக்கப்பட்ட கடன் வழங்குதலுக்கான ஓர் அடித்தளத்தை ஏற்படுத்துவதற்காக அவசியப்படும் அளவுக்கு அதிகரிக்கப்பட வேண்டும்.

**'பன்முகமை அணுகுமுறை'** (Multi-Agency Approach)

கிராமக் கடன்வசதிக்காக ஒரு பிரதான அமைப்பாகக் கூட்டுறவு நிறுவனங்கள் பாவிக்கப்படவேண்டுமென்றாலும் 'தங்கள் சொந்தப் பலவீனத்தின்மூலம்,விவசாய உற்பத்தியின் முன்னேற்றத்தைத் தடுக்கும் ஒரு நிலைமையில் அவை இருக்கக்கூடாது' என்றும் குழுவினர் கருதினர். கூட்டுறவு நிறுவனங்களோடு இதர நிறுவனங்களும் நலந்தரும் போட்டியில் சேர்ந்து வாழும் வகையில் இயங்கினால் கூட்டுறவு நிறுவனங்கள் மேலான முறையில் இயங்கிக் குடியானவர் மேலான முறையில் சேவைசெய்யப்படுவார் என்றும் குழுவினர் சுட்டிக்காட்டினர். அதற்கிணங்க, கிராம வளர்ச்சிக்காகப் போட்டியிடுகின்றதும், ஒன்றுக்கொன்று துணையுதவி செய்கின்றதுமான அமைப்புகளை அக் குழுவினர் பரிந்துரை செய்தனர். விவசாயக் கடன் பிரச்சினைகளுக்கு இதுதான் 'பன்முகமை அணுகுமுறை' (Multi-agency approach) என்று வழங்கப்பட்டு வருகிறது. குழுவினரால் யோசனை கூறப்பட்ட இவ் வமைப்புகள் பின்வருமாறு:

**(i) சிறு குடியானவர்களின் வளர்ச்சி முகமை** (Small Farmers' Development Agency): விவசாயிகளின் வலிவற்ற பகுதியினரின் கடன் தேவைகளை நிறைவேற்றுவதற்குத் தெரிந்தெடுக்கப்பட்ட அநேக மாவட்டங்களில் ஒவ்வொன்றிலும் இந்தத் தனியமைப்புகள் அமைக்கப்படவேண்டும். இந்த அமைப்புகள் சிறு விவசாயிகளின் பிரச்சினைகளை அடையாளப்படுத்தி, தற்போது இயங்கும் நிறுவனங்கள்மூலமும், அதிகாரக் குழுக்கள் மூலமும், சேவைகளையும் (Services) வழங்குதல்களையும் (Supplies) நிச்சயப்படுத்துவதற்கு முயன்று அவர்கள் சிறு கடன்களைப் பெறுவதற்கும்; கிணறுகள் வெட்டுதல், மேலான விதைகள், உரங்கள் மற்றும் இதரப் பண்ணைத் தேவைகளை வாங்குதல் போன்ற இதர உதவிகளைப் பெறுவதற்கும்; பூச்சிகொல்லி மருந்துகளைத் தெளித்தல், எந்திரக் கலப்பைகளை வாடகைக்கு வாங்குதல் போன்ற சேவைகளை வழங்குவதற்கும் உதவுகிறது. குடியானவர்களால் மேற்கொள்ளப்படவேண்டிய முதலீடு

மற்றும் உற்பத்தி நடவடிக்கைகளுக்கான திட்டத்தையும் இந்த அமைப்புகள் தயாரிக்கும். அவை, குறுகியகால, மத்தியகால, நீண்டகாலக் கூட்டுறவுக் கடன்வசதி வழங்குதலேயும் வளர்க்கும். விவசாயக் கடன்வசதிச் சங்கங்களுக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் நிலவள வங்கிகளுக்கும் 'தனி நட்டவச்ச நிதிகளை' (Special risk funds) அமைப்பதற்கு உதவும்பொருட்டு, உதவித்தொகைகளை இந்த அமைப்புகள் வழங்கும். பராமரிப்புச் சிப்பந்திகளுக்காகவும் மேலாண்மைச் சிப்பந்திகளுக்காகவும் மேற்பார்வைச் சிப்பந்திகளுக்காகவும் தனியுதவிகள்கூட இந்த அமைப்புகளால் வழங்கப்படும்.

**(ii) இறுதிநிலைக் குடியானவர்களுக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்குமான முகமை** (Agency for Marginal Farmers and Agricultural Labourers): ஏறக்குறையச் சிறு குடியானவர்களின் வளர்ச்சியமைப்புப் போன்று இந்தத் திட்டமும் பொருளாதார மற்றும் சமுதாய ஆதாரங்கள் நிமித்தத்தினுல் தனிக் கவனம் தேவைப்படுகின்ற சிறு குடியானவர்கள், வலிவற்ற குடியானவர்கள், குடியிருப்புப் பயிரிடுபவர்கள், விவசாயத் தொழிலாளிகள் ஆகியவர்களின் தேவைகளை நிறைவேற்றிவைக்கும். இந்தத் திட்டங்கள், துணைத் தொழில்களுக்கும் மற்றும் இதர வேலைவாய்ப்புகளுக்கும் தனி முக்கியத்துவத்தைக் கொடுக்கும்; மற்றும், அவை முதன்மையாக விற்பனை அடிப்படையைக் கொண்டதாக (Market-based) இருக்கும். இத் திட்டங்களில் அடித்தள மக்களின் இலாபகரமான நடவடிக்கைகளுக்கான திட்டங்கள், கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்களின்மூலம் செயற்படுத்தப்படவேண்டும்.

**(iii) கிராம மின்சார வசதிக் கழகம்** (Rural Electrification Corporation): விவசாய உற்பத்தித் துறையில் பாசன வசதிகள் அல்லது பாசன வசதி வாய்ப்புகள் தேவைப்படுமளவுக்கு இல்லாதது ஒரு பெரிய பிரச்சினையாகும் என்ற முடிவுக்கு வந்து, அக் குழுவினர் விவசாயத்திற்கு வேண்டிய ஒரு பெரிதான பண்ணைத் தேவையாகக் கிணறுகள் வெட்டுவதற்காகவும், குழாய்க் கிணறுகள் வெட்டுவதற்காகவும், இதரப் பாசனவசதிகளை அமைப்பதற்காகவும், ஒரு பெரிய பணித் திட்டத்தைப் பரிந்துரை செய்தனர். இப் பணித் திட்டத்தைச் செயற்படுத்துவதற்காக நியாயமான விகிதங்களில், கிராமப் புறங்களுக்கு மின்சாரம் வழங்கப்படவேண்டுமென்றும், அக் காரியத்திற்காக 'கிராம மின்சார வசதிக் கழகம்' என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்த வேண்டுமென்றும் பரிந்துரை செய்தனர்.

இக் கழகம், 1969ஆம் ஆண்டில், மத்திய அரசின் 'பாசனம் மற்றும், மின்சாரத் துறை'யின் (Ministry of Irrigation and Power)கீழ், ஒரு தன்னாட்சி நிறுவனமாக அமைக்கப் பட்டது. கிராம மின்சார வசதிக் கழகம், இதரப் பணிக ளிடையே, மின்சார வசதி விநியோகத்தைத் தங்கள் அலுவல் எல்லைகளில் மேற்கொள்ளுவதற்கு அமைக்கப்பட்ட 'கிராம மின்சாரவசதிக் கூட்டுறவுச் சங்கங்களை' வளர்ச்சி செய்து, அவற் றிற்கு நிதி அளிக்கிறது.

மத்திய அரசும், யு. எஸ். ஏ. ஐ. டி. யும் (U.S.A.I.D.) இக் கழகத்திற்கு நிதி வழங்கச் சம்மதித்துள்ளன. தெரிந்தெடுக் கப்பட்ட 5 மாநிலங்களில், ஒரு முன்னோடி அடிப்படையில், ஒரு கிராம மின்சார வசதிப் பணித்திட்டம் அமலில் இருக் கிறது. இந்தக் கழகம் ஏற்படுத்தமுடிகிற உள்ளூர்த் தொடர்பு கள், மாநில மின்சார வசதி வாரியங்களால் வெளியிடப்படும் கிராமக் கடன் பத்திரங்களுக்கு உதவித்தொகைமூலம், உள்ளூர் நிதி ஆதாரங்களைச் சேகரிக்க வகை செய்யும்.

**(iv) விவசாய மறுநிதிக் கழகத்தின்** (Agricultural Refinance Corporation) **நோக்க எல்லையையும் பணிகளையும் விரிவு படுத்துதல்:** விவசாய மறுநிதிக் கழகம் சீரமைக்கப்பட வேண்டுமென்று குழுவினர் பரிந்துரை செய்தனர். ஏற் கெனவே, நான்காவது, ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் விவ சாய மறுநிதிக் கழகத்திற்காக 150 கோடி ரூபாய் தொகையுள்ள ஓர் இலக்கு நிருணயப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த இலக்கை, 200 கோடி ரூபாய்க்கு விரிவுபடுத்தவேண்டுமென்றும் குழுவினர் சிபாரிசு செய்தனர். விவசாய மறுநிதிக் கழகத்தில் கிடைக்கின்ற வசதிகளனைத்தையும் எடுத்துக்கொள்ளும் வண்ணம், நிலவள வங்கிகளைப் பலப்படுத்துவதற்கான, ஓர் ஆதரவு தருகிற பணித்திட்டத்தைக் குழுவினர் சிபாரிசு செய்தனர். தேசிய விவசாயக் கடன் வசதி (நீண்டகாலச் செயற்பாடுகள்) நிதியி லிருந்து ஒரு கூடுதலான 50 கோடி ரூபாயைப் பெறுவதன் மூலம், விவசாய மறுநிதிக் கழகம் பலப்படுத்தப்பட்டு, அதற்கு மிக அதிகமான ஒரு நிதி அடித்தளத்தை ஏற்படுத்தவேண்டும் என்பது இதன் கருத்து.

**(v) விவசாயக் கடன் வசதிக் கழகங்கள்** (Agricultural Credit Corporations): கிராமக் கடன் துறையில், விவசாயக் கடன்வசதிக் கழகங்களின் பணியானது, விவசாய உற்பத்தித் துறையில் சில விரிவாக்க வேலையைச் செய்தலும் மற்றும்,

குறிப்பிடத்தக்க துறையில் தங்கள் கடன்வசதிப் பணித் திட்டத்தை விவசாய வளர்ச்சிப் பணித்திட்டத்துடன் இணைப் பதற்கான முன்னோடித் திட்டங்களைத் தொடங்குதலுமாகும். இல்லாவிடில், குறைபாடுள்ள வங்கித் தொழில்களுக்கு அது வழிசெலுத்தும்.

**(vi) சட்டப்படி யமைந்த ஒரு விவசாயக் கடன் வசதி வாரியத்தை (Statutory Agricultural Credit Board) ரிசர்வ் வங்கி யின் ஆதரவின்கீழ் அமைத்தல்:** கூட்டுறவு இயக்கத்தால் தேசியக் கூட்டுறவு வங்கி ஒன்று அமைக்கப்படும் சாத்தியக் கூற்றைக் குழுவினர் பெருமளவு ஆலோசித்தனர். ஆனால், இறுதி யாக அத்தகைய வங்கி சாத்தியமானதாக அல்லது விரும்பத் தக்கதாக இராது என்ற முடிவுக்கு வந்தனர். அக் குழுவினர் கருத்தின்படி, தற்போதுள்ள சூழ்நிலைகளில், அந்தத் தேசிய வங்கி, அதிகமாக ரிசர்வ் வங்கி அளிக்கும் கடன்கள்மீது சார்பு கொண்டிருக்கவேண்டியிருக்கும். உத்தேசிக்கப்பட்ட அந்த வங்கி, நிதிகளைப் பொறுத்தமட்டில் தன் சொந்தமானதும் திடமானதுமான எந்தவித ஆதாரங்களையும் பெற்றில்லாத வரை, அது கடன்வசதியமைப்பின் தற்போதுள்ள அடுக்கு களுக்கு ஒரு கூடுதலாகத்தான் இருக்கும். கடன் வழங்கும் கொள்கையை வகுப்பதில் எந்தவிதமான தொடர்புமில்லாமல் ரிசர்வ் வங்கி அந்தத் தேசிய வங்கிக்கு நிதிகளை ஒப்படைக்கும் ஒரு நிலவரமானது ஒப்புக்கொள்ளத்தகாததாகவும், செயற்பாட்டிற் கொப்பாததாகவும் இருக்கும்.

ஆகையால், அக் குழுவினர், ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன் இலாக்கா அமைப்பு, ஒரு சட்டப்படியான வாரியத்தோடு சீரமைக்கப்படவேண்டுமென்று பரிந்துரை செய்தனர். அந்த வாரியம் முடிவுகள் செய்கிற ஒரு குழுவாக இருக்கும். அது, கிராமக்கடன் துறையில் ரிசர்வ் வங்கியின் கொள்கைகள் வகுத் தல், புனர் ஆய்வு செய்தல், மாற்றம் செய்தல் ஆகிய காரியங் களைச் செய்யும். கிராமக்கடன் பொறுப்பு வகிக்கும் ரிசர்வ் வங்கியின் துணை ஆளுநர் (Deputy Governor) வாரியத்தின் தலைவராக இருப்பார். அது மத்திய அரசின், உணவு, விவசாயம், சமுத்தாய வளர்ச்சிக் கூட்டுறவுத் துறையிலிருந்தும், நிதித் துறையிலிருந்தும் (Ministry of Food, Agricultural, Community Development and Co-operative and Finance), இரண்டு அதிகாரிகளும், ரிசர்வ் வங்கியின் மத்திய இயக்குநர் குழுவி லிருந்து மூன்று இயக்குநர்களும், கூட்டுறவு நிறுவனங்கள், வாணிக வங்கிகள் ஆகியவற்றின் நலமிகளின் பிரதிநிதிகளும், கிராமப்

பொருளாதாரத்திலும் மற்றும் விவசாயக் கடன் துறையிலும் சிறப்பான அறிவும் அனுபவமும் பெற்ற அறிஞர்களான ஆறு தனிநபர்களும் சேர்ந்த மொத்தம் 11 உறுப்பினர்களைக் கொண்டது.

இந்த வாரியம், நிலையான குழுக்களைக் (Standing Committees) கொண்டிருக்கும். அத்தகைய குழுக்களில் ஒன்று, கூட்டுறவு நிறுவனங்கள் குன்றிய வளர்ச்சி அடைந்திருக்கும் நிலப் பகுதிகளின் பிரச்சினைகளைக் குறிப்பாக ஆராயும். இந்த நிலையான குழுக்கள், குடிசைத் தொழில்களுக்காகவும், சிறிய அளவுத் தொழில்களுக்காகவும் கடன், விநியோகம், விற்பனை, கால்நடை வளம், விவசாயத்திற்காக நீண்டகாலக் கடன் முதலியவை போன்ற கடன்வசதியின் அம்சங்களை ஆராயும் சிறப்புக் குழுக்களாக இருக்கும். கிராமக் கடனின் விவசாயமல்லாத அம்சங்களிலும் செயற்படுவதற்கு அந்த வாரியம் அதிகாரமளிக்கப் படும்.

இந்தப் பரிந்துரைகளையொட்டி, விவசாயக் கடன் பற்றிய நிலையான ஆலோசனைக் குழு (Standing Advisory Committee on Agricultural Credit), ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன் வாரியமாக (Agricultural Credit Board), 1970ஆம் ஆண்டில் திருத்தியமைக்கப்பட்டது. இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தைத் தக்கவாறு திருத்தம் செய்வதன்மூலம், இந்த வாரியத்திற்குச் சரியானதும் சட்டப்படியானதுமான ஓர் அந்தஸ்தைக் கொடுப்பதற்கு உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. ரிசர்வ் வங்கியின் ஆளுநர் (Governor) அந்த வாரியத்தின் தலைவராகவும், கிராமக் கடன் பொறுப்பை வகிக்கும் துணை ஆளுநர் (Deputy Governor) வாரியத்தின் துணைத்தலைவராகவும் இருக்கின்றனர். வங்கிகளின் சில இயக்குநர்களும், இந்திய அரசின் பிரதிநிதி களும், முக்கியமான கூட்டுறவாளர்களும், முக்கியமான விவ சாயிகளும், அதன் செயலாளராகப் பணியாற்றும் ரிசர்வ் வங்கி யின் விவசாயக் கடன் இலாக்காவின் தலைமை அதிகாரியும் (Chief Officer, Agricultural Credit Development), வாரியத்தின் இதரப் பதினன்கு உறுப்பினர்களாவர். ரிசர்வ் வங்கியின் கொள்கைகள் வகுத்தல், புனர்ஆய்வு செய்தல், மாறுதல் செய்தல் ஆகியவற்றிற்குத் தொடர்பான விஷயங்கள், விவசாயக் கடன் வாரியத்திற்கு ஆலோசனைக் கேட்புக்காக அனுப்பப்படு கின்றன.

**(vii) வாணிக வங்கிகளின் பணி** (Task of Commercial Banks) : அர்த்தமுடைமை ரீதியிலும், வாணிக வங்கிகள்

நாட்டுடைமையாக்கலை எதிர்பார்க்காமலும், வாணிக வங்கிகளுக்காகக் கிராமப் புறங்களில் ஒரு தீவிரமானதும், அபிவிருத்திகரமானதுமான ஒரு பணியை அக் குழுவினர் எதிர்பார்த்தனர். இவ் வங்கிகள் குடியானவர்களுக்குச் சிறப்பாக, அதிகமாக விளைவு தருகின்ற உணவுத்தானிய வகைகளையும் மற்றும் பிற பயன்தரும் பயிர்களையும் பயிரிடும் குடியானவர்களுக்குப் பருவகாலக் கடன் வசதி வழங்குவதை அக் குழுவினர் தடை செய்யவில்லை. அவர்கள், பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும் கடனுதவி அளிப்பதற்காக வாணிக வங்கிகளுக்கு மறுநிதி வசதிகளை ஏற்படுத்த யோசனை கூறினர். குடியானவர்களில் தக்கவர்களுக்கு — உதாரணமாக, பலபயிர் பயிரிடுதலை (Multi-Cropping) மேற்கொள்ளுபவர்களுக்கு-ரொக்கக்கடன் வசதிகள் வழங்குதலை எதிர்பார்த்தனர். விவசாயப் பொறிகளை விற்பனை செய்யும் மாநில மின்சார வாரியங்களுடனும் நிறுவனங்களுடனும் ஒத்துழைத்து, விவசாயப் பண்ணைத் தேவைகளையும் முதலீட்டு நிதியையும் வழங்குகின்ற நிறுவனங்கள் மூலமும் நிலையங்கள் மூலமும் உற்பத்திக் கடன் வசதியைக் கூடுதலாக வாணிக வங்கிகள் வழங்கவேண்டுமென்று அக் குழுவினர் சிபாரிசு செய்தனர். வாணிக வங்கிகளின் ஆரம்ப முயற்சிகள், ஏகக் கவனம் செய்யப்படவேண்டிய நிலப்பகுதிகளையும் கடனுதவி அளிக்கப்படவேண்டிய பயிரிடுபவர்களையும் தெரிந்தெடுத்தலில் 'மேன்மையானதைத் தெரிந்தெடுத்தல்' (Selectivity) என்ற கொள்கை அனுசரிக்கப்படவேண்டும்; விவசாய அபிவிருத்தி நடவடிக்கையில் வாணிக வங்கிகள் நாளடைவில் பெருவாரியாகப் பங்கு கொள்வார்கள் என்று அக் குழுவினர் எதிர்பார்த்தனர். அதே சமயத்தில், வாணிக வங்கிகள் கூட்டுறவுக் கடன்வசதி நிறுவனங்களின் முயற்சிகளுடன் துணை முயற்சி செய்யவேண்டும் என்பது அவசியப்படுகிறது. கூட்டுறவு விற்பனைக்கும், பதனப்படுத்துதலுக்கும் குறிப்பாக, பெருவாரியான உற்பத்தியும், விற்பனை உபரிப் பொருள்களும் ஏற்படக்கூடிய நிலப்பகுதிகளில் அதிகமாகிக்கொண்டு வருகின்ற கடனுதவியை யளிக்க இந்த வங்கிகள் எதிர்பார்க்கப்படுகின்றன. இந்தப் பரிந்துரைகளைச் செய்வதில் அக் குழுவினரின் ஒரு நோக்கமானது, கூட்டுறவுக் கடன்வசதி நிறுவனங்களின் நிதியாதாரங்கள் விவசாய உற்பத்திக் கடன் வசதிக்காக விடுதலை செய்யப்படவேண்டுமென்பதே. அதற்கிணங்க, அக் குழுவினர் வாணிக வங்கிகள் பங்குகொள்ளுதலுக்கான சில பணித் திட்டங்களைப் பரிந்துரை செய்தனர். அவையாவன: அடைமானங்களைச் சேகரித்துக் குவிப்பதற்கு வகைசெய்யும்பொருட்டு மத்திய நிலவள வங்கிகளுக்குத் தாற்காலிகக் கடனுதவி செய்தல்; நீர் ஏற்றும்

குழாய்கள் மற்றும் இதர விவசாய இயந்திரங்கள் வழங்குவதில் ஈடுபட்டிருக்கும் உற்பத்தி நிலையங்களுக்கும், வேளாண்மைத் தொழிற் கழகங்களுக்கும் (Agro-Industries Corporation) கடனுதவி செய்தல்; கொள்முதல் நடவடிக்கைகளுக்கும் மற்றும் இதர நடவடிக்கைகளுக்கும் உணவுக் கழகத்திற்கும் (Food Corporation) இதர வாணிக நிலையங்களுக்கும் நிதி வழங்குதல்; சர்க்கரை ஆலைகள் போன்ற கூட்டுறவுத் தொழில்களுக்கு நடைமுறை மூலதனம் வழங்குதல். கடன் வழங்கும் வங்கிகள், நிலம், இயந்திரம், அல்லது பொன் நகைகள் போன்ற எவ்விதமான ஆதார வகைகளை வற்புறுத்தினாலும், அந்த ஆதாரங்களின் விற்பனையின்மீதல்லாமல் நிதியளிக்கப்படுகிற நடவடிக்கையின் மேற்பார்வையின் மீதுதான், வாணிக வங்கிகள், தங்கள் கடன்களைத் திருப்பிப் பெறுவதற்குச் சார்ந்திருக்கவேண்டும் என்று அக் குழுவினர் வலியுறுத்தினர். அந்த வங்கிகள், பயிர்ச்சேதமும் (Crop failiure) மற்றும், அதேமாதிரியான விபத்துகள் நேரிடுங்காலத்தில் கடன்களை நீடிப்பதற்கான விதிகளையுங்கூட உருவாக்கவேண்டும். மற்றும், கிராமப்புறங்களில் வைப்புகளைத் திரட்டுவதற்காக, வாணிக வங்கிகளும், கூட்டுறவு வங்கிகளும் வைப்புகளுக்கு அதிகமான வட்டிவிகிதங்களை வழங்க ஆலோசிக்க வேண்டுமென்றும் அக் குழுவினர் யோசனை கூறினர். வாணிக வங்கிகளைக் குறித்த இந்தப் பரிந்துரைகள் யாவும், 1969ஆம் ஆண்டுச் சூலை 19ஆம் நாளன்று, பதினான்கு (14) வாணிக வங்கிகள் நாட்டுடைமையாக்கப்படுவதற்கு முன்னரே, அக் குழுவினரால் இறுதியாக்கப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## (அ) விவசாயத்தைப் பற்றிய ஆணைக்குழுவும் மற்றும் வங்கித் தொழிலைப் பற்றிய தேசிய ஆணைக்குழுவும் (1972)

(National Commission on Agricultural and Banking Commission)

இரண்டு முக்கிய அனைத்திந்தியக் குழுக்களுள் ஒன்று விவசாயத்தைப் பற்றியது; மற்றொன்று, வங்கித்தொழிலைப் பற்றியது. அதாவது, முறையே விவசாயத்தைப் பற்றிய தேசிய ஆணைக்குழுவும் (1972) வங்கித் தொழிலைப் பற்றிய ஆணைக்குழுவும் (1972). இவற்றின் பிரதானப் பரிந்துரைகளைக் குறிக்காமல், இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் ஒரு வரலாறு முழுமையானதாக இராது. கூட்டுறவுச் சங்கங்களால் விவசாயத்திற்காகக் கடன் வழங்குதலைக் குறித்து அக் குழுக்களின் முக்கியப் பரிந்துரைகளை மட்டும் நாம் இங்கு ஆராய்வோம். இந்தப் பரிந்துரைகள்

இன்னும் ஆய்வில் இருக்கின்றன என்றாலும், அவைகள் இன்னும்கூட நிறைவேற்றப்படவில்லை என்றாலும், அவைகள் கூட்டுறவு விவசாயக் கடன்வசதி என்ற பொருள்பற்றிய சாத்தியமான எதிர்காலச் சிந்தனையின் வழிகளைச் சுட்டிக்காட்டுகின்றன. கூட்டுறவு முறையின் போதாக் குறைவுகளைச் சுட்டிக்காட்டி, இரண்டு குழுக்களும், விவசாயக் கடன்வசதி வழங்குதல் துறையில் கூட்டுறவுத்துறை வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவத்தைத் தந்து பயனுள்ள சில பரிந்துரைகளைச் செய்திருக்கின்றன.

**விவசாயத்தைப் பற்றிய தேசிய ஆணைக்குழு** (National Commission on Agriculture)

**எல்லாம் அடங்கிய கூட்டுறவுக் கடன் வசதி—சேவை—விற்பனையமைப்பு** (Comprehensive Co-operative Credit-Serve-Marketing Structure): கிராம மக்களுக்குச் சேவைசெய்யும்பொருட்டுச் சிறு குடியானவர்களுக்கும், இறுதிநிலைக் குடியானவர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் மற்றும் சமுதாயத்தின் இதர வலிவற்ற பகுதியினருக்கும், கடன் வசதி வழங்குவதற்காக, பலநோக்குக் கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்கள் அமைக்கப்படவேண்டுமென்று அந்த ஆணைக்குழு யோசனை கூறியுள்ளது. இந்தச் சங்கங்களுக்கான மூலதனம் அனைத்தும் வாணிக வங்கிகளால் வழங்கப்படவேண்டும். 1972ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் இந்த ஆணைக்குழுவின் துணைத்தலைவர் சமர்ப்பித்த இடைக்கால அறிக்கை, முதல்கட்டமாக, 81 மாவட்டங்களில் ஓர் எல்லாம் அடங்கிய கூட்டுறவுக் கடன் — சேவை — விற்பனையமைப்பு அமைக்கப்படவேண்டுமென்று சிபாரிசு செய்தது. அத் திட்டமானது விற்பனைக் கட்டம் வரைக்குமுள்ள விவசாய விளைபொருள்களின் முழுப் பரப்பையும், கிராமக் கைவினைஞர்கள், கைத்திறத் தொழிலாளிகள் ஆகியவர்களின் தொழில்கள் போன்ற வேளாண்மைத் துணைத்தொழில்களையும் (Ancillary Farm Occupations) தழுவவேண்டுமென்று உத்தேசிக்கப்பட்டது. விவசாயக் கடன் தேவைகள், ஓர் ஒருங்கிணைக்கப்பட்ட கடன் சேவையை வழங்குகின்ற கண்ணோட்டத்தில் நோக்கப்படவேண்டும்; அதாவது பயனுறுதியுள்ள வகையில் கடன் உபயோகிப்பதற்குக் கடனானது, விவசாயிகளுக்குத் தேவைப்படும் பண்ணைக் கருவிகளாகவும், சேவைகளாகவும் அதனை மாற்றிக் கொள்வதற்கான வசதிகள் ஏற்பாட்டுடன் வழங்கப்படவேண்டுமென்பது. இச் சேவையானது, தங்கள் தொழில்நுட்பத்தையும் இலாபகரமான உற்பத்தித் திறனையும் மேல்நிலைப்படுத்த விரும்பும் சிறு விவசாயிகளுக்கும், மிகச் சிறு விவசாயிகளுக்கும்,

விவசாயத் தொழிலாளர்களுக்கும் எளிதாகக் கிடைக்குமாறு செய்யப்படவேண்டும். உத்தேசிக்கப்பட்ட விவசாயக் கடனளிப்புச் சேவைத்திட்டம் (Agricultural Credit Service) கடன் தேவைகளேயும், பண்ணைக் கருவிகள் தேவைகளேயும், மற்றும் கோழிப் பண்ணை, பன்றிப்பண்ணை, ஆட்டுப்பண்ணை, பால்பண்ணை, மீன் பண்ணை, விவசாயத்திற்குத் தொடர்புள்ள வனங்கவமைத்தல் மற்றும் இதரத் தொழில்முயற்சிகள் உள்பட, கால்நடைப் பராமரிப்பிற்குத் தேவைப்படும் இதரச் சேவைகளேயுங்கூடக் கவனித்தல்வேண்டும். விவசாயத்திற்காகக் கடனளிப்பில் கடந்தகால முறைகளிலிருந்து ஒரு தெளிவான மாறுதலிருக்க வேண்டுமானல், மற்றும் — விவசாயக் கடனளிப்புச் சேவைத் திட்டமானது, சிறு குடியானவர்களுக்கும், இறுதிநிலேக் குடியானவர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் பயன்படவேண்டுமானல் — கடனளிப்பு நிலேயங்கள், பண்ணைக் கருவிகள் வழங்குதலுக்கான அமைப்புகளே வளர்ப்பதில் நேர்முகமான அக்கறையை எடுக்கவேண்டும்.

இந்த ஒருங்கிணைக்கப்பட்ட விவசாயக் கடனளிப்புச் சேவையை வழங்குவதற்காகச் சுய ஆட்சி, திறனுள்ள நிருவாகம், மற்றும் அரசு அதிகாரிகளின் தலேயீட்டிலிருந்து விடுதலே ஆகியவற்றை நிச்சயப்படுத்துவதற்குத் துணைவிதிகளேக்கொண்ட பதிவு செய்யப்பட்ட ஒரு கூட்டுறவு நிறுவனமாக 'குடியானவர்கள் சேவா சங்கம்' (Farmers Service Society) ஒன்று நிறுவப்பட வேண்டும்; ஒவ்வொரு குடியானவர் சேவாசங்கமும், சிறு விவசாயிகள், மிகச் சிறு விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் மற்றும் கிராமக் கைவினைஞர்கள் ஆகியவர்களின் வளர்ச்சித் தேவைகளனைத்தையும் நேர்முகமாகவாவது இதர அமைப்புகளுடன் செய்யப்பட்ட விசேஷ ஏற்பாடுகள் மூலமாகவாவது கவனிக்கவேண்டும். அத்தகைய ஒவ்வொரு சேவா சங்கமும், ஒரு பிரதம கூட்டுறவுச் சங்கமாகப் பாவிக்கப்பட வேண்டும். கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்படுகின்ற நிதிகள், சலுகையான வட்டிவீதங்கள், நிருவாக மானியங்கள் முதலியவை போன்ற எல்லா வசதிகளுங்கூட இந்த உத்தேசிக்கப்பட்ட சேவாசங்கத்திற்குக் கொடுக்கப்படவேண்டும். சிறு விவசாயிகளின் வளர்ச்சியமைப்பு மிகச் சிறு விவசாயிகளுக்கும், விவசாயத் தொழிலாளிகளுக்குமான அமைப்புத் திட்டங்களின்கீழ் உதவி பெறும் தகுதியுள்ள குடியானவர்களும், விவசாயத் தொழிலாளிகளும், கைவினைஞர்களும் மட்டுந்தான், இந்தச் சேவா சங்கத்தில் உறுப்பினர்களாவதற்குத் தகுதியுடையவர்களாக இருக்க வேண்டும். வேளாண்மை செய்யும் மக்களின் இதரப் பகுதி

யினர்கள், வாக்குரிமையில்லாமல் சேவைகளுக்காக மட்டும் துணை உறுப்பினர்களாகச் (Associate Members) சேருவதற்கு உரிமை யளிக்கப்படலாம். ஒவ்வொரு சங்கத்தின் விவகார எல்லை, ஒரு வட்டாரத்திற்குச் (Block) சமமாக இருக்கவேண்டும். தேவை களைப் பெறுதலுக்குப் போதாததாக இருந்த பிராந்தியங்களில் சங்கத்தின் அலுவல்எல்லை ஒரு தாசிலைப் (Tahsil) போன்று பெரிதாக இருக்கலாம். நடவடிக்கைகளின் பரப்பு மிகப் பெரி தாக இருந்த பிராந்தியங்களில் அலுவல்எல்லை ஒரு வட்டாரத் திற்கும் குறைவு உள்ளதாகக் குறைக்கப்படவேண்டும். ஒரு சங்கத்தின் அலுவல் எல்லையானது, அந்த எல்லையில் எல்லா வளர்ச்சிகளையும் விரிவாக்கச் சேவைகளையும் ஏற்படுத்துவதற்கான அவசியத்தையும் கருதி, அதன் தன்னிறைவு அடிப்படையின் பேரில் இருக்கவேண்டும். வருவாய்த்துறை வட்டம் அல்லது அதற்குச் சமமான மட்டங்களில் 10,000-லிருந்து 12,000 உறுப்பினர்கள் தொகுதிகளுக்குச் சேவை செய்வதற்காகச் சங்கம் கிளைகளை அல்லது மண்டிகளை (Depots) வைத்திருக்கவேண்டும்.

பரஸ்பர ஆலோசனைகளுக்காகவும், கொள்கைகளை ஒருமைப் படுத்துவதற்காகவும், மாவட்ட மட்டத்தில் குடியானவர் சேவா சங்கங்களின் ஓர் ஒன்றியம் (Union) இருக்கவேண்டும். மற்றும், மாவட்ட மட்டத்தில் குறிப்பிட்ட பண்டங்களுக்காக, நிகழ்ச்சி ரீதியான (Functional) மாவட்ட நிறுவனங்கள் அமைக்கப்படவேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திலும், இந்தக் காரியத்திற்காகத் தெரிந்தெடுக்கப்பட்ட, வாணிக வங்கியானது, 'வழிகாட்டும் வங்கி' (Lead Bank) என்று வழங்கப்பட்டு, அது விவசாயக் கடனளிப்பு நடவடிக்கையைப் பண்ணைக் கருவி களும் மற்றும் சேவைகளும் வழங்கும் நடவடிக்கையுடன் ஒருங் கிணைக்கும் பொறுப்பை வகிக்கவேண்டும். இந்த ஆணைக்குழு வால் உத்தேசிக்கப்பட்ட கடனளிப்பு அமைப்புக்கும், நிலவள வங்கிகள், மாநில வேளாண்மைத் தொழிற் கழகங்கள், இந்திய உணவுக் கழகம் போன்ற இதர நிறுவனங்களுக்குமிடையே தக்க இணைப்புங்கூட வளர்க்கப்படவேண்டும். பின்னர்க் கூறப்பட்ட நிறுவனங்கள், விவசாயிகளுக்கு உற்பத்திக் காரியத்திற்காக அளிக்கப்பட்ட கடனைச் சரியாகப் பயன்படுத்துவத்ற்குச் சேவை களை வழங்குவதில் முக்கியமான ஆதரவு செய்கிற ஒரு பணியைப் புரியவேண்டும்.

ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன் இலாக்கா, விவசாய மறுநிதி வசதிக் கழகம், விவசாய நிதிக் கழகம் போன்ற பல்வேறு நிறுவனங்களின் வல்லுநர் அறிவையும், அனுபவத்தையும் ஓர்

ஒற்றையான தேசிய நிறுவனத்திற்குள் ஒன்றுபடுத்துவதற்காக இந்தியத் தொழில்வளர்ச்சி வங்கியைப் (Industrial Development Bank of India) போன்ற முறையில், ஒரு இந்திய விவசாய வளர்ச்சி வங்கியை (Agricultural Development Bank of India) இறுதியாக அமைப்பதற்கு அவசியப்படலாம். நிலத்தையும், ஊழியர்களேயும் முழுமையாகப் பயன்படுத்துவதற்காக, தேவைகளுக்கேற்ப இந்த நிறுவனம் விவசாயக் கடன் பாய்ச்சலை நெறிப்படுத்தவேண்டும். மறுநிதி வசதி மட்டுமன்றி, உத்தேசிக்கப்பட்ட விவசாய வளர்ச்சி வங்கியானது, விசேஷப் பிராந்திய ஆராய்ச்சிகளுக்குப் பிறகும், பண்ட ஆராய்ச்சிகளுக்குப் பிறகும், திட்டத்திருப்பமுள்ள (Project - Oriented) கடனளிப்புக்கான முனைப்பையும் வல்லுநர் அறிவையும் வழங்கமுடியும்.

சேவைக்காகப் பொறுப்பேற்கும் நிறுவனங்களுக்குப் பயிற்சி பெற்ற பணியாளர் தொகுதியை வழங்குவதற்காக ஒரு தக்க செயல்திட்டம் உருவாக்கப்படவேண்டும். சிறப்புத் தேர்ச்சி பெற்றவர்களே (Specialists) வங்கிகள் வேலையிலமர்த்த வேண்டும். விவசாயப் பல்கலேக்கழகமும், விரிவாக்க நிறுவனங்களும், வங்கிகளின் அத்தகைய பணியாளர் தொகுதிக்குப் பயிற்சியளிப்பதில் மட்டுமன்றி, பயிற்சிச் செயல்திட்டங்களே அமல்படுத்துவதில் வங்கிகளுக்கு உதவிசெய்யக்கூடிய வல்லுநர்கள் கிடைக்குமிடத்தைக் காட்டுவதற்குக்கூட உதவவேண்டும். விவசாயக் கருவிகள் வழங்குதலேயும், எல்லேயிலுள்ள குடியானவர்கள் மேம்படுத்தப்பட்ட நடைமுறைகளேப் பின்பற்றுவதையும் நிச்சயப்படுத்துவதற்குப் போதுமான, மேற்பார்வையுங்கூட ஏற்படுத்தப்படவேண்டும். அப்பொழுதுதான், சிறு விவசாயிகளுக்கும் மிகச் சிறு விவசாயிகளுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் கடனுதவிசெய்து அவர்களுக்குத் தங்கள் வருமானத்தை மிகைப்படுத்திக்கொள்வதற்கு உதவமுடியும்.

தாசில் மட்டத்திலும் வட்டார மட்டத்திலும் குடியானவர் சேவாசங்கங்களே யமைத்தலும், அத்தகைய சங்கங்களின் மாவட்ட ஒன்றியங்களே யமைத்தலும், மற்றும் அவைகளே வழிகாட்டும் வங்கியுடனும் இதர நிறுவனங்களுடனும் இணேப்புச் செய்தலும், 46 சிறுகுடியானவர்களின் வளர்ச்சியமைப்பு மாவட்டங்களிலும் மற்றும் 41 சிறுநிலேக் குடியானவர்களுக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்குமான அமைப்புகளிலும் மொத்தம் 81 மாவட்டங்களில், முதலில் முயற்சி செய்யப்படவேண்டுமென்று இந்த ஆணேக் குழுவினர் யோசனே கூறினர். இந்த 81 மாவட்டங்களில் (6 மாவட்டங்கள் இரண்டிற்கும் பொதுவானவையானதால்)

இந்த ஏற்பாடுகளின் நடவடிக்கைகள் கவனமாக ஆராயப்பட வேண்டும். மாவட்டங்களில் பெற்ற அனுபவத்திலிருந்து அவசிய மாகத் தோன்றும் தக்க பொருத்துதலுடன் இந்த ஏற்பாடுகள் ஒவ்வோர் ஆண்டும் அதிகமான மாவட்டங்களில் ஒரு விரை வான வேகத்தில் விரிவுபடுத்தப்படவேண்டும்.

## (ஆ) வங்கித்தொழில் ஆணைக்குழு
## (Banking Commission)

**கிராம வங்கிகள்** (Rural Banks): விவசாயிகளிடையே, ஒரு விரிவான பரப்புடைய சேவைகளை வழங்குவதன்மூலம் வங்கித்தொழில் பழக்கத்தை வளர்ப்பதற்காக ஒரு விரிந்த அளவில் கிராம வங்கிகள் (Net-work of Rural Banks) அமைக்கப்பட வேண்டுமென்று வங்கித்தொழில் ஆணைக்குழுவினர் பரிந்துரை செய்தனர். இந்தப் பணியானது, பிரதம கடன்வசதிக் கூட் டுறவுச் சங்கங்களுக்கு ஒரு முதன்மை அடிப்படையில் கொடுக்கப் படக்கூடும். பிரதம கூட்டுறவுச் சங்கம், பொதுவான கடன் வசதியளித்து, விரிந்த பரப்புடைய வங்கித்தொழில் சேவைகளை யும் மற்றும், சில நெருங்கிய தொடர்புகொண்ட வங்கித் தொழில் அல்லாத சேவைகளையும் வழங்குவதன்மூலம் கிராமப் புறங்களில் வங்கித்தொழில் பழக்கத்தை வளர்க்கும் வண்ணம் பலப்படுத்தப்பட்டும், பெரிதாக்கப்பட்டும் கிராமத் -துறையில் வங்கித்தொழில் நிறுவன அமைப்பு மேம்படுத்தப்பட்டு வளர்க்கப் படவேண்டும். இந்தக் காரியத்திற்காக அவைகள் கிராம வங்கிகளாக வேண்டும். பிரதம கூட்டுறவுச் சங்கங்கள் கீழ்க் காணும் நிலைமையில் இந்தத் திட்டத்தை மேற்கொள்ள முடியும்: (i) அவைகள் நன்கு நிருவகிக்கப்பட்டுத் திறம்பட நடத்தப் பட்ட அமைப்புகளாக இருந்தால்; (ii) கடனளிப்பதையும், வங்கித்தொழில் சேவைகளையும், வங்கித்தொழில் அல்லாத சேவைகளையும் வழங்க வசதி செய்வதற்கு அவைகள் தொழில் நுட்ப உதவியைப் பெற்றிருந்தால்; (iii) அவைகள் கிராம வங்கிகளாக இயங்குவதற்கு வகைசெய்யும் சில சட்டப்படியான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டால். மாவட்டத்தில், மத்தியக் கூட்டுறவு வங்கி பலம் பொருந்தியதாக இருந்தால் பிரதம சங்கம் பெரும்பாலான உதவியை மத்திய வங்கியிலிருந்து பெறும்; மத்திய வங்கி பலவீனமாக இருந்தால், தலைமை வங்கி அத்தகைய உதவியைப் பிரதம சங்கத்திற்குக் கொடுக்க முடியும். 'கிராமக் கூட்டுறவு வங்கிகள்' என்று வழங்கப்படும் அத்தகைய கிராம வங்கிகளைக் கூட்டுறவுத் துறையில் அமைப்பதன்மூலம், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளும்,

கிராமப்புறங்களுக்கு வங்கித்தொழில் வசதிகளை வழங்குவதற்காக மட்டுமே தங்கள் கிளைகளைத் திறக்கும் அவசியம் நீங்கி, அவ்வங்கிகள், இதரக் கூட்டுறவாக்கப்பட்ட உற்பத்தி நடவடிக்கைகளின் தேவைகளையும் விநியோக நடவடிக்கைகளின் தேவைகளையும் நிறைவேற்றுவதற்கு ஏகக் கவனம் செலுத்தமுடியும். மத்தியக் கூட்டுறவு வங்கிகளிலிருந்தும் அல்லது மாநிலக் கூட்டுறவு வங்கிகளிலிருந்தும் தொழில்நுட்ப உதவியைப் பெறமுடியுமானல், நாளடைவில் தன்னிறைவு என்ற குறிக்கோளை நிறைவேற்றுகின்ற பல சங்கங்கள் தங்களைக் கிராம வங்கிகளாக மாற்றிக் கொள்ள முடியும். எனினும், அநேக மாநிலங்களில், மாவட்டக் கூட்டுறவு வங்கிகளும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளும் தங்களையே பலப்படுத்திக்கொள்வதற்குத் தேவைப்படுவதால், வாணிக வங்கிகளே அத்தகைய உதவிகளை வழங்கவேண்டியிருக்கும். ஒரு வாணிக வங்கியானது, ஒரு கிராமத் துணை வங்கியை அமைத்தால், அது அத்தகைய கிராம வங்கியின் விவகார எல்லையில் வசிப்பவர்களுக்கு அந்தக் கிராம வங்கியின் பங்குமூலதனத்தில் சுமார் 49 சதவிகிதம் வழங்கவேண்டும். ஒரு கிராம வங்கியானது, 5,000-லிருந்து 20,000 வரையுள்ள ஒரு மக்கள் தொகையைத் தழுவும் ஒரு நெருங்கிய கிராமங்கள் தொகுதிக்குச் சேவைசெய்யவேண்டிய ஒரு கூட்டுறவு வங்கியாக அமைக்கப்பட்ட ஒரு பிரதம வங்கித்தொழில் நிறுவனமாகவும் அல்லது ஒரு வாணிக வங்கியின் துணை நிறுவனமாகவும் ஒரு கிராம வங்கி வருணிக்கப்படலாம். எனினும், ஜனத்தொகை குறைவாக இருக்கும் இடங்களில், ஒரு கிராம வங்கியை ஆரம்பத்தில் ஒரு வளர்ச்சி வட்டாரம் போன்ற ஒரு பெரிய எல்லைக்காக அமைப்பதற்கு அவசியப்படலாம்.

**கூட்டுறவுக் கிராம வங்கிகளுக்கு முன்னுரிமை** (Priority to Co-operative Rural Banks) : கிராம வங்கிகளை அமைப்பதில் முதல் முதன்மை நன்கு நடத்தப்படுகின்ற பிரதம விவசாயக் கடன்வசதிச் சங்கங்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். அவசியமுள்ள நிறுவனப் பலத்தையுடைய ஒவ்வொரு மத்தியக் கூட்டுறவு வங்கியும், ஒவ்வொரு வருடமும் கிராம வங்கிகளாக மாற்றுவதற்கு ஒருசில அத்தகைய பிரதம சங்கங்களைத் தெரிந்தெடுக்கவேண்டும். ஒரு பலவீனமான மத்திய வங்கியின் விவகார எல்லையில் அத்தகைய பிரதம சங்கங்களிருந்தால், சம்பந்தப்பட்ட மாநிலக் கூட்டுறவு வங்கி, அவசியமான தொழில்நுட்ப ஆதரவை அது வழங்கமுடியுமானல், இந்த நடவடிக்கையை எடுத்துக்கொள்ளலாம். இல்லாவிடில், பிரதம கூட்டுறவுச் சங்கம் ஒரு வாணிக வங்கியின் துணை நிறுவனமாக இருப்பதற்கு

அனுமதிக்கப்படலாம். கிராம வங்கியானது எல்லா நடுத்தரப் பயிரிடுபவர்கள், எல்லாச் சிறிய பயிரிடுபவர்கள் ஆகியவர்களுடைய முழுக்கடன் தேவைகளை வழங்கவேண்டும். எல்லா நடுத்தரக் குடியானவர்களுக்கும், சிறு குடியானவர்களுக்கும், அவர்கள் விவசாயிகளுடன் கூட்டாக உற்பத்தி செய்தாலும் அல்லது தனிமையாக உற்பத்தி செய்தாலும் அவர்கள் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ உற்பத்திக்கு உதவிசெய்தாலும், அவர்களுக்கு உற்பத்திக்கான எல்லாக் காரியங்களுக்கும், கடன்வசதிகளை வழங்குவதற்கு அது செயற்படுவதற்கான தளவாடங்களைக் கொண்டிருக்கவேண்டும். பிரதம அமைப்புகள், மாவாலைகள், எண்ணெய் எடுக்கும் அமைப்புகள் முதலியன போன்ற சிறிய அளவுத் தொழில்களுக்கும் வேளாண்மைத் தொழில்களுக்குங்கூடக் கடனளிக்கவேண்டும். தற்போதுள்ள வாணிக வங்கியும், அல்லது கூட்டுறவு வங்கியும் வழங்கும் வைப்புகள் வட்டிவிகிதத்தைக்காட்டிலும் ஓரளவு உயர்வான வட்டிவிகிதத்தை வழங்குவதற்கு அது அனுமதிக்கப்படவேண்டும். வைப்புகள் ஈட்டுறுதித் திட்டங்களைக்கூடக் கிராம வங்கிகளுக்கு நீடிக்கப்படலாம்.

தங்கள் உற்பத்திச் சக்தியையும், திருப்பிச் செலுத்தும் சக்தியையும் நிரூபிக்கக் குடியானவர்கள் காட்டும் அசையாத சொத்தும் பொருள்சொத்தும் போன்ற ஆஸ்திகளைச் சாதாரணமாக ஏற்றுக்கொள்ளுகிற வகையில், கடனளிக்கும் முறையானது ஏற்பாடு செய்யவேண்டும். வாணிக வங்கிகளும், கிராம வங்கிகளும் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட பிரதம கூட்டுறவுக் கடன் சங்கங்களும், இந்த வகையில் தங்கள் கடனளிக்கும் முறையைத் திருப்பம் (Reorient) செய்வதற்கு வேண்டிய வசதியுடையவைகளாக இருக்கவேண்டும்.

கடன் உத்தரவாதக் கழகத்தால் (Credit Guarantee Co-operation) அளிக்கப்படும் உத்தரவாதத்தின் நோக்கவரம்பானது, சிறு குடியானவர்களுக்கும், இதரக் கடன் வாங்குபவர்களுக்கும் உற்பத்திக் கடனளிக்கும் எல்லா நிறுவனங்களுக்கும் விரிவாக்கம் செய்யப்படவேண்டும். உத்தேசிக்கப்பட்ட கிராம வங்கிகளும், அங்கீகரிக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களும், கூட்டுறவு வங்கிகளும், நேர்முகமாக உற்பத்தியாளர்களுக்குக் கடனளிக்கும்போது, அவைகளும் கடன் உத்தரவாதக் கழகத்தின் திட்டத்தின்கீழ்த் தக்க உத்தரவாத ஆதரவைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவைகளாகச் செய்யப்படவேண்டும்.

கூட்டுறவுச் சங்கங்களும், கிராம வங்கிகளும் அமைக்கப் படுகின்றபோது, வேண்டுமென்றே தவணை தவறிய பாக்கிகளைப் (Wilful Defaults) பொறுத்தமட்டில், காலக்கிரமமான சட்டப்படியான நடவடிக்கை எடுக்கப்படவேண்டும். அவ்வாறான நடவடிக்கை ஏற்கெனவே எடுக்கப்படாமலிருந்தால், சங்கங்கள் நடவடிக்கையை எடுப்பதற்குத் தவறும்போது, கூட்டுறவு வங்கிகள் கடன் வாங்குபவர்கள்மீது நேர்முகமாக நடவடிக்கை எடுப்பதற்கு வகை செய்யப்படவேண்டும். வாணிக வங்கிகளைப் பொறுத்தமட்டில், தவணைதவறிய பாக்கிதாரர்கள்மீது அவைகள் நடவடிக்கை எடுப்பதிலுள்ள சட்டத் தடங்கல்களை மாநில அரசு கள் துரிதமாக நீக்கவேண்டும்.

3 அல்லது 4 வருடங்களுக்கு ஒருமுறை, காலமுறையான வறட்சிகளுக்கு (Periodical Droughts) உட்பட்ட நிலப்பகுதி களில் அத்தகைய மெலிந்த வருடங்களில் திருப்பிச் செலுத்தப் படாமலிருக்கின்ற கடன் பகுதியைத் திருப்பிச் செலுத்தல், நல்ல பயிர்விளைச்சல் எதிர்பார்க்கப்படக்கூடிய 2 அல்லது 3 வருடங்களுக்கு நீடிக்கப்படுகின்ற வகையில், கடன் வசூல் முறை பொருத்தப்படுதல் செய்யப்படவேண்டும். கூட்டுறவுச் சங்கங்களும், வாணிக வங்கிகளும் நிதி ஆதாரங்களைப் பெற்றி ருந்து, மேற்பார்வை செய்யப்பட்ட கடனளிப்பு முறையை (Supervised Credit System) வழக்கத்திற்குக் கொண்டுவந்தி ருந்தால், கடன் வசூல் 2-லிருந்து 3 வருடங்கள் காலத்திற்கு நீடிக்கப்படலாம்.

**ஒற்றையான அமைப்பு அணுகுமுறை; நீண்டகாலக் கடன் களையும் மத்திய காலக் கடன்களையும் கிராம வங்கிகள் வழங்க வேண்டும்** (Single Agency Approach—Rural Banks to Lend Long term and Medium term Loans) : முடிந்தவரை, ஒரு கடன் வாங்குபவர் தம் கடன்கள் அனைத்தையும் ஓர் ஒற்றையான நிறுவன அமைப்பிலிருந்து பெறவேண்டும். கிராம வங்கிகளும், அங்கீகரிக்கப்பட்ட பிரதம கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்களும் நிலவள வங்கிகளின் பிரதிநிதிகளாக நீண்ட காலக் கடன்களையுங்கூட அளிப்பதற்கு வகை செய்யப்பட வேண்டும். கடனளிக்கும் நிறுவனங்கள், கடன் வாங்குபவரால் கொடுக்கப்படும் ஆஸ்திகளின்மீது முழுமையான கண்காணிப்பை வைத்துக்கொள்வதற்கு வகை செய்யவும், கடன் வாங்குபவரின் உற்பத்தியையும் வருமானத்தையும் மேம்படுத்துவதற்கு உதவி செய்யவும், கடன் வாங்குபவர்கள் அளிக்கும் ஆதாரங்கள் கடனளிப்பவர்களிடையே சிதறிப்போவதைத் தவிர்ப்பது மிகவும்

பயனுள்ளதாக விருக்கும். வேறு எந்த நிறுவன அமைப்புக்காவது குடியானவர்கள் கடன் நிலுவைகள் செலுத்தவேண்டியிருந்தால், முழுக்கடன் வசதிகளையும் அளிக்கின்ற நிறுவனங்கள், அந்தக் கடன் நிலுவைகளைத் திருப்பிச் செலுத்துவதற்கு ஏற்பாடு செய்து, அடைமானம் செய்யப்பட்ட ஆதாரங்களின் விடுதலையைத் தனக்குச் சாதகமாகப் பெற்றால், அது கடன் வாங்குபவர்களின் ஆஸ்திகள்மீது ஒரு மேலான கண்காணிப்பைப் பெற வகைசெய்யும்.

இப் பரிந்துரைகள், இந்திய அரசால் பரிசீலனையும் ஆராய்வும் செய்யப்பட்டு வருகின்றன.

## இதரக் குழுக்களும், நடைமுறைக் குழுக்களும்

முந்திய பத்திகளில் குறிப்பிடப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டைப் பரிசீலனை செய்த குழுக்களும்,ஆணைக்குழுக்களுமல்லாமல், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் அதற்குப் பிந்திய திட்டங்களிலும் வகுக்கப்பட்டிருந்த செயல்திட்டங்களை அமல்படுத்துவதற்கு வசதிசெய்யும்பொருட்டும், கூட்டுறவு இயக்கத்தின் குறிப்பிட்ட அம்சங்களைப் பரிசீலனை செய்து பரிந்துரைகளை வழங்குவதற்கும், இந்திய அரசால் அல்லது இதரத் தொடர்புள்ள நிறுவனங்களால் பல்வேறு குழுக்களும் செயற் குழுக்களும் அமைக்கப்பட்டன. அவற்றில் மிக முக்கியமானவைகள் பின்வருமாறு:

(i) இந்திய அரசால் அமைக்கப்பட்டதும் திரு. எஸ். நிஜலிங்கப்பா அவர்களைத் தலைவராகக் கொண்டதுமான கூட்டுறவுப் பண்ணைத் தொழில்பற்றிய செயற்குழு (1960) (Working Group on Co-operative Farming under the Chairmanship of Sri. S. Nijalingappa).

(ii) இந்திய அரசால் அமைக்கப்பட்டதும், திரு. எஸ். டி. மிஸ்ரா (Sri. S. D. Misra) அவர்களைத் தலைவராகக் கொண்டதுமான கூட்டுறவுப் பயிற்சியைப் பற்றிய ஆராய்ச்சி அணி (1961) (Study Term on Co-operative Training).

(iii) தேசியக் கூட்டுறவு வளர்ச்சி மற்றும் தானியக் கிடங்கு வளர்ச்சி வாரியத்தால் (National Co-operative Development and Ware Housing Board) அமைக்கப்பட்ட நுகர்வோர் கூட்டுறவைப் பற்றிய குழு (1961) (Committee on Consumers Co-operation).

(iv) இந்திய அரசின் வாணிகத் தொழில் துறையால் (Ministry of Commercial and Industry) அமைக்கப்பட்ட தொழிற் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய இரண்டாவது நடைமுறைக் குழு (1963) (Second Working Group on Industrial Co-operatives).

(v) விவசாயமல்லாத துறையில் நகரக் கடனளிப்பு அல்லது கடன்வசதிச் சங்கங்களைப் பற்றிய ஆராய்ச்சி அணி (1963) (Study Group on Urban Credit or On Credit Co-operatives in Non-Agricultural Sector).

(vi) இந்திய அரசால் அமைக்கப்பட்ட வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய நடைமுறைக் குழு (1963) (Working Group on Housing Co-operatives).

(vii) இந்திய அரசால் அமைக்கப்பட்டதும், பேராசிரியர் எம். எல். தாண்ட்வாலா (Professor M. L. Dantwala) அவர்களைத் தலைவராகக் கொண்டதுமான கூட்டுறவு விற்பனையைப் பற்றிய குழு (1966) (Committee on Co-operative Marketing).

இக் குழுக்கள் ஒவ்வொன்றின் பரிந்துரைகள் தொடர்புற்ற அத்தியாயங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும், 1971–72ஆம் ஆண்டுவரைக்கும் இந்தியாவில் கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்கள் அடைந்திருந்த முன்னேற்றம், பிற்சேர்க்கை 1-ல் தரப்பட்டுள்ளது.

ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும், 1971–72ஆம் ஆண்டு வரைக்கும், பிரதம கடன்பற்றற்ற கூட்டுறவுச் சங்கங்களின் (தெரிந்தெடுக்கப்பட்ட வகைகள்) முன்னேற்றத்தைக் காட்டும் ஒரு விவரப்பட்டியல் பிற்சேர்க்கை 2-ல் தரப்பட்டுள்ளது.

பிற்சேர்க்கை—I

## 1971–72ஆம் ஆண்டின்போது இந்தியாவில் கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்களின் முன்னேற்றம்

(ரூபாய் இலட்சக்கணக்கில்)

| சங்க வகை | எண்ணிக்கை | உறுப்பாண்மை (ஆயிரக் கணக்கில்) | நடைமுறை முதல் | கடன்கள் வழங்கப்பட்டவை | கடன்கள் நிலுவையிலுள்ளவை | தவணை தவறியவை |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| கடன்வசதிச் சங்கங்களனைத்தும் | 1,80,271 | 4,74,38 | 55,18,52 | 32,50,79 | 40,02,97 | 7,93,85 |
| அ. குறுகிய காலம் | | | | | | |
| 1. மாநிலக்கூட்டுறவு வங்கிகள் | 26 | 19 | 7,31,06 | 7,81,33* | 5,52,74 | 38,34 |
| 2. மையக் கூட்டுறவு வங்கிகள் | 341 | 3,19 | 11,93,57 | 10,19,70 | 8,88,86 | 3,19,36 |
| 3. தொழிற் கூட்டுறவு வங்கிகள் | 27 | 26 | 22,48 | 17,27 | 15,67 | 3,56 |
| 4. பிரதம கடன்வசதிச் சங்கங்கள் | | | | | | |
| (அ) விவசாயம் | 1,57,454 | 3,20,09 | 12,76,17 | 6,13,32 | 8,58,26 | 3,76,66 |
| (ஆ) தானிய வங்கிகள் | 5,444 | 6,05 | 5,26 | 78 | 2,13 | 1,55 |
| (இ) விவசாயமல்லாதவை | 16,091 | 88,61 | 5,99,96 | 5,68,15 | 3,93,11 | 23,97 |
| இதில் | | | | | | |
| நகர வங்கிகள் | 1,213 | 32,75 | 2,96,88 | 3,43,18 | 1,74,61 | 14,10 |
| ஊழியர்கள் கடன்வசதிச் சங்கங்கள் | 11,404 | 50,19 | 2,79,83 | 2,12,26 | 2,04,73 | 6,64 |
| மற்றவை | 3,474 | 5,67 | 23,25 | 12,71 | 13,77 | 3,23 |
| பிரதம வங்கிகள் | 941 | 37,83X | 3,73,74X | 3,33,09X | 2,29,26X | 14,28X |
| ஆ. நீண்டகாலம் | | | | | | |
| 1. மைய நிலவள வங்கிகள் | 19 | 16,93 | 10,16,50 | 1,45,75 | 7,28,83 | 12,54 |
| 2. பிரதம நிலவள வங்கிகள் | 869 | 39 06 | 6,73,52 | 1,04,49 | 5,63,37 | 17,60 |

X 1949ஆம் வருடத்திய வங்கித்தொழில் ஒழுங்குபடுத்தும் ஒழுங்காற்றுச் சட்டத்தின் அதிகாரத்திற்குள் வராத 31 சங்கங்களைக் குறித்த புள்ளிவிவரம் உள்ளடங்கியும், 8 பிரதம கூட்டுறவு வங்கிகளைக் குறித்த புள்ளிவிவரம் நீங்கலாகவும்.

* பீகார் மாநிலக் கூட்டுறவு வங்கியைக் குறித்த புள்ளிவிவரம் நீங்கலாக.

ரிசர்வ் வங்கியால் வெளியிடப்பட்ட 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்திற்குத் தொடர்பான புள்ளிவிவரப் பட்டியலி' லிருந்து எடுக்கப்பட்டவை.

பிற்சேர்க்கை—I

## மூன்று ஐந்தாண்டுத்திட்டக் காலங்களின்போது கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்களின் முன்னேற்றம் 1966–67, 1967–68, 1968–69, 1969–70, 1970–71

| | 1950–51 × | முதல் திட்டம் 1955–56 | இறுதியில் இரண்டாவது திட்டம் 1960–61 | மூன்றாவது திட்டம் 1965–66 | 1966–67 | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 | 1971–72 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| **கடன்வசதிச் சங்கங்களின் எண்ணிக்கை** | | | | | | | | | | |
| மாநிலச் சங்கங்கள் | 20 | 33 | 39 | 44 | 47 | 47 | 47 | 47 | 47 | 48 |
| மையச் சங்கங்கள் | 505 | 478 | 390 | 371 | 372 | 371 | 368 | 364 | 365 | 365 |
| பிரதம விவசாயச் சங்கங்கள் * | 1,15,748 | 1,68,410 | 2,22,004 | 2,00,148 | 1,86,289 | 1,79,045 | 1,74,480 | 1,68,582 | 1,66,702 | 1,63,767 |
| பிரதம விவசாயமல்லாத சங்கங்கள் | 7,810 | 10,003 | 11,995 | 13,449 | 13,616 | 13,965 | 14,435 | 14,816 | 15,346 | 16,091 |
| மொத்தம் | 1,28,083 | 1,78,924 | 2,34,428 | 2,14,012 | 2,00,324 | 1,93,428 | 1,89,330 | 1,83,809 | 1,82,460 | 1,80,271 |
| **உறுப்பினர்களின் எண்ணிக்கை (ஆயிரக்கணக்கில்)** | | | | | | | | | | |
| மாநிலச் சங்கங்கள் | 31 | 1,27 | 2,16 | 4,26 | 7,95 | 9,39 | 11,93 | 15,51 | 14,63 | 17,13 |
| மையச் சங்கங்கள் | 2,07 | 3,00 | 3,88 | 3,81 | 3,73 | 3,77 | 3,64 | 3,34 | 3,33 | 3,44 |
| பிரதம விவசாயச் சங்கங்கள் * | 53,69 | 88,35 | 1,89,59 | 2,83,14 | 2,97,76 | 3,13,44 | 3,27,46 | 3,34,91 | 3,50,47 | 3,65,20 |
| பிரதம விவசாயமல்லாத சங்கங்கள் | 21,78 | 30,73 | 45,73 | 64,84 | 74,85 | 75,93 | 78,88 | 79,42 | 84,89 | 88,61 |
| மொத்தம் | 77,85 | 1,23,35 | 2,41,36 | 3,56,05 | 3,84,29 | 4,02,53 | 4,21,91 | 4,30,18 | 4,53,12 | 4,74,38 |

## நடைமுறை முதல்—கடன்வசதிச் சங்கங்களனைத்தும்

(ரூபாய் இலட்சக்கணக்கில்)

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பங்கு மூலதனம் | 26,97 | 51,14 | 1,55,61 | 3,09,05 | 3,48,18 | 3,03,48 | 4,60,05 | 5,18,46 r | 5,88,72 | 6,51,72 |
| காப்பு நிதியும் இதர நிதிகளும் | 21,77 | 33,53 | 52,03 | 1,04,44 | 1,23,95 | 1,44,32 | 1,67,34 | 1,88,43 | 2,23,25 | 2,56,87 |
| வைப்புகள் | 99,38 | 1,52,18 | 2,95,85 | 6,05,20 | 6,50,39 | 7,52 68 | 8,71 97 | 9,54,41 | 11,15,04 | 12,90,48 |
| இதரக் கடன்கள் | 54,76 | 1,15,29 | 5,26,17 | 11,35,30 | 13,01,86 | 14,80,30 | 18,94,37 | 22,71,94 | 25,90,50 | 29,04,16 |
| இதரப் பொறுப்புகளும், இலாப எச்சமும் | ... | ... | 66,94 | 1,82,85 | 2,16,28 | 2,47,52 | 2,82,29 | 3,18,17 r | 3,51,08 | 4,15,29 |
| மொத்தம் | ... | ... | 10,96,60 | 23,36,84 | 26,40,66 | 30,28,30 | 36,76,02 | 42,50,71 | 48,68,59 | 55,18,52 |

## பிரதமக் கடன்வசதிச் சங்கங்களின் நடவடிக்கைகள்

(ரூபாய் இலட்சக்கணக்கில்)

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டின்போது வழங்கப்பட்ட கடன்கள் | 71,48 | 1,23,98 | 3,42,32 | 6,55,95 | 6,89,45 | 8,06,98 | 9,42,89 | 10,63,68 | 11,63,08 | 12,86,74 |
| ஆண்டின்போது திருப்பிச் செலுத்தப்பட்ட கடன்கள் | 58,85 | 1,04,80 | 2,85,70 | 5,40,69 | 5,16,76 | 6,90,28 | 7,81,73 | 8,98,88 | 10,06,88 | 11,77,68 |
| நிலுவைக் கடன்கள் | 75,90 | 1,32,31 | 3,61,80 | 7,70,28 | 8,61,63 | 9,90,40 | 11,78,56 | 13,77,04 r | 15,79,56 | 18,16,87 |
| தவணை தவறிய கடன்கள் | 9,78 | 21,60 | 54,60 | 1,44,37 | 1,81,90 | 1,95,05 | 2,41,67 | 2,98,89 r | 3,63,74 | 4,19,71 |

## பிரதம விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள் – சங்கமொன்றுக்குச் சராசரி

(ரூபாய் ஆயிரக்கணக்கில்)

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| உறுப்பாண்மை | 45 | 69 | 80 | 136 | 149 | 163 | 173 | 183 | 193 | 203 |
| பங்கு மூலதனம் | 1 | 1 | 3 | 6 | 7 | 9 | 10 | 12 | 13 | 14 |
| வைப்புகள் | — | — | 1 | 2 | 2 | 3 | 3 | 4 | 4 | 5 |
| நிலுவைக் கடன்கள் | 2 | 3 | 10 | 18 | 20 | 25 | 30 | 44 | 49 | 55 |

X ஐந்தாண்டுத் திட்டங்களின் தொடக்கத்திற்கு முந்திய நிலவரம்.

* தானிய வங்கிகளும் பிரதம நிலவள வங்கிகளும் உள்ளிட்டன.

ரிசர்வ் வங்கியால் வெளியிடப்பட்ட 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்திற்குத் தொடர்பான புள்ளி விவரப் பட்டியலி'லிருந்து எடுக்கப்பட்டவை.

## பிற்சேர்க்கை—II

### ஐந்தாண்டுத் திட்டக் காலங்களின்போது, பிரதம கூட்டுறவு கடன் பற்றற்ற சங்கங்களின் (தெரிந்தெடுக்கப்பட்ட வகைகள்) முன்னேற்றம்

(ரூபாய் ஆயிரக்கணக்கில்)

| சங்கவகை | இரண்டாவது திட்டத்தின் இறுதியில் 1960-61 | மூன்றாவது திட்டத்தின் இறுதியில் 1965-66 | 1966-67 | 1967-68 | 1968-69 | 1969-70 | 1970-71 |
|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| **எண்ணிக்கை** | | | | | | | |
| விற்பனை | 3,108 | 3,198 | 3,295 | 3,280 | 7,724L | 3,335L | 3,222L |
| பருத்திக் கொட்டை நீக்குதலும் அழுத்தம் செய்தலும் | 128 | 155 | 163 | 164 | 162 | 168 | 172 |
| இதரப் பதனப்படுத்துதல் | 3,103 | 1,894 | 1,528 | 1,343 | 1,308 | 1,403 | 1,118 |
| சர்க்கரை ஆலைகள் | 66 | 78 | 82 | 85 | 99 | 111 | 141 |
| பண்ணைச் சங்கங்கள் | 3,184 | 7,295 | 7,866 | 8,048 | 8,143 | 8,819 | 9,473 |
| நெசவாளர் சங்கங்கள் | 11,803 | 12,947 | 12,736 | 12,534 | 12,373 | 12,219 | 12,027 |
| இதரத் தொழிற்சங்கங்கள் | 21,288 | 34,950 | 33,842 | 35,317 | 34,909 | 34,717 | 34,282 |
| நுகர்வோர் பண்டசாலைகள் | 7,058 | 13,077 | 13,837 | 13,950 | 13.913 | 13,562 | 13,156 |
| வீட்டுவசதிச் சங்கங்கள் | 6,451 | 11,765 | 12,723 | 13,817 | 15,029 | 16,308 | 18,050 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| **உறுப்பாண்மை** | | | | | | | |
| விற்பனை | 14,67,622 | 22,80,467 | 20,92,948 | 25,18,022 | 53,01,336L | 49,31,763L | 28,14,138L |
| பருத்திக் கொட்டை நீக்குதலும் அழுத்தம் செய்தலும் | 59,052 | 1,06,456 | 1,18,445 | 1,15,801 | 1,17,772 | 1,22,682 | 1,29,841 |
| இதரப் பதனப்படுத்துதல் | 1,20,948 | 1,97,106 | 2,05,317 | 1,87,247 | 1,94,715 | 1,94,757 | 2,01,484 |
| சர்க்கரை ஆலைகள் | 1,76,956 | 2,95,965 | 3,28,632 | 3,51,561 | 4,11,261 | 4,79,382 | 5,10,345 |
| பண்ணைச் சங்கங்கள் | 88,242 | 1,87,876 | 2,08,397 | 2,12,597 | 2,19,329 | 2,41,315 | 2,57,428 |
| நெசவாளர் சங்கங்கள் | 13,10,800 | 13,14,746 | 13,26,954 | 12,77,358 | 12,59,123 | 12,64,735 | 12,12,369 |
| இதரத் தொழிற் சங்கங்கள் | 12,17,318 | 15,99,547 | 15,72,474 | 15,49,220 | 16,91,885 | 17,42,332 | 17,32,643 |
| நுகர்வோர் பண்டசாலைகள் | 13,40,767 | 29,29,987 | 33,71,622 | 34,85,892 | 35,30,564 | 34,04,802 | 34,13,617 |
| வீட்டுவசதிச் சங்கங்கள் | 3,78,937 | 7,56,808 | 8,15,612 | 8,93,718 | 9,99,526 | 11,11,029 | 11,82,353 |
| **கொள்முதல்/உற்பத்தி** | | | | | | | |
| விற்பனை | 63,80,60 | 209,86,00 | 235,10,62 | 238,16,76 | 223,61,43 | 218,90,64L | 224,62,20L |
| பருத்திக் கொட்டை நீக்குதலும் அழுத்தம் செய்தலும் | ... | ... | ... | ... | ... | ... | ... |
| இதரப் பதனப்படுத்துதல் | ... | ... | ... | ... | ... | ... | ... |
| சர்க்கரை ஆலைகள் | 43,52,37 | 112,08,46 | 73,30,83 | 139,00.95 | 182,58,94 | 175,36,74 | 170,78,87 |
| பண்ணைச் சங்கங்கள் | 1,57,96 | 4,82,87 | 6,71,45 | 8,64,22 | 8,43,17 | 7,83,68 | 9,17,17 |
| நெசவாளர் சங்கங்கள் | 34,27,84 | 84,01,37P | 87,12,19P | 86,12,72P | 81,35,09C | 98,03,48rC | 104,29,13C |
| இதரத் தொழிற் சங்கங்கள் | 16,14,49 | 48,28,60 | 50,97,54 | 58,67,12 | 53.74,50 | 54,28,28 | 58,01,09 |
| நுகர்வோர் பண்டசாலைகள் * | 38,25,29 | 145,02,51 | 186,55,98 | 183,82,06 | 170,70,73 | 167,86,05 | 141,31,02 |
| வீட்டுவசதிச் சங்கங்கள் | ... | ... | ... | ... | ... | ... | ... |

(பிற்சேர்க்கை—II-ன் தொடர்ச்சி)

| சங்கவகை | இரண்டாவது திட்டத்தின் இறுதியில் 1960–61 | மூன்றாவது திட்டத்தின் இறுதியில் 1965–66 | 1966–67 | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| **விற்பனை** | | | | | | | |
| விற்பனை | 105,86,02 | 316,89,19 | 367,72,37 | 412,06,47 | 569,58,71 | 581,46,35L | 506,76,39L |
| பருத்திக் கொட்டை நீக்குதலும் அழுத்தம் செய்தலும் | 8,54,33 | 17,38,89 | 22,18,55 | 26,83,20 | 36,21,78 | 33,21,83 | 38,53,27 |
| இதரப் பதனப்படுத்துதல் | 4,65,81 | 3,58,80 | 2,83,58 | 3,87,93 | 8,57,96 | 10,68,55ர | 9,03,03 |
| சர்க்கரை ஆலைகள் | 28,85,04 | 89,38,50 | 105,23,97 | 130,62,04 | 162,57,53 | 168,76,77 | 209,42,05 |
| பண்ணைச் சங்கங்கள் | 1,61,48 | 4,28,91 | 6,45,40 | 8,02,66 | 7,64,38 | 7,77,11 | 8,52,52 |
| நெசவாளர் சங்கங்கள் | 36,88,61 | 63,53,49 | 65,04,66 | 59,93,03 | 51,21,05 | 61,55,74ர | 72,71,64 |
| இதரத் தொழிற் சங்கங்கள் | 17,93,69 | 36,69,46 | 48,18,39 | 47,63,16 | 39,72,90 | 40,72,14 | 40,35,58 |
| நுகர்வோர் பண்டசாலைகள் | 14,23,22 | 162,29,51 | 195,37,56 | 183,21,40 | 170,40,26 | 175,41,97 | 145,16,41 |
| வீட்டுவசதிச் சங்கங்கள் X | 25,64,96 | 36,17,21 | 32,94,57 | 32,09,80 | 49,56,39 | 58,65,93 | 54,40,59 |

X சங்கங்களாலும் அவற்றின் உறுப்பினர்களாலும் கட்டப்பட்ட வீடுகளுக்கும், குடியிருப்புகளுக்கும் தொடர்பானவை.

C கொள்முதல் செய்யப்பட்ட நூலின் பெறுமானமும், தயாரிக்கப்பட்ட துணியின் பெறுமானமும்.

** கொள்முதல் செய்யப்பட்ட மூலப்பொருள்களின் பெறுமானமும், தயாரிக்கப்பட்ட பொருள்களின் பெறுமானமும்.

* அனுப்புதலில் பெறப்பட்ட பொருள்கள் உள்ளிட்டது.

L தற்போது விற்பனைச் சங்கங்களாகப் பாவிக்கப்படுகின்ற கரும்பு வழங்கும் சங்கங்களுக்குத் தொடர்பான புள்ளிவிவரம் உள்ளிட்டது.

P கொள்முதல் செய்யப்பட்ட நூலின் மற்றும் துணியின் பெறுமானமும், தயாரிக்கப்பட்ட துணியின் பெறுமானமும்.

ர. மாற்றியமைத்த புள்ளி விவரங்கள்.

ரிசர்வ் வங்கியால் வெளியிடப்பட்ட 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்திற்குத் தேவையான புள்ளிவிவரப் பட்டியலி'லிருந்து எடுக்கப்பட்டவை.

# 4. தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கத்தின் வரலாறு

## தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கத்தின் தொடக்கம்

1904ஆம் வருடத்திய 'கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்களின் சட்டம்' நிறைவேற்றப்பட்டவுடனேயே தமிழ்நாட்டில் முதற் கூட்டுறவுச் சங்கம் செங்கை மாவட்டத்தில் திரூர் என்ற கிராமத்தில், 1904ஆம் ஆண்டு ஆகஸ்டு 30-ல் பதிவு செய்யப்பட்டது. 1907ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, 6,439 உறுப்பினர்களுடன் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 63-க்கு உயர்ந்திருந்தது. 1912ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, சங்கங்களின் எக்ணிக்கை 972-க்கும், உறுப்பினர்களின் எண்ணிக்கை 66,156-க்கும் உயர்ந்தன; 1915ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று அவை முறையே 1,600-க்கும் 1,18,726-க்கும் உயர்ந்தன. இவற்றுள் 1,446 சங்கங்கள் விவசாயக் கடன்வசதிச் சங்கங்களாக இருந்தன; எஞ்சியுள்ள ஏறக்குறைய எல்லாச் சங்கங்களும் நகரக் கடன்வசதிச் சங்கங்களாக இருந்தன. எல்லாவகைச் சங்கங்களின் நடைமுறை மூலதனம் 142.10 இலட்ச ரூபாயாக இருந்தது. தொடக்கத்தில் கூட்டுறவின் முன்னேற்றம் மிகவும் மந்தமாக இருந்தது; ஏனென்றால், வெறும் எண்ணிக்கைகளைக் காட்டிலும், விவகார எல்லையையும், உறுப்பினர்களையும் தெரிந்தெடுப்பதில் மேலான கவனம் செலுத்தப்பட்டது. கூட்டுறவுப் பதிவாளர், சங்கங்களை நேர்முகமாக மேற்பார்வையும் ஆய்வும் செய்தார். தம் சிறுசிப்பந்திகளுக்கு அவர் நேர்முகமாகப் பயிற்சியுங்கூட அளித்தார். நகர்ப்புறத்திற்குக் கடன் வசதியளிப்பதற்காக முதன்முதலில் அமைக்கப்பட்ட அப்பட்டமான கூட்டுறவுச் சங்கம், செங்கை மாவட்டத்தில் 1904ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் நிறுவப்பட்ட காஞ்சிபுரம் நகர வங்கியாகும். பின்தொடர்ந்த ஒவ்வோர் ஆண்டிலும், ஒருசில அதிகமான நகரச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இந்த மாநிலத்தில் நிறுவப்பட்ட முதல் கடன்பற்றற்ற சங்கம் (Non-Credit Society), 1905ஆம் ஆண்டில் பதிவுசெய்யப்பட்ட (டி. யு. சி. எஸ். – T.U.C.S.) திருவல்லிக்கேணி நகரக் கூட்டுறவுச் சங்கமாகும். அதைத் தொடர்ந்து அம் மாதிரியான சங்கங்கள் கோவையிலும்

மதுரையிலும் நிறுவப்பட்டன. இச் சங்கங்களின் நோக்கம், மிக முக்கியமான அத்தியாவசியப் பண்டங்களை வழங்குதலாக இருந்தது. ஒரு நெசவாளர் ஒன்றியம், காஞ்சியில் 1905ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. அது, தன் உறுப்பினர்களுக்காகக் கச்சாப் பொருள்களை வாங்கி, அவர்கள் தயாரித்த பொருள்களை விற்பனை செய்வதற்கு ஏற்பாடு செய்தது. அது நெசவுத்தொழிலில் புதிய முறைகளையுங்கூடத் தொடங்கி வைத்தது.

கூட்டுறவு இயக்கம் தோன்றிய பிறகு, முதல் சில ஆண்டுகளுக்கு, இயக்கத்திற்கு அரசு நிதியுதவி அளித்து வந்தது. ஆனால், அவ் வுதவி விரைவில் நின்று விட்டது. பிரதம கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதி உதவுவதற்குச் சென்னை மத்திய நகர வங்கி (Madras Central Urban Bank) (தற்போதைய தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி), தனிநபர்ப் பங்குதாரர்களை மட்டும் கொண்டதும், இராஜதானி முழுவதும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியளிப்பதைத் தன் பணியாகக் கொண்டதுமான, ஓர் ஊட்டமளிப்பு வங்கியாக (Feeder Bank), 1905ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பதிவு செய்யப்பட்டது. 1909ஆம் ஆண்டில் மாவட்ட வங்கிகளை (தற்போதுள்ள கூட்டுறவு மத்திய வங்கிகள்) அமைத்தல் அவசியமாகத் தோன்றியது. அந்த ஆண்டில், அத்தகைய இரண்டு வங்கிகள் அமைக்கப்பட்டன. அந்த வங்கிகளின் கொள்கையும் செயற்பாடும் பொதுவாகச் சென்னை மத்திய நகர வங்கிக்கு ஒத்திருந்தன. அவைகளின் நோக்கம், கிராமச் சங்கங்களுக்கும் நகரச் சங்கங்களுக்கும் கடனளிப்பதாக இருந்தது. அவைகளின் பங்குதாரர்கள் எல்லாரும் தனிநபர்களாக இருந்தனர். அவை ஒவ்வொன்றின் நடவடிக்கையும் ஒரு மாவட்டத்திற்கு வரையறுக்கப்பட்டிருந்தது. 1912ஆம் ஆண்டிலிருந்து மத்திய வங்கிகள் ஒவ்வொரு மாவட்டத்திலும் நிறுவப்பட ஆரம்பித்தன. 1935ஆம் ஆண்டில், அவை தனி நபர்களையும், சங்கங்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளத் தொடங்கின. பிரதம சங்கங்களுக்குக் கடனளிப்பதை மாவட்ட மத்திய வங்கிகளுக்கு விட்டுவிட்டுச் சென்னை மத்திய நகர வங்கியானது, மாவட்டங்களிலிருந்து வாபஸ் பெற்றுக் கொண்டது.

சங்கங்களின் எண்ணிக்கையில் அதிகரிப்போடு, அவற்றின் மேற்பார்வைப் பிரச்சினையும் ஒரு முக்கியக் காரியமாக ஆயிற்று. ஏனெனில், கூட்டுறவுப் பதிவாளருக்கும் அவருடைய சிப்பந்திகளுக்கும் சங்கங்களை மேற்பார்வை செய்வதற்கு இயலாமலிருந்தது. மத்திய வங்கிகள்கூட, சங்கங்கள் ஒரு மாவட்ட நிலப்

பகுதியில் சிதறியிருந்ததால், அவற்றைத் திருப்திகரமாக மேற்பார்வை செய்யமுடியவில்லை. ஆகையால், உள்ளூர்க் கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியங்கள் (Co-operative Supervising Unions) நிறுவப்பட்டன. முதல் கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியம் 1910ஆம் ஆண்டில் பதிவு செய்யப்பட்டது. 1913 – 1914ஆம் ஆண்டில், கூட்டுறவுக் கல்வி மற்றும் பிரசாரத் துறையில், கூட்டுறவுப் பணிக்கு உதவிசெய்யும் நோக்கத்துடன் மாகாணக் கூட்டுறவு ஒன்றியம் (தற்போதுள்ள தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம்) பதிவு செய்யப்பட்டது.

சென்னையில் முதல் பால்வழங்கும் ஒன்றியம், 13 ஊட்டமளிப்புச் சங்கங்களுடனும் (Feeder Societies), ரூபாய் 242 பங்கு மூலதனத்துடனும், 1927 – 28ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. மத்திய நில அடைமான வங்கி (தற்போதுள்ள தமிழ்நாடு மாநில நிலவள வங்கி) பிரதம நில அடைமான வங்கிகளையும் (தற்போதுள்ள நிலவள வங்கிகள்) தனிநபர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டு 1929ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. தென்னிந்தியக் கூட்டுறவுக் காப்பீட்டுச் சங்கமாகிய (South India Co-operatives Insurance Society) முதல் கூட்டுறவுக் காப்பீட்டுச் சங்கம், 1932ஆம் ஆண்டுச் சனவரி மாதத்தில் பதிவு செய்யப்பட்டு அது 1932ஆம் ஆண்டுச் சனவரி 30-ல் தன் வேலையைத் தொடங்கியது. இச் சங்கம் இப்பொழுது காப்பீடு நாட்டுடைமையாக்கல் திட்டத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டுள்ளது. மாநிலக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் (தற்போதுள்ள தமிழ்நாடு மாநிலக் கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கம்), 1935ஆம் ஆண்டில், பிரதம நெசவாளர் சங்கங்களின் செயற்பாட்டை முறைப்படுத்துவதற்கும் ஒழுங்குபடுத்துவதற்கும் அவைகளுக்கு உதவி செய்வதற்கும் நிறுவப்பட்டது.

## இயக்க வளர்ச்சியில் காலக் கட்டங்கள்

தமிழ்நாட்டில், கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியில், தனிப்பட்ட காலக்கட்டங்கள் கவனிக்கப்படக்கூடும். 1904ஆம் ஆண்டு முதல் 1918ஆம் ஆண்டு வரையிலான முதற்காலக்கட்டம் மந்தமான வளர்ச்சியுள்ள ஒரு காலமாக இருந்தது. 1918ஆம் ஆண்டுமுதல் 1930ஆம் ஆண்டு வரையிலான இரண்டாவது காலக் கட்டமானது, விவசாய விலைவாசி மட்டத்தில் ஒரு நிலையான உயர்வும் அதன் விளைவாக ஐரோப்பிய உலகப் போருக்குப் பின் நிகழ்ந்த விவசாயச் செழிப்பும் நிலவிய ஒரே காலத்தில் நேரிட்டது. கூட்டுறவுக் கண்ணோட்டத்தில் இயக்கம் ஒரு மிகத்

துரிதமான விரிவாக்கம் அடைந்துவந்த காலமாக அது இருந்தது. எல்லா வகையான சங்கங்களின் எண்ணிக்கை 3,676-லிருந்து 15,238-க்கு உயர்ந்து, உறுப்பினர்களின் எண்ணிக்கை 2,44,297-லிருந்து 9,74,999-க்கு உயர்ந்தது. 1927ஆம் ஆண்டில், கூட்டுறவு பற்றிய ஒரு குழு அரசால் அமைக்கப் பட்டதுங்கூட இந்தக் காலவரையில்தான். திரு. டௌன் செண்ட் (Mr. Townsend) அவர்களைத் தலைவராகக் கொண்ட இக் குழு, சென்னை மாகாணத்தில் கூட்டுறவு இயக்கம் அடைந் திருந்த முன்னேற்றத்தைப் பரிசீலனை செய்வதற்கும் இயக்கத்தின் நிலைமையை விசாரணை செய்வதற்கும் அதன் வருங்கால வளர்ச்சி வழிகளை யோசனை கூறுவதற்கும் அமைக்கப்பட்டது. அதற்குப் பின்னர், 1932ஆம் ஆண்டில், 'சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம்' நிறைவேற்றப்பட்டது. மூன்றாவது காலக் கட்டம், 1930ஆம் ஆண்டு முதல் 1937ஆம் ஆண்டு வரையிலான காலமாகும். இக் காலவரையில், அனைத்துலகப் பொருளாதார நெருக்கடியும், விவசாய விலைவாசிகளில் ஓர் அபரிமிதமான வீழ்ச்சியும் ஏற்பட்டது. இக் காலத்தில், சங்கங் களை ஒருங்கிணைப்பும் சீரமைப்பும் செய்தல் கொள்கையின் விளை வாக, அநேக உதவாத அல்லது செயற்படாத சங்கங்கள் கலைக்கப்பட்டன. சங்கங்களின் எண்ணிக்கையும், உறுப்பினர்களின் எண்ணிக்கையும் வெகுவாகக் குறைந்தன. எனினும், ஒரு பொருளாதாரக் கண்ணோட்டத்தில், நடைமுறை மூலதனத்தில் ஒரு நிலையான உயர்வு இருந்தது (இரண்டு ஆண்டுகளைத் தவிர). சங்கங்களின் எண்ணிக்கையில் ஒரு வீழ்ச்சி, தவணை தவறிய பாக்கிகள், செயற்படாத அல்லது உதவாத சங்கங்கள் ஆகியவைகளின் எண்ணிக்கையில் அதிகரிப்பு, கலைக்கப்பட்ட சங்கங்களின் எண்ணிக்கையில் அதிகரிப்பு முதலியன போன்ற இதர மந்தமான அம்சங்கள் கூட்டுறவு நிறுவனங்களின் செயற் பாட்டில் காணப்பட்டாலும், இக் காலவரையில் நில அடை மானக் கூட்டுறவு வங்கிகள் மற்றும் இதர வகையான சங்கங் களின் விரிவாக்கத் தொடக்கம் ஏற்பட்டது. நில அடைமான வங்கிகளின் செயற்பாட்டையும், சரியான வளர்ச்சியையும் ஒழுங்குபடுத்துவதற்காக 1934ஆம் ஆண்டில், ஒரு தனிப்பட்ட சட்டம் 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்திற்குத் துணைச்சட்டமாக நிறைவேற்றப்பட்டது. 1925ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, 2 நில அடைமான வங்கிகள் மட்டுமே இருந்தன. 1937ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, சென்னை மத்திய நில அடைமான வங்கியின் தலைமையின் கீழ் 93 நில அடைமான வங்கிகளிருந்தன. சென்னை மத்திய நில அடைமான வங்கி, 1929ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது.

கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் அதிகரித்தன. 1924ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று அத்தகைய சங்கங்கள் 3 மட்டுந்தான் இருந்தன. 1937ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, அத்தகைய சங்கங்களின் எண்ணிக்கை 111ஆக இருந்தது. நெசவாளர் சங்கங்கள், பால் வழங்கும் சங்கங்கள் முதலியன போன்ற இதரக் கடன் பற்றற்ற கூட்டுறவுச் சங்கங்களின் ஒரு விரிவாக்கமுங்கூட இருந்தது. நான்காவது காலக் கட்டம் 1937ஆம் ஆண்டு முதல் 1940ஆம் ஆண்டு வரையிலுமான காலமாகும். இக் காலவரையில், சிறப்பாக உலகப்போருக்கு முந்திய ஆண்டுகளிலும், போர் ஆண்டுகளிலும், கூட்டுறவு நடவடிக்கையின் எல்லாத் துறைகளிலும், தாமதமான வளர்ச்சியும், நிலையான விரிவாக்கமும் இருந்தன. இக் காலத்தின் போது, சர் டி. விஜயராகவாச்சாரி அவர்களைத் தலைவராகக் கொண்ட கூட்டுறவு பற்றிய ஒரு குழுவை அரசு அமைத்தது. 1931ஆம் ஆண்டுப் பிப்ரவரி மாதம் முதல் 1940ஆம் ஆண்டு ஏப்ரல் வரை கூட்டுறவு இயக்கத்தின் செயற்பாட்டைக் குறித்து அக் குழுவினர் மிக விவரமான ஒரு விசாரணையைச் செய்து, ஒரு பயனுள்ள அறிக்கையைச் சமர்ப்பித்தனர். இயக்கத்தின் மறுவாழ்விற்காகவும் அதை உறுதிப்படுத்துவதற்காகவும் (Rehabilitation and Consolidation), அநேக யோசனைகள் அந்த அறிக்கையில் அடங்கியிருந்தன. விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள், நில அடைமான வங்கிகள், மத்திய வங்கிகள், விற்பனைவசதிச் சங்கங்கள் மேற்பார்வை ஒன்றியங்கள் முதலியவைகளின் செயற்பாட்டினை மேம்படுத்துவதற்காகச் செய்யப்பட்ட குழுவின் அநேகப் பரிந்துரைகள், அரசால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அமல்படுத்தப்பட்டன. சில பரிந்துரைகளின் மீது, போர்க் காலவரைக்கும் அரசு நடவடிக்கையைத் தள்ளிப் போட்டது. எனினும், ஏற்றுக்கொள்ளப்பட்ட மரபுகளிலிருந்தும் நடைமுறைகளிலிருந்தும் அடிப்படையான விலகுதல்களாகவிருந்த சில பரிந்துரைகளை அரசு ஏற்றுக்கொள்ளவில்லை. உதாரணமாக, அவையாவன : கிராமக் கடன்வசதிச் சங்கத்தின் பொறுப்பு, சாதாரணமாக வரையறுக்கப்பட்டதாக இருக்கவேண்டும்; சிறிய கிராமச் சங்கமானது, பல சங்கங்கள் ஒரு சங்கமாகத் தொகுக்கப்பட்டு ஒரு விரிந்த அடிப்படையின் பேரில் சீரமைக்கப்படவேண்டும்; மத்திய வங்கிகள் தங்கள் தனிநபர்ப் பங்குதாரர்களை முழுமையாக ஒழித்துவிட்டு, அப்பட்டவகையான வங்கி ஒன்றியங்களாக (Pure Type Banking Unions) அமைக்கப்படவேண்டும் என்பனவாகும். இத் துறைகளைப் பொறுத்தமட்டில், நடப்பிலிருக்கும் நடைமுறையிலிருந்து எந்த மாறுதலும் அவசியமில்லையென்று அரசினர் கருதினர்.

முதல் இரண்டு வருடங்களில், உலகப் பொருளாதார மந்தத்தின் தாழ்த்துகின்ற விளைவுகளிலிருந்து ஒரு மாற்றம் காணப்பட்டது. 1939ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று மந்தம் சமாளிக்கப்பட்டு, அந் நாளன்று 13,759 சங்கங்களிருந்தன. அவற்றுள் 13,558 சங்கங்கள் செயற்பட்டிருந்தன. ஐந்தாவது காலக்கட்டம், 1940ஆம் ஆண்டு முதல் 1945ஆம் ஆண்டு வரையிலுமான காலமாகும். இக் காலவரையில் 2ஆவது உலகப் போருக்கான தயாரிப்புகளும், யுத்த அமைப்பில் கூட்டுறவு நிறுவனங்களின் முறையான ஈடுபாடும் நிகழ்ந்தன. அநேகப் புதிய பிரச்சினைகள் தோன்றின; அத்தியாவசியப் பொருள்களின் பற்றுக்குறையும், கொள்ளை இலாபம் அடித்தலும், கடுமையான வீட்டுவசதிப் பற்றுக்குறையும், முன்னாள் இராணுவ வீரர்களுக்கு வேலைவாய்ப்பளித்தலும், அது போன்றவைகளும் கூட்டுறவு நிறுவனங்களால் தீர்க்கப்பட வேண்டியிருந்த பிரச்சினைகளுள் ஒருசிலவாகும். இந்தப் பிரச்சினைகளைச் சமாளிப்பதில் கூட்டுறவு நிறுவனங்கள் தங்களைப்பற்றி நல்ல ஒரு வரலாற்றை ஏற்படுத்தின என்று கூறலாம். இக் காலவரையில் கூட்டுறவுச் சங்கங்களின் மிகச் சிறந்த பயன்படும் சாதனைகளாவன: விலைவாசியுயர்வைத் தடுத்து நிறுத்துதல்; கொள்ளை இலாபமடிப்பதையும், கள்ள விற்பனையையும் ஒழித்தல்; மற்றும் பொதுவான பற்றுக்குறைப் பண்டங்கள் ஒரு நியாயமான வகையில் விநியோகம் செய்தல் ஆகியவை. போர்த் தொடக்கத்தின்போது 1938 – 39ஆம் ஆண்டுகளில், 23.77 இலட்ச ரூபாய் பெறுமானமுள்ள மொத்த விற்பனையைச் செய்த 85 கூட்டுறவுப் பண்டசாலைகள் மட்டுமேயிருந்தன. 1946ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, 1357.55 இலட்ச ரூபாய் பெறுமானமுள்ள மொத்த விற்பனையைச் செய்த 1386 கூட்டுறவுப் பண்டசாலைகளிருந்தன. போர்க்காலத்தின்போது அமைக்கப்பட்ட மாவட்ட மொத்த விற்பனைச் சங்கங்களின் (தற்போதுள்ள மாவட்ட விநியோக விற்பனை வசதிச் சங்கம்) செயல்திறனும் சாதனையும் பாராட்டுதலுக்குரியனவாக இருந்தன. 1946ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, 21 மாவட்ட மொத்த விற்பனைப் பண்டசாலைகள் இருந்தன. அவற்றின் பங்குமூலதனம் 29.18 இலட்ச ரூபாயாகவும், மொத்த விற்பனை 1264.58 லட்ச ரூபாயாகவும் இருந்தன. உண்மையாகவே, பிரதம கூட்டுறவுப் பண்டசாலைகளும் மொத்த விற்பனைக் கூட்டுறவுப் பண்டசாலைகளும் நுகர்வோர்களுக்கு மிகப் பெரிய சேவையைச் செய்துள்ளன. சில்லரைப் பண்டசாலைகள், உணவுப் பங்கீட்டு அட்டையுடையவர்களில் ஏறத்தாழ 25 சதவீதமானவர்களுக்குச் சேவை செய்தன. மொத்த விற்பனைப் பண்டசாலைகள் சுமார் 308 இலட்ச ரூபாய் பெறு

மானமுள்ள உணவுத் தானியங்களைக் கொள்முதல் (Procurement) செய்திருந்தன. அதனால், உணவுத் தானியங்கள் நேர்மையான முறையில் விநியோகம் செய்யப்படுதல் வசதிப்படுத்தப்பட்டது. அவ் வண்ணமே, பால் வழங்கும் துறையில், 1939ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, 57 பால் வழங்கும் ஒன்றியங்களும், சங்கங்களும் மட்டுமேயிருந்தன; 1946ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் நாளன்று, 22 பால் வழங்கும் ஒன்றியங்களும், 253 பால் வழங்கும் சங்கங்களும், சுமார் 15.16 இலட்சம் நுகர்வோர் களுக்குச் சேவை செய்து 320 இலட்ச பவுண்டுகள் எடையுள்ள பால் வழங்கியிருந்தன. அதுசமயம் பால் அகவிலையாகவும், குறைந்தவருவாய் பெறும் மக்களுக்குப் பால் கிடைக்க முடியாததாகவுமிருந்த ஒரு காலமாக இருந்தது.

அடுத்த காலக் கட்டம் 1946ஆம் ஆண்டு முதல் 1955 ஆம் ஆண்டு வரையிலுமான காலவரையாகும். அதாவது, போருக்குப் பிந்திய சகாப்தமும், விடுதலைக்குப் பிந்திய காலமுமாகவுங் கூட அது இருந்தது. இக் கால வரையானது, இயக்கத்தின் போக்கும் முன்னேற்றமும் வெளிப்படையாக மட்டுமன்றி, நானுவிதமாகக்கூட ஏற்பட்ட ஒரு மிக முக்கியக் கட்டமாக இருந்தது. இக் கட்டத்தில், போர்க்காலப் பொருளாதார வீக்கம் நீங்கி, போர்க்காலத்திற்குப் பிந்திய மறுவாழ்வு முயற்சிகள் தொடங்கின. சுதந்திர இந்தியாவின் மாறுபட்ட அரசியலமைப்பில், ஜனநாயகத் திட்டமிடுதலின் ஒரு முக்கியக் கருவியாகக் கூட்டுறவு நிறுவனங்களும்கூட ஏற்றுக்கொள்ளப்பட்டு வந்தன. நாட்டில், பொதுவான திட்டமிடுதலின் ஒரு பகுதியாகக் கூட்டுறவு ஆயிற்று. நாட்டினரின் பொருளாதார வாழ்வில் ஒரு பெரிய மாறுதலை விளைவிப்பதற்கான ஓர் இன்றியமையாத கருவியாகக் கூட்டுறவு கருதப்பட்டது 1946ஆம் ஆண்டில் சராய்யா திட்டக் குழுவினர் ஒரு மக்களாட்சி அமைப்பில், திட்டமிட்டதும் காலக்கட்டமுடையதுமான கூட்டுறவு வளர்ச்சிக்கு அடிக்கல் நாட்டினர்

இக் காலவரையில் விவசாயிகள் தங்கள் கடன் தேவைகளை நிறைவேற்றுவதற்காகக் கிராமக் கடன் வசதிச் சங்கங்களை மேலும் மேலும் நாடினார்கள். வழங்கப்பட்ட கடன்களின் தொகை, 1945 — 46ஆம் ஆண்டில் 265.85 இலட்ச ரூபாயிலிருந்து, 1952 — 53ஆம் ஆண்டில், 709.58 இலட்ச ரூபாய்க்கு உயர்ந்தது. மாகாணப் பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட எஞ்சிய தமிழ்நாட்டில், அது முறையே 1952—53ஆம் ஆண்டில் 375.48 இலட்ச ரூபாயிலிருந்து, 1954 — 55ஆம் ஆண்டில்

435.00 இலட்ச ரூபாய்க்கு அதிகரித்தது. நீண்டகாலக் கடனளிப்புத் துறையில், மத்திய நில அடைமான வங்கியால், பிரதம நில அடைமான வங்கிகளின்மூலம், விவசாயிகளுக்கு வழங்கப்பட்ட கடன்தொகை 1945 — 46ஆம் ஆண்டில் 42.78 இலட்ச ரூபாயிலிருந்து 1952 — 53ஆம் ஆண்டில் 105.04 இலட்ச ரூபாய்க்கு உயர்ந்தது. அதாவது, கடன் தொகை இரட்டிப்புக்கும் மேலாக இருந்தது. ஆனால், அதற்குப் பிறகு அளிக்கப்பட்ட கடன் தொகையில் ஒரு சிறிய குறைவு இருந்தது. 1945 — 46ஆம் ஆண்டில், விவசாயக் கடன்வசதிச் சங்கங்களில் கடன் நிலுவைகள் 242.38 இலட்ச ரூபாயிலிருந்து 1952 — 53ஆம் ஆண்டில் 551.04 இலட்ச ரூபாய்க்கு உயர்ந்தன. மாகாணப் பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட எஞ்சிய தமிழ்நாட்டில் அவை 1953 — 54ஆம் ஆண்டில் 329.81 இலட்ச ரூபாயிலிருந்து 1954 — 55ஆம் ஆண்டில் 342.97 இலட்ச ரூபாய்க்கு அதிகரித்தன. விவசாயமல்லாத துறையில் நெசவாளர் சங்கங்கள் விரிவாக்கத்தின்மூலம் கைத்தறி நெசவாளிகளின் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு முயற்சி செய்யப்பட்டது. அவற்றின் எண்ணிக்கை 1945 — 46ஆம் ஆண்டில் 336-விருந்து 1952 — 53ஆம் ஆண்டில் 1,191-க்கு உயர்ந்தது. மாகாணப் பிரிவினைக்குப் பின் ஏற்பட்ட எஞ்சிய தமிழ்நாட்டில், அச் சங்கங்களின் எண்ணிக்கை 1953 — 54ஆம் ஆண்டில் 666-விருந்து 1954 — 55ஆம் ஆண்டில் 785-க்கு உயர்ந்தது. நகர்ப்புறங்களில் வீட்டுவசதிப் பிரச்சினையானது கடுமையான அளவைப் பெற்று வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கையிலும் வளர்ச்சியிலும் ஒரு குறிப்பிட்ட விரிவாக்கம் இருந்தது. வீட்டு வசதிக்கான பெருகிவரும் தேவையைச் சமாளிப்பதற்கு, உறுப்பினர்களுக்கு வெறும் கடன்களை அளிப்பதற்குப் பதில், வீடுகள் கட்டுவதை மேற்கொள்வதற்குப் புதியவகையான வீட்டுவசதிச் சங்கங்கள் நிறுவப்பட்டன. வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 1945 — 46ஆம் ஆண்டில் 113 - விருந்து, 1952 — 53 ஆம் ஆண்டில் 204-க்கு உயர்ந்தது. இக் காலவரையில் வீட்டு வசதிச் சங்கங்களால், அல்லது அவைகள்மூலம் கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கை 1002-விருந்து 7006-க்கு உயர்ந்தது. மாநிலச் சீரமைப்பிற்குப் பின் ஏற்பட்ட எஞ்சிய தமிழ்நாட்டில், வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 1953— 54ஆம் ஆண்டில் 170-விருந்து 1954 — 55ஆம் ஆண்டில் 175-க்கு உயர்ந்தது. அவற்றால் கட்டப்பட்ட வீடுகளின் மொத்த எண்ணிக்கை 5,696-விருந்து 6,152-க்கு உயர்ந்தது. 1945ஆம் ஆண்டு வரை எண்ணிக்கையிலும் முக்கியத்துவத்திலும்

வளர்ந்துவந்த நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள், இக் காலவரையில் மேலும் விரிவடைந்து, 1949—50ஆம் ஆண்டில், தங்கள் உச்சநிலையை அடைந்தன. அந்த ஆண்டில், பிரதம கூட்டுறவுப் பண்டசாலைகளாலும், மொத்த விற்பனைக் கூட்டுறவுப் பண்டசாலைகளாலும் செய்யப்பட்ட மொத்த ஆண்டு விற்பனை 4892.28 இலட்ச ரூபாய்த் தொகைக்கு இருந்தன. நகர்ப்புறங் களில் பால் வழங்கும் பிரச்சினையானது கூட்டுறவுச் சங்கங்களின் கவனத்தை இழுத்தது. பால் வழங்கும் சங்கங்களின் எண் ணிக்கை 1945— 46ஆம் ஆண்டில் 274-லிருந்து 1952 — 53ஆம் ஆண்டில் 781-க்கு உயர்ந்தது. மாகாணப் பிரிவினைக்குப் பிறகு எஞ்சிய தமிழ்நாட்டில், பால் வழங்கும் சங்கங்களின் எண் ணிக்கை 1953 — 54ஆம் ஆண்டில் 580-லிருந்து 1954 — 55ஆம் ஆண்டில் 581-க்கு உயர்ந்து, அவற்றால் விற்பனை செய்யப் பட்ட பால், பால் பண்டங்கள் ஆகியவைகளின் வருடாந்தர மதிப்பு ரூ. 141.01 இலட்சத்திலிருந்து ரூ. 146.01 இலட்சத் திற்கு உயர்ந்தது. 1946ஆம் ஆண்டில், மதுவிலக்கு மீண்டும் தொடங்கப்பட்டபோது, முன்னாள் கள்ளிறக்கும் தொழிலாளர் களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதற்காகப் பனைவெல்லம் தயா ரிக்கும் சங்கங்கள் பெருகிவரும் எண்ணிக்கைகளில் ஆரம்பிக்கப் பட்டன. அச் சங்கங்களின் எண்ணிக்கை 1946— 47ஆம் ஆண்டு இறுதியில் 153-லிருந்து, 1952—53ஆம் ஆண்டு இறுதி யில் 2,115-க்கு உயர்ந்தது. மாகாணப் பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட எஞ்சிய தமிழ்நாட்டில், 1953 — 54ஆம் ஆண்டில் 1,536 எண்ணிக்கையிலிருந்து, 1954 — 55ஆம் ஆண்டில் 1584-க்கு உயர்ந்தது. சுருங்கக்கூறின், கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுறவு இயக்கத்தின் முதன்மையான துறையாக அமைந்து ஒரேபக்கமாகச் சாய்ந்திருந்த இயக்கமானது முன் னிருந்ததைவிடச் சமநிலையானதாகவும், பலவகையானதாகவும் ஆயிற்று. அதேசமயத்தில் கூட்டுறவுப் பண்டசாலைகளின் வியாபாரத்தில் ஒரு வீழ்ச்சி ஏற்பட்டுச் சில நலிமைசார்ந்த அம்சங்கள் இயக்கத்தில் ஊர்ந்தன. 1952ஆம் ஆண்டிற்குப் பிறகு உணவுக் கட்டுப்பாடும், உணவுப் பங்கீடும் எடுக்கப்பட்டு விட்ட காரணத்தால், மொத்த விற்பனைப் பண்டசாலைகள், பிரதம பண்டசாலைகள் ஆகியவைகளின் மொத்த விற்பனை யானது வீழ்ச்சியுற ஆரம்பித்தது. மாநிலச் சீரமைப்புக்குப் பிறகு எஞ்சிய தமிழ்நாட்டில் மொத்த விற்பனை மற்றும் பிரதம பண்டசாலைகளின் மொத்த விற்பனை 1952 — 53ஆம் ஆண்டில் 2,168.03 இலட்ச ரூபாயிலிருந்து 1954 — 55ஆம் ஆண்டில் 917.65 இலட்ச ரூபாய்க்குக் குறைந்தது. கிராமக் கடன் வசதிச் சங்கங்களில் உறுப்பினர்களின் தவணை தவறிய

பாக்கிக் கடன்களின் சதவிகிதம் 1949—50ஆம் ஆண்டு வரைக்கும் குறைந்துகொண்டு வந்திருந்தாலும், அதற்குப் பிறகு அது உயர்வதற்கு ஆரம்பித்தது.

இக் காலவரையில், ஒரு குறிப்பிடத்தக்க அம்சமானது, விவசாய நிதியளிப்பில் ரிசர்வ் வங்கி எடுத்துவந்த பெருகிவரும் முக்கியப் பங்கு. இதற்கு முன்னர், கூட்டுறவு இயக்கத்தைக் குறித்து ரிசர்வ் வங்கியின் பணி, அறிவுரை வழங்குவதற்கு மட்டுமே நடைமுறையில் வரையறுக்கப்பட்டிருந்தன. 1947—48ஆம் ஆண்டில், ரிசர்வ் வங்கியின் வரலாற்றில் முதன்முதலாக அது மாநிலக் கூட்டுறவு வங்கிகள்மூலம் 11 மத்திய வங்கிகளுக்குச் சலுகையான வட்டிவிகிதத்தில் உயர்ந்தபட்சம் 100 இலட்ச ரூபாய்க்குக் கடன் வரம்புகளை ஒப்பளித்தது. கடன்வரம்பு ஒப்பளிக்கப்பட்ட மத்திய வங்கிகளின் எண்ணிக்கை வருடந்தோறும் அதிகரித்தது. உயர்ந்தபட்சக் கடன் வரம்புகளுங்கூட அதிகப்படுத்தப்பட்டன. 1952—53ஆம் ஆண்டில் மத்திய வங்கிகளுக்கு ஒப்பளிக்கப்பட்ட மொத்தக் கடன் வரம்புகளின் தொகை 441 இலட்ச ரூபாயாக இருந்தது. 1953—54ஆம் ஆண்டிலும், 1954—55ஆம் ஆண்டிலும் மத்திய வங்கிகளுக்கு ஒப்பளிக்கப்பட்ட மொத்தக் கடன் வரம்புகள், முறையே 229 இலட்ச ரூபாயாகவும், 240 இலட்ச ரூபாயாகவும் இருந்தன. இந்தப் பண உதவிகள், பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும் கடனளிப்பதற்காக ஒரு சலுகையான வட்டிவிகிதம் அதாவது ரிசர்வ் வங்கி வட்டிவிகிதத்திற்கு 2 சதவிகிதம் குறைவாகக் கொடுக்கப்பட்டதால், இந்த நிதியுதவி கூட்டுறவு இயக்கத்திற்கு மிகவும் உதவிகரமாக இருந்தது. ரிசர்வ் வங்கியால் அளிக்கப்பட்ட இந்தத் தாராள உதவியின் காரணமாக, இறுதியான கடன் வாங்குபவருக்கு வட்டிவிகிதத்தை 6.25 சதவிகிதத்திற்கு, எல்லா மாவட்டங்களிலும் கிராமக் கடன் வசதிச் சங்கங்களிலும், விற்பனை வசதிச் சங்கங்களிலும் குறைக்க முடிந்தது.

## கூட்டுறவு பற்றிய நாராயணசாமிபிள்ளைக் குழு (1956)

1955ஆம் ஆண்டுப் பிப்ரவரி மாதத்தில், சென்னை அரசு, திரு. டி. எம். நாராயணசாமிப்பிள்ளை அவர்களைத் தலைவராகக்கொண்ட ஒரு குழுவை அமைத்தது. சென்னை மாநிலத்தில் கூட்டுறவு இயக்கத்தின் நிலைமையை விசாரித்துப் பரிந்துரைகளைச் செய்ய அது கேட்டுக்கொள்ளப்பட்டது. அக்

குழுவின் அறிக்கை 1956ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வெளியிடப்பட்டது. அக் குழு, அனைத்திந்திய கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கையையும் (1954) பார்வையிட்டு, கிராமக் கடன் விசாரணைக் குழுவின் பரிந்துரைகளைப் பாட்னு கூட்டுறவுக் காங்கிரசால் (மார்ச்சு 1956) மாறுதல் செய்யப்பட்ட படி பொதுவாக ஆதரித்தது. அதன் முக்கியப் பரிந்துரைகளாவன: (அ) உத்தரவாதப் பொறுப்பில் (Guarantee Liability) பெரிய அளவுக்குக் கிராமக் கடன்வசதிச் சங்கங்கள் அமைக்கப்படவேண் டும். (ஆ) சங்கத்திற்கு வரவேண்டிய கடன் தவணைகளைப் பணி யாண்மையர் தங்கள் ஊழியர்களிடமிருந்து வசூலிப்பதற்குச் சட்டப்படியாக வற்புறுத்தப்படவேண்டும். (இ) சங்கங்களின் நிகர இலாபங்களிலிருந்து உதவித்தொகையைக் கொண்டு ஒரு கூட்டுறவுக் கல்வி நிதி யமைக்கப்படவேண்டும். (ஈ) நில அடைமான வங்கிகள், நிலச் சீர்திருத்தங்களுக்கான கடன்கள் துறையில், நிலத்தின் எதிர்பார்க்கப்படும் மதிப்பிற்கும் நடப்பு மதிப்புக்கும் இடையேயுள்ள வித்தியாசத்தை அரசு உத்தரவாதம் செய்யவேண்டும். (உ) கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடுவதற்கு அதிகாரம் பெற்ற ஒரு மத்திய வீடு அடைமான வங்கி நிறுவப்பட வேண்டும். (ஊ) கூட்டுறவுச் சங்கங்களின் தணிக்கைக்காகக் கூட்டுறவு இலாக்காவில் தனிப்பட்ட ஒரு கிளை அமைக்கப்பட வேண்டும் ஆகியவை. இந்தப் பரிந்துரைகளில் பெரும்பாலா னவை அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டுக் கூட்டுறவுச் சட்டத்திற் கும் கூட்டுறவு விதிகளுக்கும் தேவையான மாற்றங்கள்கூடச் செய்யப்பட்டன. முழுமையாகவோ ஒரு பகுதியாகவோ ஏற்றுக்கொள்ளப்படாத சில பரிந்துரைகள் மாநிலக் கூட்டுறவு வளர்ச்சி வாரியம் ஒன்றை அமைத்தல், அரசு இலாக்காக்களால் தக்காவிக் கடன்கள் அளிப்பை நிறுத்திப்போடல் முதலிய வற்றைக் குறித்தவையாகும். பொருளாதார வலுவற்ற சங்கங் களைக் கட்டாயமாக இணைப்புச் செய்வதற்காகச் சட்டத்தில் ஒரு சரத்து முதலில் செய்யப்பட்டுப் பின்னர் அந்தச் சரத்து நீக்கப்பட்டது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்ட கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்கள் பெரும்பாலும், அனைத்திந் தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் பரிந்துரைகளை அனுசரித்திருந்தன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ், இந்தக் கூட்டுறவுத் திட்டங்கள் தொடர்ந்து அமலாக்கப் பட்டன. அதன் விளைவாக, இயக்கம் துரிதமான ஒரு முன் னேற்றத்தை அடைந்தது.

## கூட்டுறவைப் பற்றிய சந்தானம் குழு (1969)

1968ஆம் ஆண்டுப் பிப்ரவரி மாதத்தில், சென்னை அரசு, திரு. கே. சந்தானம் அவர்கள் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டின் பல்வேறு அம்சங்களைப் பரிசீலனைசெய்து, இயக்கத்தை உறுதிப்படுத்து வதற்காகவும், வளர்ச்சி செய்வதற்காகவும், சீர்திருத்துவதற் காகவுமான நடவடிக்கைகளுக்கு யோசனை கூறுமாறு, அக் குழு வினர் கேட்டுக் கொள்ளப்பட்டனர். குறிப்பாக, (i) கூட்டுறவு நிறுவனங்களின் அமைப்பு. (ii) கூட்டுறவுச் சங்க நிருவாகக் குழுக்களின் அமைப்பு. நிருவாகக் குழு அங்கத்தினர்களின் பதவிக் காலம், நிருவாகக் குழு அங்கத்தினர்களின் தேர்தல், ஆகியவற்றைக் குறித்து நடப்பிலிருக்கும் ஏற்பாடுகளைப் பரி சீலனைசெய்து, அந்த ஏற்பாடுகளில், குறிப்பாகக் கூட்டுறவு நிறுவனங்களின் செயல்திறனை அதிகரிக்கச் செய்வதற்கும், தனி நபர்களின் அல்லது தனிநபர்க் கூட்டுகளின் அமிதமான அதி காரம் மற்றும் செல்வாக்குச் சாத்தியக் கூறுகளை நீக்குவதற்கும், அவசியமான மாறுதல்களைச் சிபாரிசு செய்யும்படியும் அவர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டனர். இந்தப் பிரச்சினைகளைப் பற்றிய ஓர் அறிக்கை 1968ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் அரசுக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. இறுதி அறிக்கை, 1969ஆம் ஆண்டு மே மாதத்தில் அரசினருக்குச் சமர்ப்பிக்கப்பட்டது.

### (அ) சங்கங்களின் அமைப்பைக் குறித்தும், நிருவாகத்தைக் குறித்தும் செய்யப்பட்ட பரிந்துரைகள்

**(i) உறுப்பாண்மை:** தகுதி படைத்த எல்லா நபர்களும் ஒரு சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டுமென்றாலும், ஒரு நபர் நேர்முகமாகவாவது மறைமுக மாகவாவது சங்கம் செய்யும் ஒரு வியாபாரம் அல்லது தொழிலுக்கு இணையானதும் அல்லது சங்க வேலைக்கு முரண் பட்டதும் அல்லது பிரதிகூலமானதுமான ஒரு விபாபாரம் அல்லது தொழிலில் ஈடுபட்டிருந்தால், அவர் அச் சங்கத்தின் ஓர் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்படுவதற்குத் தகுதியுடைய வராக இருக்கக்கூடாது. உதாரணமாக, வட்டித்தொழில் செய்யும் ஒருவர் ஒரு கடன்வசதிச் சங்கத்தில் சேருவதற்கும், ஒரு வர்த்தகர் ஒரு விற்பனைச் சங்கத்தில் அல்லது நுகர்வோர் சங்கத்தில் சேருவதற்கும் அல்லது ஒரு நெசவுத் தொழில் முதலாளி, நெசவாளர்கள் சங்கத்தில் சேருவதற்கும் தகுதி யில்லாதவராக இருப்பர்.

மத்தியக் கூட்டுறவு வங்கிகளிலும், எல்லாத் தலைமை வங்கிகளிலும் தனிநபர்கள் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படக் கூடாது. இந்தச் சங்கங்களிலிருக்கும் எல்லாத் தனிநபர் உறுப்பினர்களும் நீக்கப்படவேண்டும். இது, கூட்டுறவு நிறுவனங்களின் கூட்டாட்சித் தன்மையைப் பாதுகாக்கும் நோக்கத்தைக் கொண்டது. மற்றும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளிலும் கூட்டமைப்புச் சங்கங்களிலும் தனிநபர்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்வதில் எவ்விதமான நியாயமுங்கூட இனிமேல் கிடையாது. ஒரு பிரதம சங்கத்தில் ஒரேவகையான உறுப்பினர்கள் மட்டுந்தான் இருக்கவேண்டும். எனினும், நகை அடைமானக் கடனளிப்பில் வர்த்தகர்களுடனும் வியாபாரிகளுடனும் நடவடிக்கைகளைச் செய்தல் போன்ற கண்டிப்பான விசேஷ வரையறுக்கப்பட்ட காரியங்களுக்காகத் துணைஅங்கத்துவத்திற்கான (Associate Membership) ஏற்பாடுகளிருக்கலாம். ஆனால், அத்தகைய உறுப்பினர்கள் கூட்டங்களிலும், தேர்தல்களிலும் பங்குகொள்ளவோ வாக்களிக்கவோ எந்த உரிமையையும் பெற்றிருக்கக் கூடாது. ஏனென்றால், கூட்டுறவுச் சங்கங்கள் வேறுபடும் உரிமைகளையும் சலுகைகளையும், பொறுப்புகளையுமுடைய வெவ்வேறு வகையான உறுப்பினர்களைக் கொண்டிருத்தல் உண்மையான கூட்டுறவு இயக்கத்தின் கொள்கைகளுக்கு ஒத்ததன்று.

**(ii) சங்கங்களின் நிருவாகக் குழுக்கள்:** பிரதம சங்கங்கள், கூட்டமைப்புச் சங்கங்கள் ஆகிய எல்லாவகையான சங்கங்களின் நிருவாகக் குழுக்கள், 'இயக்குநர் குழு' (Board of Directors) என்ற பொதுவான பெயருடையவையாக இருக்க வேண்டும். ஏனென்றால், எல்லாவகையான சங்கங்களுக்கும் ஒரு பொதுவான பெயர் இருப்பது விரும்பத்தக்கதாகவுள்ளது. பல்வேறான கருத்துகளுக்கும், அனுபவத்திற்கும் பிரதிநிதித்துவம் இருப்பதற்குப் பரப்பு இருக்கும் வகையில், ஓர் இயக்குநர் குழுவின் குறைந்தபட்ச எண்ணிக்கையானது இருக்கவேண்டும். உயர்ந்தபட்ச எண்ணிக்கையானது, தாமதமில்லாத முடிவுகள் எடுப்பதற்கும், துரிதமான நிருவாகம் செய்வதற்கும் ஒத்தவகையில் அமைந்திருக்கவேண்டும். பிரதம சங்கங்களைப் பொறுத்தமட்டில் நிர்வாகக் குழுவின் குறுமம் எண்ணிக்கை 7 ஆகவும் பெருமம் எண்ணிக்கை 15 ஆகவும், மத்திய வங்கிகள், தலைமைச் சங்கங்கள் பொறுத்தமட்டில், நிர்வாகக் குழுவின் குறுமம் எண்ணிக்கை 9 ஆகவும் பெருமம் எண்ணிக்கை 21 ஆகவும் சட்டத்தில் நிருணயிக்கப்படவேண்டும். நிருவாகக் குழுவில் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களும், இந்த எண்ணிக்கை

யில் சேர்ந்திருப்பவர்களாக இருக்கவேண்டும். நிருவாகக் குழுவின் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநருக்குப் பொருந்தும் எல்லாத் தகுதியின்மைகளும், நியமனம் செய்யப்பட்ட அரசு பணியாளரல்லாத இயக்குநருக்குங்கூடப் பொருத்தப்படவேண்டும். எந்தச் சங்கத்திலும் ஒருவர் இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு, எழுதப் படிக்கும் ஆற்றல், ஓர் அவசியமான தகுதியாக இருக்கவேண்டும். எந்தக் கூட்டுறவுச் சங்கத்திலாவது மூன்று ஆண்டுகளுக்குக் குறையாமல் உறுப்பினராக இருந்திருந்தாலன்றி, எவரும் ஒரு மத்தியச் சங்கத்தின் இயக்குநராவதற்குத் தகுதி படைத்தவராக இருக்கக்கூடாது. ஒரு தலைமைச் சங்கத்தின் இயக்குநராக இருப்பவர், ஏதாவதொரு மத்தியச் சங்கத்தில் மூன்றாண்டுகளுக்குக் குறையாமல் இயக்குநராக இருந்திருந்தாலன்றித் தகுதியுள்ளவராக இருத்தல் கூடாது. இயக்குநர் பதவிக்காக, முந்திய அனுபவத்தைக் குறித்த இந்தத் தகுதிகள், மத்தியச் சங்கங்கள், தலைமைச் சங்கங்கள் ஆகியவைகளின் மேலான நிருவாக நலனை முன்னிட்டு யோசனை கூறப்பட்டது. நிருவாகக் குழுக்களுக்கு இயக்குநர்களை நியமனம் செய்தலைக் குறித்து, அரசினரால் நியமனம் செய்யப்படும் இயக்குநர்கள், அரசு அதிகாரிகளாக இருக்கவேண்டும். அரசு பணியாளரல்லாத இயக்குநர்கள் தேர்தல்மூலம் மட்டுந்தான் சாதாரணமாக இயக்குநர் குழுக்களில் இடம்பெறவேண்டும். சட்டமன்ற உறுப்பினர்கள் சங்கங்களின் நிருவாகத்திலிருந்து விலக்கப்படுதல் விரும்பத்தக்கது. ஆகையால், எந்தவிதமான சங்கத்திலும், சட்டமன்ற உறுப்பினர்கள் நிருவாகக் குழு அலுவலர் பதவி வகிக்கக் கூடாது; அவர்கள் வெறும் இயக்குநர்களாக இருக்கலாம் என்று யோசனை கூறப்பட்டது. தங்கள் இயக்குநர் குழுவில் தங்கள் பதவிக் கடமைகளை ஆற்றுவதற்குக் காலம் கிடைப்பதற்குக் கடினம் மட்டுமன்றிக் கூட்டுறவு இயக்கத்திற்கே இறுதியான நீதிபதிகளாக அவர்கள் பங்குகொள்வதானது, ஒரு குறிப்பிட்ட சங்கத்திற்காகத் தன் நேர்முகப் பொறுப்புக்கு முரண்பட்டதாக இருக்கும். ஒரு சங்கத்தின் அலுவலர்-இயக்குநர் நாடாளுமன்றத்திற்கு அல்லது மாநிலச் சட்டமன்றத்திற்குத் தேர்தலில் நிற்க விரும்பினால், அவர் தம் நியமனத் தாளைத் தாக்கல் செய்த நாளிலிருந்து அவர் அத்தகைய அலுவலர்-இயக்குநராக இருப்பதிலிருந்து நின்றுவிடவேண்டும். நுகர்வோர் பண்டசாலைகள், பால் வழங்கும் சங்கங்கள், பால் வழங்கும் ஒன்றியங்கள், நகர வங்கிகள் ஆகியவைகளின் இயக்குநர் குழுவில் இரண்டிற்குக் குறையாத மகளிர்கள் இருக்கவேண்டும். மகளிர் இயக்குநர் இல்லாத சங்கம் அல்லது ஒரு மகளிர் மட்டுமே இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சங்கம், இரண்டு அல்லது

ஒரு மகளிரைச் சமயோசிதம்போல் இயக்குநராகச் சேர்த்துக் கொள்வதற்கு அதிகாரமளிக்கப்படவேண்டும்.

**(iii) இயக்குநர் குழுவின் பதவிக்காலம் :** அனைத்துமான இயக்குநர் குழு ஒரு மூன்றாண்டுக் காலத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். ஆண்டிற்கு ஒரு முறை இயக்குநர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் விலகும் முறை கைவிடப்படவேண்டும். ஏனென்றால், ஆண்டிற்கொருமுறை இயக்குநர்கள் விலகும் முறை மிக்க அசௌகரியத்தையும், அவசியமற்ற பணச் செலவையும், வேலை நிலைக் குலைவையும் விளைவிக்கிறது. ஆண்டிற்கொருமுறை தேர்தல் வாடை உற்பத்தியாகிச் சங்கங்களின் நல்லவிதமான செயற்பாடு பாதிக்கப்படுகிறது. மேலும், இயக்குநர் குழு உண்மையானதும், நிலையானதுமான யாதொரு பணியையும் செய்து பலன்களை விளைவிக்க வேண்டுமானால், அது குறைந்தது மூன்று ஆண்டுகளைக் கொண்ட ஒரு காலவரைக்குப் பதவி வகிக்கவேண்டும்.

**(iv) பதவிக் காலத் தொடர்ச்சியின்மீதும் சங்கங்களின் எண்ணிக்கையின்மீதும் காலவரம்பு:** ஒரு சங்கத்தின் இயக்குநராக ஒருவர் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய தொடர்ச்சிப் பதவிக் கால எண்ணிக்கையின்மீது ஒரு கால வரம்பு இருக்கவேண்டும்; அக் கால வரம்பிற்குப் பிறகு, அவர் அச் சங்கத்தின் ஓர் இயக்குநராகத் திரும்பவும் தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதி பெறுவதற்கு முன்னர், ஓர் இடைக்காலம் இருக்கவேண்டும். இந்த ஏற்பாடானது, சங்கங்களின் நிருவாகத்தில் ஆற்றலுள்ள புது உறுப்பினர்கள் நுழைவதற்காக ஒரு வாய்ப்பை மட்டுமன்றி, நடப்பிலிருக்கும் நிருவாகங்கள் ஆற்றலுள்ள பின்னவர்களைத் (Successors) தேடிப் பார்த்து அவர்களை முன்னணியில் கொண்டு வருவதற்கு உதவிசெய்ய ஓர் உறுதியான ஊக்கத்தையுங் கூட அளிக்கும். ஆகையால், ஒரு சங்கத்தின் இயக்குநராக மூன்றாண்டுகளைக்கொண்ட இரண்டு தொடர்ந்த பதவிக் காலத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நபர், மூன்றாண்டுகளைக் கொண்ட இன்னொரு பதவிக்கால இடைவேளை முடிவடைந்தாலன்றி, அச் சங்கத்திற்கு ஓர் இயக்குநராகத் திரும்பவும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான தகுதியிலிருந்து விலக்கப்படவேண்டும். மேலும், ஒரு நபர் ஒரே சமயத்தில் 3-க்கு மேற்பட்ட பதிவான சங்கங்களின் இயக்குநராக இருக்கக்கூடாதென்றும், அந்த மூன்று சங்கங்களில் தலைமைச் சங்கம் ஒன்றுக்கு மேற்பட்டிருக்கக் கூடாதென்றும், மத்தியச் சங்கம் ஒன்றிற்கு மேற்பட்டிருக்கக் கூடாதென்றும் யோசனை கூறப்பட்டது. இந்த மூன்று சங்கங்கள் வரம்பில் நியமனம்மூலம் வந்த இயக்குநரின் பதவிகூடக் கணக்

தில் சேர்க்கப்படவேண்டும். ஒரு நபர் பல்வேறு சங்கங்களின் இயக்குநராகச் சரிவர இயங்குவதற்கான காலம் கிடைப்பது சாத்தியப்படாது. அதேமாதிரியான காரணங்களுக்காக, ஒருவர் ஒன்றுக்கு மேற்பட்ட சங்கத்தில் அலுவலர் பதவி வகிக்கும் நிருவாகக் குழு அங்கத்தினராக இருக்கக்கூடாது. ஓர் இயக்குநருக்காக நிருணயிக்கப்பட்டவண்ணம், ஒருவர் ஓர் அலுவலர் பதவி வகிக்கும் நிருவாகக் குழு அங்கத்தினராகத் தொடர்ந்து பதவி வகிக்கும் காலமும் இடைக்காலமும் அதே மாதிரியாக இருக்கும். பல்வேறு வகையான சங்கங்களுக்குத் தேர்தல் முறையைக் குறித்துங்கூட யோசனைகள் வழங்கப்பட்டன. அவற்றுள் முக்கியமான ஒரு யோசனையானது, 500-க்கும் அதிகமான உறுப்பினர்களைக்கொண்ட ஒரு விவசாய சேவைக் கூட்டுறவுச் சங்கத்தில் இரண்டு இடங்கள் பலங்குன்றிய பகுதியினருக்காக ஒதுக்கப்படவேண்டும்.

மேற்கூறப்பட்ட பரிந்துரைகள், அரசின் ஆலோசனையின் கீழ் உள்ளன.

### (ஆ) கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டைக் குறித்த பரிந்துரைகள்

**(i) விவசாயக் கடன் வசதிச் சங்கங்கள் :** ஒரு பங்கின் குறுமமான பெறுமானம் ரூபாய் 10 ஆக இருக்கவேண்டும். மற்றும், அது ஒதுக்கப்பட்டவுடன் செலுத்தப்படவேண்டும். எனினும், சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்கு உதவி செய்யும் வகையில் பங்கின் மதிப்பு ஐந்து சமமான தவணைகளில் வசூலிக்கப்படலாம். இரண்டு திட்ட ஏக்கர்களுக்குக் குறைவான நிலமுடைய விவசாயிகளும், குத்தகைப் பயிரிடுபவர்களும், நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்களும், ரூபாய் 1000-க்குக் குறைந்த வருடாந்தர வருவாயுள்ள விவசாயமல்லாதவர்களும் பலங்குன்றிய பகுதியினராவர்.

வருங்காலத்தில் எல்லா விவசாயக் கடன்வசதிச் சங்கங்களும் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின்பேரில் மட்டுந்தான் பதிவு செய்யப்படவேண்டும். நடப்பிலுள்ள சங்கங்கள், தன்னிறைவுள்ளதாகவும், வரையறுக்கப்பட்ட பொறுப்பை மேற்கொள்ள விருப்பமுடையவையாகவும் இருந்தாலும், அவை அவ்வாறு செய்வதற்கு அனுமதிக்கப்படவேண்டும். எல்லா விவ்சாயக் கடன்வசதிச் சங்கங்களும் கூடுமானவரை விரைவில் தன்னிறைவுள்ளதாக ஆக வேண்டியது அவசியமாகும். ஒரு விவசாயக் கடன்வசதிச் சங்கம் தன்னிறைவுள்ளதாக இருப்பதற்

குச் சுமார் மூன்று மைல்கள் சுற்றிலுள்ள ஒரு நிலப் பகுதியைத் தன் எல்லையாகக் கொண்டு, சுமார் 3,000 மக்களைத் தழுவி, ஓர் ஆண்டில் 2,00,000 ரூபாய்க்குக் குறையாத கடன் லேவா தேவிகளை அனுமதிக்கும் பயிரிடக்கூடிய நிலங்களைத் தழுவியதாக இருக்கவேண்டும். மத்திய வங்கிகளுடன் ஆலோசித்து, பலங் குன்றிய சங்கங்களை இணைப்புச் செய்வதற்குக் கூட்டுறவுப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கவேண்டும். சாகுபடிக் கடனளவில் ஓர் உறுப்பினர் குடும்பத்தின் வாழ்க்கைச் செலவுகளுக்காக ஒரு நியாயமான தொகையும் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். வைப்புகளின்மூலம் போதுமான நிதி ஆதாரங்கள், தகுதிபடைத்த ஒரு மதிப்பீடு செய்பவர், ஒரு பாதுகாப்பான அறை ஆகியவைகளையுடைய விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள் நகைக் கடன்கள் வசதியை வழங்கவேண்டும். ஒவ்வொரு மத்திய வங்கியும், பலங் குன்றிய மக்களுக்குக் கடனுதவி செய்வதையும், கடன்களைப் பயனுறுதியான வகையில் வசூல் செய்வதையும் அபிவிருத்தி செய்வதற்குப் பிரத்தியேகமாக ஓர் அபிவிருத்தி அதிகாரியைப் பெற்றிருக்கவேண்டும். கொள்முதல் மேற்கொள்ளும் இந்திய உணவுக் கழகமும், இதர அரசின் பதிலாண்மைகளும்,விவசாயிகள் தங்கள் சங்கங்களுக்குச் செலுத்தவேண்டிய பாக்கிகளைத் தெரிந்து கொண்டு, அப் பாக்கிகளை வசூல் செய்வதற்கு உதவக் கடமைப் பட்டிருக்கவேண்டும். மற்றும், விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள், நிலவரி வசூல் சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட நடைமுறையைக் கூடச் சிறப்பாக அத்தகைய ஒரே தடவையில் வசூல் செய்யும் நடவடிக்கை எடுக்கப்பட்டாலன்றி, பாக்கிகள் வசூல் செய்ய முடியாது என்று கருதப்படுகின்ற சந்தர்ப்பங்களில் மேற்கொள்வதற்கு அதிகாரமளிக்கப்படவேண்டும். உறுப்பினர்களிடையே சிக்கனத்திற்கு ஊக்கமளிக்கப்படவேண்டும். கடன்கள் திருப்பிச் செலுத்தப்படும் சமயத்தில், கடன்களில் குறித்த ஒரு சதவிகிதத்தில் உறுப்பினர்களிடமிருந்து சிக்கன வைப்புகள் வசூல் செய்யப்படவேண்டும். சிக்கன வைப்புகள், கடன்களிலிருந்து கழித்தல்மூலம் வசூல் செய்யப்படக் கூடாது. இந்த வைப்புகள் மத்திய வங்கியில் முதலீடு செய்யப்படவேண்டும். அவைகளின் மீது 6 சதவிகிதத்திற்குக் குறையாமல் மத்திய வங்கி வட்டி அனுமதிக்கவேண்டும். மூன்றுண்டுகளுக்கு ஒரு முறை ஓர் உறுப்பினர், தம் சிக்கன நிதியிலிருக்கும் தொகையில் 50 சதவிகிதத்திற்கு மேற்படாமல், திருப்பிப் பெறுவதற்கு உரிமையுள்ளவராக இருக்கவேண்டும். இந்தச் சிக்கன நிதி, உறுப்பினர்களின் காப்பீட்டுக் கட்டணங்களைச் செலுத்துவதற்காகவுங்கூடப் பயன்படுத்தப்படவேண்டும்.

**(ii) நிலவள வங்கிகள்:** நில அடைமான வங்கிகள், நிலவள வங்கிகளாக மறுபெயரிடப்படலாம் என்று குழுவினர் யோசனை கூறினர். இந்தப் பரிந்துரையும், கடன்கள் அளிப்புத் தொடர்பான நடைமுறையைக் குறித்த இதரப் பரிந்துரைகளும் நிறைவேற்றப்பட்டன. பிரதம நிலவள வங்கிகள் ஓர் ஆண்டில் தங்களால் அளிக்கப்பட்ட மொத்தக் கடன்களில் 20 சதவிகிதம் வரை, முன்கடன் தீர்ப்பதற்காக ஐந்து ஏக்கர்கள் நிலமும் அதற்குக் குறைவாயுள்ள நிலமும் சொந்தமாக உடையவர்களுக்குக் கடன் வழங்க அனுமதிக்கப்படவேண்டும். இந்தச் சந்தர்ப்பங்களில்கூட இரண்டு ஆண்டுகளுக்கு மேற்பட்டதும், ஆதாரமுள்ளதுமான முன்கடன்களைத் தீர்ப்பதற்கு மட்டுந்தான் அவ்வாறு அனுமதிக்கப்படவேண்டும்.

**(iii) கூட்டுறவு நகர வங்கிகள்:** கூட்டுறவு நகர வங்கிகளின் வைப்புகளுக்குக்கூட, 'வைப்புகள் காப்பீட்டின்' (Deposit Insurance) பயன் கிடைக்கும்வண்ணம் மாநில அரசு, கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தைத் திருத்தம் செய்யலாம் என்று யோசனை கூறப்பட்டது. வைப்புகள் காப்பீட்டுச் சட்டத்தின்கீழ், இந்தப் பயன் இப்பொழுது வாணிக வங்கிகளால் அனுபவிக்கப்படுகிறது. இதனால், கூட்டுறவு வங்கிகளைக் காட்டிலும், வாணிக வங்கிகளுக்கு ஒரு நன்மை கிடைக்கிறது. சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கி, கூட்டுறவு நகர வங்கிகளைக் குறைந்தது ஆண்டிற்கொருமுறை ஆய்வு செய்யவேண்டும். உறுப்பினரின் சிக்கன வைப்புகள், நீதி மன்றத்தின் யாதொரு தீர்ப்பு அல்லது உத்தரவின்கீழ் ஜப்தி செய்யப்படுவதற்குட்படக்கூடாது. மற்றும், வருவாய் வரிவிதிப்பிற்காக அது, வருங்காலச் சேமிப்பு நிதி உதவித்தொகைகள், ஆயுள் காப்பீட்டுக் கட்டணங்கள், அஞ்சலகத் தொடர்வைப்புகள் போன்று பாவிக்கப்படவேண்டும்.

**(iv) வீட்டு வசதிச் சங்கங்கள்:** மத்தியக் கூட்டுறவு வீடு அடைமானச் சங்கம் ஒரு தலைமை வீட்டு வசதிச் சங்கமாகச் சீரமைக்கப்படவேண்டுமென்று குழுவினர் சிபாரிசு செய்தனர். பிரதம வீட்டு அடைமானச் சங்கங்களைச் சேர்த்து எல்லா வீட்டு வசதிச் சங்கங்களும் அதற்கு இணைக்கப்படவேண்டும். வீடு அடைமானச் சங்கங்களுக்கும் வீட்டுவசதிச் சங்கங்களுக்கும் அரசாலும், ஆயுள் ஈட்டுறுதிக் கழகத்தாலும், இதர அமைப்புகளாலும் கொடுக்கப்படும் எல்லாக் கடன்களும் இந்தத் தலைமைச் சங்கத்தின்மூலம் வழிப்படுத்தப்படவேண்டும். மத்திய நிலவள வங்கியைப்போன்று, இந்தத் தலைமை வீட்டு வசதிச் சங்கமும், அரசு உத்தரவாதத்தைக்கொண்ட கடன் பத்திரங்

களை வெளியிடுவதன்மூலம் நிதிகளைத் திரட்டுவதற்கு அனுமதியளிக்கப்படவேண்டும். பிரதம சங்கங்களின் தொழில்நுட்ப மேற்பார்வையும் நிதித்துறை மேற்பார்வையும் இந்தத் தலைமைச் சங்கத்தின் பொறுப்பாக இருக்கவேண்டும்.

(v) **விற்பனை வசதிச் சங்கங்கள்:** ஓர் அடித்தள விலை (Floor Price) நிருணயிக்கப்படும்போது, விற்பனை வசதிச் சங்கம், அந்த விலையில் கொடுக்கப்பட்ட மொத்த விளைபொருள்களையும் வாங்கிக் கொள்வதற்குத் தயாராக இருக்கவேண்டும். ஆனால், இதற்கு அரசினரின் உத்தரவாதம் இருக்கவேண்டுமென்று விற்பனை வசதிச் சங்கங்களைக் குறித்துக் குழுவினர் கருத்துக் கொண்டனர். இச் சங்கங்கள், விற்பனை செய்யப்படும் இதர விளைபொருள்களின் ஒருசில சதவிகிதத்தைக்கூட நடப்பிலிருக்கும் அங்காடிவிலையில் (Market Price) சிறப்பாக, சிறிய பயிரிடுபவர்களிடமிருந்து யாதொரு சமயத்திலும் தங்கள் சொந்த நிதிகளில் இரண்டு மடங்குவரை வாங்கவும் வேண்டும். இந்தக் காரியத்திற்காக, 1966–67ஆம் ஆண்டில் அமலிலிருந்தபடி, விற்பனைச் சங்கங்களின் 'விலைவாசி ஏற்ற இறக்க நிதி'களுக்கு (Price Fluctuation Fund) அரசு உதவித்தொகையை அளிக்கும் திட்டம் புதுப்பிக்கப்படலாம் என்றும் குழுவினர் கருத்துத் தெரிவித்தனர்.

(vi) **நெசவாளிகள் சங்கங்கள்:** இச் சங்கங்களைக் குறித்து, இதரப் பரிந்துரைகளுடன் விசைத் தறிகளைத் தொடங்கி வைப்பதற்காகக் கட்டங்களடங்கிய ஒரு பணித் திட்டத்தைக் குழுவினர் பரிந்துரை செய்தனர். 25 குறுமமான தனிநபர் நெசவாளர்களைக்கொண்டு, புதிய சங்கங்கள் அமைக்கப்பட்டு, அத்தகைய ஒவ்வொரு சங்கத்திலும் ஒரு விசைத்தறி இருக்கவேண்டும்; நடப்புக் கைத்தறி நெசவாளர் சங்கங்களுங்கூட, விசைத்தறிகளைச் சொந்தமாக வைத்து ஊதியம் பெறும் தொழிலாளிகளைக் கொண்டு அவைகளை நேர்முகமாகத் தொழிற்படுத்துவதற்கு அனுமதிக்கப்படலாம். இதில் கிடைக்கும் இலாபம் சங்கத்திற்குச் சேரும்.

(vii) **பால் வழங்கும் சங்கங்களும் ஒன்றியங்களும்:** விவசாயக் கடன் சங்கங்கள், கறவை மாடுகள் வாங்குவதற்காகக் கடன்களை அளிக்கவேண்டும் என்றும், அந்தக் கடன் பாக்கிகளைப் பால் வழங்கும் சங்கங்கள் வசூல் செய்து அவற்றை விவசாயக் கடன் வசதிச் சங்கங்களுக்குச் செலுத்துவதற்குச் சம்மதிக்க வேண்டுமென்றும் குழுவினர் பரிந்துரை செய்தனர். இந்தத் திட்டம் சாத்தியமில்லாத இடங்களில், பால் வழங்கும் சங்கங்

களே, கறவை மாடுகளை வாங்குவதற்காகக் கடன்களை நேர்முகமாக அளிக்கலாம். நகர்ப்புறங்களில், பால் வழங்கும் சங்கங்கள், தங்கள் உறுப்பினர்களுக்கு நேர்முகமாகக் கடன்களை வழங்கலாம். இக் காரியத்திற்காகக் கூட்டுறவு மத்திய வங்கிகள் கடன்கள் வழங்கவேண்டும்; கறவை மாடுகள் வாங்குவதற்காக அளிக்கப்படும் அரசினர் கடன்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் மூலமாகவும், கிராமப்புறங்களில் விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள் மூலமாகவும், அல்லது நகர்ப்புறங்களில் பால் வழங்கும் சங்கங்களின் மூலமாகவும் வழிப்படுத்தப்படவேண்டும்.

**(viii) நுகர்வோர் நிறுவனங்கள்:** ஒரு நுகர்வோர் சங்கம் தன்னிறைவுள்ளதாக இருக்கும்பொருட்டு, சுமார் 10 இலட்ச ரூபாய் பெறுமானமுள்ள வருடாந்தர விற்பனையினைப் பெற்றிருக்க வேண்டும். நுகர்வோர் பண்டசாலைகள் திருப்திகரமாகச் செயற்பட்டுக் கொண்டிருக்கின்ற இடங்களில், அவை கட்டுப்பாட்டுப் பண்டங்களையும் பற்றுக்குறைப் பண்டங்களையும் விநியோகிப்பதற்காக, அரசின் ஒற்றையான பதிலாண்மைகளாகப் பயன்படுத்தப்படவேண்டும்.

**(ix) பலங்குன்றிய மக்களுக்கான சங்கங்கள்:** சமுதாயத்தின் பலங்குன்றிய மக்களின் சங்கங்களைக் குறித்து, இதரப் பரிந்துரைகளுக்கிடையே மீன் பிடித்தலும், ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 17 (2) (ஆ ஆ)—வது பிரிவின்கீழ் ரிசர்வ் வங்கியிடமிருந்து நிதியுதவியைப் பெறுவதற்காக அங்கீகரிக்கப்பட்ட தொழில்கள் பட்டியலில் சேர்க்கப்படலாம் என்று குழுவினர் பரிந்துரை செய்தனர். மீனவர் சங்கங்களுக்கு அளிக்கப்படும் கடன்களைக் குறித்த தவணை தவறுதல்களுக்குப் பாதுகாப்பாக அரசு, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு உத்தரவாதம் அளிக்கவேண்டும். அவ்வண்ணமே ரிசர்வ் வங்கியிலிருந்து சலுகையான நிதியுதவிக்குத் தகுதி பெற்ற விவசாய நடவடிக்கைகளுள், ஆட்டுப்பண்ணைகளும் கோழிப் பண்ணைகளும் சேர்க்கப்படவேண்டும்.

**(இ) மத்தியக் கூட்டுறவு வங்கியும் மாநிலக் கூட்டுறவு வங்கியும்**

**(i) கிளை வங்கித்தொழில்:** மேற்பார்வை ஒன்றியங்கள் தொடர்ந்து இயங்குவதைக் குழுவினர் ஆதரிக்கவில்லை. மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் மேற்பார்வைக் குழுக்கள் இருப்பதையுங் கூட அவர்கள் ஆதரிக்கவில்லை. மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மாநிலத்திலுள்ள ஒவ்வொரு பஞ்சாயத்து ஒன்றியத்தின் தலைமை இடத்திலும், தங்கள் கிளைகளைத் திறப்பதற்கு ஒரு துணிகரமானதும் அவசரமானதுமான பணித் திட்டத்தை வகுக்கவேண்டு

மென்றும், அப் பணித் திட்டம் சாத்தியப்பட்டால் ஐந்து வருடங்களில் முடிக்கப்பட வேண்டுமென்றும் அவர்கள் யோசனை கூறினர். ஒவ்வொரு கிளையையும் சேர்ந்த சங்கங்களின்மீது, மத்திய வங்கியின் மேற்பார்வையையும் கண்காணிப்பையும் செலுத்துவதற்கு வேண்டிய ஒரு நிலையமாகவும் அக் கிளை இயங்க வேண்டும். ஒவ்வொரு கிளையையும் சேர்ந்த சங்கங்களின் பிரதி நிதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட, ஐந்துஉறுப்பினர்களைக்கொண்ட ஓர் ஆலோசனைக் குழு, ஒவ்வொரு கிளைக்கும் உதவி புரியும். கிளையின் மேலாளர் ஆலோசனைக் குழுவின் அலுவல்வழிச் செய லாளராக இருக்கவேண்டும். விவசாயக் கடன்வசதிச் சங்கங்களின் கடன்வரம்பு மனுக்கள், இந்த ஆலோசனைக் குழுவால் பரிசீலிக்கப் பட்டு, அதன் குறிப்புடன் மத்தியக் கூட்டுறவு வங்கிக்கு அனுப்பப் படலாம். கடன் வரம்புகள் ஒப்பளிக்கப்படும்போது, அவற்றின் மீது நடவடிக்கை எடுப்பதற்குச் சங்கங்களைக் கிளையின் மேலாளர் அனுமதிக்கலாம். கிளையின் கடமைகளின் முக்கியத்துவத்தை முன்னிட்டு, கிளையின் மேலாளர், ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கி யின் துணைச் செயலாளருக்குக் குறையாத ஓர் அந்தஸ்தையுடைய வராக இருக்கவேண்டும்.

**(ii) மாநிலக் கூட்டுறவு வங்கி:** மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் விற்பனைவசதிச் சங்கங்களுக்கும் விவசாயத் துறை களில் வழிகாட்டுவதற்காக இரண்டு அல்லது மூன்று நிபுணர்களைக் கொண்ட ஒரு 'விவசாயச் சிறு குழு' (Agricultural Cell) மாநிலக் கூட்டுறவு வங்கியிலிருக்க வேண்டுமென்றும், அதன் பின்னர், அவசியப்பட்டால் அதே மாதிரியான ஒரு சிறு குழு ஒவ்வொரு மத்திய வங்கியிலும் அமைக்கப்படலாமென்றும், விவசாயக் கடனுக்காக மாநில மட்டத்தில் உள்ள வங்கிகளின் 'ஆலோசனைக் குழு' (Consultative Committee), மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் ஆலோசனை செய்து, வாணிக வங்கிகளின் நடவடிக்கைகள் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகளுக்குப் பயனுறுதியான வகையில்துணைபுரியும்பொருட்டும், மேற்படிவைத் தவிர்க்கும்பொருட்டும் நலந்தரும் மரபுகளை உருவாக்க வேண்டு மென்றும் குழுவினர் யோசனை கூறினர்.

**(ஈ) தணிக்கை**

தணிக்கையானது, கூட்டுறவுப் பதிவாளரின் இறுதிப் பொறுப்பாக இருக்க வேண்டுமென்றாலும், கூட்டுறவு இலாகாவின் தணிக்கைக் கிளையும் நிருவாகக் கிளையும் கூட்டுறவுப் பதிவாளரின் கீழ் ஒரு முழுமையான பிரிவினை செய்யப்படவேண்டுமென்றும், அக் கிளைகளின் எல்லாமட்டங்களிலுமுள்ள பணியாளர் தொகுதி

யும் கடமைகள் அடிப்படையில் பிரிக்கப்படவேண்டுமென்றும், இரண்டு கிளைகளுக்கும் அடிமட்டத்தில் பொதுவான ஆள் சேர்த்தல் இருக்கவேண்டும் என்றும், பணியாளர்கள் இரண்டு கிளைகளிலும் ஆறு மாதகாலத்திற்குப் பயிற்சியும் நடைமுறை அனுபவமும் பெற்ற பிறகு அவர்கள் நிரந்தரமாக இரண்டிலொரு கிளைக்கு ஒதுக்கப்பட வேண்டுமென்றும் குழுவினர் பரிந்துரை செய்தனர். ஒவ்வொரு கிளைக்காகவும் துணைப் பதிவாளரின் ஆள் சேர்த்தல், தனிப்பட்ட முறையில் செய்யப்படவேண்டும். இரண்டில் ஒரு கிளைக்காக விருப்பத்தைத் தெரிவிப்பதற்கு நடப்புச் சிப்பந்திகள் அனுமதிக்கப்படுவார்கள். அதற்குப் பிறகு, இரண்டு கிளைகளுக்குமிடையே துறைகளுக்கிடையிலான மாற்றம் (Inter - Transfers) இருக்கக் கூடாதென்றும் கூறினர். தலைமைத் தணிக்கை அதிகாரியானவர், இயல்பாக, தணிக்கைக் கிளையிலிருந்து பதவி உயர்வு செய்யப்பட்டவராக இருக்கவேண்டும்; ஒரு வெளியானவர் அமர்த்தப்பட்டால் அவர், 'இந்தியக் கணக்குத் தணிக்கைப் பணியாளர் தொகுதியைச்' (Indian Accounts and Audit) சார்ந்த ஓர் அதிகாரியாக இருக்கவேண்டும். மற்றும், எல்லாத் தலைமை நிறுவனங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள், 50 இலட்ச ரூபாய்க்குக் குறையாத வைப்புகளையுடைய நகர வங்கிகள் ஆகியவைகளின் தணிக்கையானது பட்டயக் கணக்கர்களுக்கு (Chartered Accountants) ஒப்படைக்கப்படலாம் என்றும் குழுவினர் பரிந்துரை செய்தனர்.

### (உ) கூட்டுறவுக் கல்வியும் பயிற்சியும்

கூட்டுறவுக் கல்வியையும் பயிற்சியையும் குறித்துக் குழுவினர், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கு இணைக்கப்பட வேண்டிய மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்கள் அமைக்கலாமென்று யோசனை கூறினர். இந்த ஒன்றியங்கள், பயிற்சி நிலையங்களை நடத்தவும், ஒரு மாவட்டப் பத்திரிகையை வெளியிடவும், பிரசாரம் முதலியவற்றை நடத்தவும் வேண்டும். தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியமானது, மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்கள், தலைமைச் சங்கங்கள் ஆகியவைகளின் ஒரு கூட்டமைப்பு நிறுவனமாகச் சீரமைக்கப்படவேண்டும். இந்தப் பரிந்துரைகள் அமல் செய்யப்பட்டு வருகின்றன. எந்தச் சங்கத்தாலும், கூட்டுறவுக் கல்வி நிதிக்காகச் செலுத்தப்படும் பெருமம் உதவித் தொகையானது, ரூபாய் 25,000-க்கு உயர்த்தப்படவேண்டும்; இந்த நிதிக்கு, நிகர இலாபங்கள் ஒதுக்கி வைக்கப்படும் வரிசையில் காப்பு நிதிக்கு அடுத்த இடம் அளிக்கப்படவேண்டும். ஒரு மாவட்டத்திலுள்ள சங்கங்களிலிருந்து எல்லா உதவித் தொகைகளும் அமைக்கப்படவேண்டிய மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்

களால் வசூலிக்கப்பட்டு வசூல் தொகையில் 1/3 தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கும் கொடுக்கப்படவேண்டும்; தலைமை நிறுவனங்களிலிருந்து கல்வி நிதி உதவித்தொகையானது, தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் வசூல் செய்யப்பட்டு அதில் பாதித் தொகை உத்தேசிக்கப்படும் மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களிடையே சமமாக விநியோகிக்கப்படவேண்டும்.

**(ஊ) கூட்டுறவு ஆலோசனை அவை (Co-operative Advisory Council)**

தற்போதைய கூட்டுறவு ஆலோசனை அவையானது, கூட்டுறவுத் துறை அமைச்சரின் தலைமையின்கீழ், ஒரு சட்டப்படியான அடிப்படை கொடுக்கப்படவேண்டுமென்றும்; அது கூட்டுறவு இயக்கத்தின் 10 பிரதிநிதிகளையும், மாநிலச் சட்டமன்றத்தின் 5 பிரதிநிதிகளையும், தமிழ்நாட்டு நாடாளுமன்ற உறுப்பினர்களின் 2 பிரதிநிதிகளையும், கூட்டுறவு இயக்கத்திற்குப் பாராட்டுதலுக்குரிய சேவை புரிந்தும் எந்தச் சங்கத்திலும் எந்தப் பதவியும் வகிக்காமலுமுள்ள 3 அரசு பணியாளரல்லாதவர்களையும், கூட்டுறவுப் பதிவாளரையும், கூட்டுறவுத் துறை அரசாங்கச் செயலாளரையும், தொடர்பான இதரத் துறை அரசாங்கச் செயலாளர்கள் அல்லது இலாக்காக்கள் தலைமை அதிகாரிகளையும் கொண்டிருக்கவேண்டுமென்றும்; இந்த ஆலோசனை அவையின் பணிகள் சட்டமியற்றுதலைச் சேர்த்துக் கொள்கையைப் பற்றிய எல்லாப் பொதுவான பிரச்சினைகளில் அரசுக்கு ஆலோசனை கூறுதல், கூட்டுறவு இயக்கத்தின் செயற்பாட்டை ஆய்வு செய்தல், கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகப் பொறுப்பை ஏற்றிருக்கும் இலாக்காக்களின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் ஒருமைப்படுத்துதல் ஆகியவைகளாக இருக்கும் என்றும் குழுவினர் பரிந்துரை செய்தனர்.

**(எ) பலவகை**

லஞ்ச ஊழல்களை ஒழிப்பதற்கான நடவடிக்கைகளைப்பற்றியும் குழுவினர் பரிந்துரை செய்தனர். லஞ்ச ஊழல் குற்றவாளியாகக் காணப்படும் எந்த இயக்குநரும் அல்லது அலுவலர்-நிருவாகக் குழுவினரும் ஓர் ஆண்டிற்கு மேற்படாத சிறைத் தண்டனை அல்லது ரூபாய் 500 வரைக்கும் அபராதம் அல்லது இரண்டும் சேரத் தண்டிக்கப்படவேண்டும். மற்றும், அவர் ஓர் ஆறு ஆண்டுக் காலத்திற்கு எந்தச் சங்கத்திலும் பதவி வகிப்பதிலிருந்து தடை செய்யப்படவேண்டும். பொய்க் கடன் பெறுதல் அல்லது ஒப்பளித்தல், சங்கத்தின் எந்தப் பணத்தையும் துர்ப்

பிரயோகம் செய்தல், சட்ட விரோதமான கையூட்டுப் (Illegal gratification) பெறுதல், கூட்டங்களுக்கு வராமல் நிகழ்ச்சிப் பதிவில் கையொப்பமிடுதல் ஆகியவை முறைகேடான செயலாகக் கருதப்படவேண்டும். கூட்டுறவுச் சங்கங்களின் ஊதியம் பெறும் எல்லாச் சிப்பந்திகளும் இந்தியக் குற்றவியல் சட்டத்தொகுப்பின் (Indian Penal Code) 21ஆவது பிரிவின் அர்த்தத்திற்குள்ளடங்கும் அரசினர் பணியாளராகக் கருதப்பட்டு, அதற்கிணங்கவே தண்டனைக்காகப் பொறுப்புள்ளவராக இருக்க வேண்டுமென்றும் குழுவினர் யோசனை கூறினர்.

தங்கள் பரிந்துரைகளை உட்புகுத்துவதற்கும், அவைகளுக்கு அமல் அளிப்பதற்கும் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்திற்கும் விதிகளுக்கும் பல்வேறு திருத்தங்களையும் குழுவினர் யோசனை கூறினர்.

விவசாயக் கடன் சங்கங்களைத் தன்னிறைவுள்ள அமைப்புகளாகச் சீரமைத்தல், நில அடைமான வங்கிகளை நிலவள வங்கிகளாக மறுபெயரிடுதல், இயக்குநர் குழுக்களுக்குப் பலங்குன்றிய மக்கள் பிரதிநிதிகளை நியமனம் செய்தல், மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களை யமைத்தல் முதலியன போன்ற குழுவினர் பரிந்துரைகளில் சில அமல் செய்யப்பட்டு வருகின்றன. இதரப் பரிந்துரைகள் ஆலோசனையில் உள்ளன. சந்தானம் குழுவினர், சந்தேகமின்றிக் கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டை ஒழுங்கு முறைப்படுத்துவதற்கும்; அதிகமான கட்டுப்பாடு, ஒழுக்கம், சங்கங்கள் செயற்பாட்டில் செயல்திறன், சரியான நிருவாகம், திறமையானதும் நேர்மையானதுமான செயற்பாடு ஆகியவற்றை நிச்சயப்படுத்துவதற்கான நிருவாக அமைப்பைப்பற்றியுங்கூடப் பயனுள்ள யோசனைகளைச் செய்துள்ளனர். இந்தப் பரிந்துரைகள் அமல்படுத்தப்பட்டால், தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கம் ஒரு மேலான உருவம் பெற்று, மக்களுக்குப் பயனுறுதியான வழிகளிலும், நானாவித வழிகளிலும் நிச்சயமாகத் தொண்டாற்ற முடியும்.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலும், அதற்குப் பிறகும், இயக்கம் பல்வேறு துறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை அடைந்து வந்துள்ளது. பல்வேறு திட்டக் காலங்களில் கூட்டுறவு இயக்கத்தின் சாதனைகள் 'ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவு வளர்ச்சிப் பணித் திட்டங்கள்' என்ற தலைப்பைக் கொண்ட அடுத்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன.

# 5. ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவின் வளர்ச்சி

## (Co-operative Development in Five Year Plans)

### கூட்டுறவும் திட்டமிடுதலும்

### (Co-operation and Planning)

விடுதலைக்குப் பின்னர், நம் நாடு திட்டமிட்ட வளர்ச்சியின் ஒரு செயல்திட்டத்தை அமல்படுத்தத் தொடங்கியது. 1951ஆம் ஆண்டிலிருந்து நான்கு ஐந்தாண்டுத் திட்டங்கள் ஏற்கெனவே அமல்படுத்தப்பட்டு, ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் இப்பொழுது அமலிலிருக்கிறது. இந்தத் தேசியத் திட்டங்களின் நோக்கம், ஒரு ஜனநாயக வழியில் விரைவாக விரிவுபடும் பொருளாதார அமைப்பையும், எல்லோருக்கும் நீதி, சம வாய்ப்பு ஆகிய அடிப்படையைக் கொண்ட ஒரு சமுதாய முறையையும் அமைப்பதாகும். முதல் ஐந்தாண்டுத் திட்டம் கூட்டுறவை, 'முன் முயற்சியும், பரஸ்பர அனுகூலமும், சமுதாய நோக்கமும் ஒன்று சேர்ந்த ஜனநாயகத் திட்டமிடுதலின் ஒரு கருவி'யாக ஏற்றது. அவ்வண்ணமே, ஐந்தாண்டுத் திட்டங்களையும் அமல்படுத்துவதற்காகக் கூட்டுறவு ஒரு முக்கிய அம்சமாகஅமையவேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், ஒரு சமதர்ம வகையான சமுதாயத்தை உருவாக்கும் ஒரு பரந்த குறிக்கோளைத் தனக்கு முன்னால் அமைத்துக்கொண்டது. இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகக் கூட்டுறவு ஒரு முக்கிய முகமையாகத் தெரிந்தெடுக்கப்பட்டது. மற்றும், 'ஜனநாயக முறைகளில் பொருளாதார வளர்ச்சியானது, கூட்டுறவை அதன் பல்வேறு உருவங்களில், உபயோகிப்பதற்கான ஒரு மிகப்பெரிய துறையை வழங்குகிறது' என்று அந்தத் திட்டத்தில் வலியுறுத்தப்பட்டது. 'திட்டமிட்ட வளர்ச்சித் திட்டத்தின் ஒரு பகுதியாக ஒரு கூட்டுறவுத் துறையைப் பேணி வளர்த்தல், தேசியக் கொள்கையின் முக்கியக் குறிக்கோள்களில் ஒன்றாகும்.'

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம், குறிப்பாக விவசாயம், நடுத்தர அளவுத் தொழில், சிறிய அளவுத்தொழில், வர்த்தகம், விநியோகம் ஆகிய கோளத்தில் ஒரு வளர்ந்துவரும் கூட்டுறவுத்

துறையை எதிர்நோக்கியது. உண்மையாகவே, அந்தத் திட்டம் கூட்டுறவுத் துறைக்காக, கூட்டுறவு முறைகளில் நடத்தப்பட்ட பல நடவடிக்கைகளைவிட அதிகமான சிலவற்றை எதிர்நோக்கியது. கிராமப் பொருளாதார அமைப்பனைத்தும், கூட்டுறவு அடிப்படையின்பேரில் சீரமைக்கப்படுவதற்கு உத்தேசிக்கப்பட்டது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டங்களில்கூட அணுகும்வகை, கொள்கை ஆகிய இரண்டு விஷயத்திலும் ஒரு மிக முக்கிய இடத்தைக் கூட்டுறவு வகித்துள்ளது. முந்தைய திட்டங்களிலிருந்து தொடர்ந்து வந்த கூட்டுறவு வளர்ச்சி பற்றிய முக்கியத் திட்டங்கள், நான்காவது திட்டத்திலும் கவனம்பெறத் தொடர்ந்ததோடு தற்போதுள்ள பலவீனத்தை நீக்கிக் கூட்டுறவு இயக்கத்தை உறுதிப்படுத்துவதன்பேரிலும், ஒரு தன்னிறைவுள்ள கூட்டுறவுக் கட்டமைப்பை ஏற்படுத்துவதற்கான முயற்சியின்பேரிலும், அதிகமான வலியுறுத்தல் இடப்பட்டது. நிலையான வளர்ச்சி என்பது நான்காவது திட்டத்தின் அடிப்படைக் குறிப்பாக இருந்தது. இது கூட்டுறவுச் சங்கங்களுக்குங்கூடப் பொருந்துவதாக இருந்தது. எல்லாவற்றையும்விட, கூட்டுறவு ஒரு வெறும் பொருளாதார நிறுவன வகை மட்டுமன்றி, ஆழ்ந்த சமுதாயப் பயன்களையும் ஒழுக்கநெறிப் பயன்களையும் உடையது. மற்றும், அது ஒரு மேலான வாழ்க்கைநெறிக்கு வழிகாட்டவும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. நான்காவது திட்டம், கூட்டுறவு நிறுவனங்களின் இந்த அம்சத்தின்மீது அதிகமாக வலியுறுத்தியது.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், தற்சார்பின்மீதும் வறுமையைப் போக்குதல்மீதும் அதிகமான வலியுறுத்தல் இருக்கிறது. நாட்டு மக்கள் முன்பு ஏற்படுத்தப்பட்ட இப் பணியில் ஒரு முக்கியமான பங்கைக் கூட்டுறவு எடுக்கவேண்டியிருக்கிறது. முந்திய திட்டங்களைக்காட்டிலும், ஒரு மிக அதிகமான பணி நாட்டின் பொருளாதார அமைப்பின்—குறிப்பாக, விவசாயத் துறை வளர்ச்சியில், கூட்டுறவு முறைக்காக எதிர்நோக்கப்பட்டுள்ளது.

## கூட்டுறவுத் திட்டங்களுக்காக ஐந்தாண்டுத் திட்டங்களில் நிதி முதலீடு

கீழ்க்காணும் அட்டவணை நான்கு திட்டங்களில் ஏற்படுத்தப்பட்ட நிதிமுதலீட்டையும் (Out lay), மற்றும், ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்காக உத்தேசிக்கப்படும் முதலீட்டையும் சுட்டிக்காட்டுகின்றது.

**கூட்டுறவுத் திட்டங்களுக்காகத் திட்ட நிதி முதலீடுகள்**
(Plan Outlays for Co-operative Schemes)

| திட்டக் காலம் | நிதி முதலீடு (ரூபாய், கோடிக் கணக்கில்) |
|---|---|
| முதல் திட்டம் 1951–56 | 7—00 |
| இரண்டாவது திட்டம் 1956–61 | 48—71 |
| மூன்றாவது திட்டம் 1961–66 | 80—00 |
| [1] நான்காவது திட்டம் 1969–74 | 206—00 |
| ஐந்தாவது திட்டம் 1974–1979 | 400—00 |

மேற்குறிக்கப்பட்ட அட்டவணையிலிருந்து, வளர்ச்சியின் வேகம் தொடர்ந்து வந்த திட்டக் காலங்களில் அதிகரித்துக் கொண்டு வந்துள்ளது என்பதும்; ஐந்தாண்டுத் திட்டங்களின் கீழ் அரசினர், கூட்டுறவுச் சங்கங்கள் வளர்ச்சியடைவதற்காக மேற்கொண்ட நன்முயற்சிகளினால் இயக்கத்தில் துரிதமான முன்னேற்றம் சாத்தியப்பட்டது என்பதும் தெளிவாகும். ஒவ்வோர் ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலும் அமல்செய்யப்பட்ட பல்வேறு கூட்டுறவு வளர்ச்சிச் செயல்திட்டங்கள் பின்வரும் பத்திகளில் விளக்கப்பட்டுள்ளன.

## திட்டக் காலங்களின்போது, கூட்டுறவின் வளர்ச்சி 1956ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் முடிவடைந்த முதல் ஐந்தாண்டுத் திட்டம்

இந்தத் திட்ட ஆரம்பத்தில் இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தில் 137 இலட்ச எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களும், 45 கோடி ரூபாய்ப் பங்கு மூலதனத்தையும், 276 கோடிரூபாய் நடைமுறை மூலதனத்தையுங்கொண்ட 1.8 இலட்ச எண்ணிக்கையுள்ள சங்கங்களுமிருந்தன. அந்தத் திட்டத்தின்கீழ், இயக்கத்தை வளர்ச்சியடையச் செய்யும் நோக்கத்துடன், 7 கோடி ரூபாய் மொத்த முதலீடு, கூட்டுறவு வளர்ச்சிக்காக ஏற்படுத்தப்பட்டது. முதல் திட்டத்தின்கீழ், கூட்டுறவு இயக்கத்தின் வருங்கால வளர்ச்சிக்கான ஒரு கடைகாலைப் போடுவதற்கு முயற்சிக்கப்பட்டது.

[1] (1966–67-லிருந்து 1968–69 வரை ஓராண்டுத் திட்டங்கள் மட்டும் தயாரிக்கப்பட்டன).

கூட்டுறவுத் துறையில் முதல் திட்டத்தின் இறுதியில், அதாவது 30-6-56 நாளன்று இருந்த நிலைமை பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| எல்லாவகையான சங்கங்களின் மொத்த எண்ணிக்கை | | 2.4 இலட்சம் |
| உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை | | 176 இலட்சம் |
| பங்கு மூலதனம் | ரூபாய் | 77 கோடி |
| நடைமுறை மூலதனம் | ரூபாய் | 469 கோடி |

## இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலம் (1956-61)

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கான கூட்டுறவு வளர்ச்சிச் செயல்திட்டங்கள், அநேகமாகக் கிராமக்கடன் விசாரணை அறிக்கையின் பரிந்துரைகளை அனுசரித்துத் தயாரிக்கப் பட்டன. எனினும், இந்தச் செயல்திட்டங்கள் கூட்டுறவுத்துறை அனைத்தையும் தழுவவில்லை. கிராமக் கூட்டுறவுச் செயல் திட்டங்களை அமல்படுத்துவதில் மூன்று அம்சங்கள் வலியுறுத்தப்பட்டன. முதலாவதாக, கடன்வசதியானது கூட்டுறவின் தொடக்கம் மட்டுமே. கடன் வழங்குவதிலிருந்து கூட்டுறவு இயக்கம், கிராமத்தில் கூட்டுறவுப் பண்ணைத்தொழில் உள்படப் பல நடவடிக்கைகளுக்கு நீடிக்கப்படவேண்டும். இரண்டாவதாக, ஒரு கிராமத்தில் ஒவ்வொரு குடியானவனும் குறைந்தது ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராக இருக்கவேண்டும். மூன்றாவதாக, கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்தையும் கடன்பெறும் தகுதியுள்ளதாகச் செய்வதற்குக் கூட்டுறவு முயற்சிக்கவேண்டும். கிராமச் சமுதாயத்தின் எல்லாக் குடும்பங்களுக்காகவும், முழுக் கிராமத்தின் பொதுநலனுக்காக நிலங்களையும், இதரப் பொருள்வளங்களையும் மற்றும் சமுதாயச் சேவைகளையும் அபிவிருத்தி செய்வதற்காகவுமான கடமையை மேற்கொள்ளல் என்று கூட்டுறவு இயக்கம் பொருள்படவேண்டும் என்பது அந்தத் திட்டத்தின் நோக்கமாக இருந்தது.

கடன்வசதி, விற்பனைவசதி, பதனப்படுத்துதல், கிடங்கு வசதி, சேமிப்பு வசதி மற்றும் தொடர்புள்ள இதரப் பொருளாதார நடவடிக்கை ஆகியவற்றின் விரிவாக்கம் திட்டத்தில் வலியுறுத்தப்பட்டது. திட்டத்தின் ஒரு முக்கிமானதும், கடினமானதுமான விஷயமாகக் கிராமக் கடன் அரசு பங்காளித்துவத்துடன் ஒன்றிணைக்கப்பட்ட திட்டமானது, கூட்டுறவு வளர்ச்சியின் சுழியாணியாக ஏற்படுத்தப்பட்டது. கூட்டுறவுக் கடன், விற்பனை, பதனப்படுத்துதல், கிடங்கு வசதி, சேமிப்பு வசதி ஆகிய

வற்றிற்காகத் திட்டக்காலத்தில் அடையவேண்டிய முக்கிய இலக்குகள் பின்வருமாறு நிருணயிக்கப்பட்டது:

**கடன்**

| | | |
|---|---|---|
| பெரிய அளவுச் சங்கங்களின் (Large sized societies) எண்ணிக்கை | | 12,500 |
| குறுகியகாலக் கடனுக்கான இலக்கு | ரூபாய் | 150 கோடி |
| மத்தியக்காலக் கடனுக்கான இலக்கு | ரூபாய் | 50 கோடி. |
| நீண்டகாலக் கடனுக்கான இலக்கு | ரூபாய் | 25 கோடி. |

**விற்பனையும் பதனப்படுத்தலும்**

| | |
|---|---|
| அமைக்கப்படவேண்டிய பிரதம விற்பனைச் சங்கங்களின் எண்ணிக்கை | 1,700 |
| கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் | 36 |
| கூட்டுறவுப் பருத்திச் சுத்திகரிப்பு இயந்திர அமைப்பு | 77 |
| இதரக் கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்கள் | 112 |

**கிடங்கு வசதி நிறுவனங்களும் பொருட் சேமிப்பு வசதியும்**

| | |
|---|---|
| மத்தியக் கிடங்குவசதிக் கழகம், மாநிலக் கிடங்கு வசதிக் கழகங்கள் ஆகியவைகளின் கிடங்குகள் | 350 |
| விற்பனைச் சங்கங்களின் கிடங்குகள் | 1,700 |
| பெரிய அளவுச் சங்கங்களின் கிடங்குகள் | 5,000 |

இந்த இலக்குகளையடைவதற்கு 48.71 கோடி ரூபாய் மொத்த நிதி முதலீட்டைத் திட்டம் ஏற்படுத்தியது. மேற்குறிக்கப்பட்ட கூட்டுறவுக் கடனுக்கான இலக்குகள், நடப்பிலிருக்கும் சங்கங்கள் மூலமும் புதிய சங்கங்கள்மூலமும் விவசாயக் கடன் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கையை அதாவது திட்டக்காலத்தின் ஆரம்பத்திலிருந்த சுமார் 77 இலட்சம் எண்ணிக்கையிலிருந்து மூன்று மடங்கு அதிகரிப்பதன்மூலமும் அடையப்படவேண்டும்.

கிராமச் சமுதாயத்தைப் பிரதம பகுதியாகக்கொண்ட 'சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள்' (Service Co-operatives)

அமைக்கப்படவேண்டுமென்று, 1958ஆம் ஆண்டு நவம்பரில் நடைபெற்ற தேசிய வளர்ச்சி அவையால் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் அடிப்படையில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அடங்கியிருந்த பெரிய அளவுச் சங்கங்களை அமைப்பதற்காக முதலில் வகுக்கப்பட்ட திட்டங்கள் மாற்றப்பட்டன. புதிய சங்கங்களை அமைப்பதன் வாயிலாகவும், பழைய சங்கங்களைப் புதுப்பித்துச் சீரமைப்பதன் வாயிலாகவும் 3 இலட்ச சேவைக் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பது திட்டத்தின் இலக்காக இருந்தது. விவசாயப் பண்ணைச் சங்கங்கள், தொழில் ஒப்பந்தச் சங்கங்கள் ஆகியவைகளை அமைப்பதற்காகவும், தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்மூலம் குடிசைத்தொழில்களையும், சிறிய அளவுத் தொழில்களையும் வளர்ச்சி செய்வதற்காகவுங்கூட ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. குடிசைத் தொழில்களையும், சிறிய தொழில்களையும், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களையும், கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்களையும், கூட்டுறவுப் பால் வழங்கும் சங்கங்களையும் மற்றும் அநேக இதரத் தொடர்புள்ள நடவடிக்கைகளையும் வளர்ச்சி செய்வதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 200 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது.

### இரண்டாவது திட்டத்தின் முக்கியச் சாதனைகள்

அநேகமாக, இரண்டாவது திட்டத்திற்காக நிருணயிக்கப்பட்ட எல்லாக் கூட்டுறவுச் செயல்துறைகளிலும் இலக்குகள் நிறைவேற்றப்பட்டிருந்தன. இந்தத் திட்டத்தின் சாதனைகள் பின்வருமாறு:

(i) **பொது முன்னேற்றம் :** இரண்டாவது திட்ட இறுதியில், இந்தியாவில் எல்லாவகையான கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 3.3 இலட்சங்களாக இருந்தது. முதலாவது திட்டத்தின் இறுதியிலிருந்த எண்ணிக்கை 2.4 இலட்சங்கள். அவ்வாறே, இரண்டாவது திட்டத்தின் இறுதியில், சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 342 இலட்சங்களாக இருந்தது. அது 176 இலட்சங்களாக முதலாவது திட்டத்தின் இறுதியிலிருந்தது. சங்கங்களின் பங்குமூலதனமும் நடைமுறை மூலதனமும் முதலாண்டுத் திட்டத்தின் இறுதியில் முறையே ரூபாய் 45 கோடியிலிருந்தும், ரூபாய் 276 கோடியிலிருந்தும் இரண்டாவது திட்ட இறுதியில் ரூபாய் 222 கோடிக்கும், ரூபாய் 1312 கோடிக்கும் உயர்ந்தன.

(ii) **விவசாயக்கடன் :** 1959–60ஆம் ஆண்டிலிருந்தே, மத்திய அரசால் எடுக்கப்பட்ட கொள்கை முடிவின் ஒரு விளைவாக

பெரிய அளவுச் சங்கங்களை அமைத்தல் நிறுத்தப்பட்டது. உதவித் தொகைகளும், மானியங்களும், நடப்பிலுள்ள சங்கங்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டன. அவ்வாறு வழங்கப்பட்ட தொகை 8.70 இலட்சம். மாநில அரசு திட்டங்கள், நாட்டில் சுமார் 31,000 சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்தலை எதிர் நோக்கியது. இந்த இலக்குகள் காரியாம்சத்தில் மீறப்பட்டன. தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகமும் கிடங்கு வசதி வாரியமும் மாநில அரசுகளுக்கு ரூபாய் 69.98 இலட்சத்திற்கு மானியங்களை, புத்துயிர் அளிக்கப்படுவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சங்கங் களில், சிப்பந்திகள் செலவுகளை ஏற்பதற்காக ஒப்பளித்தன. நாடு முழுவதிலுமுள்ள மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும், அவைகளின் தகுதியுடைய கூடுதலான சிப்பந்திகளின் செலவுகளை ஏற்பதற்காக அரசு ரூ. 18.16 இலட்ச அளவிற்கும் மேற்கொண்ட மானியத்தொகை அளித்தது. அதில் ஏறக்குறையப் பாதி, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கிடங்கு வாரியத்தால் ஏற்கப்பட்டது. திட்டக்காலத்தின் இறுதி ஆண்டில், விவசாயக் கடன்வசதிச் சங்கங்களால் வழங்கப்பட்ட குறுகிய காலக் கடன்களும், மத்தியக்காலக் கடன்களும் ரூ. 202.75 கோடியாக இருந்தன. நீண்டகாலக் கடன்துறையில் ஏறக் குறைய நாட்டில் எல்லா மாநிலங்களும், தங்கள் மத்திய நில அடைமான வங்கிகளை அமைக்க முடிந்த பெருமை இரண்டாவது திட்டத்தைச் சாரும். மத்தியப் பிரதேசத்தில் நீண்டகாலக் கடன் பணி, தலைமை வங்கியின் ஒரு தனிப்பட்ட இலாக்காவால் கையாளப்பட்டது. இரண்டாவது திட்டத்திற்காக நிருணயிக்கப் பட்ட ரூபாய் 25 கோடி (நிலுவை) இலக்கில், ஏறக்குறைய 34 கோடி ரூபாய் (நிலுவை) 1961ஆம் ஆண்டு இறுதியில் வழங்கப்பட்டிருந்தது.

**(iii) விற்பனை:** இரண்டாவது திட்டத்திற்காக நிருணயிக் கப்பட்ட இலக்கு 1,800 விற்பனைச் சங்கங்கள். அந்த இலக்கிற் கெதிராக, மொத்தத்தில் 1782 அத்தகைய பிரதம சங்கங்கள் அமைக்கப்பட்டு, அவைகளுக்கு ரூ. 633.03 அளவிற்குத் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கிடங்கு வசதி வாரியத்தால் நிதியுதவி யளிக்கப்பட்டது. அதில், பல்வேறு விற்பனைச் சங்கங்களால் உபயோகப்படுத்தப்பட்ட நிதியுதவி ரூ. 597.53 இலட்சமாக இருந்தது. கூட்டுறவு விற்பனைத் துறையில், மற்றொரு குறிப் பிடத்தக்க சாதனை, எல்லா மாநிலங்களிலும், மாநில மட்டத்தில் தலைமை விற்பனைச் சங்கங்கள் அமைக்கப்பட்டது. பல்வேறு சங்கங்களுக்குப் பொருட் கிடங்கு கட்டும் தேவைக்காக ரூ. 705 இலட்சத்திற்குக் கடன்களும் மானியங்களும் வழங்கப்பட்டன.

பொருட்கிடங்குகள் கட்டுவதில் அடைந்த முன்னேற்றம் பின்வருமாறு:

| சங்க வகை | கிடங்குகள் | | |
|---|---|---|---|
| | அமைப்பதற்காக உத்தேசிக்கப்பட்ட கிடங்குகளின் எண்ணிக்கை | உண்மையாகவே கட்டப்பட்ட கிடங்குகளின் எண்ணிக்கை | 1961ஆம் ஆண்டு இறுதியில், கட்டும் நிலையிலிருந்த கிடங்கு எண்ணிக்கை |
| (1) விற்பனைச் சங்கங்கள் | 1795 | 773 | 1022 |
| (2) கிராமப் பிரதம கடன் சங்கங்கள் | 5454 | 2049 | 3405 |

மைசூர், மேற்கு வங்காளம், பஞ்சாப், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் கூட்டுறவுத் துறையில், நான்கு குளிர்பதனச் சேமிப்பு அமைப்புகளை (cold storage plants) நிறுவுவதற்காக, 1961ஆம் ஆண்டில், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கிடங்குவசதி வாரியத்தால் ரூபாய் 16 இலட்சத் தொகைக்குக் கடனுதவி மாநில அரசுகளுக்கு வழங்கப்பட்டது. ஆறு அமைப்புகளுக்காக ரூபாய் 10.50 இலட்சம் பட்டுவாடாச் செய்யப்பட்டது.

**(iv) பதனப் படுத்தும் அமைப்புகள்:** இரண்டாவது திட்டக் காலத்தின் இறுதியில், 56 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், 1951ஆம் வருடத்தியத் தொழில்கள் (வளர்ச்சியும் ஒழுங்கு முறையும்) சட்டத்தின் (Industries Development and Regulation Act) கீழ்ப் பதிவு செய்யப்பட்டு, உரிமம் வழங்கப்பட்டிருந்தன. முதலாவது திட்ட இறுதியில் அத்தகைய சங்கங்கள் 8 மட்டும்தான் இருந்தன. இரண்டாவது திட்டக் காலத்தில் 30 சர்க்கரை ஆலைகள் உற்பத்தித் தொழில் நடத்தி, 41.23 இலட்ச டன்கள் கரும்பைப் பிழிந்து, 1960 – 61ஆம் ஆண்டில் மாத்திரம் 4.41 இலட்ச டன்கள் சர்க்கரையை உற்பத்திச் செய்தன. இது, அந்த ஆண்டில் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட மொத்தச் சர்க்கரை உற்பத்தியில் 15 சதவிகிதமாக இருந்தது. முதலாவது திட்டக் காலத்து இறுதியில் கூட்டுறவுத் துறையில் மொத்த உற்பத்தி செய்யப்பட்ட சர்க்கரை 0.58 இலட்ச டன்கள் மாத்திரமே இருந்தபோது, இது 2.28 சதவிகிதமாக இருந்தது. 56 சர்க்கரை ஆலைகளுள் 53 ஆலைகளில் மொத்தப் பங்கு மூலதனம் ரூ. 16.45 கோடியாக இருந்தது. அதில் அரசினரின் பங்குத்தொகை ரூ. 6.49 கோடி அளவிற்கு இருந்தது.

இரண்டாவது திட்டக்கால இறுதியில் இதரக் கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகளைக் குறித்த விவரங்கள் பின்வருமாறு:

| | | எண்ணிக்கை | தயாரிக்கப் பட்ட அளவு |
|---|---|---|---|
| 1. | பருத்திச் சுத்திகரிப்புப் பதனப்படுத்தும் அமைப்புகள் | 132 | 0.5 மில்லியன் மூட்டைகள் (Bales) |
| 2. | அரிசி ஆலைகளும், அரிசி உமி தவிர் ஆலைகளும் | 168 | 12,000 டன்கள் |
| 3. | எண்ணெய் தயாரிக்கும் அமைப்புகள் (விசை இயக்கப்பட்டது) | 524 | 9,000 டன்கள் |

இரண்டாவது திட்டத்தின் சாதனைகள், ஒரு பெரிய கூட்டுறவு வளர்ச்சித் திட்டத்தை மூன்றுவது திட்டக் காலத்தில் தொடங்குவதற்குத் திட்டமிடுபவர்களுக்கு ஊக்கமளித்தன.

## மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக்காலம் (1961-66)

மூன்றுவது திட்டத்திற்கான பணித் திட்டங்கள், 1958ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில், தேசிய வளர்ச்சி அவையால் (National Development Council) விவரிக்கப்பட்ட புதிய கொள்கையை அனுசரித்துத் தயாரிக்கப்பட்டன.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில், கீழ்க்காணும் இலக்குகள் நிருணயிக்கப்பட்டன:

**(i) விவசாயக் கடன்**

| | | |
|---|---|---|
| 1. | பிரதம கிராமச் சங்கங்களின் (சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள்) எண்ணிக்கை | 2.5 இலட்சங்கள் |
| 2. | அங்கத்துவம் | |
| | (அ) கிராம மக்கள்தொகை தழுவப்பட வேண்டிய விகிதம் | 55 சதவிகிதம் |
| | (ஆ) விவசாய மக்கள்தொகை தழுவப்படவேண்டிய விகிதம் | 74 சதவிகிதம் |

கூ—19

| | | |
|---|---|---|
| 3. | கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் அளிக்கப் படவேண்டிய கடன்கள் | |
| | (அ) குறுகியகாலம் | ரூ. 400 கோடி |
| | (ஆ) மத்தியகாலம் | ரூ. 160 கோடி |
| | (இ) நீண்டகாலம் (கடன் நிலுவை) | ரூ. 115 கோடி |
| 4. | பிரதம சங்கங்களால் வைத்திருக்கப் படவேண்டிய மொத்த வைப்புகள் | ரூ. 33 கோடி |
| 5. | புத்துயிரளிக்கப்படவேண்டிய சேவைக் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை | 52,180 |

**(ii) கூட்டுறவு விற்பனை:** ஒவ்வொரு முக்கிய மண்டியும் ஒரு கூட்டுறவு விற்பனைச் சங்கத்தால் தழுவப்படுவதற்காக, மூன்றுவது திட்டக்காலத்தில் 600 அதிகமான விற்பனைச் சங்கங்களை நிறுவ உத்தேசிக்கப்பட்டது; கூடுதலான கிடங்குகளைக் கட்டுவதற்காகவும் உத்தேசிக்கப்பட்டது. 1966ஆம் ஆண்டு இறுதிக்குள் சுமார் 2,400 எண்ணிக்கையிலிருக்கப்போகும் விற்பனைச் சங்கங்கள் மூன்றுவது திட்டக் காலத்தின் இறுதிக்குள் ரூபாய் 400 கோடி மதிப்புள்ள விவசாய விளைபொருள்களை விற்பனை செய்யுமென்று எதிர்பார்க்கப்பட்டது. வழக்கப்படி இந்தச் சங்கங்கள், பங்குமூலதன உதவித் தொகையையும், சிப்பந்தி மானியத் தொகையையும், கிடங்கு கட்டுவதற்காகக் கடன்களையும் மானியங்களையும் இரண்டாவது திட்டத்தின்கீழ் வழங்கப்பட்ட அதேமாதிரி வகையில் உதவி பெறுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. மற்றும், இரண்டாவது திட்டத்தில் நிறுவப்பட்ட விற்பனைச் சங்கங்கள், தங்கள் நடவடிக்கைகளை விரிவுபடுத்துவதற்குக் கூடுதலான பங்கு மூலதன உதவித்தொகை வாயிலாகவும், அதிகரித்துவரும் தங்கள் சேமிப்புக் கிடங்கு இடத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குக் கூடுதலான கிடங்குகளைக் கட்டுவதற்காகக் கடன்கள் வாயிலாகவும், மானியங்கள் வாயிலாகவும் உதவி பெறுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. விற்பனைச் சங்கங்களால் பெற்ற விளைபொருள்களை விற்பனை செய்வதற்காக அவைகளைத் தரப்படுத்துவதற்கான வசதிகளை யளிக்கும் பிரச்சினைகளுக்குக் கவனம் செலுத்த உத்தேசிக்கப்பட்டது. இந்த இலட்சியத்தை யடைய 176 விற்பனைச் சங்கங்களுக்குத் தரப்படுத்தும் தளவாடங்களை வாங்குவதற்காகவும் பயிற்சி பெற்ற சிப்பந்திகளை அமர்த்துவதற்காகவும் மானிய உதவியளிப்பதற்கு உத்தேசிக்கப்பட்டது.

**(iii) கூட்டுறவுப் பதனப்படுத்துதல்:** மூன்ருவது திட்டத்தின்கீழ், கீழ்க்காணும் இலக்குகள் நிருணயிக்கப்பட்டு, அவற்றிற்காகத் திட்டத்தில் ரூபாய் 447.13 இலட்ச மொத்த நிதி முதலீடு ஏற்பாடு செய்யப்பட்டது.

பருத்திச் சுத்திகரிப்பு அமைப்புகளும், தொழிற்சாலைகளும்—48; அரிசி ஆலைகள் — 36; அரிசி உமிதவிர் ஆலைகள் — 411; சணல் மூட்டை கட்டும் இயந்திர அமைப்புகள் — 29; எண்ணெய் தயாரிக்கும் அமைப்புகள் — 33; நிலக்கடலைத் தோலுடைக்கும் இயந்திரங்கள் — 63; பழங்கள் பதனப்படுத்தும் அமைப்புகள் (Fruit Canning Units) பெரிய அளவு — 3; சிறிய அளவு — 74; பால் பதனப்படுத்தும் அமைப்புகள் 30; கிராமப் பாலாடை தயாரிக்கும் அமைப்புகள் (Rural Creameries)–24; குளிர்பதனச் சேமிப்பு இயந்திர அமைப்புகள் உள்பட இதரப் பதனப்படுத்தும் அமைப்புகள் — 220. ஆக மொத்தம் 917.

புதிய சர்க்கரை ஆலைகளை நிறுவுதலையும் அவைகளுக்கு உரிமம் வழங்குதலையும் பொறுத்தமட்டில், முன்னதாகவே எந்தவிதக் கண்டிப்பான ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையை நிருணயிக்கக்கூடாது என்று முடிவு செய்யப்பட்டிருந்தாலும், மூன்ருவது திட்டக் காலத்தில் 35 இலட்சம் டன்கள் அமர்த்தப்பட்ட சக்தியைக் கொண்ட 25 புதிய கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளை நிறுவுவதற்காகத் தாற்காலிகமான ஒரு பணித்திட்டம் வகுக்கப்பட்டது.

**(iv) இதர இலக்குகள்:** (அ) எல்லா மாநிலங்களிலும், எல்லா மட்டங்களிலுமுள்ள கூட்டுறவு இலாக்காக்களின் பணியாளர் தொகுதியை வற்புறுத்துவதற்காக மூன்ருவது திட்டத்தில் சுமார் ரூ. 5 கோடி ஏற்பாடு செய்யப்பட்டது. (ஆ) நாடு முழுவதும் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்குத் தனிக் கவனம் செலுத்தப்பட வேண்டுமென்று, 2,000 புதிய பிரதம நுகர்வோர் பண்டசாலைகளையும், மொத்த விற்பனைப் பண்டசாலைகளையும் அமைப்பதற்கான ஓர் இலக்கு நிருணயிக்கப்பட்டது. இந்தப் பண்டசாலைகள், பங்கு மூலதன உதவித் தொகை வாயிலாகவும், சிப்பந்தி மானிய வாயிலாகவும் நிதியுதவி பெறுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அத்தகைய நுகர்வோர் பண்டசாலைகளை அமைப்பதனுல், அரசு ஊழியர்களுங்கூட நலம் பெற வேண்டும். (இ) மேற்கு வங்காளத்தில் சணல் கூட்டுறவு விற்பனை, குசராத்திலுள்ள பருத்திக் கூட்டுறவு விற்பனை முறை வகையில் ஆரம்பிப்பதற்கு அதிகமான வலியுறுத்தலிடப்பட்டது. குச

ராத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் பருத்தியைச் சேகரித்து, சுத்தி கரித்து, தரப்படுத்தி, அழுத்தம்செய்து இறுதியாக விற்பனை செய்கின்றன. (ஈ) மூன்றாவது திட்டத்தில் மேற்கொள்வதற்கு நிருணயிக்கப்பட்ட 55 பால்பண்ணைத் திட்டங்களைப் பெரும்பாலும் ஒரு கூட்டுறவு அடிப்படையின்பேரில் நிறுவுவதற்கு உத்தேசிக்கப் பட்டது. பால்வழங்கும் சங்கங்கள், பாலையும் அதன் துணைப் பொருள்களையும் சேகரித்துப் பதனப்படுத்தி விநியோகம் செய்வதில் அக்கறை கொள்ளவேண்டும். கால்நடைப் பராமரிப்புத் துறையில் ஆட்டு ரோமம் சேகரித்தல், தோலுரித்தல், தோலைப் பதனப்படுத்துதல் ஆகியவற்றிற்காகவும், கால்நடைத் தீவனம் வழங்குவதற்காகவும், கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவதன்மூலம் ஒரு முன்னேற்றம் பெறவேண்டும். இந்தச் சங்கங்களுக்கு உதவியளிப்பதில் ஒரு பொதுவான முறையை வகுப்பதற்குத் தீர்மானிக்கப் பட்டது. (உ) மீன் துறையில் கூட்டுறவுச் சங்கங்களை ஊக்குவிப்பதற்கு எல்லா இயந்திரப் படகுகளையும், தனிநபர்களுக்கு வழங்காமல் மீனவர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மட்டும் விநியோகிக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. மீனுக்காகக் கூட்டுறவு, குளிர்பதன இயந்திர அமைப்புகளும் (Cold Storage) விற்பனைச் சங்கங்களும் தொடங்குவதற்கான திட்டங்கள் தயாரிக்கப்பட்டன. கூட்டுறவுக் கோழிப் பண்ணைகளைத் தொடங்குவதற்குங்கூட ஆதரவும், ஊக்கமுமளிக்கப்பட்டன. (ஊ) மூன்றாவது திட்டக் காலத்தில், கூட்டுறவு அடிப்படையில் தொழிற்பேட்டைகளை (Industrial Estate) அமைப்பதற்குச் சாத்தியப்படும் எல்லா முயற்சிகளும் எடுக்கப்படவேண்டும் என்றுங்கூட முடிவு செய்யப் பட்டது. நகரங்களில் அத்தகைய தொழிற்பேட்டைகள் 200-ம், கிராமப் புறங்களில் 200-ம் அமைப்பதற்குத் திட்டமிடப்பட்டது. அவற்றுள் பெரும்பாலானவை கூட்டுறவு முறையில் அமைக்கப் படுமென எதிர்பார்க்கப்பட்டது. இந்தத் தொழிற்பேட்டைகளில் தனிநபர் தொழில் முனைவோர்களைவிடத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுக்கு முன்னுரிமை கொடுக்கப்பட்டது. மத்தியத் தொழில்நிதிக் கழகத்திலிருந்தும், மாநிலத் தொழில்நிதிக் கழகங்களிலிருந்தும் கடன்கள் அளிப்பதற்குத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தனி ஊக்கம் கொடுப்பதற்காக விவரங்கள் தயாரிக்கப்பட்டன. அந்நியச் செலாவணி ஒதுக்கீட்டில் கூட்டுறவுத் தொழிலமைப்புகள் ஒரு சாதகமாக நடத்தப்படும் முறையைப் பெறவேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டது. (எ) போக்குவரத்துத் துறையில் ரிக்ஷா வண்டி இழுப்பவர்களுக்காக அவர்கள் ரிக்ஷா வண்டிகளின் உரிமையாளர்கள் கையில் சுரண்டப்படுவதைத் தடுப்பதற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் தொடங்கப்பட வேண்டுமென்று திட்டமிடப்பட்டது. பொருள்களை ஏற்றி அனுப்பு

வதற்காக நாட்டுச் சிறு மரக்கலக் கூட்டுறவுச் சங்கங்களைக் (Country Craft Co-operative Societies) கூட அமைப்பதற்குத் திட்டமிடப்பட்டது. (ஏ) ஏறக்குறையக் குறைந்த வருவாய் வகுப்பு மக்களுக்காக வீடுகட்டும் திட்டம், மூன்றாவது திட்டத்தில் ஏற்படுத்தியபடி, கூட்டுறவுச் சங்கங்கள்மூலம் அமல்படுத்தப்பட்டுக் கையாளப்படவேண்டுமென்றும், எல்லா மாநிலங்களிலும் வீட்டு வசதிக் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்காக நிருணயமான இலக்குகள் தயாரிக்கப்படவேண்டும் என்றும் உத்தேசிக்கப்பட்டது. (ஐ) மத்திய அரசின் சமுதாய வளர்ச்சிக் கூட்டுறவுத் துறையால், திரு. எஸ். நிஜலிங்கப்பா அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு செயல்முறைக் குழு (Working Group) 'கிடைக்கத் தக்க அனுபவத்தின் அடிப்படையில் கூட்டுறவு விவசாயப் பண்ணைச் சங்கங்களுக்காக ஒரு செயல்திட்டம் அமைப்பதை உதவுவதற்கு' அமைக்கப்பட்டு, அந்தக் குழு, தன் அறிக்கையை 1959ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் சமர்ப்பித்தது. அதன் விளைவாக மூன்றாவது திட்டக் காலத்தில், நாட்டில் கூட்டுறவு விவசாயப் பண்ணைபற்றிய 320 திட்டமிட்ட முன்னோடித் திட்டங்களை அமைப்பதற்கு உத்தேசிக்கப்பட்டது. ஒவ்வொரு திட்டத்திலும் ஓர் ஆரம்பமாக ஒருசில கிராமங்களைத் தெரிந்தெடுத்து, அக் கிராமங்களுக்கு அருகிலும், சுற்றியும் மக்களிடமிருந்து பெற்ற இணக்கத்திற்குத் தக்கவாறு 10 விவசாயப் பண்ணைச் சங்கங்களை அமைப்பதற்கு உத்தேசிக்கப்பட்டது.

### மூன்றாவது திட்டத்தின் முதன்மையான சாதனைகள்

(i) **பொது முன்னேற்றம்:** இந்தத் திட்டக்காலத்தில், எல்லாவகைக் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில் ஓர் அதிகரிப்பு இருந்தது. 1964 — 65ஆம் ஆண்டு இறுதியில், சங்கங்களின் மொத்த எண்ணிக்கை 3.5 இலட்சத்திற்கும், பிரதம சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 482 இலட்சத்திற்கும், பங்கு மூலதனம் ரூபாய் 441 கோடிக்கும், நடைமுறை மூலதனம் ரூபாய் 2,435 கோடிக்கும் உயர்ந்திருந்தன.

(ii) **விவசாயக் கடன்:** விவசாயக் கடன் துறையில், மூன்றாவது திட்டக் காலத்தில் பெற்ற முன்னேற்றம் பின்னர்க் காட்டப்பட்டிருக்கிறது.

| | மூன்றாவது திட்ட ஆரம்பத்தில் | மூன்றாவது திட்ட இறுதியில் (ஜுன், 1966) |
|---|---|---|
| 1. பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் எண்ணிக்கை | 2.12 இலட்சம் | 1.97 இலட்சம் |

(சங்கங்கள் எண்ணிக்கையில் வீழ்ச்சியானது, பிரதானமாகத் தன்னிறைவுள்ள அமைப்புகளை நிறுவும் நோக்கத்துடன் சிறிய சங்கங்களை இணைப்புச் செய்ததன் காரணமாக ஏற்பட்டது.)

| | | |
|---|---|---|
| 2. பரப்புக்குட்பட்ட கிராமங்கள் சதவிகிதம் | 75 சதவிகிதம் | 90 சதவிகிதம் |
| 3. உறுப்பினர் எண்ணிக்கை | 170.41 இலட்சம் | 270.03 இலட்சம் |
| 4. (அ) பரப்புக்குட்பட்ட கிராம மக்கள் தொகை சதவிகிதம் | 24 சதவிகிதம் | 33 சதவிகிதம் |
| (ஆ) பரப்புக்குட்பட்ட விவசாயிகளின் மதிப்பீடு செய்யப்பட்ட சதவிகிதம் | 30 சதவிகிதம் | 45 சதவிகிதம் |
| 5. மொத்தப் பங்கு மூலதனம் | 57.75 கோடி | 118.44 கோடி |
| 6. வசமுள்ள வைப்புகள் | 14.59 கோடி | 39.45 கோடி |
| 7. மொத்த நடைமுறை மூலதனம் | 273.92 கோடி | 527.49 கோடி |
| 8. உறுப்பினர்களுக்குப் பட்டுவாடாச் செய்யப்பட்ட குறுகியகாலக் கடன்களும் மத்தியக்காலக் கடன்களும் | 202.75 கோடி | 345.50 கோடி |
| 9. தவணை தவறிய கடன்கள் | 44.30 கோடி | 113.74 கோடி |
| 10. தவணை தவறிய பாக்கிகளின் சதவிகிதம் | 20 சதவிகிதம் | 27 சதவிகிதம் |

மூன்ருவது திட்ட ஆரம்பத்திலிருந்த நிலவரத்திற்கு இந்த நிலவரம் சாதகமாக ஒப்பிடும் வகையில் இருக்கிறது.

அடித்தளத்தில் தன்னிறைவுள்ள அமைப்புகளை ஏற்படுத்தும் நோக்கத்துடன், பலவீனச் சங்கங்களை இணைத்தல்மூலமும், வேலை செய்யாத சங்கங்களைக் கலைத்தல் மூலமும், பிரதம கூட்டுறவுச் சங்கங்களுக்குப் புத்துயிரளிப்புத் திட்டத்தை அமல்படுத்துவதற்கு மூன்ருவது திட்டக் காலத்தில் தீவிர முயற்சிகள் எடுக்கப் பட்டன. நாளடைவில் தன்னிறைவுத் தன்மையைப் பெறக்கூடிய சங்கங்களுக்கு, முழுநேர ஊதியம்பெறும் செயலாளரை அமர்த்துவதற்கு வசதிசெய்யும்பொருட்டு மூன்றிலிருந்து நான்கு ஆண்டுகள் காலத்திற்கு ரூபாய் 1,800 உயர்ந்தபட்ச அளவிற்கு மானிய உதவியும் அரசு அளித்துக்கொண்டு வந்திருக்கிறது. உற்பத்தி நோக்குப் பயிர்க்கடன் முறையைத் (Production Oriented Crop Loan System) தொடங்கி, கடனளிப்பு நடைமுறையை எளிதாக்குவதற்குங்கூட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. நீண்ட காலக் கடன் விஷயத்தில் மூன்ருவது திட்டக் காலத்தில் கூட்டுறவு நிலவள வங்கிகளால் ஒரு பெரிய முன்னேற்றம் அடையப் பட்டது. மூன்ருவது திட்ட இறுதியில் 18 மத்தியக் கூட்டுறவு நில அடைமான வங்கிகளும் 670 பிரதம நில அடைமான வங்கிகளும் இருந்தன; இந்தக் காலத்தில் 200-க்கும் அதிகமான பிரதம நிலவள வங்கிகள் அமைக்கப்பட்டன. 1965—66ஆம் ஆண்டு இறுதியில் இந்த வங்கிகளில் நீண்டகாலக் கடன் நிலுவைகள் ரூபாய் 164.50 கோடியாக இருந்தன. இது 1960 – 61ஆம் ஆண்டில் 37.74 கோடியாக இருந்தது.

**(iii) கூட்டுறவு விற்பனை:** 1965ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் நாட்டில் 3,221 பிரதம விற்பனைச் சங்கங்களிருந்தன. அவை ஏறக்குறைய எல்லா முக்கிய இடைநிலைச் சந்தைகளையும் கவர்ந்திருந்தன. இவற்றுள் 2,321 சங்கத்தில் அரசு பங்காளித்துவம் கொண்டிருந்தது. மூன்ருவது திட்டக்காலத்தில் மட்டுமே 452 கூடுதலான பிரதம விற்பனைச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. இவற்றுள் 2,730 சங்கங்கள் நிலப்பகுதி அடிப்படையிலும் பழவகைகள், காய்கறிகள், பருத்தி, தேங்காய், பாக்கு, புகையிலை முதலியன போன்ற குறிப்பிட்ட பொருள்களில் வர்த்தம் செய்யும் தனிப்பட்ட பொருள்களில் (Specialised Commdoity Societies) வர்த்தகம் செய்யும் 500 சங்கங்களும் இருந்தன. கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் அமைப்பானது, ஒரு தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனத்தையும் 19 மாநில மட்டத்துத் தலைமை விற்பனைச் சங்கங்களையும் கொண்டிருந்தது. சில மாநிலங்

களில் இரண்டு அடுக்கு அமைப்பு இருந்தது. மற்றவைகளில், இடைநிலை அங்காடிப் பீடங்களில் (கேந்திரங்களில்) பிரதம சங்கத்தையும், மாவட்ட மட்டத்தில் மத்திய விற்பனைச் சங்கத்தையும், மாநில மட்டத்தில் தலைமை விற்பனைச் சங்கத்தையுங் கொண்ட மூன்றடுக்கு முறை இருந்தது.

1965ஆம் ஆண்டு இறுதியில், பிரதம கூட்டுறவு விற்பனைச் சங்கங்களில் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 21.42 இலட்சமாக இருந்தது. இதில் 1.29 இலட்சக் கூட்டுறவுச் சங்கங்களும், 19.25 இலட்சத் தனிநபர் பயிரிடுபவர்களும், 0.88 இலட்சப் பெயரளவு உறுப்பினர்களும் அடங்கியிருந்தனர். ஒவ்வொரு சங்கத்தின் சராசரி உறுப்பினர் எண்ணிக்கை நாடு முழுமைக்காகவும் 664ஆக இருந்தது. 1965–66ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் மதிப்பு ரூபாய் 360 கோடியாக இருந்தது; இது 1960–61ஆம் ஆண்டில் ரூபாய் 178.65 கோடியாக இருந்தது. உத்தரப் பிரதேசம், மகாராஷ்டிரம், குசராத்து, மத்தியப் பிரதேசம் ஆகிய நான்கு மாநிலங்கள், கூட்டுறவுச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் மதிப்பில் ஏறக்குறைய 2/3 பங்குக்கு உரியதாக இருந்தன.

1965–66ஆம் ஆண்டில், கூட்டுறவுச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட உணவுத் தானியங்களின் மொத்த மதிப்பு ரூபாய் 137 கோடியாக இருந்தது. இது 1960–61ஆம் ஆண்டில் ரூபாய் 24 கோடியாக இருந்தது. இந்த முன்னேற்றம் மூன்றாவது திட்டக்காலத்தில் இருந்த ஒரு குறிப்பிடத்தக்க அபிவிருத்தியாகும். நாட்டில் மத்திய அரசின் கணக்கிலும், மாநில அரசின் கணக்கிலும் செய்யப்பட்ட 38 இலட்ச டன்கள் உணவுத் தானிய மொத்தக் கொள்முதலில், கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு சுமார் 50 சதவிகிதமென்று மதிப்பீடு செய்யப்பட்டது. மத்தியப் பிரதேசம், மகாராஷ்டிரம், சென்னை, மேற்கு வங்காளம், அசாம் ஆகிய மாநிலங்கள், கூட்டுறவுச் சங்கங்களால் கையாளப்பட்ட உணவுத் தானியங்களில் ஏறக்குறைய 73 சதவிகிதம் அளவுக்குக் காரணமாக இருந்தன. கையாளப்பட்ட உணவுத் தானியங்களில் பெரும்பான்மையான இனங்கள் கோதுமை, நெல், சோளம், பருப்பு வகைகளாக இருந்தன.

கூட்டுறவுச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட வாணிகப் பயிர்களுள் கரும்பு மிக முக்கியப் பொருளாக இருந்தது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் ரூபாய் 147 கோடி மதிப்புள்ள

கரும்பைப் பிழிந்தன. அடுத்தபடியாக வரும் பொருள் பருத்தி. அது, நாடு முழுவதிலும் விற்பனை செய்யப்பட்ட பருத்தியில், 13 சதவிகிதமாக ரூபாய் 25 கோடிக்கு விற்பனை செய்யப்பட்டது. பாக்கு விற்பனை செய்யும் 34 விற்பனைச் சங்கங்கள் சுமார் ரூபாய் 700 இலட்ச மதிப்புள்ள ஓர் அளவைக் கையாண்டன. இது நாட்டில் விற்பனை செய்யத்தக்க உபரிப் பாக்கில் 13 சத விகிதத்திற்குக் காரணமாக இருந்தது. மற்றும், ரூபாய் 8 இலட்சம் மதிப்புள்ள முந்திரியும், ரூபாய் 16 இலட்சம் மதிப்புள்ள ஏலக்காயுங்கூட அதே ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்களால் கையாளப்பட்டன.

மூன்றுவது திட்டக் காலத்தில், கூட்டுறவுச் சங்கங்களின் கடனளிப்பை விற்பனையோடு இணைப்பதற்குப் பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1964 – 65ஆம் ஆண்டு இறுதியிலிருந்த 2.01 இலட்சப் பிரதம விவசாயக் கடன் சங்கங்களுள் 1.25 இலட்சச் சங்கங்கள் விற்பனைச் சங்கங்களுக்கு இணைக்கப்பட்டன. அதாவது ஏறக்குறைய, மொத்தத்தில் 60 சதவிகிதம். அதே ஆண்டில் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும் பதனப்படுத்தும் சங்கங்களும் சேர்ந்து உறுப்பினர்கள் விளைபொருள்கள் விற்பனை மூலம் ரூபாய் 30.28 கோடியளவுக்கு கூட்டுறவுப் பாக்கிகளை வசூல் செய்தன. இது 1961 – 62ஆம் ஆண்டில் ரூபாய் 4.89 கோடியாக இருந்தது.

திட்டக் காலத்தில் குடியானவர்களுக்குக் கடனைப் பெருமளவு பொருள்மூலம் வழங்குவதன்மீது அதிகரித்துவரும் வலியுறுத்தல் இடப்பட்டது. 1965 – 66ஆம் ஆண்டில், கூட்டுறவுச் சங்கங்களால் குடியானவர்களுக்கு வழங்கப்பட்ட இரசாயன உரங்கள், விதைகள், விவசாயக் கருவிகள், பூச்சிகொல்லி மருந்துகள் முதலியன போன்ற விவசாய உற்பத்தித் தேவைகளின் மொத்த மதிப்பு ரூ. 121 கோடியாக இருந்தது. அது 1960 – 61ஆம் ஆண்டில் ரூபாய் 22 கோடியாக மட்டும் இருந்தது.

1965 – 66ஆம் ஆண்டில், கூட்டுறவுச் சங்கங்கள், மாநிலங்களுக்கிடையேயான வர்த்தகத்தை ரூபாய் 799 இலட்ச மதிப்பிற்குக் கையாண்டன. உணவுத் தானியங்கள், பருப்பு வகைகள், உருளைக் கிழங்குகள், எண்ணெய் வித்துகள், பருத்தி, பாக்கு ஆகியவை அவைகளால் கையாளப்பட்ட பிரதானப் பொருள்களாக இருந்தன. தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனமும், மாநில மட்டத்துத் தலைமை விற்பனைச் சங்கங்களில் சிலவும், பருப்பு வகைகள், வாழைப்பழங்கள், வெங்காயம், புகையிலை,

பச்சைப் பட்டாணி, ஆரஞ்சுப் பழங்கள், பருத்தி போன்ற விவசாய விளைபொருள்களை இங்கிலாந்துக்கும், இலங்கைக்கும், குவைத்துக்கும், நைஜீரியாவிற்கும், மொரீசியசுக்கும், சோவியத் நாட்டிற்கும், சிங்கப்பூருக்கும் ஏற்றுமதி செய்தன. 1965 — 66ஆம் ஆண்டில் ஏற்றுமதிகளின் பெறுமானம் ரூபாய் 95.91 இலட்சமாக இருந்தது. அது 1963 — 64ஆம் ஆண்டில் ரூபாய் 59.72 இலட்சமாக இருந்தது. மற்றும், கூட்டுறவுச் சங்கங்கள், குறிப்பிட்ட பொருள்கள் ஏற்றுமதியில் பல்வேறு அமைப்புகளை உதவி செய்தன. 1965—66ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் ரூபாய் 9.19 கோடி மதிப்புள்ள கச்சாச் சர்க்கரையை ஏற்றுமதிக்காக வழங்கின. அந்த ஆண்டு மொத்த ஏற்றுமதி ரூபாய் 11.2 கோடி மதிப்புள்ளதாக இருந்தது. தேயிலைக் கூட்டுறவுச் சங்கங்கள் ரூபாய் 12.16 கோடி மதிப்புள்ள தேயிலையை ஏற்றுமதிக்காக வழங்கின; அதே ஆண்டில் காஃபி பதனப்படுத்தும் சங்கங்கள் ரூபாய் 80 இலட்சம் மதிப்புள்ள காஃபியை ஏற்றுமதிக்காக வழங்கின. வெளிநாட்டு வர்த்தகத்தில் தங்கள் பங்கை அதிகப்படுத்திக் கொள்வதற்குக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வசதிசெய்யத் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், பயிர்கள் பதனப்படுத்துதலை மேற்கொள்ளும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு, அவை ஏற்றுமதி வர்த்தகத்தில் ஈடுபடுவதற்கு வாய்ப்பை உடையவையாக இருந்தால், தாராளமான நிதியுதவியை அளிப்பதற்கு நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு திட்டத்தைப் பரிந்துரைத்திருக்கிறது.

**(iv) கூட்டுறவுப் பதனப்படுத்துதல்:** 1965 — 66ஆம் ஆண்டு இறுதியில் 1,524 பதனப்படுத்தும் அமைப்புகள் இருந்தன. அவற்றுள், சுமார் 1,000 அமைப்புகள் விற்பனைச் சங்கங்களுக்குப் பின்சேர்ப்புகளாக நிறுவப்பட்டன. கூட்டுறவுத் துறையில் பதனப்படுத்தும் அமைப்புகள் தனிப்பட்ட சங்கங்களாக அல்லது கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுக்குப் பின்சேர்ப்புகளாக நிறுவப்படுகின்றன. முதற் குறிப்பிட்ட வகுப்பில், சர்க்கரைக் கூட்டுறவு நிறுவனங்கள் சால்வன்ட் எக்ஸ்ட்ரேக்சன் இயந்திர அமைப்புகள், நூற்பாலைகள் முதலியன போன்ற பெரிய அமைப்புகள் வருகின்றன. இரண்டாவது வகுப்பில், அநேகமாக அரிசி ஆலைகள், எண்ணெய் ஆலைகள், பருத்திச் சுத்திகரிப்பு அழுத்தப் பொறியமைப்புகள் போன்றவை வருகின்றன. 1961 — 62ஆம் ஆண்டில், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் எண்ணிக்கை 57-லிருந்து, 1967ஆம் ஆண்டுச் சனவரியில் 76-க்கு அதிகரித்தது. கூட்டுறவுத் துறையில் சர்க்கரை உற்பத்தி 1967ஆம் ஆண்டுச் சனவரியில் 9.43 இலட்ச டன்களாக இருந்தது. இது தேசிய உற்பத்தியில் சுமார் 26.9 சதவிகிதமாக இருந்தது. இது

1961 – 62ஆம் ஆண்டில் 17.05 சதவிகிதமாக மட்டுமே இருந்தது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், கரும்பிலிருந்து சர்க்கரை உற்பத்தியில் மிக உயர்ந்த அனைத்திந்தியச் சதவிகிதப் பதிவைப் பாதுகாத்து வந்தது. அதாவது, 9.70 சதவிகிதத் தேசியச் சராசரிக்கெதிராக 12.19 சதவிகிதம் நாட்டில் ஏற்றுமதிக்காகச் சர்க்கரை மொத்த உற்பத்தியில் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு, 1965–66ஆம் ஆண்டுப் பருவத்தில் 25 சதவிகிதத்திற்கு இருந்தது.

மூன்றாவது திட்டத்தில் (கூட்டுறவுச் சர்க்கரையாலைகளைத் தவிர்த்து) பல்வேறு வகையான 514 பதனப்படுத்தும் அமைப்புகள் இரண்டாவது திட்டத்தில் உதவப்பட்ட 464 அமைப்புகளன்னியில் அரசால் உதவியளிக்கப்பட்டன. 1966ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 355 அரிசி ஆலைகள், அரிசி உமிதவிர் ஆலைகள் உதவியளிக்கப்பட்டன. அவற்றுள் 198 அமர்த்தப்பட்டன. தவிரவும், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், பெரும்பான்மையாக நெல் பயிரிடும் ஏறக்குறைய எல்லா மாநிலங்களிலும் 463 அரிசி ஆலைகளை அமைப்பதற்கு உதவியளித்தது. அவற்றுள், 126 அமைப்புகள் ஏற்கெனவே அமர்த்தப்பட்டிருந்தன. தீவிர விவசாய வளர்ச்சித் திட்ட மாவட்டங்களில் (Intensive Agricultural Development Programme Districts)) பரிசோதனை அடிப்படையில் அமைக்கப்பட்ட நவீன அரிசி ஆலைகளுள் 6 அமைப்புகள் கூட்டுறவுத் துறையிலிருந்தன.

1965–66ஆம் ஆண்டில், 210 பருத்திச் சுத்திகரிப்பு அழுத்தப்பொறி அமைப்புகள் உதவி செய்யப்பட்டன. 1961–62ஆம் ஆண்டில், அத்தகைய அமைப்புகள் 128 ஆக மட்டுமே இருந்தன. 1964–65ஆம் ஆண்டில், 192 பருத்திச் சுத்திகரிப்பு ஆலைகளும், 64 பருத்தி அழுத்தப்பொறி அமைப்புகளும் செயற்பட்டிருந்தன. அவைகள் 26.61 இலட்சக் குவின்டால் கச்சாப் பருத்தியைச் சுத்திகரிப்புச் செய்தும், 5.85 இலட்சக் கட்டுகளை அழுத்தம் செய்தும் சுத்திகரிப்புச் செய்யப்பட்டு அழுத்தம் செய்யப்பட்ட ரூ. 88 கோடி மதிப்புள்ள பருத்தியை விற்பனை செய்துமிருந்தன. பருத்திச் சாகுபடி செய்பவர்களின் 25 கூட்டுறவு நூற்பாலைகளுக்கு உரிமங்கள் வழங்கப்பட்டிருந்தன. அவற்றுள் 15 மகாராஷ்டிரத்திலும், 5 குசராத்திலும், 4 மைசூரிலும், 1 மத்தியப் பிரதேசத்திலும் இருந்தன. அவை, 4.51 இலட்சக் கதிர்களைக் கொண்டிருந்தன.

1966 – 67ஆம் ஆண்டு இறுதி வரைக்கும், 198 எண்ணெய் ஆலைகளும், 59 நிலக்கடலையை உடைக்கும் அமைப்புகளும் உதவி செய்யப்பட்டிருந்தன. 1965ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 144

எண்ணெய் ஆலைகள் எண்ணெய் தயாரித்திருந்தன. தவிரவும், கூட்டுறவுத் துறையில் 4 சால்வன்ட் எக்ஸ்டிராக்ஷன் (Solvent Extraction) அமைப்புகளுமிருந்தன.

1966ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வரை பழவகைகள், காய்கறி வகைகள் பதனப்படுத்தும் 30 கூட்டுறவு அமைப்புகளுக்கு உதவியளிக்கப்பட்டிருந்தன. அவற்றுள் 13 அமைப்புகள், தினசரி 230 குவின்டால்களான ஓர் அமர்த்தப்பட்ட சக்தியுடன் செயற்பட்டிருந்தன. 1965 – 66ஆம் ஆண்டில் இந்த அமைப்புகளால் 34.100 குவின்டால் காய்கறிகள் பதனப்படுத்தப்பட்டன. தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம், பெரிய அளவுப் பல பழவகை, காய்கறிவகை பதனப்படுத்தும் அமைப்பு (Multi Fruit and Vegetable Processing Unit) ஒன்றை டில்லி நகரத்திற்கு அருகில் அமர்த்துவதற்குத் திட்டமிட்டது.

**(v) கூட்டுறவு விவசாயப் பண்ணைத் தொழில்:** மூன்றாவது திட்டக்கால இறுதியில், முன்னோடித் திட்ட நிலப்பகுதிகளில் 2749 கூட்டுறவு விவசாயப் பண்ணைச் சங்கங்களிருந்தன. அவை 57,364 உறுப்பினர்களைக் கொண்டும், 2.77 இலட்ச ஏக்கர்களைக் கொண்ட ஒரு நிலப்பகுதியை தழுவியு மிருந்தன. தவிரவும், முன்னோடித் திட்டமல்லாத நிலப்பகுதியில் 2,752 சங்கங்களிருந்தன. அவை 61,471 உறுப்பினர்களைக் கொண்டும், 3.06 இலட்ச ஏக்கர்களைக் கொண்ட ஒரு நிலப்பகுதியைத் தழுவியும் இருந்தன. சராசரியில் முன்னோடித் திட்ட நிலப்பகுதியிலுள்ள சங்கம் 20 உறுப்பினர்களைக் கொண்டும், 100 ஏக்கர் நிலத்தைக் கொண்டும் இயங்கியிருந்தன. மற்ற நிலப் பகுதிகளில் சங்கங்கள் 22 அங்கத்தினர்களையும், 110 ஏக்கர் நிலத்தையுங் கொண்டிருந்தன. கூட்டுறவு விவசாயப் பண்ணைத் தொழில் செயல் திட்டத்தை மதிப்பீடு செய்வதற்கு டாக்டர் டி. ஆர். கேட்கில் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட கட்டளைக் குழு (Committee of Direction), 1965ஆம் ஆண்டுச் செப்டம்பர் மாதத்தில் வெளியிட்ட தன் அறிக்கையில் முன்னோடித் திட்டங்களின் விளைவாக, 'சில நிலப்பகுதிகள் அல்லது வளர்ச்சியடையத்தக்க நிலப்பகுதிகள் கூட்டம்' அபிவிருத்தியடைந்திருக்கின்றன. இந்த நிலப்பகுதிகளில் அமல்படுத்தப்பட்ட செயல்திட்டம் உற்பத்தியைப் பெருக்கும் செய்வதற்கான தன் சக்தியைச் செயல்விளக்கம் செய்திருந்தது. மற்றும், வருங்கால வளர்ச்சிக்கான சாத்தியச் சக்தியையும் அது ஏற்படுத்தியது. மற்ற நிலப்பகுதிகளில் இந்தச் செயல்திட்டம் இன்னும் வளர்ச்சியடைய வேண்டியிருந்தது.

**(vi) தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்:** 1961 – 65ஆம் ஆண்டுக் காலத்தில், தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு நிலையான முன்னேற்றத்தை அடைந்தன என்பது கீழ்க்காணும் அட்டவணையிலிருந்து தெளிவு:

| விவரங்கள் | தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் முன்னேற்றம் | |
|---|---|---|
| | 1960–61 | 1964–65 |
| சங்கங்களின் எண்ணிக்கை | 33,256 | 44,665 |
| உறுப்பினர்களின் எண்ணிக்கை (இலட்சக் கணக்கில்) | 25.57 | 28.71 |
| நடைமுறை மூலதனம் (ரூபாய் கோடிக் கணக்கில்) | 53.89 | 103.33 |
| செலுத்தப்பட்ட பங்குமூலதனம் (ரூபாய் கோடிக் கணக்கில்) | 13.96 | 27.92 |
| வாங்கிய கடன்கள் (ரூபாய் கோடிக் கணக்கில்) | 32.46 | 53.11 |
| விற்பனைகள் (ரூபாய் கோடிக் கணக்கில்) | 69.86 | 123.87 |

நான்காண்டுகளைக் கொண்ட குறுகிய காலத்தில், எல்லா வகையான தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 1961ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 33,256-லிருந்து, 1965ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 44,665-க்கு அதிகரித்தது. உறுப்பினர்கள் எண்ணிக்கையிலும், 3 இலட்சத்திற்கும் அதிகமான ஓர் அதிகரிப்பு இருந்தது. இக் காலத்தில் அவற்றின் மொத்த நடைமுறை மூலதனமும், செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும் மாநில அரசுகளால் பங்கு மூலதன வடிவத்தில் அளிக்கப்பட்ட நிதியுதவியின் காரணமாக இரட்டிப்படைந்தன. வாங்கிய கடன்கள் 60 சதவிகித அளவிற்கும், விற்பனை 77 சதவிகித அளவிற்கும் அதிகரித்தன. சங்கத்தால் வாங்கப்பட்ட கடன் ஒவ்வொன்றிற்கும் ரூபாய் 15, மொத்த விற்பனை ரூ. 19ஆக இருந்தது.

1966ஆம் ஆண்டு இறுதியிலிருந்த 44,665 தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில், 13,221 கைத்தறி நெசவாளர்கள் சங்கங்களும், 57 கூட்டுறவு நூற்பாலைகளும், 39 கூட்டுறவுத் தொழிற்பேட்டைகளும், 29 தொழிற் கூட்டுறவு வங்கிகளுமிருந்தன. மற்றுமிருந்த 31,295 சங்கங்களுள், பிரதான சங்கங்கள் 16 முக்கியத் துறைகளைச் சேர்ந்திருந்தன. அதாவது, தோலுரித்தலும் பதனப்படுத்துதலும், கோழிப்பண்ணை, நெல் தானியங்கள் கைக்குற்றல், எண்ணெய் பிழிதல், பனைவெல்லம் உற்பத்தி, கரும்புச் சர்க்கரையும் கண்டசாரிச் சர்க்கரையும், பழவகைகள், காய்கறிவகைகள் பதனப்படுத்தித் தகர அடைப்புகளில் அடைத்தல், பொது இயந்திரத் தொழில், கைத்தொழில்கள், இரசாயன இயந்திரத்தொழில், தோல் பொருள்கள், கட்டடச் சாமான்கள், பட்டுநூல் உற்பத்தி, நூற்பாளர்கள் சங்கங்கள், நார்க் கயிறு செய்தல் மற்றும் இதரக் கிராமத் தொழில்கள்.

தொழிற் கூட்டுறவுச் சங்கங்களிடையே நெசவாளர்கள் சங்கங்கள் (29.61 சதவிகிதம்) மிக அதிகமானவையாகத் தொடர்ந்திருந்தன. 1960–61ஆம் ஆண்டில், 11,947 எண்ணிக்கையிலிருந்த இச் சங்கங்கள் 1964 – 65ஆம் ஆண்டில் 13,221 எண்ணிக்கைக்கு அதிகரித்தன. 1960 – 61ஆம் ஆண்டில் 37 எண்ணிக்கையிலிருந்த நூற்பாலைகள் 1964 – 65ஆம் ஆண்டில் 57-க்கு அதிகரித்தன.

1966ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் தேசியச் சம்மேளனம் (National Federation of Industrial Co-operatives) பதிவு செய்யப்பட்டது. தொழில்துறையில் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்கு உதவி செய்வதற்கும், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் உபயோகத்திற்காகக் கச்சாப் பொருள்களையும், இயந்திரப் பகுதிகளையும், தளவாடங்களையும் கொள்முதல் செய்தல், சேமித்து வைத்தல், விற்பனை செய்தல் முதலிய பணிகளைப் புரிவதற்கும், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் உற்பத்திப் பொருள்கள் விற்பனையை மேற்கொள்வதற்கும் இந்த நிறுவனம் பதிவு செய்யப்பட்டது. 25 மாநிலச் சம்மேளனங்களும் மையச் சம்மேளனங்களும் அதில் சேர்ந்திருந்தன.

**(vii) கதர் மற்றும் கிராமத் தொழில் துறை:** கதர்க் கிராமத் தொழில்கள் நாட்டில் மிக அதிகமானவையாகவும், மிகப் பரந்துள்ளவையாகவுமான தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் கிளைப் பின்னலமைப்பாக இடம் பெற்றிருந்தன. 1966ஆம்

ஆண்டு மார்ச்சு மாதத்தில் 1,300 கதர்க் கூட்டுறவுச் சங்கங்களும், 18,071 கிராமத் தொழிற் சங்கங்களும் இருந்தன. அவற்றுள் 78 கதர்க் கூட்டுறவுச் சங்கங்களும் 683 கிராமத் தொழிற் சங்கங்களும் 1965—66ஆம் ஆண்டில் பதிவு செய்யப்பட்டன. கதரைத் தவிரவும் கதர்க் கிராமத் தொழில்கள் ஆணைக்குழு 21 கிராமத் தொழில்களுக்குப் பொறுப்பு வகித்தது. எண்ணெய் விதை பிழிதலும், தானிய வகைகளையும், பருப்பு வகைகளையும் பதனப்படுத்துதலும், முக்கியக் கிராமத் தொழில்களாக இருந்தன. கதர் மற்றும் கிராமத் தொழில் ஆணைக்குழுவின்கீழ் இருக்கின்ற இக் கூட்டுறவுச் சங்கங்களால், கிராமத் தொழில்களின் உற்பத்தியில் ஏறக்குறைய 80, 85 சதவிகிதம் சாதிக்கப்பட்டிருந்தது. இக் கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் பொருளாதார நிதி பற்றிய செயலில் பாராட்டக்கூடிய சாதனைகளைப் புரிந்துள்ளன. உதாரணமாக, இந்தத் தொழில்களின் உற்பத்தியால் சேர்க்கப்பட்ட மதிப்பு, பாராட்டக்கூடிய அளவிற்கு உயர்ந்திருந்தது. இத் தொழில்களின் உற்பத்தியினால் சேர்க்கப்பட்ட தலா மதிப்பு இரண்டாவது திட்டத்தில் ரூபாய் 658-லிருந்து ரூபாய் 1202-க்கு மூன்றாவது திட்டத்தில் அபிவிருத்தியடைந்தது. தலா கூலிகள் இரண்டாவது திட்டத்தில் ரூபாய் 411-லிருந்து மூன்றாவது திட்டத்தில் ரூ. 729-க்கு உயர்ந்தது.

**(viii) நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள்:** மூன்றாவது திட்ட ஆரம்பத்திலிருந்தே, நடப்பிலிருந்த பிரதம பண்டசாலைகளில் சிலவற்றிற்குப் புத்துயிரளிப்பதற்கும், நகர்ப்புறங்களில் புதிய பண்டசாலைகளை நிறுவுவதற்கும் ஒரு திட்டம் தொடங்கப்பட்டது. அந்தத் திட்டம், திட்டக் காலத்தில், நாட்டில் நிதியுதவி ஏற்பாட்டுடன் 2,200 பிரதம பண்டசாலைகளுக்குப் புத்துயிரளித்துப் புதியதாகப் பண்டசாலைகளை அமைப்பதையும், ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு தலைமை மொத்த விற்பனைப் பண்டசாலையை அமைப்பதையும் எதிர்நோக்கியது. இதரவகைக் கூட்டுறவுச் சங்கங்களின் போட்டியான உரிமைக் கோரிக்கைகள் காரணமாக, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்கான இந்தப் புதிய திட்டம், அவசியமான கவனத்தைப் பெறவில்லை. ஆகையால், முன்னேற்றம் மெதுவாக இருந்தது. 1961 — 62ஆம் ஆண்டிலிருந்து, 1964 – 65ஆம் ஆண்டு வரையிலுள்ள காலத்தில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களால் அடையப்பட்ட முன்னேற்றம் கீழே எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

| விவரம் | 1961-62 | 1964-65 |
|---|---|---|
| பிரதம பண்டசாலைகளின் எண்ணிக்கை | 7,266 | 12,352 |
| உறுப்பினர் எண்ணிக்கை (இலட்சக் கணக்கில்) | 13.95 | 26.59 |
| சொந்த நிதிகள் (இலட்சக் கணக்கில்) | 637.38 | 951.34 |
| விற்பனை (ரூபாய் இலட்சக் கணக்கில்) | 3539.85 | 11,812.05 |
| இலாபம் (ரூபாய் இலட்சக்கணக்கில்) | 69.99 | 162.09 |
| நட்டம் (ரூபாய் இலட்சக்கணக்கில்) | 38.71 | 66.76 |

1965ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில், 222 மொத்த விற்பனை நுகர்வோர் பண்டசாலைகளும், 12,252 பிரதம பண்டசாலைகளும், இருந்தன. அவை 26.09 இலட்ச எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களையும் ரூபாய் 5.34 கோடி மொத்தச் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையுங் கொண்டிருந்தன. 1964 – 65ஆம் ஆண்டில் அவைகளின் கொள்முதலும் விற்பனையும் முறையே ரூ. 91.75 கோடிக்கும், ரூபாய் 118.12 கோடிக்கும் இருந்தன. இவை 1963 – 64ஆம் ஆண்டில் ரூபாய் 56.33கோடியாகவும் ரூ. 60.05 கோடியாக மட்டுமே இருந்தன.

1962ஆம் ஆண்டில் சீனப் படையெடுப்பை யடுத்து, நுகர்வோர் பொருள்களை நியாயவிலையில் நேர்மையாக விநியோகித்தலை உதவும் நோக்கத்துடன் இந்திய அரசு அநேக திட்டங்களை ஆதரித்தது. அவையாவன: (i) முக்கிய நகரப் பகுதிகளில் பொதுமக்களிடையே நுகர்வோர்கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவதற்கான, மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட ஒரு திட்டம். (ii) தொழில்துறைத் தொழிலாளிகளிடையே நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கான ஒரு திட்டம். (iii) மத்திய அரசு பணியாளர்களிடையே நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கான ஒரு திட்டம். (iv) கிராம மக்களுக்கு அத்தியாவசியப் பொருள்களை வழங்குவதற்கான ஒரு திட்டம்.

50,000-க்கு மேற்பட்ட மக்கள்தொகையைக் கொண்ட எல்லா மாநகரங்களிலும், நகரங்களிலும் நுகர்வோர் பண்ட சாலைகளை அமைப்பதற்கான மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டம் 1962ஆம் ஆண்டு டிசம்பரில் அமல்படுத்த ஆரம்பிக்கப் பட்டது. 1,936 கிளைகளையும் 5,933 இணைக்கப்பட்ட பிரதம சங்கங்களையும் உறுப்பினர்களாகக் கொண்ட 252 மொத்த விற்பனைப் பண்டசாலைகள், இந்தத் திட்டத்தின்கீழ், 50,000-க்கு மேற்பட்ட மக்கள்தொகையைக் கொண்ட ஏறக்குறைய 250 மாநகரங்களிலும், நகரங்களிலும் அமைக்கப்பட்டன. 12 மாநில மொத்த விற்பனைப் பண்டசாலைகள் கூட்டமைப்பும், தேசியக் கூட்டமைப்பும்கூட நிறுவப்பட்டன. 1965—66ஆம் ஆண்டில், மொத்த விற்பனைப் பண்டசாலைகளின் மொத்தவிற்பனை ரூ. 143·52 கோடிக்கு இருந்தது; இது 1964—65ஆம் ஆண்டில் ரூ. 93 கோடியாக இருந்தது. 1965—66ஆம் ஆண்டில் சராசரி மாத விற்பனை ரூபாய் 11·96 இலட்சத்திற்கு இருந்தது; அது, 1964—65ஆம் ஆண்டில் ரூ. 7·75 இலட்சமாக இருந்தது.

தனியார் துறை, பொதுத் துறை, தொழில் நிறுவனங்களி லுள்ள தொழிலாளர்களுக்கான நுகர்வோர் பண்டசாலைகளின் கிளைகளின் மொத்த எண்ணிக்கை 1965—66ஆம் ஆண்டில் 1,675ஆக இருந்தது. தவிரவும், 11 மொத்த விற்பனைப் பண்டசாலைகள், சுரங்கத் தொழிலாளர்களிடையே, சுரங்கத் தொழிலாளர்கள் நிவாரண நிதியிலிருந்து பெற்ற நிதியுதவியுடன் நிறுவப்பட்டன. அலுவலக இடம், கூலி/சம்பளப் பட்டியலி லிருந்து கழித்துக்கொள்ளும் வசதியைக்கொண்ட கடன் விற்பனை யும், தொழிலாளர் வர்க்க ஒற்றுமையும் போன்ற சில சிறப்பான அம்சங்கள் இச் சங்கங்களின் முன்னேற்றத்திற்கு உதவியிருந்தன.

மூன்றாவது திட்ட இறுதியில், 345 நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள், இரயில்வே ஊழியர்களிடையே இயங்கியிருந்தன. 1965—66ஆம் ஆண்டில், இந்தப் பண்டசாலைகள் சுமார் ரூ. 4 கோடி மொத்த விற்பனையைக் கொண்டிருந்தன.

மத்திய அரசு ஊழியர்களின் ஒரு பண்டசாலை, டெல்லியில் அமைக்கப்பட்டது. அது, 22 கிளைகளுடனும் 42,000 உறுப்பினர் களுடனும் செயற்பட்டிருந்தது. 1965—66ஆம் ஆண்டில், அதன் மொத்த விற்பனை 1·37 கோடி ரூபாயாக இருந்தது. பல்வேறு மாநில அரசுகள், தங்கள் ஊழியர்களிடையே தங்கள் சொந்த நிதி ஆதாரங்களிலிருந்து அளிக்கப்பட்ட நிதியுதவியுடன் நுகர்வோர் பண்டசாலைகளையமைப்பதற்கான திட்டங்களைத் தொடங்கின.

கிராமப்புறங்களில் விற்பனைச் சங்கங்கள்மூலமும், சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமும் நுகர்வோர் பொருள்கள் விநியோகத்திற்கான மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டம் 1963–64ஆம் ஆண்டில் இந்திய அரசால் ஒப்பளிக்கப்பட்டது. இந்தத் திட்டத்தின்கீழ், நல்ல முன்னேற்றம் அடையப்பட்டது. கூட்டுறவுச் சங்கங்களால் விநியோகிக்கப்பட்ட நுகர்வோர் பொருள்களின் மதிப்பு, 1962–63ஆம் ஆண்டில், சுமார் 28 கோடி ரூபாயிலிருந்து 1964–65ஆம் ஆண்டில் 102 கோடி ரூபாய்க்கு அதிகரித்தது.

நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் துறையில், ஒரு முக்கியமான குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலுமுள்ள கூட்டுறவுப்பண்டசாலைகளின் வளர்ச்சியாகும். நாட்டில் சுமார் 1,000 எண்ணிக்கை கொண்ட அத்தகைய பண்டசாலைகளிருந்தன. அவற்றுள் 50 சதவிகிதத்திற்கு மேற்பட்ட சங்கங்கள் சென்னையிலும், கேரளாவிலும் இருக்கின்றன.

**(ix) கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள்:** கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள், மூன்றாவது திட்டக் காலத்தில் அடைந்திருந்த முன்னேற்றம் கீழே எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது:

| சங்கங்கள் (1) | | 1960–61 (2) | 1964–65 (3) |
|---|---|---|---|
| **(அ) மைய வீட்டுவசதிச் சங்கங்கள்** | | | |
| 1. | எண்ணிக்கை .. | 7 | 12 |
| 2. | உறுப்பினர் எண்ணிக்கை .. | 1,693 | 4,833 |
| 3. | பங்கு மூலதனமும், காப்பு | (ரூபாய் இலட்சத்தில்) | |
| | நிதிகளும் .. | 65·52 | 268·45 |
| 4. | வாங்கிய கடன்கள் .. | 360.30 | 2,049·04 |
| 5. | கடன் நிலுவைகள் .. | 347·26 | 2,312·08 |
| **(ஆ) பிரதம வீட்டுவசதிச் சங்கங்கள்** | | | |
| 1. | எண்ணிக்கை .. | 6,451 | 10,975 |
| 2. | உறுப்பினர்களின் எண்ணிக்கை .. | 379 | 697 |

| சங்கங்கள் (1) | | 1960-61 (2) | 1964-65 (3) |
|---|---|---|---|
| | | | (ரூபாய் இலட்சத்தில்) |
| 3. | பங்கு மூலதனமும் காப்பு நிதிகளும் .. | 1,225 | 2,439·14 |
| 4. | வாங்கிய கடன்கள் .. | 4,132 | 8,355 |
| 5. | கடன்கள் .. | 1,740 | 2,962 |

1964–65ஆம் ஆண்டில், மையச் சங்கங்கள் மைசூரில் மட்டுமே 154 வீடுகளைக் கட்டின. பிரதம சங்கங்கள், 27,874 தனிப்பட்ட வீடுகளையும் 1,365 குடியிருப்புகளையும் கட்டி, ரூபாய் 759 இலட்சத்திற்குக் கடன்கள் அளித்தன. இந்திய அரசு, 1952ஆம் ஆண்டில் மானியம் வழங்கப்பட்ட தொழில்துறை வீட்டுவசதித் திட்டத்தையும், 1954ஆம் ஆண்டில் குறைந்த வருவாய்ப் பிரிவினர் வீட்டுவசதித் திட்டத்தையும், 1959ஆம் ஆண்டில் நடுத்தர வருவாய்ப் பிரிவினர் வீட்டுவசதித் திட்டத்தையும் தொடக்கம் செய்தது. இந்தத் திட்டங்களின்கீழ், ஏறக்குறைய 17 கோடி ரூபாய்க்கு நிதியுதவியுடன் சுமார், 27,000 வீடுகளைக் கட்டுவதற்கு ஒப்பளிக்கப்பட்டிருந்தது.

வீட்டுவசதித் திட்டங்களின் மொத்த முன்னேற்றத்தில், கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்களின் பங்கு, மொத்த வீடுகட்டுதலில் சுமார் 10 சதவிகிதமும், மொத்தச் செலவில் சுமார் 13 சதவிகிதமும் இருந்தது. இந்திய அரசால் அமைக்கப்பட்ட கூட்டுறவு வீட்டுவசதி பற்றிய ஆராய்ச்சிக் குழு ((Study Group on Co-operative Housing), 1964ஆம் ஆண்டுச் சனவரியில் வெளியிட்ட தன் அறிக்கையில், வீட்டு வசதிக்கான மொத்த ஒதுக்கீட்டில் 20 சதவிகிதம் இயல்பாகவே கூட்டுறவுத் துறைக்காக ஒதுக்கப்படவேண்டுமென்று யோசனை கூறியிருந்தது. கூட்டுறவு வீட்டுவசதி அதிக முன்னேற்றத்தையடைந்திருந்த சென்னை, குசராத், மகாராஷ்டிரம் போன்ற மாநிலங்களில் ஒதுக்கீடு செய்யப்படவேண்டிய சதவிகிதம் 40 வரை இருக்கவேண்டும் என்றும் யோசனை கூறியிருந்தது.

**(x) தொழில் ஒப்பந்தம், கட்டுதல் சங்கங்கள்:** தொழில் ஒப்பந்தம், கட்டுதல் சங்கங்களின் எண்ணிக்கை 1959–60ஆம் ஆண்டிறுதியில் 2,000-லிருந்து 1964–65ஆம் ஆண்டிறுதியில் 4,385-க்கு அதிகரித்தது. இச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 1964–65ஆம் ஆண்டில் 2·79 இலட்சமாக இருந்தது.

இச் சங்கங்களால் 1965—66ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட வேலைகளின் மதிப்புச் சுமார் ரூ. 8·5 கோடியாக மதிப்பீடு செய்யப் பட்டது. இது 1964—65ஆம் ஆண்டில் ரூபாய் 7·85 கோடியாக இருந்தது.

**(xi) வனத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள்:** 1964—65ஆம் ஆண்டில் 1,12,242 உறுப்பினர்களையும் 32·90 இலட்ச ரூபாய்ப் பங்கு மூலதனத்தையுங்கொண்ட 1,143 வனத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களிருந்தன. இச் சங்கங்களின் நடைமுறை மூலதனம் ரூபாய் 176·38 இலட்சமாக இருந்தது. அது 1963—64ஆம் ஆண்டில் ரூபாய் 162.57 இலட்சமாக இருந்தது. 1964—65ஆம் ஆண்டில் இந்தச் சங்கங்களால் நிறைவேற்றப்பட்ட வேலைகளின் மதிப்பு ரூபாய் 396·26 இலட்ச மாக விருந்தது.

**(xii) மோட்டார் வாகனப் போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்கள்:** 1960—61ஆம் ஆண்டில் 788 போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்கள் மட்டுமே யிருந்தன. 1964—65ஆம் ஆண்டிறுதியில் 919 போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்களிருந் தன. அவைகள் சுமார், 50,000 உறுப்பினர்களையும், 7 கோடி ரூபாய் நடைமுறை மூலதனத்தையுங் கொண்டிருந்தன. சுமார் 700 சங்கங்கள் 4 கோடி ரூபாய் மொத்த வருவாயுடன் செயற் பட்டிருந்தன.

**(xiii) ரிக்ஷா** (Rickshaw) **இழுப்பவர்கள் சங்கங்கள்:** 1960—61ஆம் ஆண்டில் 2,190 மொத்த உறுப்பினர்களுடனும், 94,000 ரூபாய் பங்கு மூலதனத்துடனும், 4·71 இலட்ச ரூபாய் நடைமுறை மூலதனத்துடனும், 45 ரிக்ஷா இழுப்பவர்கள் கூட் டுறவுச் சங்கங்களிருந்தன. 1965ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் சங்கங்களின் எண்ணிக்கை 131-க்கு அதிகரித்தது. இச் சங்கங் களின் ரிக்ஷாக்களின் எண்ணிக்கை 1960—61ஆம் ஆண்டில் 547-லிருந்து 1964—65ஆம் ஆண்டில் 2,210-க்கு அதிகரித்தது.

**(xiv) மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள்:** 1963ஆம் ஆண்டில், 2·8 இலட்சம் உறுப்பினர்களைக் கொண்ட 2,729 சங்கங்களிருந்தன. 1965ஆம் ஆண்டில், இச் சங்கங்களின் எண்ணிக்கை 3,205-க்கும், உறுப்பினர்கள் தொகை 3 இலட்சத் திற்கும், பங்கு மூலதனம் ரூ. 135 இலட்சத்திற்கும், நடைமுறை மூலதனம் ரூபாய் 359 இலட்சத்திற்கும் உயர்ந்தன. இந்தச் சங்கங்கள் அநேகமாக ஆந்திரப்பிரதேசத்திலும், மேற்கு வங்காளத்

திலும், கேரளாவிலும், சென்னையிலுமிருந்தன. மீனவர் சங்கங்களால் செய்யப்பட்ட விற்பனைகளின் மொத்த மதிப்பு 1962–63ஆம் ஆண்டில் ரூபாய் 238 இலட்சத்திலிருந்து 1964–65ஆம் ஆண்டு ரூபாய் 392 இலட்சத்திற்கு அதிகரித்தது.

## நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலம் (1969–74)

கூட்டுறவு, நான்காவது திட்டத்திலுங்கூட ஒரு முக்கியமான வளர்ச்சிச் செயல்திட்டமாக இருக்கிறது. மூன்றாவது திட்டத்தின் செயல்திட்டங்கள், வருடாந்தரத் திட்டங்களை வகுப்பதன்மூலமும் அவற்றை அமல்படுத்துவதன்மூலமும் 1966ஆம் ஆண்டுக்கப்பாலும் 1966 – 69ஆம் ஆண்டுவரையிலும் தொடரப்பட்டன. நான்காவது திட்டக் காலம் 1969ஆம் ஆண்டில் தொடங்கினதாகக் கூறப்படலாம். இந்தத் திட்டக் காலம் 1969ஆம் ஆண்டிலிருந்து 1974ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வரை இருந்த காலமாகும். நான்காவது திட்டத்தில் கூட்டுறவிற்காகச் செய்யப்பட்ட ஒதுக்கீடு அதாவது, ரூபாய் 206 கோடியானது, மூன்றாவது திட்டத்தில் கூட்டுறவின்மீது செய்யப்பட்ட செலவு மதிப்பீட்டிற்கு அதாவது, ரூபாய் 76·77 கோடிக்குச் சுமார் 3 மடங்குகளாக இருந்தது.

இந்தத் திட்டத்திலுள்ள வளர்ச்சி செயல்திட்டங்கள் கீழே எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன.

### (அ) விவசாயக் கடன்

(i) விவசாயக் கூட்டுறவுக் கடனைப் பொறுத்தமட்டில், தன்னிறைவுள்ள சங்கங்களைப் பெற்றிருக்கும்பொருட்டு, பிரதம கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கையைச் சுமார் 2,08,000-லிருந்து 1,28,000 அல்லது அதற்கும் குறைந்த எண்ணிக்கைக்குக் குறைப்பதே நோக்கமாக இருந்தது. மேலும், கூட்டுறவு வங்கிகள், சங்கங்கள் ஆகிய நிறுவனங்களின் செயற்பாட்டுத்திறன் மேம்பாடடைந்து, அவை மேலான வைப்புகளை வசூல் செய்து, தவணை தவறிய பாக்கிகளைக் குறைக்கவேண்டும்.

(ii) மொத்தக் குறுகியகாலக் கூட்டுறவுக் கடனும், மத்தியக் காலக் கூட்டுறவுக் கடனும் நான்காவது திட்டத்தின் இறுதியாண்டில் சுமார் ரூபாய் 650 கோடியாக இருக்குமென்று மதிப்பீடு செய்யப்பட்டது. நீண்டகாலக் கடனைக் குறித்தமட்டில்,

நான்காவது திட்டத்தில் கூட்டுறவு நில அடைமான வங்கிகளால் அளிக்கப்படவேண்டிய புதிய கடன்களின் மதிப்பீடு ரூபாய் 300 கோடியாக இருந்தது. நீண்டகாலக் கடனைக் குறித்த மதிப்பீடு, கூட்டுறவு நில அடைமான வங்கிகளால் வெளியிடப் பட்ட கடனீட்டுப் பத்திரங்களுக்கு, நிறுவன ஆதாரங்களிலிருந்து குறிப்பாக ரிசர்வ் வங்கி, தேசிய வங்கி, ஆயுள் ஈட்டுறுதிக் கழகம் ஆகியவைகளிலிருந்து கிடைக்கும் மேலான, பெருவாரியான ஆதர வின்பேரிலுங்கூடச் சார்ந்திருக்கிறது.

(iii) எதிர்நோக்கப்பட்ட எல்லா வளர்ச்சியுடனுங்கூட, கூட்டுறவுச் சங்கங்கள் நான்காவது திட்டத்தின் விவசாயக் கடன் தேவைகளனைத்தையும் முழுமையாக நிறைவேற்றுவதற்குச் சாத்தியப்படாதாகையால், மாற்றுவழி ஏற்பாடுகள் அவசியப் படும். ஆகையால், கூட்டுறவு இயக்கம் பலவீனமாக இருந்த நிலப்பகுதிகளில் கூட்டுறவுக் கடன் வளர்ச்சியடையும்வரை ஓர் இடைக்கால ஏற்பாடாக 'விவசாயக் கடன் கழகங்கள்' (Agricultural Credit Corporations) நிறுவப்படவேண்டுமென்று கூறப் பட்டது. மேலும், கூட்டுறவுச் சங்கங்கள் பலவீனமாக இருக்கும் நிலப்பகுதிகளில், விவசாயத்திற்காகவும், அல்லது தக்காவிக்காகவு மான அரசு கடன்கள் முறையானது, கூட்டுறவுக் கடன் அபி விருத்திக்கான வாய்ப்புக்கு எவ்வித ஊறும் செய்யாமல் தொடர்ந் திருக்க வேண்டும்.

(iv) இரசாயன உரங்கள், விதைகள், பூச்சிகொல்லிகள், கருவிகள் போன்ற விவசாயத் தேவைகள் வழங்குதலைக் குறித்த வாணிகத்தில்கூட, கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு மிக அதிகமான பங்கைப் பெறுவதற்கு எதிர்பார்க்கப்படுகின்றன. இக் காரியத் திற்காக, அவைகள் பயிற்சி பெற்ற சிப்பந்திகளைக் கொண்டிருக்க வேண்டும். மற்றும், கடனை விற்பனையுடன் இணைப்பதற்கான முயற்சிகளைக் குறிப்பாக விவசாய மேம்பாட்டிற்கான சிறப்புச் செயல்திட்டங்கள் அமல்படுத்தப்பட்டு வரும் நிலப்பகுதிகளில், தீவிரப்படுத்துவதற்கு உத்தேசிக்கப்பட்டது.

**(ஆ) விற்பனை**

கூட்டுறவுச் சங்கங்கள், நான்காவது திட்டத்தின் இறுதிக் குள், சுமார் ரூபாய் 850 கோடி மதிப்புள்ள விவசாய விளைபொருள் களை விற்பனை செய்யவேண்டும் என்பது நோக்கமாக இருந்தது. நாட்டில் ஒவ்வொரு விற்பனைக் கேந்திரத்திலும் ஒரு விற்பனைச் சங்கம் இருக்கும்பொருட்டு, 450 புதிய பிரதம விற்பனைச் சங்கங்களை அமைப்பதற்குக்கூட உத்தேசிக்கப்பட்டது.

### (இ) கூட்டுறவுப் பதனப்படுத்துதல்

கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்களால், சிறப்பாகக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளால், அடையப்பட்ட முன்னேற்றத்தைப் பாராட்டுதலுடன் நான்காவது திட்டம் குறிப்பு செய்தது. பல்வேறு வகையான சுமார் 1,500 பதனப்படுத்தும் அமைப்புகள் நான்காவது திட்டத்தில் நிறுவப்பட வேண்டுமென்று உத்தேசிக்கப்பட்டது. மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட ஒரு புதிய திட்டத்துடன் ஏற்றுமதி நோக்குக்கொண்ட பதனப்படுத்தும் அமைப்புகளையும், நவீன அரிசி ஆலைகளையும், கூட்டுறவுத் துறையில் வளர்ச்சி செய்வதற்கு உத்தேசிக்கப்பட்டன. இந்தத் திட்டங்களோடு மட்டுமல்லாமல், கூட்டுறவுப் பதனப்படுத்தும் தொழிலைப் பரப்புவதற்காக ஒரு மிகத் துணிச்சலான கொள்கையை, நான்காவது திட்டத்தில், முன்பு தனியார் சொந்தத்திலிருந்த அமைப்புகளைக் கூட்டுறவு முறை அடிப்படையில் மேலும் மேலும் சீரமைத்தல் குறித்து, மேற்கொள்ள வேண்டுமென்று உத்தேசிக்கப்பட்டது.

### (ஈ) பொருட் சேமிப்புக் கிடங்கு வசதி

கூட்டுறவு விற்பனைக்காகவும், பதனப்படுத்துதலுக்காகவுமான திட்டத்தின் பகுதியாக மார்க்கெட் கேந்திரங்களில் 1,500 கிடங்குகளைக் கட்டுவதற்கும், கிராமப் பகுதிகளில் 20,000 கிடங்குகளைக் கட்டுவதற்கும் உத்தேசிக்கப்பட்டது. கூட்டுறவுச் சங்கங்களின் கிடங்குகளின் சேமிப்பு வசதிச் சக்தி மூன்றாவது திட்டத்தின் இறுதியில் சுமார் 20,00,000 டன்களிலிருந்து நான்காவது திட்டத்தின் இறுதியில் 40,00,000 டன்களுக்கு அதிகப்படுத்தப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. கூட்டுறவுத் துறையில் சுமார் 100 குளிர் பதனச் சேமிப்பு வசதி இயந்திர அமைப்புகளை அமைப்பதற்குக்கூட ஒரு திட்டம் நான்காவது திட்டத்தில் சேர்க்கப்பட்டது.

### (உ) கூட்டுறவுப் பண்ணைத் தொழில்

இதைக் குறித்து நான்காவது திட்டத்தில் செயல்திட்டமானது டாக்டர் டி. ஆர். காட்கில் (Dr. D. R. Gadgil) அவர்கள் தலைமையில், 1965ஆம் ஆண்டில், கூட்டுறவு விவசாயப் பண்ணைத் தொழில் செயல்திட்டங்களை மதிப்பீடு செய்வதற்கு அமைக்கப்பட்ட கட்டளைக் குழுவின் (Committee of Direction) பரிந்துரைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தது. நான்காவது திட்டத்தின் செயல்திட்டத்தில் இச் சங்கங்களால் ஒரு கூடுதலான 10 இலட்ச ஏக்கர் நிலங்கள் தழுவப்படவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. இந்தச் செயல்திட்டம் சுயேச்சையானதாகவும், பொருளாதாரமற்ற வகைக் குடியானவர்களுக்கும், சிறிய குடி

யானவர்கட்கும் பயன்படக் கூடியதாகவும் தொடர்ந்து வர வேண்டுமென்றிருந்தது. சங்கங்கள், செயல்திட்டத்தின் வெற்றிக்கு வாய்ப்பளிக்கும் நிலப்பகுதிகளில் அமைக்கப்படவேண்டுமென்றும், அவை உறுப்பினர்களிடையே ஒருமைப்பாட்டைப் பெறுவதை நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டுமென்றும், தன்னிறைவுள்ள அமைப்புகளாகச் செயற்படுவதற்காக அவசியமான நிதியாதாரங்களைப் பெற்றிருக்க வேண்டுமென்றும் இருந்தது. பலவீனமானதும், தேக்கநிலையிலுள்ளதும் அழிவுபெறும் நிலையிலுள்ளதுமான சங்கங்களுக்குப் புத்துயிரளிப்பதில் சிறப்புக் கவனம் கொடுக்கப்படவேண்டுமென்றிருந்தது. சுமார் 40 சதவிகித நடப்புச் சங்கங்கள் புத்துயிர் பெறவேண்டியுள்ளன. இந்தச் சங்கங்களுக்கு ஒரு புதிய பாணி உதவியின்கீழ் அதிகப்படுத்தப்பட்ட நிதியுதவி உத்தேசிக்கப்பட்டது.

### (ஊ) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்

இந்தச் சங்கங்கள் நகர மக்கள்தொகையில் 20 சதவிகிதத்தையும், நகர்ப்புறங்களில் அத்தியாவசியப் பொருள்களின் சில்லரை வர்த்தகத்தில் 20 சதவிகிதத்தையும் தழுவுவதற்கான 1962ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டத்தை நான்காவது திட்டக்காலத்து இறுதி வரைக்கும் நீடிக்க உத்தேசிக்கப்பட்டது. இது சம்பந்தமான செயல் திட்டம், 10,000-க்கு மேற்பட்ட மக்கள்தொகையையுடைய நகரங்களை (1337–அத்தகைய நகரங்கள்) உள்ளடக்குவதற்கும்; அத்தகைய நகரங்களையும் 50,000-க்குக் குறையாத மொத்த மக்கள்தொகையையும் கொண்டிருக்கும் மாவட்டங்களில் 100 மாவட்ட மொத்த விற்பனைப் பண்டசாலைகளை நிறுவுவதற்கும்; அத்தகைய நகரங்களிலும் பெரிய நகரங்கள், மாநகரங்களிலும் தழுவப்படாத எல்லைகளிலும் 4,000 பிரதம கூட்டுறவுப் பண்டசாலைகளை அமைப்பதற்கும்; பெரிய நகரங்களிலும், நகரங்களிலும் மொத்த விற்பனைப் பண்டசாலைகளின் கிளைகளாகப் பல பிரிவுப் பண்டசாலைகளை–சிறப்பு அங்காடிகளை (Departmental Stores/Super Markets) நிறுவுவதற்கும்; மாநில நுகர்வோர் சம்மேளனங்களாலும், மாவட்ட மொத்த விற்பனைப் பண்டசாலைகளாலும் பதனப்படுத்துவதற்கும், விற்பனை செய்வதற்குமான அமைப்புகளை ஏற்படுத்துவதற்கும்; நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்தையும் மேற்பார்வையையும் பலப்படுத்துவதற்காகக் கூடுதலான சிப்பந்திகளை அமர்த்துவதற்கும் திட்டத்தை நீடிப்பதற்கு எதிர்நோக்கியது. இந்தத் திட்டத்திற்கு நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது அங்கீகரிக்கப்பட்ட நிதி முதலீடு ரூபாய் 17·17 கோடியாக இருந்தது.

## (ஏ) தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்

தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் துறையில், திரு. பி. பி. படேல் (Mr. B. P. Patel) அவர்கள் தலைமையின்கீழ் மத்திய அரசின் வணிகத் தொழில் துறையால் அமைக்கப்பட்ட தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் பற்றிய இரண்டாவது செயற்குழுவால் (1963) (Second Working Group on Industrial Corporations) செய்யப்பட்ட மதிப்பீடுகளை நோக்கமாகக்கொண்டு, ஒரு துரித மான வளர்ச்சிவீதத்திற்காக நான்காவது திட்டத்தில் முயற்சிகள் செய்யப்படவேண்டும் என்றிருந்தது. அதாவது, 65 இலட்ச உறுப்பினர்களைக்கொண்ட 68,000 சங்கங்கள், இயந்திரமயமாக் கப்பட்ட தொழில்துறையில் சிறிய தொழில் உரிமையாளர்களின் (Small Industrialists) கூட்டுறவுச் சங்கங்களின் தொடர்பாக, குறிப் பாகக் கூட்டுறவுத் தொழிற்பேட்டைகள் உள்படச் சேவைவகைக் கூட்டுறவுத் தொழிற்சங்கங்களின் தொடர்பாக, துரிதப்படுத்தப் பட்ட வளர்ச்சிகூட எதிர்நோக்கப்பட்டது.

## (ஐ) கூட்டுறவும், சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினரும்

மக்களின் வலிவற்ற பகுதியினர்கட்கு உதவி செய்வதற்கான ஒரு கருவியாகக் கூட்டுறவின் முக்கியத்துவத்தைப்பற்றி ஒரு சிறப்புக் குறிப்பு, திட்டத்தில் செய்யப்பட்டிருந்தது. பிரதான வலியுறுத்தல் செய்யப்பட்டிருந்தவை: (அ) வலிவற்ற பகுதியினர்க்குத் திட்டங் களின் நற்பலன்கள் பாய்வதை நிச்சயப்படுத்தும்பொருட்டு, ஒதுக் கப்பட்ட நிதிகளுடன் பொதுவான செயல்திட்டங்களைத் திருப்பம் செய்தல்; (ஆ) பிற்பட்ட வகுப்பினர்களுக்காகத் தனிப்பட்ட செயல்திட்டங்களை வகுத்தல்; (இ) கூட்டுறவு விவசாயப் பண்ணைத் தொழில், வனக் கூட்டுறவுச் சங்கங்கள், தொழிலாளர்கள் வீடு கட்டும் சங்கங்கள் ஆகியவை உள்படத் தனிப்பட்ட செயல் திட்டங்களாகும். வனக் கூட்டுறவுச் சங்கங்கள் விஷயத்தில் குறிக்கோள், காட்டுவளத்தைப் பயன்படுத்தும் வேலையையும், காட்டுச் சிறு உற்பத்திப் பொருள்களைப் பதனப்படுத்துதல், விற்பனை செய்தல் ஆகியவற்றை ஒப்பந்தக்காரர்களிடமிருந்து நாளடைவில் இந்தச் சங்கங்கள் எடுத்துக்கொள்வதையும் நிச்சயப் படுத்துவதாக இருந்தது. தொழிலாளர், வீடுகட்டும் சங்கங்கள் விஷயத்தில், அவைகளைப் பலப்படுத்துவதற்கான திட்டங்களில், பயிற்சிபெறாத வேலைகளைத் தொழில் ஒப்பந்தக் கூட்டுறவுச் சங்கங் களுக்காக, ஒப்ப அறிவிப்புகளைக் கூப்பிடாமல் ஒதுக்கிவைத்தலும், தீவிரமான தொழில்நுட்ப உதவியை அளித்தல் போன்ற அம்சங் களும் உள்ளடங்கியிருந்தன.

**(ஐ) பால் பண்ணையும், கால்நடைப் பராமரிப்பும், கோழிப் பண்ணையும்**

இவற்றைக் குறித்த குறிக்கோள், பால்பண்ணை, கோழிப் பண்ணைத் திட்டங்களுக்காக ஒதுக்கிவைக்கப்பட்ட திட்ட நிதி ஆதாரங்களில், குறைந்தது 75 சதவிகிதம் பயன்படுத்திக் கொள்வதற்கு ஆற்றலுடைய பலமான கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதாக இருந்தது.

**(ஒ) மீன் பண்ணை**

இதைக் குறித்த குறிக்கோள், நான்காவது திட்டக்காலத்தில் உற்பத்தியில் குறைந்தது 50 சதவிகிதம் கூட்டுறவுத் துறையிலிருந்து வரவேண்டும் என்று நிருணயிக்கப்பட்டிருந்தது.

**(ஓ) கூட்டுறவு வளர்ச்சிக்கான திட்டங்கள்**

இத் திட்டங்களின் வெற்றிக்குப் பயிற்சிக்காகவும், கல்விக்காகவும் போதுமான ஏற்பாடுகள் அவசியமாக இருந்தது. நிருவாக விஷயத்தில், கூட்டுறவு நிருவாகத்தைப்பற்றிய குழுவின் (1963) (Committee on Co-operative Administration) பரிந்துரைப்படி, மாநில அரசுகளின் கூட்டுறவு இலாக்காக்கள், தேவைப்படும் எண்ணிக்கையிலும் தரத்திலும் சிப்பந்திகளைக் கொண்டியங்குவதற்கு மாநில அரசுகளுக்கு அறிவுரை வழங்குவதும், உதவி செய்வதுமே நோக்கமாக இருந்தது. கூட்டுறவு நிறுவனங்கள் தங்கள் நிருவாகத்திற்கும், மேற்பார்வைக்கும் தக்க யோக்கியதாம்சங்களைக் கொண்ட சொந்தச் சிப்பந்திகளைக் கொண்டிருப்பதை நிச்சயப்படுத்துவது சம முக்கியத்துவமுடையதாக இருந்தது.

**நான்காவது திட்டக் காலத்துச் சாதனைகள்**

**(i) பொது முன்னேற்றம்:** 1966–67ஆம் ஆண்டிறுதியில் எல்லாவகையான சங்கங்களின் மொத்த எண்ணிக்கை 3·26 இலட்சமாக இருந்து, 1969–70ஆம் ஆண்டிறுதியில் 3·18 இலட்சத்திற்குக் குறைந்தது. பிரதம கடன் சங்கங்கள் தன்னிறைவுள்ள அமைப்புகளாகச் சீரமைக்கப்பட்டதே, இந்த எண்ணிக்கைக் குறைவுக்குக் காரணமாகும். இதர அம்சங்களில் ஒரு குறிப்பிடத்தக்க பெருக்கம் இருந்தது. 1966–67ஆம் ஆண்டிறுதியில் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 559 இலட்சத்திலிருந்து 1969–70 ஆம் ஆண்டிறுதியில் 616 இலட்சத்திற்கும், அவற்றின் பங்கு மூலதனம் ரூ. 504·06 கோடியிலிருந்து ரூபாய் 753.21 கோடிக்கும், அவற்றின் நடைமுறை மூலதனம் ரூபாய் 3186·73 கோடியிலிருந்து ரூபாய் 5,158·71 கோடிக்கும் உயர்ந்தன.

**(ii) விவசாயக் கடன்:** கிராமப்புறங்களில் குறுகியகாலக் கடன்களுக்காகவும், மத்தியக்காலக் கடன்களுக்காகவும் செய்யப் பட்ட ஏற்பாட்டில், பிரதம விவசாயக் கடன் சங்கங்கள், பல்நோக்குச் சங்கங்கள் ஆகியவைகளின் வருடாந்தரக் கடன் நடவடிக்கைகள், மூன்றுவது திட்டக்கால இறுதியில், ரூபாய் 346 கோடியிலிருந்து 1970–71ஆம் ஆண்டில் ரூபாய் 578 கோடிக்கும், 1971–72ஆம் ஆண்டில் ரூபாய் 613 கோடிக்கும் அதிகரித்தன. மொத்தக் கடன் வாங்குதலில், கூட்டுறவுச் சங்கங் களால் அளிக்கப்பட்ட கடன்கள் ஏறக்குறைய 35 சதவிகிதத் திற்கு இருந்தன. சில மாநிலங்களில் இதைவிட அதிகமான முன்னேற்றம் இருந்திருக்கிறது. இந்த மாநிலங்களில் குடியானவர் களின் கடன் தேவைகளில் பாதி அளவுக்கு ஒரு சிறிது அதிகமாகவே கூட்டுறவுச் சங்கங்கள் பூர்த்தி செய்திருக்கின்றன.

நீண்டகால விவசாயக் கடன் விஷயத்தில், நாட்டில் கூட் டுறவு நில அடைமான வங்கிகளின் நடவடிக்கைகள் இதைவிட இன்னும் ஆச்சரியகரமானதாக இருந்திருக்கிறது. இந்த வங்கி களால் அளிக்கப்பட்ட கடன்கள் 1966–67ஆம் ஆண்டில் ரூபாய் 40.84 கோடியாக மட்டுமே இருந்திருந்தபோதிலும், 1969–70ஆம் ஆண்டில் ரூபாய் 113·2 கோடியாகவும், 1971–72ஆம் ஆண்டில் ரூபாய் 104·48 கோடியாகவும் இருந் தன.

**(iii) கூட்டுறவு விற்பனை:** விவசாய விளைபொருள்களின் கூட்டுறவு விற்பனைத் துறையில், விற்பனை செய்யப்பட்ட விளை பொருள்களின் மதிப்பு, மூன்றுவது திட்ட இறுதியில், ரூபாய் 316.89 கோடியாக இருந்து, 1969–70ஆம் ஆண்டில், 501·4 கோடிக்கும், 1970–71ஆம் ஆண்டில் ரூபாய் 506·76 கோடிக்கும் உயர்ந்தன.

**(iv) கூட்டுறவுப் பதனப் படுத்துதல்:** நான்காவது திட்டக் காலத்தில் நிகழ்ந்த மிகக் குறிப்பான அபிவிருத்தியானது, பல மான பதனப்படுத்தும் அமைப்புகளின், குறிப்பாகச் சர்க்கரைத் தொழில் துறையின் வளர்ச்சியாகும். 1,200-க்கு மேற்பட்ட பதனப்படுத்தும் அமைப்புகள் குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங் களால் அமைக்கப்பட்டன. பருத்திச் சுத்திகரிப்பு அழுத்தப் பொறிச் சங்கங்களால் செய்யப்பட்ட விற்பனைகள், மூன்றுவது திட்டக்காலத்து இறுதியில் ரூபாய் 17.38 கோடிக்கும், 1969–70 ஆம் ஆண்டில் ரூபாய் 33·21 கோடிக்கும், 1970–71ஆம் ஆண்டில் ரூபாய் 38·53 கோடிக்கும் உயர்ந்தன. இதரப் பதனப்படுத்தும்

சங்கங்களால் செய்யப்பட்ட விற்பனை ரூபாய் 3·58 கோடியி லிருந்து 1969–70ஆம் ஆண்டில் ரூ. 10·68 கோடிக்கு உயர்ந் தது. அது 1970–71ஆம் ஆண்டில் ரூபாய் 9·03 கோடியாக இருந்தது. பதனப்படுத்தும் சங்கங்களில் மிக முக்கியமானவை சர்க்கரைத் தொழில் துறையில் இருக்கின்றன. அவைகளால் செய்யப்பட்ட விற்பனை, மூன்றுவது திட்டக்காலத்து இறுதியில், ரூ. 89·38 கோடியிலிருந்து, 1969–70ஆம் ஆண்டில் ரூபாய் 168·78 கோடிக்கும், 1970–71ஆம் ஆண்டில் ரூபாய் 209·42 கோடிக்கும் உயர்ந்தன. நாட்டில் சர்க்கரை மொத்த உற்பத்தி யில் சுமார் 42 சதவிகிதத்திற்குக் கூட்டுறவுத் துறை பொறுப்பாக இருந்தது. அது, 1967ஆம் ஆண்டில், 26·9 சதவிகிதமே யிருந் தது.

**(v) இதரக் கூட்டுறவுச் சங்கங்களின் சாதனைகள்:** கீழ்க் காணும் அட்டவணை நான்காவது திட்டக்காலத்தின்போது, இதரக் கூட்டுறவுச் செயல்துறைகளைக் குறித்த சாதனைகளைச் சுட்டிக்காட்டுகின்றது. கீழ்க்காணும் எண்கள் ஒவ்வொரு சங்க வகுப்பாலும் விற்பனையாகச் செய்யப்பட்ட வாணிகத்திற்குத் தொடர்புள்ளவை.

### அட்டவணை

| | மூன்றுவது திட்டக் காலத்தின் இறுதியி லிருந்த நிலவரம் | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|
| | | (ரூபாய் கோடியில்) | |
| விவசாயப் பண்ணைச் சங்கங்கள் .. | 4.28 | 7.77 | 8·52 |
| நெசவாளர் சங்கங்கள் | 63·53 | 61.55 | 72.71 |
| இதரத் தொழிற் சங்கங்கள் .. | 36·39 | 40·72 | 40·35 |
| நுகர்வோர் சங்கங்கள் | 162·29 | 175·41 | 145.16 |
| [1]வீட்டுவசதிச் சங்கங்கள் .. | 36.17 | 58.65 | 54.40 |

[1]மேலே குறிக்கப்பட்டவை வீட்டுவசதிச் சங்கங்களாலும் அவற்றின் உறுப்பினர்களாலும் கட்டப்பட்ட வீடுகள், குடியிருப்புகள் ஆகிய வைகளின் மதிப்பு.

## ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டக் காலம் (1974–79)

**கூட்டுறவுச் சங்கங்களுக்காக, முன்னைவிடப் பெரியதான பணி எதிர்நோக்கப்படுகிறது:** ஐந்தாண்டுத் திட்டத்தில், கூட்டுறவுத் துறையில் வளர்ச்சிச் செயல்திட்டங்களுள் முக்கியமான சில, கீழே சுட்டிக்காட்டப்பட்டிருக்கின்றன.

**(i) விவசாயக் கடன்:** மத்திய அரசு விவசாயத் துறையால் தயாரிக்கப்பட்ட ஓர் அணுகுமுறைத் தாள் (Approach Paper) நான்காவது திட்டக் காலத்து இறுதியாண்டின்போது அளிக்கப் பட்ட குறுகியகால மொத்தக் கடன்தொகை ரூ. 680 கோடிக்கெதிராக, ஐந்தாவது திட்டக்காலத்து இறுதியாண்டின்போது ரூ. 1,200 கோடிக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் கடனுதவி அளிக்க வேண்டும் என்று எதிர்நோக்கியது. அவ்வாறே, ஐந்தாவது திட்டத்து ஐந்தாண்டுகள் காலத்தின்போது, மத்தியக்காலக் கடன் புதிய பட்டுவாடா ரூபாய் 350 கோடிக்கும், நீண்டகாலக் கடன் பட்டுவாடா ரூபாய் 1,500 கோடிக்கும் இருக்கும். இதில், ரூபாய் 1,100 கோடி இயல்பான கடனளிப்பின்கீழும், ரூபாய் 400 கோடி விவசாய மறுநிதிக் கழகத்தின் சிறப்புக் கடனளிப்பின் கீழும் இருக்கும். எனவே, கூட்டுறவுச் சங்கங்கள், ஐந்தாவது திட்டத்தின் இறுதியில் (1978–79) விவசாய உற்பத்திக்கான கடனை, ரூபாய் 3,000 கோடிக்கும் சற்று அதிகமாகப் பட்டுவாடாச் செய்யவேண்டியிருக்கும்.

ஐந்தாவது திட்டத்தில் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு பற்றி ஆலோசனை செய்த மத்திய அரசு விவசாயத் துறையின் ஒரு நடைமுறைக் குழு பிரதம விவசாயக் கடன் வசதிச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கையில் ஒரு திடமான பெருக்கம் இருக்கவேண்டுமென்று பரிந்துரை செய்தது. அணுகுமுறைத் தாளில் எதிர்நோக்கப்பட்ட குறிக்கோள்களையும், கடன் தொகை இலக்குகளையும் அடைவதற்காக, இது ஒரு முன்தேவையாக இருக்கிறது. 1969–70ஆம் ஆண்டில் 300 இலட்சமாக இருந்த விவசாயக் கடன்வசதிச் சங்கங்களின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை, 1973–74ஆம் ஆண்டில் 360 இலட்சத்திற்கு உயர எதிர்பார்க்கப்படுகிறது. ஐந்தாவது திட்டத்தின் இறுதியில் அடையப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கை இலக்கு 510 இலட்சமாக நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இது, ஓர் ஐந்தாண்டுகள் காலவரையில் சுமார் 42 சதவிகிதப் பெருக்கமாகும். இதை அடைவதற்குப் பெரு முயற்சி எடுக்கவேண்டிவரும்.

1970–71ஆம் ஆண்டில் 36 சதவிகிதத்திற்கெதிரே, 1978–79ஆம் ஆண்டில், குறைந்தது 50 சதவிகித உறுப்பினர்களுக்குப் புதிய கடன்கள் அளிப்பதன்மூலம், பிரதம கடன்வசதிச் சங்கங்கள் பயனுறுதியான சேவைப் பரப்பை நோக்கவேண்டும் என்றுங்கூட எதிர்பார்க்கப்படுகின்றன. அதாவது, 250 இலட்சம் கடன் வாங்கும் உறுப்பினர் எண்ணிக்கை நோக்கப்படவேண்டும்.

விவசாயக் கடன் துறையில் இந்த இலக்குகளை அடைவதில் சிறு குடியானவர்களுக்கு உதவியளிக்கச் சிறப்புக் கவனம் தேவைப் படுகிறது. ஐந்தாவது திட்ட இறுதியில் அளிக்கப்பட்ட மொத்தக் கடன் தொகையில் குறைந்தது 40 சதவிகித அளவிற்குக் கடன்கள் இரண்டு ஹெக்டர்களுக்கும் குறைந்த நிலத்தையுடைய நபர்களுக்கு அளித்தல் சாத்தியமாக இருக்கவேண்டும். அதன் விளைவாக, 1978–79ஆம் ஆண்டில் குறுகியகாலக் கடன்களுக்கான ரூபாய் 1,200 கோடி மொத்த இலக்கில், ரூ. 480 கோடி, இரண்டு ஹெக்டர்களுக்கும் குறைந்த நிலத்துடன் சாகுபடி செய்பவர்களுக்காக இருக்கவேண்டும். இது ஐந்தாவது திட்டத்தில் கூட்டுறவுக் கடன் கொள்கையின் ஒரு பெரும் குறிக்கோளாக இருக்கிறது. அதாவது, சிறிய விவசாயிகளுக்கும் மிகச் சிறு விவசாயிகளுக்கும் குத்தகைப் பயிரிடுபவர்களுக்கும் நிறுவனக் கடனின் திடமான பாய்ச்சலை நிச்சயப்படுத்துவது. 1970–71ஆம் ஆண்டின்போது (புள்ளிவிவரங்கள் கிடைக்கின்ற இறுதியாண்டு), அத்தகைய கடன்கள் 16 மாநிலங்களிலும், 3 மத்திய அரசு நிலப்பகுதிகளிலும் கூட்டுறவுச் சங்கங்களால் அளிக்கப்பட்ட மொத்தக் குறுகியகால, மத்தியக்காலக் கடன்களில் சுமார் 31 சதவிகிதத்திற்கு அமைந்தன.

இந்த இலக்குகளையடையும்பொருட்டு, பல்வேறு நடவடிக்கைகள் வலியுறுத்தப்பட்டன. அவையாவன: பலவீனமான மத்திய வங்கிகளை மறுவாழ்வுபெறச் செய்தல்; புதிய உறுப்பினர்களைச் சேர்ப்பதற்காகத் தீவிரமான முயற்சி செய்தல்; புதிய உறுப்பினர்கள் உள்படத் தகுதியுடைய எல்லா உறுப்பினர்களுக்கும் கடன்கள் அளித்தல்; ஒவ்வொரு மைய வங்கியிலும் ஒரு சிறு அபிவிருத்திப் பிரிவை ஏற்பாடு செய்தல்; கடன்களை வசூல் செய்வதற்கும், அதிகரித்துவரும் விவசாயச் செயல்திட்டங்களுடன் கடனுதரவுப் பணியை மேற்கொள்வதற்கும் பிரதம கடன்வசதிச் சங்கங்களின் சக்தியை நிச்சயப்படுத்துதல்; பல்வேறு மட்டங்களில் தொழில்நுட்பச் சிப்பந்திகளையும், அபிவிருத்திச் சிப்பந்திகளையும் மேம்பாடு செய்தலும்—அதிகப்படுத்துதலும் ஆகியவை.

**(ii) கூட்டுறவுப் பதனப்படுத்துதலும் விற்பனையும்:** இந்தத் துறையில் கூட்டுறவுச் சங்கங்கள் ஐந்தாவது திட்ட இறுதி யாண்டில் ரூபாய் 1,600 கோடி மதிப்புள்ள விவசாய விளை பொருள்களை, நான்காவது திட்டக்காலத்து இறுதியாண்டில் எதிர் பார்க்கப்பட்ட ரூபாய் 900 கோடிக்கெதிராகக் கையாளுவதற்கு எதிர்பார்க்கப்படுகின்றன. அமைக்கப்படவேண்டிய கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகளின் எண்ணிக்கை 2,330-க்கு அதிகப் படுத்தப்படவேண்டும். ஐந்தாண்டுத் திட்டக்காலத்து இறுதி யாண்டின்போது, விநியோகிக்கப்படவேண்டிய உரங்களின் மதிப்பு ரூ. 1,000 கோடிக்கும், இதர விவசாய உற்பத்தித் தேவைகளின் மதிப்பு ரூ. 200 கோடிக்கும் அதிகப்படுத்தப்படவேண்டும்.

**(iii) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்:** இந்தத் துறை யில் ஐந்தாவது திட்டத்தின் பெரிதான குறிக்கோள்களில் ஒன்று, உணவுப் பொருள்கள், துணி, எரிபொருள்கள், வீட்டுச் சாமான்கள் போன்ற நுகர்வோர் அடிப்படைப் பொருள்களுக் காக நிலையான விலைவாசிகளை நிச்சயப்படுத்துதலாக இருக்கும். இந்த விஷயத்தில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் முன்னைவிட மிக அதிகமான பொறுப்பை மேற்கொள்ள வேண்டும். கூட்டுற வுப் பண்டசாலை இயக்கம் விலைவாசிகளின்மீது ஒரு தாக்குதலைச் செய்ய வேண்டுமானால், தரம், எண்ணிக்கை ஆகிய இரண்டிலும் உயர்வு அவசியமாகும். ஐந்தாவது திட்ட இறுதியாண்டில் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் நகர்ப்புறங்களில் நுகர்வோர் பொருள் விநியோகம் நான்காவது திட்டத்தின் இறுதியாண்டின் போது சாதிக்கப்படலாம் என்று எதிர்பார்க்கப்படுகிற ரூ. 275 கோடிக்கெதிரே, ரூ. 700 கோடிக்கு அதிகரிக்கப்படவேண்டும்.

மேற் கூறப்பட்டவை, ஐந்தாவது திட்டக்காலத்தின்போது, கூட்டுறவு வளர்ச்சியின் முக்கியத் துறைகளுக்கான (Core Sectors) ஒருசில முக்கிய இலக்குகளாகும். அதுபோன்ற இலக்குகள் இதரத் துறைகளுக்காகவுங்கூட எதிர்நோக்கப்பட்டிருக்கின்றன. ஐந்தா வது ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட்டுறவுச் சங்கங்களுக்காக நிருண யிக்கப்பட்ட பணி உண்மையாகவே, ஓர் அறைகூவலாக இருக் கிறது. நாட்டு மக்கள் எதிர்பார்ப்பதை நிறைவு செய்வதற்கும், கூட்டுறவுச் சங்கங்களுக்காக நிருணயிக்கப்பட்ட பணிகளைப் பய னுறுதியாகவும், திறமையாகவும் நிறைவேற்றுவதற்கும் அமைப் பிலும் நிதியாதாரத்திலும் நிருவாகத்திலும் தங்களைச் சித்தப் படுத்திக்கொள்ளவேண்டும்.

# தமிழ்நாட்டில், ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் கூட்டுறவின் வளர்ச்சி

## (i) விவசாயக் கடன்

**முதல் திட்டக் காலத்து இறுதியிலிருந்த நிலவரம் (1951–56):** முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் 10,295 விவசாயக் கடன் சங்கங்களும், 73 பிரதம நில அடைமான வங்கிகளும் தமிழ்நாட்டிலிருந்தன. 49 சதவிகிதக் கிராமங்களும், 21 சதவிகிதக் கிராம மக்கள்தொகையும் இந்தச் சங்கங்களால் அடக்கப்பட்டிருந்தன. முதல் திட்ட இறுதிக்குள், ஆண்டொன்றுக்கு ரூபாய் 5 கோடிக்குக் கடனுதவி விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டது. முதலாவது திட்டத்தின்போது, குறிப்பிட்ட திட்டங்கள் எதுவும் அமல்படுத்தப்படவில்லை.

**இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலம்:** இந்தத் திட்டத்தில், கிராமக் கடன் விசாரணைக் குழுவினரால் பரிந்துரைக்கப்பட்ட திட்டங்கள் அடங்கியிருந்தன. இந்தத் திட்டங்கள், இரண்டாவது திட்டக் காலத்தின்போது அமல்படுத்தப்பட்டுக் கீழ்க்காணும் வளர்ச்சி சாதிக்கப்பட்டது:

(i) 330 விவசாய வங்கிகள் (பெரிய அளவுக் கடன்வசதிச் சங்கங்கள்), நடப்பிலுள்ள கிராமக் கடன் வசதிச் சங்கங்களை இணைப்பதன்மூலமாவது புதிய சங்கங்களை அமைப்பதன் மூலமாவது நிறுவப்பட்டன.

(ii) 1997 கூடுதலான சிறிய அளவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டன.

(iii) விவசாயக் காரியங்களுக்காக மத்தியகாலக் கடன்களை அளிப்பதற்காக 22 கிராம வங்கிகள் (Rural Banks) அமைக்கப்பட்டன.

(iv) 24 பிரதம நில அடைமான வங்கிகள் அமைக்கப்பட்டன. இரண்டாவது திட்ட இறுதியில் 92 பிரதம நில அடைமான வங்கிகளிருந்தன.

(v) 758 கடன் வசதிச் சங்கங்கள், தன்னிறைவுள்ள அமைப்புகளாக இயங்குவதற்கு வசதிசெய்யும்பொருட்டுச் சிப்பந்தி மானிய உதவி வழங்கப்பட்டன.

(vi) 100 விவசாய வங்கிகள், அலுவலகக் கட்டடங்களைக் கட்டுவதற்கு உதவப்பட்டன.

(vii) 13 கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியங்கள், தங்களுக்குச் சொந்தமான அலுவலகக் கட்டடங்களைக் கட்டுவதற்கு உதவப்பட்டன.

(viii) மத்தியக் கூட்டுறவு வங்கிகள், 289 கூடுதலான மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்கு உதவப்பட்டன.

(ix) பிரதம நில அடைமான வங்கிகள், மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்காக, ரூ. 2.13 இலட்சம் தொகைக்குச் சிப்பந்தி மானியம் அமைக்கப்பட்டது.

(x) சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கியில் ரூபாய் 61 இலட்சம் அளவிற்கும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் ரூ. 97 இலட்ச அளவிற்கும், விவசாய வங்கிகளில் ரூ. 8 இலட்ச அளவிற்கும் பங்கு மூலதனத்தில் மாநில அரசு பங்குகொண்டது.

இரண்டாவது திட்டக்கால இறுதியில், எல்லாக் கிராமங்களும், 55 சதவிகிதக் கிராம மக்கள்தொகையும் கூட்டுறவுச் சங்கங்களால் தழுவப்பட்டன. ஆண்டுதோறும் ரூ. 25 கோடி அளவுக்குக் கடன் அளிக்கப்பட்டது.

## மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலம்—சாதனைகள்

(i) 936 கிராமக் கடன் வசதிச் சங்கங்கள் அமைக்கப்பட்டன.

(ii) 2,800 கடன் வசதிச் சங்கங்களுக்கும், விவசாய வங்கிகளுக்கும், கடன் ஒன்றியங்களுக்கும் சிப்பந்தி மானியம் வழங்கப்பட்டன.

(iii) மையக் கூட்டுறவு வங்கிகள் 26 கூடுதலான மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்கும், சமுதாய வளர்ச்சி வட்டாரங்களில் முழுநிதித் திட்டத்தின்கீழ் ஒவ்வொரு வட்டாரத்திற்கும் 2 மேற்பார்வையாளர்கள் விகிதத்தில் 319 கூடுதலான மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்காகக்கூட, மானிய உதவியளிக்கப்பட்டன.

(iv) 35 விவசாய வங்கிகளும், 13 மேற்பார்வை ஒன்றியங்களும், அலுவலகக் கட்டடங்களைக் கட்டுவதற்கு உதவப்பட்டன.

(v) 13 புதிய பிரதம நில அடைமான வங்கிகள் அமைக்கப்பட்டன.

(vi) ஒவ்வொரு புதிய பிரதம நில அடைமான வங்கிக்காக ஒரு மேற்பார்வையாளர் விகிதத்தில், மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்காக ரூ. 0.71 இலட்ச அளவிற்குச் சிப்பந்தி மானியம் அளிக்கப்பட்டது. தவிரவும், கூட்டுறவுசார் பதிவாளர் நிலை 6 நில மதிப்பு அதிகாரிகளை அமர்த்துவதற்கும், நில அடைமான வங்கிகள் உதவப்பட்டன.

(vii) மத்தியக் கூட்டுறவு வங்கிகள், பிரதமக் கடன்வசதிச் சங்கங்கள் ஆகியவைகளின் சிறப்பு வராக்கடன் காப்பு இருப்பிற்கு, முறையே ரூ. 76.85 இலட்சத்திற்கும், ரூ. 18.15 இலட்சத்திற்கும் மொத்தமான உதவித்தொகை யளிக்கப்பட்டது.

மூன்ருவது திட்டக்காலத்து இறுதியில் தழுவப்பட்ட மக்கள் தொகைச் சதவிகிதம் 89.8-க்கு அதிகரித்தது. ரூ. 30.95 கோடி அளவிற்குக் குறுகியகால, மத்தியக்காலக் கடன்களும், ரூ. 3 கோடி அளவிற்கு நீண்டகாலக் கடன்களும் ஆண்டுதோறும் அளிக்கப்பட்டன.

## மூன்று வருடாந்தரத் திட்டங்களின்போது (1966-67—1968-69)

நடப்பிலிருந்த திட்டங்கள் நீடிக்கப்பட்டன. மற்றும், 1966 – 67ஆம் ஆண்டில், 31 கடன் வசதிச் சங்கங்கள் அவைகள் தன்னிறைவுள்ள அமைப்புகளாக இயங்குவதற்காக மானியமும், 2 பிரதம நில அடைமான வங்கிகளுக்குச் சிப்பந்தி மானியமும், 41 மைய வங்கிகள்-கிளைகளுக்கு மானியமும் அளிக்கப்பட்டன. அந்த ஆண்டில் அளிக்கப்பட்ட குறுகியகால, மத்தியக்காலக் கடன் தொகை ரூ. 31.44 கோடிக்கும், நீண்டகாலக் கடத் தொகைகள் ரூ. 2.93 கோடிக்கும் உயர்ந்தன.

1967 – 68ஆம் ஆண்டின்போது, தன்னிறைவுள்ள அமைப்புகளாகப் பிரதம கடன் வசதிச் சங்கங்கள் இயங்குவதற்காக அளிக்கப்பட்ட மானியம், 85 சங்கங்களுக்கு நீடிக்கப்பட்டன. மற்றும், 3 நில அடைமான வங்கிகளுக்குச் சிப்பந்தி மானியமும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு 13 புதிய கிளைகளைத் திறப்பதற்காக மானியமும், உயர் விகித விளைச்சல் ரகங்கள் திட்டங்களை அமல்படுத்துவதற்கும், முழுநிதித் திட்டத்தின்கீழும் கூடுதலான மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்காக ரூ. 3.60 இலட்ச அளவிற்கு மானியமும், நிவாரண உத்தரவாத நிதிக்கு ரூ. 8 இலட்ச உதவித்தொகையும் அளிக்கப்பட்டன.

வழங்கப்பட்ட குறுகியகால, மத்தியக்காலக் கடன் தொகை ரூ. 37.26 கோடிக்கும், நீண்டகாலக் கடன் தொகை ரூ. 5.70 கோடிக்கும் உயர்ந்தன.

1968 – 69ஆம் ஆண்டின்போது, 170 தன்னிறைவு ஆகக் கூடிய வாய்ப்புள்ள சங்கங்களுக்குச் சிப்பந்தி மானிய உதவி யளிக்கப்பட்டன. மத்தியக் கூட்டுறவு வங்கிகள், புதிய கிளைகளைத் திறப்பதற்காக உதவப்பட்டன. பிரதம சங்கங்கள் மையக் கூட்டுறவு வங்கிகள் ஆகியவைகளின் வராக்கடன் சிறப்புக் காப் பிருப்புக்கு ரூ. 5.35 இலட்ச உதவித்தொகை யளிக்கப்பட்டது. அந்த ஆண்டின்போது வழங்கப்பட்ட குறுகியகால, மத்தியக்காலக் கடன்தொகை ரூ. 44.12 கோடிக்கும், நீண்டகாலக் கடன் தொகை ரூ. 14.15 கோடிக்கும் உயர்ந்தன.

## நான்காவது ஐந்தாண்டுத் திட்டக்காலம்— சாதனைகள்

(i) 1,020 தன்னிறைவாகக்கூடிய வாய்ப்புள்ள சங்கங் களுக்குச் சிப்பந்தி மானிய உதவியளிக்கப்பட்டது.

(ii) 178 மத்திய வங்கிக் கிளைகள் திறக்கப்பட்டு, அவை களுக்காக மானியமளிக்கப்பட்டது.

(iii) 90 கடன்வசதிச் சங்கங்களுக்கும் 40 ஏற்றுப் பாசனக் கூட்டுறவுச் சங்கங்கள், கிடங்கு—அலுவலக—பணிக்கொட்டகை களைக் கட்டுவதற்கும் கடனும், மானியமும் உதவப்பட்டன.

(iv) நான்காவது திட்டக்காலத்து இறுதியில், கடன் வசதிச் சங்கங்களின் பங்கு மூலதனம் ரூ. 21.31 கோடியிலிருந்து ரூ. 30.40 கோடிக்கும், வைப்புகள் ரூ. 37.61 கோடியிலிருந்து ரூ. 73 கோடிக்கும் உயர்த்தப்படவேண்டும்.

(v) திட்டக்காலத்து முதல் இரண்டு ஆண்டுகளின்போது 170 பிரதம நிலவள வங்கிகள் அமைக்கப்பட்டன. நான்காவது திட்டக்காலத்து இறுதிக்குள் நிலவள வங்கிகளின் 134 கிளைகள், வங்கிகளில்லாத வட்டாரங்களில் திறக்கப்படவேண்டும்.

(vi) நிவாரண உத்தரவாத நிதிக்கு ரூ. 33.74 இலட்ச உதவித்தொகை அரசால் வழங்கப்படவேண்டும்.

நான்காவது திட்டக்காலத்து இறுதியாண்டில் கூட்டுறவுச் சங்கங்கள் ரூ. 75 கோடி அளவிற்குக் குறுகியகால, மத்தியக்

காலக் கடன்களையும், ரூ. 25 கோடி அளவிற்கு நீண்டகாலக் கடன்களையும் அளிக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது.

கிணறுகள் (குழாய்க் கிணறுகள் உள்பட) வெட்டுவதற்கும், பம்புச் செட்டுகள் அமர்த்துவதற்குமான ஒரு விரிவான சிறு பாசனச் செயல் திட்டம் அமல்படுத்தப்பட்டது. கிராமக் கடனீட்டுப் பத்திரங்களுக்கு ரூ. 10.83 கோடி உதவித்தொகையும், அபிவிருத்திச் சிறப்புக் கடனீட்டுப் பத்திரங்களுக்கு ரூ. 3.07 கோடி உதவித்தொகையும் மானில அரசு அளித்தது. 1-4-1968 தேதியிலிருந்து அரசு, புதிய கிணறுகளை வெட்டுகின்ற அமைப்புகளுக்கு மானிய உதவியளித்தது. நான்காவது திட்டக்காலத்தில், நிலவள வங்கிகளிலிருந்து பெற்ற கடன்களைக் கொண்டு புதிய கிணறுகளை வெட்டுகின்ற அமைப்புகளுக்கு ரூ. 187.45 இலட்சம் பட்டுவாடாச் செய்வதற்குத் திட்டமிடப்பட்டது. 1970–71ஆம் ஆண்டிலும், 1971–72ஆம் ஆண்டிலும் ஏறக்குறைய 2,000 ஏற்றுப்பாசனக் கூட்டுறவுச் சங்கங்கள், சிறு விவசாயிகள் நலனுக்காக அமைக்கப்பட்டன. தங்கள் உறுப்பினர்களின் உபயோகத்திற்காகக் கிணறுகளை வெட்டுவதற்காக இச் சங்கங்கள் நிலவள வங்கிகளிலிருந்து கடன்கள் பெறவேண்டும்.

## ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டக் காலம்— மதிப்பீடுகள் அல்லது யோசனைகள்

### I விவசாயக் கடன்

(i) குறுகியகாலக் கடனும் மத்தியக்காலக் கடனுமாக ஐந்தாவது திட்டத்தின் இறுதியாண்டின்போது ரூ. 105 கோடி அளிக்கப்படவேண்டும்.

(ii) பயனுறுதியான அல்லது கடன் வாங்கும் உறுப்பினர் எண்ணிக்கையானது கிராமக் குடும்பங்களின் 60 சதவிகிதத்திற்கு உயர்த்தப்படவேண்டும்.

(iii) தன்னிறைவையடையக்கூடிய 2,500 கடன்வசதிச் சங்கங்கள், ரூ. 75 இலட்சச் செலவில், சிப்பந்தி மானிய உதவியளிக்கப்படவேண்டும்.

(iv) விவசாயக் கடன் நிவாரண உத்தரவாத நிதிக்கு ரூ. 32 இலட்சம் உதவித்தொகை யளிக்கப்படவேண்டும்.

(v) வலிவற்ற பகுதியினர்களுக்காக அளிக்கப்பட்ட கடன்களின்பேரில், வராக்கடன் சிறப்புக் காப்பு இருப்புக்கு (Special Bad debt Reserve) 3 சதவிகிதத்தில் பிரதம கடன்

சங்கங்களுக்கும், 1 சதவிகிதத்தில் மையக் கூட்டுறவு வங்கிகளுக்கும் உதவித்தொகை யளிக்கப்படவேண்டும் — மொத்தத் தொகை ரூ. 136 இலட்சம்.

(vi) பங்கு மூலதன அதிகரிப்பும் வைப்புகள் சேகரிப்பும் கீழ்க்காணும் அளவின்படி இருக்கவேண்டும் — ஐந்தாவது திட்டத்திற்கான இலக்குகள்:

**பங்கு மூலதனம்**

| | | |
|---|---|---|
| மாநிலக் கூட்டுறவு வங்கி | ரூ. 3.50 | இலட்சம் |
| மைய வங்கிகள் | ரூ. 14.00 | ,, |
| விவசாயக் கடன் சங்கங்கள் | ரூ. 19.00 | ,, |

**வைப்புகள்**

| | | |
|---|---|---|
| மாநிலக் கூட்டுறவு வங்கி | ரூ. 35.00 | ,, |
| மைய வங்கிகள் | ரூ. 70.00 | ,, |
| விவசாயக் கடன் சங்கங்கள் | ரூ. 9.00 | ,, |

**(vii) நீண்ட காலக் கடன்**

ஐந்தாவது திட்டத்திற்கான இலக்கு:

(i) ரூ. 150 கோடி (இயல்பான செயல் திட்டத்தின்கீழ் ரூ. 90 கோடியும், விவசாய மறுநிதிக் கழகம் — தீவிர விவசாய அபிவிருத்திச் செயல்திட்டங்களின் கீழ் ரூ. 60 கோடியும்).

(ii) நிலவள வங்கிகளில் 714 கூடுதலான மேற்பார்வை யாளர்களை அமர்த்த வசதி செய்யும்பொருட்டு ரூ. 19.19 இலட்சம் மானிய உதவித்தொகை.

(iii) மாநில நிலவள வங்கியின் 614 கூடுதலான தொழில் நுட்ப மேற்பார்வையாளர்களை யமர்த்துவதற்காக ரூ. 3,684 இலட்ச மானிய உதவித்தொகை.

(iv) ஏற்றுப்பாசனச் சங்கங்களுக்குச் சிப்பந்திகளை அமர்த்துவதற்காக ரூ. 50 இலட்ச உதவி மானியத் தொகை.

(v) இயல்பான நடவடிக்கைகளுக்காகத் தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் வெளியிடப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களுக்கு உதவித்தொகை ரூ. 13 கோடி.

(vi) விவசாய மறுநிதிக் கழகத் திட்டத்திற்காகவும், தீவிர விவசாய அபிவிருத்தித் திட்டத்திற்காகவும் சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப் பத்திரங்களுக்கு உதவித் தொகை ரூ. 7.50 கோடி.

(vii) புதிய கிணறு வெட்டுதலுக்கு மானிய உதவி — ஒரு கிணற்றுக்கு ரூ. 500 வீதம் 40,000 கிணறுகளுக்காக ரூ. 200 இலட்சம்.

(viii) விவசாயக் கடன்நிலைப் பெருக்கம் நிதிக்கு உதவித் தொகை (Agricultural Credit Stabilisation Fund) ரூ. 150 இலட்சம்

(ix) பிரதம சங்கம், மத்திய வங்கி, மாநிலக் கூட்டுறவு வங்கி, பிரதம நிலவள வங்கி ஆகியவற்றிற்கு அரசினர் பங்கு மூலதனத்திற்காக உதவித்தொகை ரூ. 500 இலட்சம்.

(x) கூட்டுறவு நகர வங்கிகளின் பங்கு மூலதனத்திற்காக அரசினர் உதவித்தொகை ரூ. 25 இலட்சம்.

**அமைப்பு இலக்குகள்** (Physical Targets)

| | | |
|---|---|---|
| 1. ஐந்தாவது திட்டக்கால இறுதியில் பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் எண்ணிக்கை | | 5,000 |
| 2. புத்துயிரளிக்கப்பட்ட பிரதம விவசாயக் கடன் சங்கங்கள் எண்ணிக்கை | | 2,500 |
| 3. விவசாயக் கடன் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை (இலட்சத்தில்) | (ரூ. 35.45 இலட்சம் நான்காவது திட்ட இறுதியாண்டில்). | |
| 4. குறுகியகாலக் கடன்களும், மத்தியக்காலக் கடன்களும் | ரூ. | 105 கோடி |
| 5. நீண்டகாலக் கடன் | ரூ. | 34 கோடி |
| 6. திரட்டப்படவேண்டிய பங்கு மூலதனம் | | |
| (அ) மாநிலக்கூட்டுறவு வங்கியால் | ரூ. | 3.50 கோடி |

(ஆ) மத்திய வங்கிகளால் ரூ. 14.00 கோடி

(இ) பிரதம கடன் சங்கங்களால் ரூ. 19.00 கோடி

7. பெற்றிருக்கப்படவேண்டிய வைப்புகள்

(அ) மாநிலக் கூட்டுறவு வங்கியால் ரூ. 35 கோடி

(ஆ) மத்திய வங்கியால் ரூ. 60 கோடி

(இ) பிரதம கடன் சங்கங்கள் ரூ. 9 கோடி

## II கூட்டுறவு விற்பனை

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட்டுறவு விற்பனை அதிகக் கவனத்தைப் பெறவில்லை. அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் பரிந்துரைகளையொட்டிப் பல்வேறு திட்டங்கள் இரண்டாவது, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டங்களிலும், கூட்டுறவு விற்பனை வளர்ச்சிக்கான மூன்று வருடாந்தரத் திட்டங்களிலும் சேர்க்கப்பட்டன. அவையாவன: விற்பனை வசதிச் சங்கங்களில் பங்கு மூலதனத்தில் அரசு பங்கு கொள்ளுதல், சிப்பந்தி மானிய உதவி, கிடங்குகளைக் கட்டுதல், லாரிகளை வழங்குதல், பதனப்படுத்தும் அமைப்புகளை அமைத்தல், தரப்படுத்தும் நடவடிக்கைகளுக்கு உதவியளித்தல் போன்றவை. இவையன்றியும், நான்காவது திட்டக்காலத்தின்போது, கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களின் விலைவாசி ஏற்ற இறக்க நிதிக்கு அரசு உதவித் தொகையளித்தல்; குளிர்பதனச் சேமிப்பு வசதியமைப்புகளையும், வேளாண்மைப் பணிகள், உரங்கள், சிறு அணுத் தயாரித்தல், பூச்சி கொல்லிகளைத் தயாரித்தல் ஆகியவைகளுக்கான அமைப்புகளையும் அமைத்தல்; உரம் வாணிகத்திற்காக நிதிவசதி வழங்குதல் முதலியவைகளுக்காகத் திட்டங்கள் அமல்படுத்தப்பட்டிருந்தன. தற்போது, 122 பிரதம விற்பனைச் சங்கங்களும் ஒரு மாவட்ட விற்பனைச் சம்மேளனமும், ஒரு மாநில விற்பனைச் சம்மேளனமும் இருக்கின்றன. நான்காவது திட்டத்தின் இறுதியாண்டின் போது, அதாவது 1973 – 74ஆம் ஆண்டில், இந்த நிறுவனங்கள் ரூ. 31.34 கோடி மதிப்புள்ள விவசாய விளைபொருள்களைக் கையாளவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. 1973 – 74ஆம் ஆண்டில் ரூ. 28 கோடி மதிப்புள்ள இரசாயன உரங்களை அவை விநியோகம் செய்தன.

நான்காவது திட்டத்தின் இறுதிவரையில் சாதிக்கப்பட்ட முன்னேற்றமும், ஐந்தாண்டுத் திட்டத்திற்கான யோசனைகளும் கீழே சுட்டிக்காட்டப்பட்டிருக்கின்றன.

| நான்காவது திட்ட இறுதியில் இருந்த நிலவரம் | ஐந்தாவது திட்டத்திற்கான யோசனைகள் |
|---|---|
| 1. கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களின் பங்குமூலதனத்தில் அரசினர் பங்கு கொள்ளுதல் | ரூ. 50 இலட்சம் |
| பிரதம விற்பனை வசதிச் சங்கங்கள் | 78.05 இலட்சம் |
| தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம் | 23.70 இலட்சம் |
| தஞ்சைக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம் | 10 இலட்சம் |
| 2. பிரதம விற்பனை வசதிச் சங்கங்களுக்காகச் சிப்பந்தி மானியத் தொகை | ரூ. 5 இலட்சம் |
| (நான்காவது திட்டத்தில் 48 சங்கங்களுக்கு 4.71 அளிக்கப்பட்டது.) | |
| 3. தரப்படுத்தும் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காக நிதியுதவி | 70 அமைப்புகளுக்கு உதவி செய்வதற்காக ரூ. 5 இலட்சம் |
| 4. விலைவாசி ஏற்ற இறக்கம் நிதிக்காக உதவித்தொகை | ரூ. 30 இலட்சம் |
| 5. தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பிற்குக் குளிர்பதனச் சேமிப்பு வசதி அமர்த்துவதற்கான நிதியுதவி | ரூ. 20 இலட்சம் |
| 6. மண்வளப் பரிசோதனை ஆய்வகங்களை அமைத்தல் | ரூ. 6.20 இலட்சம் |
| 7. கிடங்கு வசதிப் பணிக் கொட்டகைகளைக் கட்டுதல் | 1000 கிடங்குகள் |
| 3,066 கிடங்குகள் | ரூ. 131.25இலட்சம் |
| 8. விற்பனைப் பணியாளர் தொகுதியின் பொதுவான அமைப்பைப் (Coman Cadre) பராமரிப்பதற்காக, தலைமைக் கூட்டுறவு விற்பனைச் சங்கத்திற்கு நிதியுதவி | ரூ. 25,000 |

## பதனப்படுத்துதல்

மாநிலத்தில் சர்க்கரை ஆலைகளையும் நூற்பு ஆலைகளையும் தவிர, வேறு பதனப்படுத்தும் சங்கங்கள் கிடையா. கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்கள் தாங்களே தங்களுக்குத் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் பல்வேறு திட்டங்களின்கீழ், அரசினரால் அளிக்கப்பட்ட நிதியுதவியைக் கொண்டு, தங்கள் பின்சேர்ப்புகளாகப் பதனப்படுத்தும் அமைப்புகளை ஏற்படுத்திக் கொள்கின்றன.

ஐந்தாவது திட்டத்தின்போது, கீழ்க்காணும் நடுத்தர அளவு, சிறிய அளவு பதனப்படுத்தும் அமைப்புகளை நிறுவுவதற்கு யோசிக்கப்பட்டிருக்கிறது. (i) சூரியகாந்தி விதை எண்ணெய் தயாரிக்கும் அமைப்பு (வளர்ச்சியடையாத நிலப்பகுதிகளில் நான்கு அமைப்புகள்). (ii) சோளப் பண்டங்கள் தயாரிக்கும் அமைப்பு (வளர்ச்சியடையாத நிலப்பகுதிகளில் ஓர் அமைப்பு). (iii) மரவள்ளிக் கிழங்கு தயாரிக்கும் அமைப்பு (வளர்ச்சி யடையாத நிலப்பகுதியில் ஒன்று). (vi) தேங்காய் எண்ணெய் தயாரிக்கும் அமைப்புக் கூட்டம் (வளர்ச்சியடையாத நிலப்பகுதி யில் இரண்டு அமைப்புகள்). (v) பருத்திச் சுத்திகரிப்பு அழுத்தப் பொறி (வளர்ச்சியடையாத நிலப்பகுதிகளில் ஐந்து அமைப்பு களும், இதர நிலப்பகுதிகளில் ஐந்து அமைப்புகளும்). (vi) பருத்தி எண்ணெய் தயாரிக்கும் அமைப்பு (வளர்ச்சியடையாத நிலப் பகுதியில் ஒன்று). (vii) மற்றும், இரண்டு குடியானவர்கள் கூட்டுறவுக் காகித ஆலைகள் (பெரிய அளவு பதனப்படுத்தும் அமைப்புகள்). இந்தத் திட்டங்களின் மதிப்பீடு செய்யப்பட்ட மொத்த முதலீடு ரூபாய் 495.77 இலட்சமாகும். மற்றும், பதனப்படுத்தும் அமைப்புகளை நிறுவுவதற்காகக் கூட்டுறவு விற் பனைச் சங்கங்களுக்கு ரூ. 8.5 இலட்ச அளவிற்குச் சிப்பந்தி மானிய மும், தமிழ்நாடு மாநில விற்பனைச் சம்மேளனத்திற்காகவும், தஞ்சைக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனத்திற்காகவும் பங்கு மூலதனமாக முதலீடு செய்வதற்காக, ரூ. 76 இலட்ச அளவுக்கு இறுதிப்பண உதவியும் அளிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன. (நான்காவது திட்ட இறுதிவரை ரூ. 94 இலட்சம் முதலீடு செய்யப்பட்டிருந்தது.)

நான்காவது திட்டக்காலத்தின்போது விற்பனை செய்யப் படவேண்டிய விவசாய விளைபொருள்களின் மதிப்பு ரூ. 50 கோடியாக எதிர்நோக்கப்பட்டிருக்கிறது.

## III கூட்டுறவுக் கல்வியும், பயிற்சியும்

முதல்திட்டக் காலத்தின்போது, யாதொரு திட்டமும் அமல் படுத்தப்படவில்லை. இரண்டாவது திட்டக்காலத்தின்போது 4 கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள் தொடங்கப்பட்டன. இவைகளைச் சேர்த்து, இலாக்காப் பணியாளர் தொகுதிக்குப் பயிற்சியளிப்பதற்கான சென்னை நகரத்திலுள்ள மையக் கூட்டுறவு நிலையம் உட்பட ஏழு கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள் இருந்தன. உறுப்பினர் கல்வித் திட்டத்தின்கீழ், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், கூட்டுறவுச் சங்கங்களின் பஞ்சாயத்தாரர்களுக்கும், அலுவலர் நிருவாகக் குழுவினர்க்கும், உறுப்பினர்களுக்கும் பயிற்சி வகுப்புகளை நடத்தியது. ஒரு முதுநிலை ஆய்வாளர் பொறுப்பிலுள்ள 35 அமைப்புகள் மாநிலத்தில் செயற்பட்டிருந்தன. இந்தத் திட்டத்தின்கீழ், 35,851 நபர்கள் கூட்டுறவுப்பயிற்சி அளிக்கப்பட்டனர். உலவும் திரையரங்கு ஊர்தியை இயக்குவதற்காகவும், இயக்கத்தை விளம்பரப்படுத்துவதற்கு அகில இந்தியக் கூட்டுறவு வாரவிழாவைக் கொண்டாடுவதற்காகவும் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் அரசால் உதவித்தொகை யளிக்கப்பட்டது.

**மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் :** மேலும் இரண்டு கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள் தொடங்கப்பட்டன. திட்டக் காலத்து இறுதியில் 9 பயிற்சி நிலையங்கள் இருந்தன. இலாக்காப் பணியாளர் தொகுதிக்காக மதுரையிலிருந்த பயிற்சி நிலையம் மூடப்பட்டது. 1-7-1962ஆம் தேதியிலிருந்து இந்த நிலையங்கள் மீதான கண்காணிப்பு, இலாக்காவிலிருந்து தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கு மாற்றப்பட்டது. சென்னை நகரத்திலுள்ள மண்டலக் கூட்டுறவுப் பயிற்சி நிலையமும்கூட, தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கு மாற்றப்பட்டது. இந்தக் காலத்தின்போது, 3,945 மாணவர்கள் பயிற்சியளிக்கப்பட்டனர். உறுப்பினர் கல்விச் செயல்திட்டத்தின்கீழ், 1,50,303 உறுப்பினர்கள் பயிற்சியளிக்கப்பட்டனர். கூட்டுறவுச் சங்கங்களின் 2,177 செயலாளர்களும், மேலாளர்களுங்கூடக் குறுகியகாலப் பாடத் திட்டங்களில் பயிற்சி யளிக்கப்பட்டனர்.

**1966-67-லிருந்து 1968-69 வரையுள்ள ஆண்டுகளில்:** 20-7-1967ஆம் தேதியிலிருந்து சிக்கனம் காரணமாக, உறுப்பினர் கல்விச் செயல்திட்டம் நிறுத்தப்பட்டது. இதரப் பயிற்சித் திட்டங்கள் அமலில் இருந்தன.

**நான்காவது ஐந்தாண்டுத் திட்டம்:** இத் திட்டக்காலத்தின் போது, அமல்படுத்தப்பட்ட திட்டங்களாவன:

(1) அனைத்திந்தியக் கூட்டுறவு வாரவிழாக் கொண்டாடுதல். (2) உயர்நிலைப் பள்ளிகளிலும், உயர்நிலைத் தொடக்கப் பள்ளிகளிலும் கட்டுரைப் போட்டிகளையும், வாக்குவாதப் போட்டிகளையும் நடத்திப் பரிசுகளை வழங்குதல். (3) மாநில, மாவட்ட மட்டங்களில் நூலகங்களை அமைத்தல். (4) மாநிலத்திலுள்ள மூன்று பல்கலைக்கழகங்களில் பி. காம்., எம். காம். பாடப்படிப்புகள் ஒவ்வொன்றில், 'கூட்டுறவு' என்ற பாடத்தில் முதலாவதாகவும், இரண்டாவதாகவும் தேர்ச்சிபெறும் பல்கலைக் கழக மாணவர்களுக்குப் பொற்பதக்கங்களும், வெள்ளிப்பதக்கங்களும் வழங்குதல். (5) விளம்பரமும் பிரச்சாரமும்.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், ஐந்தாண்டுத் திட்டங்களில் சேர்க்கப்பட்ட கூட்டுறவுக் கல்விப் பயிற்சித் திட்டங்களை அமல் செய்து வருகிறது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பல்வேறு திட்டங்களுக்காக ரூ. 5.86 இலட்சம் செலவு செய்யப்படும்.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் — யோசனைகள் ரூ. 85.65 இலட்சம் நிதி முதலீட்டைக்கொண்ட பல்வேறு திட்டங்கள் ஆலோசனைக்காகத் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவை:

(i) தற்போதுள்ள பயிற்சிநிலையங்களை நடத்துதல்,

(ii) விளம்பரமும், பிரச்சாரமும்,

(iii) இலாக்காப் பணியாளர்களுக்காக நிலவள வங்கித் தொழிலில் குறுகியகாலப் பயிற்சித் திட்டம்,

(iv) கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிக்காகக் கட்டடம் கட்டுதல்,

(v) உறுப்பினர் கல்வித்திட்டம்,

(vi) குடியரசு தினம், காந்தி ஜெயந்தி ஆகிய விழாச் சம்பந்தமாக அலங்கார வண்டிகள் தயாரித்தல்.

## IV வேளாண்மைப் பொறியியல் பணி நிலையம் (Agro-Engineering and Servicing Centre)

பொறியாளர்களிடையே வேலையில்லாப் பிரச்சினையைத் தணித்து விவசாயப் பொறியியல் வாடிக்கைப் பணியை வழங்கும் நோக்கத்தைக்கொண்டு, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தால்

ஆதரிக்கப்பட்ட திட்டத்தின்கீழ், நான்காவது திட்டக்காலத்தின் போது, வேளாண்மைப் பணிக் கூட்டுறவுக் கழகங்களையமைக்கும் திட்டம் அமல்படுத்தப்படுவதற்கு எடுக்கப்பட்டது. 16 மாவட்டக் கூட்டுறவு வேளாண்மைப் பணிச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. மற்றும், சமுதாய வளர்ச்சி வட்டாரங்களைத் தங்கள் விவகார எல்லையாகக் கொண்டு, 154 வேளாண்மைப் பொறியியல் பணிக் கூட்டுறவு நிலையங்கள் அமைக்கப்பட்டன.

தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தால் வகுக்கப்பட்ட திட்டத்தின்படி, எந்திரக் கலப்பைகளையும் (டிராக்டர்கள்) விவசாயப் பொறிகளையும் பணிசெய்வதற்காகவும்-பழுதுபார்ப்பதற்காகவும் ஒவ்வொரு சங்கமும், பின்வரும் காரியங்களுக்காக ரூ. 2.89 இலட்சம் ஒரு மொத்த உதவிக்காகத் தகுதி பெற்றிருக்கிறது. பொறிகள்—தளவாடங்களை வாங்குவதற்காகப் பங்கு மூலதனம், பணிமனைகளைக் கட்டுவதற்காக உதவி, வங்கிக் கடனுதவியைப் பெறுவதற்காக இறுதிப் பணஉதவி, 2 ஆண்டுகள் காலத்திற்காகப் பரப்பப்பட்ட சிப்பந்தி மானிய உதவி, இயந்திரக் கலப்பைகள் வாங்குவதற்காகப் பங்கு மூலதன உதவி, இயந்திரக் கலப்பைகளுக்காகவும் இதர விவசாயத் தளவாடங்களுக்காகவும் கொட்டகைகளைக் கட்டுவதற்காக உதவி, 2 ஆண்டுகள் காலத்திற்குப் பரப்பப்பட்ட இயந்திரக் கலப்பைகள் இயக்குபவர்களுக்காக மானிய உதவி ஆகியன. இந்தத் திட்டத்தின்கீழ் 7 நிலையங்களுக்காக 10.825 இலட்சம் முதலீடு ஐந்தாவது திட்டத்திற்காக யோசனை கூறப்பட்டிருக்கிறது.

மாவட்டச் சங்கங்கள் மட்டுமன்றி, தற்போது ஒவ்வொரு சமுதாய வளர்ச்சி வட்டாரத்திலும் 154 விவசாயப் பொறியியல் கூட்டுறவு நிலையங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு சமுதாய வளர்ச்சி வட்டாரத்திற்காகவும் அத்தகைய நிலையங்களை யமைப்பதற்கு யோசிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலையத்தின் பிரதான நோக்கமாவது: கிணறுகளை ஆழப்படுத்துவதற்காக, முன்னுரிமையடிப்படையின் பேரில் அரசு இலாக்காக்களிலிருந்து பொறிகளை வாங்குதல், நிலங்களை மட்டப்படுத்துதல் முதலியவற்றில் குடியானவர்களுக்கு உதவி செய்வதும்; வட்டார மட்டத்தில் விவசாயப் பொறிகளுக்காகப் பணி வசதிகளையும் பழுதுப்பார்க்கும் வசதிகளையும் அளிப்பதும்; நில அபிவிருத்தியை மேற்கொள்ளுதலுமே. மாநில அரசுகளால் இந்த நிலையங்களுக்கு நிதியுதவி அளிக்கப்பட வேண்டும். ஐந்தாவது திட்டக்காலத்திற்காக உத்தேசிக்கப்பட்ட முதலீடு ரூ. 300 இலட்சமாகும். வட்டியில்லாப் பங்கு மூலதனம், பொறிகளை வாங்குவதற்காக வட்டிபெறும் கடன், பணிமனை-

அலுவலகங்களைக் கட்டுவதற்காக 300 நிலையங்களுக்கு உதவி, 3 ஆண்டுகளுக்குச் சிப்பந்திமானியம் ஆகியவை வாயிலாக இந்த உதவி அளிக்கப்படும்.

## V நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்

முதலாவது திட்டக்காலத்தின்போது, 687 பிரதம பண்டசாலைகளும், 14 கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலைகளும் அமைக்கப்பட்டன. திட்டக்காலத்து இறுதியாண்டின்போது, பிரதம பண்டசாலைகளால் செய்யப்பட்ட விற்பனைகள் ரூ. 656 இலட்ச மதிப்பிற்கு இருந்தன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தின்போது மொத்த விற்பனைக் கூட்டுறவுப் பண்டசாலைகள், மாவட்டக் கூட்டுறவு வழங்குதல் விற்பனைச் சங்கங்களாகத் திருத்தியமைக்கப்பட்டன. 474 புதிய பிரதம பண்டசாலைகள் அமைக்கப்பட்டன. திட்டக்காலத்து இறுதியாண்டின் போது, அவைகளால் செய்யப்பட்ட விற்பனைகளின் மதிப்பு ரூ. 1,236 இலட்சத்திற்கு இருந்தன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிவரைக்கும், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்காகக் குறிப்பிட்ட செயல் திட்டங்கள் யாதுமில்லை. மூன்றுவது திட்டத்தின்போது, குறிப்பாக 1962ஆம் ஆண்டுச் சீனப் படையெடுப்பினுல் ஏற்பட்ட தேசிய அவசர நிலை தோன்றிய பிறகு, நுகர்வோர் இயக்கம் ஒரு தனிக் கவனத்தைப் பெற்றது. மொத்த விற்பனைப் பண்டசாலைகளையும், பிரதம பண்டசாலைகளையும் அமைப்பதற்கு, மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட ஒரு செயல்திட்டம், பலமான நிதியுதவியுடன் அமல் செய்யப்பட்டது. பொதுமக்களுக்கு நியாய விலையில் நுகர்பொருள்கள் வழங்குதலை நிச்சயப்படுத்தும் நோக்கத்துடனும், விலைவாசியைக் கட்டுப்படுத்தவும் 50,000-க்கும் மேற்பட்ட மக்கள்தொகையையுடைய பட்டினங்களில் அத் திட்டம் அமல் படுத்தப்பட்டது. இத் திட்டத்தின்கீழ், தொடங்கப்பட்ட பண்டசாலைகளில் அரசு பங்குகள் எடுத்திருக்கின்றது. மற்றும், அவைகளின் நடைமுறை மூலதனம், டிரக்குகள் வாங்குதல், கிடங்குகள் கட்டுதல் ஆகியவைகளுக்காக அரசு நிதியுதவி யளித்தது. விலைகளை நிலைப்படுத்துவதில் ஒரு மேல் நடவடிக்கையாக, 2 இலட்சத்திற்கும் அதிகப்பட்ட ஒரு மக்கள்தொகையையுடைய நகரங்களிலும், பட்டினங்களிலும் துறைப்பண்டசாலைகளையமைத்தல் தொடங்கப்பட்டது. மேற்கண்டவைகளை அமல்படுத்துவதில் கீழ்க்காணும் சாதனைகள் அடையப்பட்டன:

(i) 133 கூட்டுறவுப் பண்டசாலைகள், அரசு பங்கு மூல தன உதவியளிக்கப்பட்டன.

(ii) 240 பண்டசாலைகள், சிப்பந்தி மானிய உதவியைக் கொண்டு புத்துயிரளிக்கப்பட்டன.

(iii) (அ) 45 பண்டசாலைகள், காஃபி அரைக்கும் இயந் திரங்களை யமைப்பதற்கு உதவப்பட்டன.

(ஆ) 17 பண்டசாலைகள், எண்ணெய் பிழியும் இயந்திரங்களை யமைப்பதற்கு உதவப்பட்டன.

(இ) 10 பண்டசாலைகள், மாவு ஆலைகளையமைப்ப தற்கு உதவப்பட்டன.

(iv) 52 பண்டசாலைகள், வீட்டில் கொடுத்தல் முறைக் காக உதவியளிக்கப்பட்டன.

(v) 18 பண்டசாலைகள், அரசு உதவியைக்கொண்டு கிடங்கு-அலுவலகக் கட்டடங்களை யமைத்தன.

1966–67ஆம் ஆண்டிலிருந்து 1968–69ஆம் ஆண்டு வரை யுள்ள ஆண்டுகளின்போது, கீழ்க்காணும் திட்டங்கள் மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டங்களாக அமல்செய்யப்பட்டன.

(i) பிரதம கூட்டுறவுப் பண்டசாலைகளுக்குப் பங்கு மூலதன உதவித்தொகையளித்தல்.

(ii) பண்டசாலைகளுக்குப் புத்துயிரளித்தலும், சிப்பந்தி மானியம் வழங்குதலும்.

(iii) மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்குப் பங்கு மூல தனமும் நடைமுறை மூலதனமும் வழங்குதல்.

(iv) கிடங்குகளைக் கட்டுவதற்காகவும், டிராக்டர்களை வாங்குவதற்காகவும் பண்டசாலைகளுக்கு நிதியுதவி யளித்தல்.

மற்றும், ஓர் இலட்சத்திற்கு மேற்பட்ட மக்கள்தொகை யைக்கொண்ட பட்டினங்களில், பல்பிரிவுப் பண்டசாலைகளைத் திறக்கும் திட்டம் மேற்கொள்ளப்பட்டது. பல்பிரிவுப் பண்டசாலை கள், சென்னையில் 2-ம், கடலூர், மதுரை, கோவை, திருநெல் வேலி, வேலூர், சேலம், திருச்சி, நாகர்கோவில் ஆகிய நகரங்கள் ஒவ்வொன்றிலும் 1-ம் திறக்கப்பட்டன. பங்கு மூலதனமாகவும் கடன்களாகவும், மேசை நாற்காலிகள் வாங்குவதற்காக மானிய

மாகவும் அவைகளுக்கு நிதியுதவி யளிக்கப்பட்டன. மாநில மட்டத்தில் ஒரு நுகர்வோர் சம்மேளனம் அமைக்கப்பட்டது. 1968-69ஆம் ஆண்டில், பிரதம பண்டசாலைகளால் செய்யப்பட்ட மொத்த விற்பனைகளின் மதிப்பு ரூ. 29 கோடிக்கு இருந்தன.

நான்காவது திட்டக்காலத்தின்போது, கீழ்க்காணும் திட்டங்கள் மாநிலத் திட்டங்களாக எடுக்கப்பட்டு அமல்படுத்தப்பட்டன:

(i) பிரதம பண்டசாலைகளுக்கு ரூ. 10 இலட்சம் அளவிற்குப் பங்குமூலதன உதவியளித்தல்.

(ii) பிரதம பண்டசாலைகளுக்கு ரூ. 2 இலட்சமளவிற்குச் சிப்பந்தி மானியம் அளித்தல்.

(iii) கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்குக் கிடங்குகள் கட்டுவதற்காக ரூ. 10 இலட்சம் அளவிற்கும் லாரிகள் வாங்குவதற்காக ரூ. 9 இலட்சம் அளவிற்கும் நிதியுதவி அளித்தல்.

கூட்டுறவுப் பண்டசாலைகளின் வியாபாரத்தை விரிவுபடுத்தும் பொருட்டு, கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலைகளையும், பெரிய பிரதம பண்டசாலைகளையும், சிறிய சிறப்பங்காடிகளையும் அமைத்திருக்கின்றன. 1973ஆம் ஆண்டு மார்ச்சு வரையில், அத்தகைய அங்காடிகள் 41 அமைக்கப்பட்டன. 1974ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்திற்குள், மேலும் அத்தகைய அமைப்புகள் 21 நிறுவப்பட்டிருக்கும்.

நான்காவது திட்டத்தின்போது, கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கும், மாவட்டக் கூட்டுறவு வழங்குதல் விற்பனைச் சங்கங்களுக்கும், சலவைச் சோப்பு அமைப்புகள், காஃபி அரைக்கும் அமைப்புகள், காகிதம் எழுதுபொருள் அமைப்புகள், சோளப் பொரி யமைப்புகள், மசாலை அரைக்கும் அமைப்புகள் போன்ற நுகர்வோர் தொழில்களை யமைப்பதற்காக நிதியுதவி யளிக்கப்பட்டன.

1968-69ஆம் ஆண்டிற்குப் பிறகு, மேலும் 3 பல்பிரிவுப் பண்டசாலைகள் திறக்கப்பட்டன. தற்போது மாநிலத்தில், 13 பல்பிரிவுப் பண்டசாலைகள் இருக்கின்றன. 1972-73ஆம் ஆண்டில், பல்பிரிவுப் பண்டசாலைகளால் செய்யப்பட்ட விற்பனைகளின் மதிப்பு 924.14 இலட்சமாக இருந்தது. நான்காவது திட்டத்தின் இறுதியாண்டில், பிரதம பண்டசாலைகளால் செய்யப்பட்ட விற்பனைகளின் மதிப்பு ரூ. 50 கோடியாக இருக்கும்.

மற்றும், இந்திய அரசு, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் விரைவுபடுத்தப்பட்ட வளர்ச்சிக்கான மத்தியத்துறைத் திட்டத்தின்கீழ் 7 மொத்த விற்பனைப் பண்டசாலைகளாலும், மாவட்ட விநியோக விற்பனைச் சங்கங்களாலும், சில்லரை விற்பனை அங்காடிகள் அமைக்கப்படுவதற்கும், பல்பிரிவுப் பண்டசாலைகளை நிறுவுவதற்குமான திட்டத்தை ஒப்பளித்தது.

ஐந்தாவது திட்டக்காலத்தின்போது, சுமார் ரூ. 236 இலட்சம் நிதிமுதலீட்டைக் கொண்ட திட்டங்கள் யோசனை கூறப்பட்டிருக்கின்றன. முக்கியத் திட்டங்கள் பின்வருமாறு:

(i) மொத்த விற்பனைப் பண்டசாலைகளால் 10 கிடங்குகள் கட்டப்படுதல்.

(ii) மொத்த விற்பனைப் பண்டசாலைகளால் 10 லாரிகள் வாங்கப்படுதல்.

(iii) பலவீனமான மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு மறுவாழ்வு அளித்தல்.

(iv) 50 பிரதம கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கு, ஒரு பண்டசாலைக்கு ரூ. 10,000 வீதம் பங்கு மூலதன உதவி.

(v) ஒரு பண்டசாலைக்கு ரூ. 3,000 வீதம் 5 ஆண்டுகளுக்குப் பரப்பப்பட்ட, சிப்பந்தி மானிய உதவி—100 சங்கங்கள்.

(vi) பிரதம பண்டசாலைகளுக்குப் புத்துயிரளித்தல்.

(vii) மாநில நுகர்வோர் கூட்டமைப்பிற்குப் பங்கு மூலதன உதவி.

(viii) மாநில நுகர்வோர் கூட்டமைப்பால் கிடங்கு வசதி அலுவலகம் கட்டப்படுதல்.

(ix) மாநில நுகர்வோர் கூட்டமைப்பால் 4 டிரக்கு வண்டிகள் வாங்கப்படுதல்.

(x) 100 நவீன சில்லரை விற்பனையமைப்புகளுக்கு நிதியுதவி.

ஐந்தாவது திட்ட இறுதியாண்டில், பிரதம பண்டசாலைகளில் செய்யப்படவேண்டிய விற்பனைகளின் மதிப்புச் சுமார் ரூ. 75 கோடியாக மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது.

**(vi) இதரப் பலவகைக் கூட்டுறவுச் சங்கங்கள்**

தொழிலாளிகள், சலவைத் தொழிலாளர்கள், சவரத் தொழிலாளர்கள் முதலியவர்கள் போன்ற சமுதாயத்தின் வலுவற்ற பகுதியினர்களின் பொருளாதார வளர்ச்சிக்காக வெவ்வேறு விதமான கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட்டன. முதலாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலும், சமுதாயத்தின் வலுவற்ற பகுதியினருக்காக அமைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்காக எந்தக் குறிப்பிட்ட செயல்திட்டமும் அமல்படுத்தப்படவில்லை.

**(i) தொழில் ஒப்பந்தச் சங்கங்கள் :** 1965 – 66ஆம் ஆண்டிறுதியில் 107 தொழில் ஒப்பந்தச் சங்கங்கள் இருந்தன. அவை ஆண்டுதோறும் ரூ. 35 இலட்சம் மதிப்பிற்கு வேலைகளை நிறைவேற்றின. அவற்றில் மூன்றாவது திட்டக்காலத்தின்போது 55 சதவிகிதங்கள் அமைக்கப்பட்டன. மூன்றாவது திட்டத்திலும், நான்காவது திட்டத்திலும் அவைகளுக்கு வட்டியில்லாத பங்கு மூலதனம் வட்டிபெறும் நடைமுறை மூலதனக் கடன், வட்டியில்லாத காப்பு இருப்பு நிதிக் கடன், சிறிய கருவிகளை வாங்குவதற்காக வட்டியில்லாக் கடன், ஓராண்டுக் காலத்திற்காக ஓர் இளநிலை ஆய்வாளரின் இலவசப் பணி ஆகிய உதவிகள் அளிக்கப்பட்டன. ஐந்தாவது திட்டத்தில், நடப்பிலுள்ள 40 சங்கங்களைச் செயற்படுத்துவதற்கும் அல்லது ஒரு மாவட்டத்தில் 3 வீதம் புதிய சங்கங்களை யமைப்பதற்கும் உத்தேசிக்கப்பட்டது. ஐந்தாவது திட்டத்திற்காக இந்தச் சங்கங்களின்மீது ரூ. 14 இலட்சம் முதலீடு யோசனை கூறப்பட்டிருக்கிறது.

**(ii) சலவைத் தொழிலாளர்களுக்கான சங்கங்கள்:** மூன்றாவது திட்டத்தில் மாவட்ட அடிப்படையில் சலவைத் தொழிலாளர்களுக்கான 12 சங்கங்களையமைக்கும் திட்டம் அமல்படுத்தப்பட்டது. 1965 – 66ஆம் ஆண்டிறுதியில் 14 சங்கங்களிருந்தன. இத் திட்டத்தின்கீழ், தொழிலுக்காக அத்தியாவசியமான தளவாடங்களையும் கருவிகளையும் பொருள்களையும் வாங்குவதற்காக உறுப்பினர்களுக்கு உதவியளிக்கப்பட்டது. மூன்றாவது திட்டத்தின்போது, ரூ. 3.88 இலட்சம் செலவழிக்கப்பட்டது. 1966–67ஆம் ஆண்டிலிருந்து 1968–69ஆம் ஆண்டுவரைக்கும் ரூ. 1.54 இலட்சம் செலவழிக்கப்பட்டது. நான்காவது திட்டத்தின்போது சலவைத் தொழிலாளர்களுக்காக எந்தத் திட்டமும் அமலுக்காக எடுக்கப்படவில்லை. 6,769 உறுப்பினர்களைக் கொண்டு 17 சலவைத் தொழிலாளர் சங்கங்களிருந்தன. 1970–71ஆம்

ஆண்டில், அவை 2.27 இலட்சம் அளவுக்குத் தொழிலைப் பெற்றன. ஐந்தாண்டுத் திட்டத்தில், தெரிந்தெடுக்கப்பட்ட சங்கங்களுக்கு ரூ. 4 இலட்சம் அளவுக்கு நிதியுதவி யளிக்க உத்தேசிக்கப்பட்டது. இந்தஉதவி, பங்குகள் எடுப்பதற்காகவும், உறுப்பினர்கள் தளவாடங்களை வாங்குவதற்காகவும், உறுப்பினர்களுக்கு நீண்ட காலக் கடனுகப் பொருள்களை வாங்குவதற்காகவும், 4 இடங்களில் மின்விசைச் சலவையகங்களை யமைப்பதற்காகவும் கொடுக்கப்படுகின்றன.

**(iii) சவரத் தொழிலாளர்களுக்கான சங்கங்கள்:** மூன்றுவது திட்டத்தில், இந்தச் சங்கங்களுக்கான பிரத்தியேகச் செயல் திட்டங்கள் எதுவும் தயாரிக்கப்படவுமில்லை, அமல்படுத்தப்படவுமில்லை. 1966—67ஆம் ஆண்டிலிருந்து 1968—69ஆம்ஆண்டு வரையில், தெரிந்தெடுக்கப்பட்ட சங்கங்களுக்கு, நாற்காலி, மேசை வகைகள், முகம் பார்க்கும் கண்ணுடிகள், முடிவெட்டும் தளவாடங்கள் முதலியவற்றை வாங்குவதற்காக ரூ. 2.19 இலட்சம் நிதியுதவி யளிக்கப்பட்டது. மாநிலத்தில், 2,289 உறுப்பினர்களைக் கொண்ட 17 சவரத் தொழிலாளர்கள் கூட்டுறவுச் சங்கங்களிருந்தன. நான்காவது திட்டத்தில், சவரத் தொழிலாளர்களுக்கான சங்கங்களை வளர்ப்பதற்காகச் செயல்திட்டம் எதுவும் தயாரிக்கப்படவில்லை. தளவாடங்களை வாங்குவதற்காக உறுப்பினர்கட்குக் கடன்களை ஒப்பளித்தல் பலனுள்ளதாக இல்லாததால், 25 நவீனச் சிகையலங்கரிக்கும்சாலைகளை முக்கியப் பட்டினங்களில் கூட்டுறவு அடிப்படையின் பேரில் நிறுவுவது விரும்பத்தக்கதாகக் கருதப்படுகிறது. தளவாடங்கள், நாற்காலி, மேசைகள் முதலியவற்றை வாங்குவதற்காகக் கடனுகவும், மானியமாகவும், கட்டட வாடகை முதலியவற்றிற்கு மானியமாகவும் நிதியுதவியளிக்க ரூ. 6 இலட்சம் ஐந்தாவது திட்டத்திற்காக யோசனை கூறப்பட்டிருக்கிறது.

**(iv) டாக்சி (Taxi) ஓட்டுநர் கூட்டுறவுச் சங்கங்கள்:** மூன்றுவது திட்டத்தின்போது, ஒரு டாக்சி ஓட்டுநர் கூட்டுறவுச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டு ரூ. 1.54 இலட்சம் உதவியளிக்கப்பட்டது. அச் சங்கம், வணிகத் தொழில்துறை இயக்குநர் நிருவாகக் கண்காணிப்பின்கீழ் மாற்றப்பட்டிருக்கிறது.

**(v) சைக்கிள் ரிக்ஷா (Cycle Rickshaw) ஓட்டுநர் கூட்டுறவுச் சங்கம்:** சென்னையில், 1970—71ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. அச் சங்கத்தின் நோக்கம் சைக்கிள் ரிக்ஷாக்களை வாங்கி அவைகளை உறுப்பினர்களுக்குத் தவணை முறையில்

வாங்கும் முறையில் விற்பனை செய்யும் நோக்கத்தைக் கொண்டது. இச் சங்கம் 33 சைக்கிள் ரிக்ஷாக்களைச் சொந்தமாக வைத்திருக்கிறது. கடலூரில் மற்றொரு சங்கத்தை யமைப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. ஐந்தாவது திட்டத்தின் போது, 1,000 சைக்கிள் ரிக்ஷா ஓட்டுநர்கள் நலம் பெறுவதற்கு இன்னும் 5 சங்கங்களை யமைத்து, ரூ. 12.50 இலட்சமளவுக்கு அவைகளுக்கு நிதியுதவ உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. சைக்கிள் ரிக்ஷாக்கள் வாங்குவதற்காக வட்டியில்லாக் கடனாகவும், மானியமாகவும் உறுப்பினர்களுக்கு வட்டியில்லாப் பங்குமூலதனக் கடனாகவும், அலுவலக வாடகை, பணிமனைக் கருவிகள், மேசை-நாற்காலிகள் ஆகியவைகளுக்காக மானியமாகவும், சிப்பந்தி மானியமாகவும் இந்த உதவியளிக்கப்படும்.

(vi) **தமிழ் எழுத்தாளர்கள் கூட்டுறவுச் சங்கம்:** 1961ஆம் ஆண்டில் இது தொடங்கப்பட்டது. எழுத்தாளர் உறுப்பினர்களுக்குத் தங்கள் புத்தகங்களை வெளியிடுவதற்கும், தங்களுக்கு நலந்தரும் வகையில் வெளியீடுகளை விற்பனைக்காக ஏற்பாடு செய்வதற்கும் கடனுதவியளிப்பதே இச் சங்கத்தின் நோக்கமாகும். இச் சங்கம் உறுப்பினர்கட்குக் கடன்கள் கொடுப்பதற்காக ரூ. 0.12 இலட்சம் நிதியுதவி அளிக்கப்பட்டது. ஐந்தாவது திட்டத்தின் போது, ஒரு புத்தகத்திற்கு ரூ. 2,000 வீதம் 50 புத்தகங்களை வெளியிடுவதற்குக் கடனுதவி யளிக்க உத்தேசிக்கப்பட்டது. இந்தக் காரியத்திற்காக ரூ. 1 இலட்சம் முதலீடு யோசனை கூறப்பட்டது.

# 6. தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம்
## (National Co-operative Development Corporation)

### தோற்றம்
### (Origin)

அனைத்திந்தியக் கிராமக்கடன் விசாரணைக் குழுவின் பரிந்துரைகளை அனுசரித்து, தேசியக் கூட்டுறவு வளர்ச்சி, கிடங்கு வசதி வாரியம் (National Co-operative Development and Ware Housing Board), 1956ஆம் ஆண்டில் இந்திய அரசால் அமைக்கப்பட்டது. அதன் நோக்கம், மாநிலங்களில் கடன் வசதி, விற்பனை வசதி, பதனப்படுத்துதல், கிடங்கு வசதி முதலியவற்றை உள்ளடக்கிய விவசாயத் துறையில் கூட்டுறவு வளர்ச்சியை விருத்தி செய்தலாகும். தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி (National Co-operative Development Fund) என்றும், தேசியக் கிடங்கு வசதி வளர்ச்சி நிதி (National WareHousing Development Fund) என்றும், இரண்டு தனிப்பட்ட நிதிகள், அதன் கட்டுப்பாட்டின் கீழ் அமைக்கப்படும். இந்த இரண்டு நிதிகளுக்குப் பொருந்திய தனிப்பட்ட பணிகளையும் அக் கழகம் மேற்கொள்ளும். குடியானவர்களுக்குத் தங்கள் உணவுத் தானியங்களையும் இதர விவசாய விளைபொருள்களையும் சேமித்து வைப்பதற்காகக் கிடங்கு வசதிகளை அளிப்பதற்கு, ஒரு 'மத்தியக் கிடங்கு வசதிக் கழகம்' (Central Ware Housing Corporation) கூட நிறுவப்பட்டது. மத்தியக் கிடங்கு வசதிக் கழகம் 1957ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் பணிபுரியத் தொடங்கியது. மற்றும், எல்லாப் பெரிய மாநிலங்களிலும், மாநிலச் சேமிப்புக் கிடங்கு வசதிக் கழகங்கள் (State Ware Housing Corporations) இப்பொழுது நிறுவப்பட்டிருக்கின்றன. மத்தியச் சேமிப்புக் கிடங்கு வசதிக் கழகம், 1968–69ஆம் ஆண்டு இறுதிவரை 8.45 இலட்ச டன்கள் மொத்தச் சேமிப்புக் கொள்ளளவையைக் (Storage capacity) கொண்ட 108 சேமிப்புக் கிடங்குகளை (Ware Houses) அமைத்திருந்தது. மாநிலக் கிடங்கு வசதிக் கழகங்கள், 1968ஆம் ஆண்டு மார்ச்சு மாத இறுதிவரை சுமார் 10 இலட்ச டன்கள் மொத்தச் சேமிப்புக் கொள்ளளவையைக் கொண்ட 473

சேமிப்புக் கிடங்குகளையும் 98 சேமிப்புத் துணைக்கிடங்குகளையும் அமைத்திருந்தன. இந்தக் கழகங்களால் அளிக்கப்படும் கிடங்கு இரசீதுக்கள் (Ware House Receipts) இன்னும் செலாவணி (Necotiable) ஆகவில்லை. எனினும், இந்தியத் தேசிய வங்கி (State Bank of India) இந்தக் கிடங்குகள் ரசீதுகள் ஆதாரத்தின்பேரில் முன்கடன் அளிக்க ஆரம்பித்திருக்கிறது.

தேசியக் கூட்டுறவு வளர்ச்சி, தானியக் கிடங்கு வசதி வாரியம், 1962ஆம் ஆண்டில், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகமாகவும், மத்தியக் கிடங்குவசதிக் கழகமாகவும் சீரமைக்கப் பட்டது. தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம் இப்பொழுது கிடங்கு வசதிக்குத் தொடர்பான பணிகளைத் தவிர இதுவரை இருந்த வாரியத்தின் மற்ற எல்லாப் பணிகளுக்கும் பொறுப்புள்ள தாக இருக்கிறது. இந்தக் கழகம், இந்திய அரசால் வழங்கப்பட்ட நிதிகளைக்கொண்டு அமைக்கப்பட்ட தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதியை இயக்குகிறது. மற்றும், அது மாநில அரசுகள் மூலம் கூட்டுறவு வளர்ச்சிப் பணித்திட்டங்களுக்கு நிதி அளிக்கிறது.

## கழகத்தின் கடமைகள்

1962ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ், கழகத்தின் முதன்மை யான கடமைகளாவன: உற்பத்தி, பதனப்படுத்துதல், விற்பனை, பண்டச் சேமிப்பு, கூட்டுறவுச் சங்கங்கள்மூலம் விவசாய விளை பொருள்களையும் அறிவிக்கை செய்யப்பட்ட பண்டங்களையும் (Notified Commodities) ஏற்றுமதி—இறக்குமதி ஆகியவற்றிற்கான பணித்திட்டங்களைத் திட்டமிடுதலும், வளர்ச்சி செய்தலும் ஆகும். இந்தப் பணிகளைப் புரிவதற்காகக் கழகத்திற்குக் கீழ்க் காணும் அதிகாரங்கள் அளிக்கப்பட்டிருக்கிறது.

(அ) கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடனளிப்பதற்காகவும் கூட்டுறவு வளர்ச்சிப் பணித் திட்டங்களை அமல்படுத்துவதற்கான சிப்பந்திகளை அமர்த்துவதற்காகவுங்கூட மாநில அரசுகளுக்குக் கடன்களையும் மானியங்களையும் அளித்தல்.

(ஆ) மத்திய அரசின் சார்பில், விவசாய விளைபொருள் களையும், அறிவிக்கை செய்யப்பட்ட பண்டங்களையும் கொள் முதல் செய்வதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன் வழங்கு வதற்காக மாநில அரசுகளுக்கு நிதிகள் அளித்தல்.

(இ) விதைகள், உரங்கள், எருக்கள், விவசாயக் கருவிகள் ஆகியவற்றையும், விவசாய விளைபொருள்களின் அபிவிருத்திக்

கான இதரப் பொருள்களையும் வழங்குவதற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள்மூலம், பணித்திட்டங்களைத் திட்டமிடுதலும் வளர்ச்சி செய்தலும்.

மேற்சொன்னவைகள் அன்றியும், கூட்டுறவுச் சங்கங்களால் எதிரிடப்படும் பிரச்சினைகளை அடையாளப்படுத்தி அவைகளுக்குத் தக்க தீர்வுகாணும் பணியிலும் கழகம் ஈடுபட்டிருக்கிறது. மத்திய அரசு, மாநில அரசுகள், ரிசர்வ் வங்கி, இந்தியத் தேசிய வங்கி, தொழில்நிதிக் கழகம், இந்திய உணவுக் கழகம் மற்றும், இதரப் பொதுத்துறை நிறுவனங்கள் போன்ற பொருத்தமான அதிகார நிறுவனங்களுடன் கலந்து கழகம் இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் நடவடிக்கைகளை எடுக்கிறது. கழகத்தால் கூட்டப்பட்ட கருத்து அரங்குகளிலும் மாநாடுகளிலுங்கூட இப் பிரச்சினைகள் விவாதிக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட பிராந்தியத்தில் விற்பனைத் துறையில் ஒரு கூட்டுறவுச் சங்கத்தால் ஏதாவதொரு தனிப்பட்ட பிரச்சினை எதிரிடப்பட்டால் ஒரு தனிப்பட்ட ஆராய்ச்சி நடத்தப்படுகிறது. கூட்டுறவு இயக்கத்தால் எதிரிடப்படுகின்ற பல்வேறு பிரச்சினைகளைக் குறித்து, அவ்வப்போது கழகத்திற்கு ஆலோசனை வழங்கும் ஒருசில பணி ரீதியான குழுக்களைக் (Functional Committees) கூடக் கழகம் அமைத்திருக்கிறது. உண்மையாகவே, நிதி வழங்கும் ஓர் அமைப்பாக மட்டுமன்றி, அபிவிருத்தி செய்யும் ஒரு நிறுவனமாகவுங்கூடக் கழகம் இயங்குகிறது. நிதியளித்தல் ஓர் இலட்சியமன்று; அது ஒரு வெறும் சாதனம்தான். விவசாய வளர்ச்சியும் குடியானவனின் பொருளாதார நிலைமையை மேம்படுத்துதலுமே அதன் இலட்சியமாகும். எனவே, கழகம் அபிவிருத்திசெய்யும் நடவடிக்கையின் மீது மேலான வலியுறுத்தலைக் கொடுக்கிறது.

உணவுப் பொருள்கள், கால்நடைத் தீவனங்கள், கச்சாச் சணல், காய்கறி, எண்ணெய் போன்ற விவசாய விளைபொருள்களின் வளர்ச்சியில், பிரதானமாகக் கழகம் கவனம் செலுத்துகிறது. அது மட்டுமன்றி, அரக்கு, சோப்பு, சிமெண்டு, தேயிலை, உரம் முதலியவை போன்ற அறிவிக்கை செய்யப்பட்ட பண்டங்கள் பலவற்றிற்காகக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மாநில அரசுகள் மூலம் கழகம் நிதியுதவி வழங்குகிறது.

## கழகத்தின் நிருவாகம்

மத்திய விவசாய அமைச்சரும் (Union Minister of Agriculture), மத்திய விவசாயத்துறைத் துணை அமைச்சரும் (Minister

of State in The Ministry of Agriculture) முறையே, கழகத்தின் தலைவரும், துணைத்தலைவருமாவர். பல்வேறு இதர மத்திய அமைச்சரகத் துறைகளும், இந்திய ரிசர்வ் வங்கி, இந்தியத் தேசிய வங்கி, இந்திய உணவுக் கழகம், மத்தியக் கிடங்கு வசதிக் கழகம் முதலியன போன்ற நிறுவனங்களும் இந்தக் கழகத்தில் பிரதிநிதித்துவம் கொண்டிருக்கின்றன. அரசு அதிகாரப்பற்றற்றவர்களும், நிபுணர்களுங்கூட அதில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டிருக்கின்றனர். ஆக மொத்தத்தில் கழகம் 20 உறுப்பினர்களைக் கொண்டிருக்கின்றது. மத்திய அரசால் அமர்த்தப்பட்ட அதன் செயலாளர் தலைமை நிருவாக அதிகாரியாக இருக்கிறார்.

## எவ்வாறு கழகத்தின் நிதிகள் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழிப்படுத்தப்படுகின்றன

கழகம், தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி என்று வழங்கப்படும் ஒரு நிதியைப் பராமரிக்கிறது. இந்த நிதியிலிருந்து, மாநில அரசுகளுக்கும் தேசிய மட்டத்துக் கூட்டுறவு நிறுவனங்களுக்கும் கடன்கள் வாயிலாகவும், உதவித்தொகைகள் வாயிலாகவும் நிதியுதவி ஒப்பளிக்கப்படுகிறது. மாநில அரசுகளுக்கு அநேகமாக விற்பனை, பதனப்படுத்துதல், விவசாய விளைபொருள்கள், விவசாயக் கருவிகள் வழங்குதல், சேமிப்புச் செய்தல் மற்றும், இதரத் தொடர்புள்ள சேவைகளை மேற்கொள்ளுகிற கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனத்தில் பங்குகொள்ளுதல் காரியங்களுக்காக நிதியுதவி வழங்கப்படுகிறது. இந்த நடவடிக்கைகளை மேற்கொள்கின்ற சங்கங்களுக்குக் கடனளிப்பதற்காகவும், உதவித்தொகை யளிப்பதற்காகவும்கூட நிதி உதவியை மாநில அரசுகளுக்குக் கழகம் அளிக்கிறது. தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி, முந்திய தேசியக் கூட்டுறவு வளர்ச்சி, சேமிப்புக் கிடங்கு வசதி வாரியத்திற்காக உத்தேசிக்கப்பட்ட தொகையையும், மத்திய அரசால் கழகத்திற்குக் கொடுக்கப்பட்ட கடன்களையும், உதவித்தொகையையும், அதனால் அளிக்கப்பட்ட கடன்கள்மீது கிடைக்கும் வட்டியையும் மற்றும், அதனால் செய்யப்பட்ட முதலீடுகளிலிருந்து வருவாயையுங் கொண்டது.

கூட்டுறவு நிறுவனங்களுக்கு எல்லா நிதியுதவியும் மாநில அரசுகள்மூலமாகவாவது, மாநில அரசு உத்தரவாதத்தின் பேரில் மாநிலக் கூட்டுறவு வங்கிகள் மூலமாகவாவது வழங்கப்படுகிறது. தேசியக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம் (National Co-operaive Marketing Federation) போன்ற ஒருசில நிறுவனங்களுக்குத்

தவிர, நிதியுதவி, கூட்டுறவு நிறுவனங்களுக்கு நேர்முகமாக அளிக்கப் படுவதில்லை. இந்தக் கழகம், மாநில அரசுகளுக்கு நான்கு பெரிய திட்டங்களின்கீழ் நிதியுதவி அளித்து வந்திருக்கிறது. அதாவது, (அ) மத்திய அரசால் உதவியளிக்கப்பட்ட மாநிலத் திட்டங்கள்; (ஆ) மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டங்கள்; (இ) கழகத்தால் ஆதரிக்கப்பட்ட திட்டங்கள்; (ஈ) மத்தியத்துறைத் திட்டங்கள்.

## தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் திட்டங்கள்

**(i) மத்திய அரசால் உதவியளிக்கப்பட்ட மாநிலத் திட்டம் :** இந்தத் திட்டத்தின்கீழ், திட்டக் குழுவாலும், இந்திய அரசாலும் அங்கீகரிக்கப்பட்ட திட்ட நிகழ்ச்சிமுறைக் குறிப்புகளின் அடிப் படையின்பேரில், மாநில அரசுகளுக்கு நிதிகள் வழங்கப்பட்டன. எனினும், 1972–74ஆம் ஆண்டிலிருந்து இந்தத் திட்டத்தின் கீழ், மாநில அரசுகளுக்குக் கழகத்தால் நிதிவழங்குதல் நிறுத்தப் பட்டுவிட்டது. இனிமேல், இந்தத் திட்டத்தின்கீழ் மாநில அரசு களுக்கு மத்திய அரசு நேர்முகமாக நிதி வழங்கும்.

**(ii) மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டம்:** இத் திட்டம் 1969–70ஆம் ஆண்டில் அமலுக்கு வந்தது. இத் திட்டத் தின்கீழ், நிறுவனக் கடன் பெறுவதற்கு விளிம்புப் பணத் தேவை களுக்காக உரங்கள் விநியோகத்தில் மொத்த விற்பனையாளர் களாகச் செயற்படும் விற்பனை வசதிச் சங்கங்களுக்குக் கடன்களை யும் பங்கு மூலதனத்தையும் அளிப்பதற்கு வசதிசெய்யும்பொருட்டு நீண்டகாலக் கடன்களைக் கழகம் மாநில அரசுகளுக்கு அளிக்கிறது. அத்தகைய கடனுதவி, ஒரு வருடத்தில் கூட்டுறவுச் சங்கங்களால் விற்பனை செய்யப்படும் உரங்கள், விவசாயக் கருவிகள் ஆகிய வற்றின் மதிப்பில் 10–லிருந்து 15 சதவிகித அளவிற்கு வரை யறுக்கப்படுகிறது.

**(iii) கழகத்தால் ஆதரிக்கப்பட்ட திட்டம் :** 1964–65ஆம் ஆண்டிலிருந்து நடைமுறையிலிருந்துவரும் இந்தத் திட்டங் களுக்கு நிதியுதவி, கீழ்க்காணும் காரியங்களுக்காக வழங்கப் படுகிறது.

(அ) மாநிலத் தலைமை விற்பனைச் சம்மேளனத்திலும், தேசிய விற்பனைச் சம்மேளனத்திலும் விருத்திசெய்யும் நிபு ணத்தையும், தொழில்நுட்ப நிபுணத்தையும் (Promotional

and Technical skill) ஏற்படுத்துதல். இந்தத் திட்டத்தின் கீழ், 25 வகை நிபுணர்களை மாநிலச் சம்மேளனங்களும், தேசியச் சம்மேளனங்களும் அமர்த்துவதற்காகக் கழகம் நிதியுதவி அளிக்கிறது. நிதியுதவி முழுமையும் 5 ஆண்டுக் காலப்பரப்பில் மானிய வடிவத்தில் வழுக்கு வீதத்தில் (Tapering Scale) அளிக்கப்படுகிறது.

(ஆ) இத் திட்டத்தின்கீழ், கூட்டுறவுப் பதனப்படுத்துதல், விவசாயக் கருவிகள் தயாரித்தல் ஆகிய தொழில்களை அமைப்பதற்காக, நிறைவேற்றக் கூடியதா என்பது பற்றிய—யோசனை கூறும் அறிக்கைகளை — (Feasibility / Project Reports) தயாரிப்பதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களாலும் அல்லது மாநில அரசுகளாலும் செய்யப்பட்ட செலவுகளைக் குறித்து, மாநில அரசுகளுக்கு 100 சதவிகித அளவுக்கு மானியமாகக் கழகம் நிதியுதவி வழங்குகிறது.

(இ) 1967—68ஆம் ஆண்டில் நடைமுறைக்கு வந்த சிறு அணு உரங்கள் (Granuled Fertilizers) உற்பத்தியமைப்புகளை நிறுவும் திட்டத்தின்கீழ் மாநில அரசுகளுக்கு நீண்டகாலக் கடன்களாகக் கழகம் நிதியுதவியளிக்கிறது. மாற்றப்பட்ட ஏற்பாட்டின் படி (Revised Pattern), சுமார் 50 இலட்சம் ரூபாய்க்குத் திருத்தப்பட்ட பிளாக் செலவின் (Block cost) 70 சதவிகிதத்திற்குக் கழகம் நிதியுதவியளிக்கிறது. பிற்பட்ட நிலப்பகுதிகளிலுள்ள அமைப்புகளுக்கு மொத்த முதலீட்டுச் செலவில் 80 சதவிகித அளவிற்குக் கழகம் நிதியுதவி அளிக்கிறது.

(ஈ) 1966—67ஆம் ஆண்டிலிருந்து நடைமுறையிலிருக்கும், விதை உற்பத்தியாளர்கள் — கூட்டுறவுப் பதனப்படுத்துதல் — விற்பனைச் சங்கங்களை அமைப்பதற்கான திட்டத்தின் கீழ்ப் பங்கு மூலதன உதவித்தொகைகள், கிடங்குகளுக்காக நிதியுதவி, விளிம்புப்பணம் (Marginal Money), சிப்பந்திகள் மானியம் (Managerial Subsidy) முதலியனபோன்று 1.74 இலட்ச ரூபாய்த் தொகையைக் கழகம் அளிக்கிறது.

1968—69ஆம் ஆண்டு மற்றொரு முக்கியத் திட்டத்தைக் கழகம் தொடங்கினது. அந்தத் திட்டமானது, எந்திரக் கலப்பைக்காகவும், இதர வேளாண்மை இயந்திரங்களுக்காகவும் சேவை/பழுதுபார்த்தல் நிலையங்களை அமைத்தல்; மற்றும், தெரிந்தெடுக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களால் வேளாண்மை எந்திரங்களில் வாடிக்கையாளர் சேவையை ஏற்படுத்துதல் ஆகியவற்றிற்

குத் தொடர்புள்ளது. உழவர்களுக்கு எந்திரக் கலப்பை வசதிகளை வழங்குவது மட்டுமன்றி, தொழில்நுட்பப் பணியாளர் தொகுதிக்காக வேலைவாய்ப்புகளைக்கூட ஏற்படுத்துகிறதனால், இந்தத் திட்டம் முக்கியமானதாகும். இத் திட்டத்தின்கீழ், 2.89 இலட்ச ரூபாய் மொத்தத் தொகை வழங்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையில், இயந்திரங்களையும், இரண்டு இயந்திரக் கலப்பைகளையும் வாங்குவதற்காகப் பங்கு மூலதனத்தில் பங்கு கொள்ளுதலும், தொழிற்சாலை கட்டுவதற்காகக் கடன் மானியம், சிப்பந்தி மானியம், இறுதிப்பணம் ஆகியவை அளித்தலும் அடங்கியிருக்கின்றன. இந்தத் தொகையனைத்தும் கழகத்தால் மாநில அரசுகளுக்கு வழங்கப்படுகிறது. எனினும், இந்த உதவி பெறுவதற்குச் சங்கம் தனக்குத் தேவையான பங்கு மூலதனத் தொகையைத் திரட்டுவதற்கு வசதி செய்யும் வகையில், உறுப்பினர்களிடமிருந்து 25,000 ரூபாய் அளவிற்குப் பங்குமூலதனத்தைத் திரட்டவேண்டும் என்ற ஒரு நிபந்தனை இருக்கிறது.

இதர மூன்று திட்டங்களும் பின்வருமாறு விவசாய வளர்ச்சிக்குத் தொடர்புள்ளவை: (அ) மாநிலத் தலைமை விற்பனைச் சங்கங்களால் பூச்சிகொல்லி மருந்துகளுக்கான அமைப்புகள் ஏற்படுத்தப்படுதல்; (ஆ) தெரிந்தெடுக்கப்பட்ட கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களால் விவசாயக் கருவிகள் (agricultural Implements) தயாரிக்கப்படுதல்; (இ) மண்வளச் சோதனை ஆய்வகங்களை (Soil Testing Laboratories) அமைப்பதற்கான திட்டங்கள். இந்த மூன்று திட்டங்களின்கீழ்க் கழகம், தன் நிதியுதவியைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மாநில அரசுகள்மூலம் அளித்து வருகிறது. உண்மையாகவே, இந்தத் திட்டங்களும், சிறு குடியானவர்களுக்கு நன்மை செய்யும் நோக்கத்தையுடையன. கிராமப்புறங்களில் மேலான விவசாயக் கருவிகளுக்காகவும், மண்வளச் சோதனைக்காகவும் ஓர் அவசியமிருந்தது என்பதும், ஆனால், இந்தக் காரியங்களுக்காகப் போதுமான ஏற்பாடுகளில்லாமல் இருந்தன என்பதும் தெரியப்பட்டது. ஆகையால், உண்மையாகவே கிராமப்புறங்களில் சிறு விவசாயிகளுக்கு இத் திட்டங்களின் பயனை வழங்கக்கூடிய நிலைமையிலிருந்து அதற்கான உதவியைக் கோரும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு உதவி செய்வதற்காகக் கழகம் முன்வந்தது.

1970–71ஆம் ஆண்டில் நடைமுறைக்கு வந்த மற்றொரு முக்கியத் திட்டமானது, கூட்டுறவுப் பதனப்படுத்துதல் அமைப்புகளுக்கு விளிம்புப்பணம் (Margin Money) வழங்குதலுக்குத் தொடர்புள்ளது. நடைமுறை மூலதன நிதி இல்லாமையால்,

பதனப்படுத்துதல் அமைப்புகள், பெருமளவு முட்டுக்கட்டையிடப் பட்டுத் தங்கள் விளைபொருள்களைப் பதனப்படுத்துதலிலும், விற் பனை செய்தலிலும் அதிக முன்னேற்றத்தையடைய முடியாம லிருக்கின்றன என்பது தெரியப்பட்டது. ஆகையால், கழகம் இத் திட்டத்தைத் தொடங்கியது. இந்தத் திட்டத்தின்கீழ், கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகள் நடைமுறை மூலதனத் தைத் திரட்டுவதற்காக இறுதிப்பணத் தேவைகளின் 75 சதவிகிதம் வரைக்கும் கடன் வடிவில் செலவு ஈடுசெய்தல் நிதியாக (Reimbursement Finance), மாநில அரசுகளுக்குக் கழகம் நிதியுதவி யளிக்கிறது. அந்த நிதியுதவியானது சங்கத்தால் தேவைப்படும் இறுதிப் பணத்தின் 25 சதவிகிதமுள்ள பாக்கித் தொகையைப் பயிரிடும் உறுப்பினர்களிடமிருந்து கூடுதலான பங்கு மூலதனம் மூலம் திரட்டப்படவேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டு வழங்கப் படுகிறது. குறைந்த வளர்ச்சியடைந்த நிலப்பகுதிகளில் அத் தகைய நிதியுதவி சம்பந்தப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் இறுதிப்பணத் தேவையின் 90 சதவிகித வரைக்கும் கிடைக் கிறது.

கூட்டுறவுச் சங்கங்கள், பற்றாக்குறையான நிதி ஆதாரங் களுடையவையாக விருப்பதால், அவை தங்கள் சிப்பந்திகளை நுண் ணறிவுத் தன்மை வாய்ந்த பயிற்சிக்காக அனுப்பிவைக்க முடி யாது என்பது பெருமளவு உணரப்பட்டது. ஆகையால், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் முறையான பணியாளர் தொகுதியில் அமர்த்தப்படுகின்ற பல்வேறு வகைத் தொழில்நுட்பப் பணி யாளர் தொகுதிக்கு நுண்ணறிவுப் பயிற்சிக்கான செலவில் 2/3 பகுதியை வழங்கும் ஒரு திட்டத்தைக் கழகம் தொடக்கம் செய்தது. எஞ்சியுள்ள 1/3 பயிற்சிச் செலவு, சம்பந்தப்பட்ட கூட்டுறவுச் சங்கத்தால் ஏற்கப்படுகிறது. எனினும், இந்த உதவித்தொகையானது, ஓராண்டில் ஒவ்வொரு பயிற்சி நாடுபவ ருக்கு ஒவ்வொரு பயிற்சிக் காலத்திற்கு 5,000 ரூபாய்க்கும், ஒவ்வொரு சங்கத்திற்கு 15,000 ரூபாய்க்கும் வரையறுக்கப் பட்டிருக்கிறது.

### (iv) மத்தியத்துறைத் திட்டங்கள்

(அ) 1970–71ஆம் ஆண்டில் சிற்றளவு, நடுத்தர அள வுப் பதனப்படுத்தும் அமைப்புகளுக்கு நிதி வழங்கும் ஒரு மத்தியத் துறைத் திட்டத்தைக் கழகம் தொடங்கி வைத்தது. இத் திட்டத் தின்கீழ், சிறிய அளவு, நடுத்தர அளவுப் பதனப்படுத்தும் அமைப்புகளின் பிளாக் செலவுக்காகக் கடனுதவியை அளிப்பதற் காக மாநில அரசுகளுக்கு / மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குக்

கழகம் மறுநிதி வகையான நிதியுதவி வழங்குகிறது. 15 இலட்ச ரூபாய்க்கு மேற்படாத செலவில் ஏற்படுத்தப்படும் அமைப்புகள் சிறிய அளவு அமைப்புகள் என்றும், 60 இலட்சம் ரூபாய்க்கு மேற்படாத செலவில் ஏற்படுத்தப்படும் அமைப்புகள் நடுத்தர அளவு அமைப்புகள் என்றும் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. எனினும், 60 இலட்ச ரூபாய்க்கு மேற்பட்டும், செலவை அனுமதிப்பதற்குக் கழகத்திற்கு யுக்தம் உண்டு.

சிற்றளவு அமைப்புகளுக்குப் பிளாக் செலவில் 75 சதவிகிதம் வரைக்கும் மறுநிதிவசதி கிடைக்கும்; நடுத்தர அளவு அமைப்புகளுக்கு 70 சதவிகிதம் மறுநிதி வசதி கிடைக்கும். கூட்டுறவு இயக்கத்தில் குறைந்த வளர்ச்சியடைந்த நிலப்பகுதிகளில் சிறிய அளவு அமைப்புகளுக்கும், நடுத்தர அளவு அமைப்புகளுக்கும் பிளாக் செலவில் 80 சதவிகிதம் வரைக்கும் கழகத்தின் நிதியுதவி கிடைக்கிறது. பிளாக் செலவில் எஞ்சியுள்ள பகுதியைச் சம்பந்தப்பட்ட கூட்டுறவுச் சங்கம் / மாநிலச் சங்கம் திரட்ட வேண்டும். மத்திய அரசு நிலப்பகுதிகளில் (Union Territories) மறுநிதி வசதி வடிவத்தில் கழகத்தால் அளிக்கப்படும் நிதியுதவியானது, தலைமைக் கூட்டுறவு வங்கிகள்மூலமும், திட்டத்தை அமல்படுத்துவதிலடைந்த முன்னேற்றத்தின் அடிப்படையின்பேரிலும் வழங்கப்படும்.

(ஆ) கூட்டுறவுச் சேமிப்புக் கிடங்கு வசதி (Co-operative Storage): இத் திட்டம் 1972—73ஆம் ஆண்டிலிருந்து தொடங்கப்பட்டு, இரண்டு ஆண்டுகள் காலத்திற்கு அதாவது 1973—74ஆம் ஆண்டு வரைக்கும் நடைமுறையிலிருக்கும். இத் திட்டத்தின்கீழ்க் கிடங்குகளைக் கட்டுவதற்காகக் கழகம் நிதியுதவி வழங்குகிறது. மண்டி மட்டத்திலும் கிராம மட்டத்திலும் மொத்தக் கட்டடச் செலவில் 62½சதவிகிதம் அளவிற்குக் கடனுதவி அளிக்கப்படுகிறது. எஞ்சியுள்ள கட்டடச் செலவு அதாவது 37½ சதவிகிதம் மானியத் தொகையாக மாநில அரசுகள் தங்கள் சாதாரண மாநிலத் திட்டங்களின்கீழ் வழங்கவேண்டும்.

(இ) உயர் விளைச்சல் கொடுக்கும் வகைகள் பணித்திட்ட (High Yielding Varieties Programme) நிலப்பகுதிகளிலும், இதர நிலப்பகுதிகளிலும், தெரிந்தெடுக்கப்பட்ட கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்களின் பங்கு மூலதன அடிப்படையைப் பலப்படுத்துதல். இந்தத் திட்டங்கூட 1972—73ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு, இரண்டு ஆண்டுகள் வரைக்கும் அதாவது 1973—74ஆம் ஆண்டு வரைக்கும் நடைமுறையிலிருக்கும். இத்

திட்டத்தின்கீழ், 5 இலட்ச ரூபாயிலிருந்து 8 இலட்ச ரூபாய்க்கு மொத்த விற்பனையைக் கொண்டதும், நடுத்தரமட்டச் செயல் திறனுள்ளதும், மாநில அரசால் கூடுதலான பங்கு மூலதன ஈடுபாட்டுடன் இரண்டு ஆண்டுக் காலத்திற்குள் தன் மொத்த விற்பனைத் தொகையை 6 இலட்ச ரூபாயிலிருந்து 7 இலட்ச ரூபாய் வரைக்கும் அதிகப்படுத்தக்கூடியதுமான சங்கங்களை மாநில அரசுகள் தெரிந்தெடுக்கவேண்டும். இந்தத் திட்டத்தின் கீழ், கழகத்தின் நிதியுதவியானது, ஒவ்வொரு பிரதம விற்பனை வசதிச் சங்கத்திற்கு 1 இலட்ச ரூபாய்ப் பெருமத்திற்கும், மாநில மட்டத்து விற்பனை வசதிச் சங்கத்திற்கு 5 இலட்ச ரூபாய்ப் பெருமத்திற்கும் வரையறுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தின் கீழ் அளிக்கப்படும் நிதியுதவி அனைத்தும் விற்பனைவசதிச் சங்கத்தின் பங்கு மூலதன ஈடுபாட்டிற்காக மாநில அரசுகளுக்கு அளிக்கப்படுகிறது. மத்திய அரசு நிலப்பகுதிகளுக்கு (Union Territories) இந்தத் திட்டத்தின்கீழ்க் கழகம் நிதியுதவி அளிப்பதற்குச் சாத்தியப்படாமல் இருக்கிறது.

## தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் சாதனைகள்

அவ்வப்போது கழகத்தால் யோசனை கூறப்பட்ட பல்வேறு நடவடிக்கைகளின் விளைவாகவும், கழகத்தால் மாநில அரசுகளுக்கு வழங்கப்பட்ட நிதியுதவிகள் விளைவாகவும், இந்தியாவில் கூட்டுறவு விவசாய விற்பனை, பதனப்படுத்துதல் ஆகிய நடவடிக்கைகள் துறையில் ஒரு வெளிப்படையான முன்னேற்றமும் வளர்ச்சியும் இருந்திருக்கிறது.

(i) கூட்டுறவு விற்பனைவசதிச் சங்கங்கள், தங்கள் விற்பனை வசதி நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில், பெருகிவரும் ஒரு பணியைப் புரிந்துவருகின்றன. 1960 – 61ஆம் ஆண்டில் இந்தச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் மதிப்பு 179 கோடி ரூபாய் மட்டுமே இருந்தது. அது 1970 – 71ஆம் ஆண்டில் 649 கோடி ரூபாய்க்கு அதிகரித்தது. உண்மையாகவே, கடந்த 10 ஆண்டுக்காலத்தில், உணவுத்தானியங்களின் விற்பனை முன்னைவிட அதிகமாக இருந்தது. விற்பனை செய்யப்பட்ட உணவுத்தானியங்களின் மதிப்பு, 1960 – 61ஆம் ஆண்டில் 24 கோடி ரூபாயிலிருந்து 1970—71ஆம் ஆண்டில் 261 கோடி ரூபாய்க்கு அதிகரித்தது. விற்பனைச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட மற்றொரு முக்கியமான பொருள் பருத்தியாக இருந்தது. 1970 – 71ஆம் ஆண்டில் 79 கோடி ரூபாய் அளவிற்கு இந்தச் சங்கங்கள் விற்பனை செய்தன. கூட்டுறவு

விற்பனைச் சங்கங்கள் உள்நாட்டு வர்த்தகத்திலும், ஏற்றுமதி வர்த்தகத்திலுங்கூட ஒரு முக்கியப் பங்கை மேற்கொண்டன. 1970 – 71ஆம் ஆண்டில் இந்தக் கூட்டுறவுச் சங்கங்களால் ஏற்றுமதி செய்யப்பட்ட விவசாயப் பொருள்களின் மதிப்பு 5.95 கோடி ரூபாய்க் கிருந்தது.

(ii) கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் விவசாய விளைபொருள்கள் பதனப்படுத்துதல் துறையில், கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் வளர்ச்சிக்காகப் பல்வேறு நடவடிக்கைகளைக் கழகம் யோசனை கூறியிருக்கிறது. பல்வேறு மாநில அரசுகளுக்கும், பல்வேறு மட்டங்களிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்கும், 37 மாதிரித் திட்டங்களைத் தயார் செய்து சுற்றனுப்பியிருக்கிறது. முக்கியமான திட்டங்களில் சில பின்வருமாறு: ஒரு மணி நேரத்திற்கு ½ டன்னிலிருந்து 4 டன்கள் பச்சரிசியை அரைக்கிற சக்தியுள்ள அரிசி ஆலைகள்; பேபி எக்ஸ்பெல்லர்களையும், கால்நடைத் தீவன இயந்திரங்களையுங்கொண்ட எண்ணெய் ஆலைகள்; பருத்திக் கொட்டை பதனப்படுத்தும் அமைப்புகள் (Cotton Seed Processing Units), பருத்தியிலிருந்து கொட்டை நீக்கும் தொழிற்சாலைகள் (Cotton Ginning Factories); முந்திரி பதனப்படுத்தும் அமைப்புகள் (Cashew Processing Units); கிராமப் புற ரொட்டி தயாரிக்கும் அமைப்புகள் (Rural Bakery Units); தேங்காய் எண்ணெய் தயாரிக்கும் அமைப்புகள் (Coconut Oil Making Units); சணல் கயிறு தயாரிக்கும் தொழிற்சாலைகள் (Jute Twine Factories); தினசரி 2,000 லிட்டர்களும், 5,000 லிட்டர்களும் அளவுள்ள பாலைப் பதனப்படுத்தும்-குளுமைப் படுத்தும் நிலையம் (Chilling Centre) முதலியன.

1972ஆம் ஆண்டு மார்ச்சு மாத இறுதிவரை மத்தியத் துறைத் திட்டத்தின்கீழ், 547 இலட்ச ரூபாய் அளவிற்குத் திட்டங்களுக்காகக் கழகம் நிதியுதவி ஒப்பளித்தல் செய்து, அத்தகைய 30 திட்டங்களுக்கு 158.07 இலட்ச ரூபாய் நிதியுதவி அளித்திருக்கிறது. கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகள் எண்ணிக்கையிலும், சக்தியிலும், ஒரு நிலையானதும் காணத்தக்கதுமான வளர்ச்சியை யடைந்திருக்கிறது. பிரதம பதனப்படுத்தும் அமைப்புகளை ஒருங்கிணைப்பதற்கான நடவடிக்கைகளை யெடுப்பதோடு மட்டுமன்றிக் கூட்டுறவுச் சங்கங்கள் துணைப்பொருள்களைப் (By - Products) பயன்படுத்துவதற்கும், தங்கள் நடவடிக்கைகளை நானாவிதமாக்குவதற்கும் தொடங்கின. 1971 – 72ஆம் ஆண்டு இறுதி வரைக்கும் கூட்டுறவுத் துறையில் அமைக்கப்பட்ட குளிர்பதனச் சேமிப்புச் (Cold Storage) சாதனங்கள் உள்பட,

1,755 விவசாயப் பதனப்படுத்தும் அமைப்புகள் இருந்தன. அவற்றுள் 1,415 அமர்த்தப்பட்டன.

வாணிகப் பயிர்கள் துறையில், குறிப்பாகக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் அமைப்பில் வெளிப்படையான முன்னேற்றம் இருந்திருக்கிறது. கீழ்க்காணும் வகைப் பதனப்படுத்தும் அமைப்புகளின் நிறுவனம், வளர்ச்சி, அபிவிருத்தி ஆகிய விஷயத்தில், கழகம் மாநில அரசுகளுக்கு ஆலோசனை வழங்கியிருக்கிறது: கூட்டுறவுப் பருத்தி பதனப்படுத்தும்–பருத்திக்கொட்டை நீக்கும் அமைப்புகள், சணல் பதனப்படுத்தும் அமைப்புகள், எண்ணெய் வித்துகள் பதனப்படுத்தும் அமைப்புகள், சால்வன்ட், எக்ஸ்டிராக்‌ஷன் இயந்திர அமைப்புகள், வனஸ்பதி இயந்திர அமைப்புகள், கால்நடைத் தீவனத் தொழிற்சாலைகள், அரிசி, உமி எண்ணெய் ஆலைகள்.

உணவுத் தானியங்களைப் பதனப்படுத்தும் துறையில் கூட்டுறவுச் சங்கங்களால் அரிசி ஆலைகளை அமைக்கப்படுவதற்காக நிதியுதவி வழங்குவதில், கழகம் வழிகாட்டும் நடவடிக்கையை யெடுத்திருக்கிறது. 1964 – 65ஆம் ஆண்டிலிருந்து கழகம் தன் சொந்த நிதியிலிருந்து கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியுதவி யளித்திருக்கிறது. அதன் விளைவாக, ஒரு பெரிய எண்ணிக்கையில் கூட்டுறவு அரிசி ஆலைகள் அமைக்கப்பட்டு உதவப்பட்டிருக்கின்றன. 1972ஆம் ஆண்டு மார்ச்சு மாத இறுதி வரைக்கும், 790 கூட்டுறவு அரிசி ஆலைகள் இருந்தன. அவை கழகத்தாலும், மற்றும் மாநில அரசுகள் திட்டங்களின்கீழும் உதவப்பட்டன. அவற்றுள் 668 அமைப்புகள் அமர்த்தப்பட்டன. நிதி வசதியைக் குறித்தும், சக்திகளைப் பயன்படுத்துதலைக் குறித்தும், அரிசி ஆலைகளின் இன்னல்களை அவ்வப்போது கழகம் பரிசீலனைசெய்து தக்க நடவடிக்கைகளை மாநில அரசுகளுக்கு யோசனை கூறியிருக்கிறது.

1971 – 72ஆம் ஆண்டில் கழகம், இன்னுமொரு திட்டத்தைத் தொடங்கி, பால்பண்ணை பதனப்படுத்தும் இயந்திர அமைப்புகளை/குளுமைப்படுத்தும் அமைப்புகளை நிறுவுவதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தன் மத்தியத்துறைத் திட்டத்தின்கீழ் நிதியுதவி யளித்தது. 1971 – 72ஆம் ஆண்டில், மைசூர் மாநிலமும் இராஜஸ்தான் மாநிலமும் இந்தத் திட்டத்தைப் பயன்படுத்திக்கொண்டுள்ளன.

**(iii) தானியச் சேமிப்புக் கிடங்கு வசதி:** கூட்டுறவுச் சேமிப்புக் கிடங்கு வசதிச் செயல்திட்டத்தை அமல்படுத்துவதிலுங்

கூடக் கழகம் சில முன்னேற்றத்தை அடைந்திருக்கிறது. சேமிப்புக் கிடங்கு வசதியைப் பற்றிய நிபுணர் குழுவின் பரிந்துரைகளை அனுசரித்தும், மாநில அரசுகள்வசம் நிதியாதாரங்கள் இல்லாத காரணத்தினுலும், கிராமக் கூட்டுறவு மட்டத்தில் நிறுவன நிதியுதவி கிடைக்காத காரணத்தினுலும், கூட்டுறவுச் சங்கங்கள் வசமுள்ள சேமிப்புக் கிடங்குச் சக்தியின் தாமதமான விரிவாக்கத்தைக் கருதியும், ஒரு மத்தியத்துறைத் திட்டம் கழகத்தால் வகுக்கப்பட்டது. அந்தத் திட்டம் பின்னர் இந்திய அரசால் அங்கீகரிக்கப்பட்டது. இந்தத் திட்டத்தின்கீழ்க் கிடங்குக் கட்டடச் செலவில் 62.5 சதவிகித அளவுக்குக் கடனுதவி அதாவது 9.4 கோடி ரூபாய், திட்ட நிதியாதாரங்களுக்கு வெளியாக நீண்டகாலக் கடனுக வழங்குவதற்குக் கழகம் உத்தேசித்திருக்கிறது. எஞ்சியுள்ள 37.5 சதவிகிதம் மானியமாக, அதாவது 5.6 கோடி ரூபாய்க்கு மாநில அரசுகள் தங்கள் திட்ட நிதியாதாரங்களிலிருந்து வழங்க வேண்டுமென்று உத்தேசிக்கப்பட்டுள்ளது.

1971 – 72ஆம் ஆண்டு இறுதிவரைக்கும், 4,312 கிடங்குகளைக் கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்கள் கட்டுவதற்காகவும், 17,291 கிராமக் கிடங்குகளைக் கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் கட்டுவதற்காகவும், மைய அரசின் அவசரச் செயல் திட்டங்களின் கீழ் நிதியுதவியளிக்கப்பட்டன. இவற்றுள் 3,473 விற்பனை வசதிக் கிடங்குகளும், 13,523 கிராமக் கிடங்குகளும் முடிக்கப்பட்டன.

**(iv) விவசாய உரங்கள், விதைகள் முதலியன வழங்குதல்:** கழகத்தின் முக்கியப் பணிகளில் ஒன்று, கூட்டுறவுச் சங்கங்கள்மூலம் விவசாயப் பண்ணைத் தேவைகளைக் குறிப்பாக விதைகள், உரங்கள், விவசாயக் கருவிகள் மற்றும், விவசாய விளைபொருள்களை அபிவிருத்தி செய்வதற்கான இதரத் தொடர்புள்ள பொருள்களை வழங்குவதற்காகத் திட்டமிட்டுச் செயல்திட்டங்களை வளர்ப்பதாகும். இப் பணிகளை ஆற்றுங்கால், கூட்டுறவுச் சங்கங்கள் விநியோகத் துறையிலும், உற்பத்தித் துறையிலுங்கூட முடிந்தவரைக்கும் பெருமம் அளவிற்குப் பங்கெடுத்துக்கொள்வதற்கும், இந்தச் செயல்துறையில் அவற்றின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கும் உதவவும் பல்வேறு நடவடிக்கைகளைக் கழகம் எடுத்திருக்கிறது. 1970 – 71ஆம் ஆண்டில், கூட்டுறவுச் சங்கங்கள், பின்வருமாறு விவசாய உற்பத்தித் தேவைகளை விநியோகம் செய்துள்ளன.

| | | (ரூ. கோடி) |
|---|---|---|
| (1) | இரசாயன உரங்கள் | 249.78 |
| (2) | மேம்படுத்தப்பட்ட விதைகள் | 39.49 |
| (3) | விவசாய இயந்திரங்கள் | 10.41 |
| (4) | பூச்சிகொல்லி மருந்துகள், புழுக்கள் கொல்லி மருந்துகள் | 17.71 |
| | | 317.39 |

மாநில மட்டத்திலுள்ள தலைமைக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புகள் அவசியப்படும் தொழில்நுட்ப அறிவையும் மற்றும் உரங்களையும், இதர விவசாய உற்பத்தித் தேவைகளையும் விநியோகம் செய்யும் பணியைப் புரிவதற்கு-மேலாளர் திறமையையும் கொண்டிருப்பதற்கு-உதவி செய்யத் தலைமைக் கூட்டமைப்பில் தொழில்நுட்பக் குழுக்களையும், தொழில் வளர்ச்சிக் குழுக்களையும் அமைப்பதற்காகக் கழகத்தால் ஆதரிக்கப்பட்ட திட்டத்தின் பரப்பு விரிவு செய்யப்பட்டுள்ளது. இதனால், உரங்கள், பூச்சி கொல்லி மருந்துகள், புழுக்கொல்லி மருந்துகள், விதைகள், விவசாயப் பொறியாளர்கள் ஆகிய துறைகளில் நிபுணர்களை-மேலாளர்களை அமர்த்துவதற்கு வசதி செய்யப்படுகிறது. இத் திட்டத்தின்கீழ்த் தலைமைக் கூட்டமைப்புகளில் சில தங்கள் தேவைகளுக்கிணங்க நிபுணர்களை அமர்த்தியுங்கூட வுள்ளன.

கூட்டுறவுச் சிறுஅணு உரங்கள் (Granulated fertilizer plants) நிறுவுவதற்காகக் கழகத்தால் ஆதரிக்கப்பட்ட திட்டத்தின்கீழ், கழகம் நிதியுதவியை வழங்கியிருக்கிறது. 1972ஆம் ஆண்டு மார்ச்சு மாத இறுதிவரைக்கும் 15 அத்தகைய சிறுஅணு உரவமைப்புகள் 7 மாநிலங்களில் உதவி செய்யப்பட்டிருக்கின்றன. அதாவது மராட்டியம் (7), மைசூர் (3), தமிழ் நாடு (1), பீகார் (1), ஒரிசா (1), அரியானா (1), பஞ்சாப் (1). அவை 270.25 இலட்ச ரூபாய் அளவிற்கு நிதிகள் ஒப்படைக்கப் பட்டிருக்கின்றன.

இவ்வாறாக, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், விவசாய அபிவிருத்தியிலும், கூட்டுறவு நிறுவனங்கள்மூலம் குடியானவர்களின் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்துவதிலும் ஒரு முக்கியப் பணியைப் புரிந்துவந்துள்ளது.

# 7. கூட்டுறவுக் கல்வியும், பயிற்சியும்
## (Co-operative Education and Training)

### கூட்டுறவுக் கல்வி, கூட்டுறவுப் பயிற்சியின் முக்கியத்துவம்

கூட்டுறவு இயக்கத்தின் குறைபாடற்றதானதும் வெற்றிகரமானதுமான ஒரு வளர்ச்சிக்குக் கூட்டுறவின் இயல், கூட்டுறவின் நடைமுறை ஆகியவைபற்றி, அதனுடன் தொடர்பு கொண்டுள்ள எல்லோருக்கும் கல்வியறிவு அவசியமாக இருக்கிறது. இயக்கத்திற்கு வழிகாட்டல் செய்கின்றவர்களும், கூட்டுறவுச் சங்கங்களை நிருவாகம் செய்கின்றவர்களும், கூட்டுறவின் சாரத்தினை மனத்தில் படியச் செய்துகொள்வது மாத்திரமன்றி, கூட்டுறவு நடவடிக்கைகளைப் பற்றிய சில நடைமுறை அறிவையும் பெற்றிருக்க வேண்டும். 1904ஆம் ஆண்டிலிருந்து கூட்டுறவு வளர்ச்சியை ஆய்வு செய்த, இந்தியாவில் கூட்டுறவைப் பற்றிய மாக்லகன் குழுவினர் (Maclagan Committee on Co-operation in India), 1915ஆம் ஆண்டிலேயே, கூட்டுறவுச் சங்கங்களில் தாங்கள் கண்ட குறைபாடுகளுக்குக் காரணம், கூட்டுறவுச் சங்கங்களைப் பதிவு செய்வதற்கு முன்னரும், அதற்குப் பின்னரும், அவற்றின் உறுப்பினர்களுக்குக் கூட்டுறவுக் கொள்கைகளைப் பற்றிய கல்வி போதனையில்லாமையே என்ற கருத்தை உரைத்தனர். அக் குழுவினர், கூட்டுறவு இலக்கிய (Co-operative Literature) வெளியீட்டைப் பற்றியும், கூட்டுறவு மாநாடுகளைக் கூட்டுறவு மேடைகளாகப் பயன்படுத்துவதைப் பற்றியும் பரிந்துரைகள் பல செய்துள்ளனர். 1928ஆம் ஆண்டில், இந்தியாவில் விவசாயத்தைப் பற்றிய இராயல் கமிஷன் (Royal Commission on Agriculture in India), 'சில மாகாணங்களில் இயக்கத்தின் திருப்தியற்ற நிலைமைக்கு ஒரே பரிகாரம், கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களுக்குக் கூட்டுறவின் கொள்கைகளைப் பற்றியும் பொருள் பற்றியும், பொறுமையானதும் தொடர்ந்ததானதுமான கல்வியறிவே. எல்லா மாகாணங்களிலும், உயர்ந்த கல்வியறிவு பெற்றவர்களும் நன்குகப் பயிற்சி பெற்றவர்களுமான அரசு சிப்பந்திகளை வளர்ப்பதற்கான எல்லா முயற்சிகளையும் கூட்டுறவுத் துறை எடுக்கவேண்டும்' என்று மொழிந்தனர். அதே ஆண்டில், சென்னைக் கூட்டுறவைப் பற்றிய

டவுன்செண்டு குழுவினர் (Townsend Committee on Co-operation in Madras) 'பிரதம சங்கங்களின் உறுப்பினர்களிடையே மட்டுமன்றிச் சங்கங்களின் அலுவலர்-நிர்வாகக் குழுவினரிடையேயும் (Office - Bearers), பல்வேறு அரசு பணியாளரல்லாத அமைப்புகளின் (Non-Official Agencies) ஊழியர்களிடையேயும் கூடக் கூட்டுறவின் சாதாரணக் கொள்கைகளைப் பற்றிய கல்வியறிவுகூட இல்லாதது எங்கள் மனத்தில் பெரிதும் பதிந்தது. இயக்கத்தின் தற்போதைய நிலையில் காணப்படும் அநேகத் திருப்தியற்ற அம்சங்களுக்கு நேரிடையான காரணம் இந்த அறியாமையே என்று நாங்கள் நம்புகிறோம். அரசு சிப்பந்திகள் கூட அநேக விஷயங்களில் தங்கள் பணிகளை நிறைவேற்றுவதற்குப் போதிய பயிற்சியில்லாமலிருக்கின்றனர் என்று நாங்கள் கருதுகிறோம்' என்று கூறியுள்ளனர். திரு. ஆர். ஜீ. சரையா (R. G. Saraiya) அவர்களைத் தலைவராகக் கொண்டிருந்த கூட்டுறவுத் திட்டக் குழுவினர் (Co-operative Planing Committee, 1945) 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றம் போதிய அளவு இல்லாமலும், சீராக இல்லாமலும் இருக்கிறதற்கு, இதரக் காரணங்களுடன் பெரிதான காரணம், அது சேவை செய்ய முற்படும் நபர்களிடையே பொதுக் கல்வி இல்லாமையே. இந்தக் குறையைப் போக்கின பிறகும், கூட்டுறவு இயக்கம் சரியான அடிப்படையில் வளர்ச்சியடைந்து கல்வியறிவுத் துறைகளில் விரிவடைய வேண்டுமானால், அதன் ஏராளமான உறுப்பினர்கள் கூட்டுறவின் கொள்கைகளையும் நடைமுறைகளையும் நன்றாகத் தெரிந்துகொள்ளச் செய்யவேண்டும். அப்பொழுதுதான், அவர்களும் அவர்களின் பிரதிநிதிகளும், சங்கத்தின் அலுவல்களை நன்கு வகுக்கப்பட்ட முறைகளில் நடத்துவதற்கு ஆற்றல் பெறுவார்கள். ஆகையால், கிராம மக்களுக்குப் பொது அறிவு அளிப்பதன் மூலமும், கல்வியறிவு அளிப்பதன்மூலமும், அவர்களிடையேயுள்ள அறியாமையைப் போக்குவதற்கும், கூட்டுறவுக் கல்வி, பயிற்சி, ஆராய்ச்சி ஆகியவற்றிற்கும் நம் கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்களில் ஒரு மிக முக்கிய இடத்தை நாம் கொடுக்க வேண்டுவது அவசியமாகிறது' என்று மொழிந்துள்ளனர். கிராமக் கடன் பற்றிய கோர்வாலாக் குழுவினர் (Gorwala Committee, 1954), கூட்டுறவுக் கடன் வசதி வளர்ச்சிக்கான தமது திட்டத்தில், அனைத்திந்திய அடிப்படையின்பேரில் பயிற்சி வசதிகள் அளிப்பதன் முக்கியத்துவத்தைப் பற்றியும், அப் பயிற்சியானது எல்லா மட்டங்களிலு மிருக்க வேண்டிய முக்கியத்துவத்தைப்பற்றியும் வலியுறுத்தியுள்ளனர். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் கூட்டுறவு பயிற்சியைப்பற்றிப் பெரிதும் வலியுறுத்தியிருக்கிறது. 'கூட்டுறவுக் கல்வியும் பயிற்சியும், முறையாகவும் விவரமாகவும் பின்தொடரப்

படவேண்டும்' என்று அது கூறியுள்ளது. கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்தில் புலப்படத்தக்க அபிவிருத்தி ஏற்படுத்துவதற்காகத் தகுதி பெற்ற சிப்பந்திகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்துதலும் கூட்டுறவுத் தலைவர்களின் தரத்தை மேம்படுத்துதலும் அவசியப்படுகிறது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டம், 'கூட்டுறவு வளர்ச்சியின் உபாயத்தில் (Strategy) நன்குணர்ந்து தெளிவு பெற்ற உறுப்பினர்கள், கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டிலும் வளர்ச்சியிலும் மேற்கொள்ள வேண்டிய பொறுப்பைத் தொடர்ந்து வலியுறுத்தத் தேவைப்படுகிறது' என்று கூறியுள்ளது. கூட்டுறவுக் கல்வி என்றால் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களும், அலுவலர்களும் போன்ற அரசு பணியாளரல்லாதவர்களின் கல்வி என்பது தெளிவு. கூட்டுறவுப் பயிற்சி என்பது, கூட்டுறவு நிலையங்களிலும், கூட்டுறவுத் துறையிலும் பணியாற்றும் ஊழியர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சியைத்தான் குறிக்கிறது. கல்வியும், பயிற்சியுமாகிய இரண்டுமே, கூட்டுறவு இயக்கத்தின் வெற்றிக்கு அத்தியாவசியமாக இருக்கின்றன. கூட்டுறவு ஒரு மக்கள் இயக்கம். மக்களிடையே, குறிப்பாக, அரசு பணியாளரல்லாதவர்களிடையே, திட நம்பிக்கையையும் தீவிர ஈடுபாட்டையும் வளர்ப்பதற்குப் பாமர மக்களிடையே கூட்டுறவுக் கல்வியும் கூட்டுறவுப் பிரசாரமும் அவசியமாகிறது. பண்பும், திறமையுமுள்ள தலைவர்களை உண்டாக்கி வளர்ப்பதற்கும் கூட்டுறவுக் கல்வி அவசியமாகிறது.

## இந்தியாவின் தேசியக் கூட்டுறவு ஒன்றியம்
## (The National Co-operative Union of India)

**(i) தோற்றம்:** கூட்டுறவுக் கல்வி, பயிற்சித் துறையில் அடைந்துள்ள முன்னேற்றத்தையும் அவைபற்றித் தற்போதுள்ள ஏற்பாட்டினையும் விவரிப்பதற்கு முன்னர், தேசிய மட்டத்தில் அவற்றிற்குத் தொடர்புள்ள கூட்டுறவு நிறுவனம் அதாவது புது டெல்லியில் இயங்கிவரும் தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் செயல்பாட்டினைக் குறித்தும், தமிழ் நாட்டில் மாநில மட்டத்து நிறுவனம் அதாவது தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் செயல்பாட்டினைக் குறித்தும் விளக்குவது அவசியமாகும். தேசியக் கூட்டுறவு ஒன்றியம், தேசிய மட்டத்தில் நாட்டிலுள்ள எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும், ஒரு தலைமை நிறுவனமாக இருக்கிறதால், அது இந்தியா முழுமையுமுள்ள கூட்டுறவு இயக்கத்தின் பிரதிநிதியாக இருக்கிறது. தோற்றத்தில், அந்த ஒன்றியம், 1929ஆம் ஆண்டில், யூனியன் பிரதேசமாகிய டெல்லிக்கும்

நீடிக்கப்பட்ட பம்பாய் மாகாணக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின்கீழ் (1925ஆம் ஆண்டின் VIIஆம் சட்டம்), மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களின் ஓர் இணைப்பாக, 'அகில இந்தியக் கூட்டுறவு ஒன்றியம்' என்ற பெயரில் பதிவு செய்யப்பட்டது. 1921ஆம் ஆண்டில் அதன் உபவிதிகள் அவசியமான திருத்தம் செய்யப்பட்டு, அகில இந்தியக் கூட்டுறவு ஒன்றியம், தேசியக் கூட்டுறவு ஒன்றியமாக (National Co-operative Union) மாறியது. 'தேசியக் கூட்டுறவு ஒன்றியம்' என்ற நிறுவனம் அமைக்கப்பட்டது, இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் வரலாற்றில் ஒரு முக்கியமான நிகழ்ச்சியாகும்.

**(ii) நோக்கங்கள்:** இந்த ஒன்றியத்தின் பதிவு செய்யப்பட்ட தலைமை அலுவலகம் டெல்லியில் இருக்கிறது. அதன் விவகார எல்லை இந்தியா முழுவதற்கும் பரவியிருக்கிறது. ஒன்றியத்தின் பிரதான நோக்கங்களாவன: நாட்டில் கூட்டுறவு இயக்கத்தைத் தோற்றுவித்தலும் பேணுதலும் வளர்த்தலும் கூட்டுறவுத் துறையை (Co-operative Sector) நிர்மாணித்தலும் அதை விரிவுபடுத்துதலும் மக்கள் முயற்சியில் மக்களுக்குக் கல்வியறிவு, வழிகாட்டல், உதவி ஆகியவற்றை அளித்தலும், நாட்டில் கூட்டுறவுக் கருத்தின் உரை ஆசிரியனாக (Exponent) இயங்குதலும், சேவை செய்தலுமாகும். இந்த ஒன்றியத்தில் தேசிய மட்டத்திலுள்ள எல்லாச் சங்கங்களும் தலைமைச் சங்கங்களும், ஒரு மாநிலம் முழுவதிலும் அல்லது ஒரு மாநிலத்திற்கு மேற்பட்ட எல்லையிலும் செயல்படும் காப்பீட்டுச் சங்கங்களும் (Insurance Societies), ஒன்றியங்களின் முன்னாள் தலைவர்களும், கூட்டுறவுத் துறையில் அறிவாற்றலும் மதிப்பும் படைத்தவர்கள் போன்ற தனிநபர்களும் உறுப்பினர்களாகச் சேரலாம். தனிநபர் அங்கத்தினர்களின் எண்ணிக்கை பதினைந்திற்கு மேற்படக்கூடாது. ஒன்றியத்தில் தற்போது 107 மொத்த உறுப்பினர்க ளிருக்கிறார்கள்.

**(iii) நிதி :** ஆண்டுச் சந்தாமூலமும், அரசிடமிருந்து பெற்ற மானிய உதவித்தொகைகள், உறுப்பினர் சங்கங்களின் வருடாந்தர இலாபங்களிலிருந்து பெற்ற உதவித்தொகைகள், பத்திரிகை வெளியீடு, காலமுறைப் பத்திரிகைகள், பாடநூல்கள், திரைப்படச் சுருள்கள் முதலியவற்றின் விற்பனைத் தொகைகள், கடன்கள், முன்பணங்கள், கண்காட்சிகளிலிருந்து வருவாய் அல்லது இலாபங்கள் அல்லது ஒன்றியம் தன் இயல்பான பணிகளில் மேற்கொள்ளும் வேறு எந்த நடவடிக்கைகளிலிருந்து வருமானம் அல்லது இலாபங்கள் ஆகியவைகளின் மூலமும், ஒன்றியம் நிதி திரட்டுகிறது.

**(iv) பேரவை:** தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் பேரவை, இரண்டாண்டுக் காலத்திற்கு அமர்த்தப்பட்ட உறுப்பினர் சங்கங்களின் பிரதிநிதிகளையும், தனிநபர் உறுப்பினர்களையும் கொண்டுள்ளது. பேரவைக்கு ஒவ்வொரு தேசியச் சங்கமும் தலைமைச் சங்கமும் மூன்று பிரதிநிதிகளை அனுப்பவும், ஒவ்வொரு காப்பீட்டுச் சங்கமும் ஒரு பிரதிநிதியை அனுப்பவும், இதரச் சங்கங்கள் கூட ஒரு பிரதிநிதியை அனுப்பவும் உரிமை பெற்றுள்ளன. அவ்வாறு அனுப்பப்பட்ட ஒவ்வொரு பிரதிநிதிக்கும், ஒவ்வொரு தனிநபர் உறுப்பினருக்கும் ஒரு வாக்கு உண்டு.

**(v) நிருவாகம்:** ஒன்றியத்தின் நிருவாக அதிகாரம் தலைவர், இரண்டு துணைத்தலைவர்கள், பொருளாளராகவுமியங்கும் ஒரு பொதுச் செயலாளர், இரண்டு கூட்டுச் செயலாளர்கள், மற்றும், செயற்குழுவின் இருபது உறுப்பினர்கள் ஆகியவர்களின் வசம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் குறைந்தது ஓர் உறுப்பினரும், யூனியன் பிரதேசங்களிலிருந்து ஓர் உறுப்பினரும், தேசியச் சங்கங்களிலிருந்து ஓர் உறுப்பினரும், இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பேரவையால் அதன் உறுப்பினர்களிடையே யிருந்து செயற்குழுவிற்கு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். செயற்குழுவில் மேற்கண்ட எல்லா நிருவாக அதிகாரிகளும் இடம்பெறுகிறார்கள். அது ஓர் ஆண்டில் குறைந்தது மூன்று முறை கூடுகிறது. மற்றும், ஒன்றியத்தால் அமைக்கப்பட்ட இதரக் குழுக்களும் இருக்கின்றன. அத்தகைய குழுக்கள், நிருவாக அலுவலர்களும் செயற்குழுவின் மூன்று உறுப்பினர்களுமடங்கிய ஆட்சிக் குழுக்களாகும். நிரந்தரக் குழு (Standing Committee) என்று சொல்லப்படும் மற்றொரு உதவிக் குழுவில் (Sub-Committee) ஏழு உறுப்பினர்கள் இருக்கிறார்கள். இந்த ஏழு உறுப்பினர்களில், ஒரு துணைத் தலைவர் உள்பட, செயற்குழுவிலிருந்து குறைந்தது நால்வர் இருப்பார்கள். இந்தக் குழு, ஒன்றியத்தின் பொது வேலைகளைச் செய்வதற்காக அமைக்கப்பட்டிருக்கிறது. அது, கூட்டுறவுக் கல்வி, பயிற்சி, விவசாயக் கடன், விற்பனை, பதனப்படுத்துதல், கூட்டுறவு வேளாண்மை, தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவைகளைக் கவனிக்கிறது. ஒன்றியத்தின் தலைவர் ஒன்றியத்தின் முதல்வராவார். அவர் பேரவைக் கூட்டங்களுக்கும், செயற்குழுக் கூட்டங்களுக்கும், தேசியக் கூட்டுறவுக் காங்கிரசுக்கும் தலைமை வகிக்கிறார். அவர் ஒன்றியத்தின் அங்கீகாரம் பெற்ற விளக்கவல்லுநர். பொதுச் செயலாளர் ஒன்றியத்தின் நிருவாகத் தலைவராக இருக்கிறார். அவர் ஒன்றியத்தின் கொள்கைகளையும், திட்டங்களையும் நிறைவேற்றுவதற்காகவும், ஒன்றியத்தின் பேரவையின் முடிவு

களையும், ஒன்றியத்தின் குழுக்களின் முடிவுகளையும் அமல்படுத்துவதற்காகவும் பொறுப்பாளியாவார். அவர் பொருளாளராகவுங்கூடப் பணியாற்றி ஒன்றியத்தின் நிதிகளை நிருவாகம் செய்கிறார். அவர் தம் கூட்டுச் செயலாளர்களால் உதவி செய்யப்படுகிறார். பொதுச் செயலாளர், நாட்டில் பல்வேறு கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களை நடத்துவதற்குப் பொறுப்பாக உள்ள ஒன்றியத்தின் 'கூட்டுறவுப் பயிற்சிக்கான சிறப்புக் குழு'வுக்குத் (Special Committee for Co-operative Training) தலைவராகவுங்கூட இருக்கிறார்.

**கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு** (Committee for Co-operative Training): தற்சமயம் எல்லா மட்டங்களிலும் கூட்டுறவுப் பயிற்சிப் பணி, ஒன்றியத்தால் ஆற்றப்பட்டு வருகின்ற மிக முக்கியமான பணி. கூட்டுறவுத் துறையிலுள்ள சிப்பந்திகளின் பயிற்சியும், கூட்டுறவுச் சங்கங்கள் சிப்பந்திகளின் பயிற்சியும், உறுப்பினர் கல்வியும் — (தற்போதுள்ள உறுப்பினரும், எதிர்கால உறுப்பினரும்) — இந்தப் பயிற்சித் திட்டத்தில் அடங்கியுள்ளன. திரு. எஸ். டி. மிஸ்ரா அவர்களின் தலைமையின்கீழ், இந்திய அரசால் 1961ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட, கூட்டுறவுப் பயிற்சியைப் பற்றிய ஆய்வுக் குழுவினரின் (Studyteam on Co-operative Training) பரிந்துரைகளின் அடிப்படையில், 1962ஆம் ஆண்டில், தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தால் ஒரு விரிவுபடுத்தப்பட்ட கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு அமைக்கப்பட்டது. இந்தக் குழு, 1962ஆம் ஆண்டில், கூட்டுறவுப் பயிற்சி, கூட்டுறவுக் கல்வி பற்றிய ஒருங்கிணைந்த திட்டம் அனைத்தையும் அமல்படுத்தப் பொறுப்பேற்றுக்கொண்டது.

**(vi) ஒன்றியத்தின் முக்கிய நடவடிக்கைகள்:** தேசிய மட்டத்தில் இந்த நாட்டில் கூட்டுறவுப் பயிற்சிக் கல்வித் திட்டத்தை அமல்படுத்துவதற்கான பொறுப்பை, நாட்டின் கூட்டுறவு இயக்கத்தின் தலைமைச் சங்கமாகிய தேசியக் கூட்டுறவு ஒன்றியம் ஏற்றுக்கொண்டிருக்கிறது.

1962ஆம் ஆண்டில் ஒன்றியத்தால் அமைக்கப்பட்ட கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு, பயிற்சிக்கான நிறுவன ஏற்பாடுகளைத் திட்டமிட்டும், நிருவாகம் செய்தும், வழிகாட்டல் செய்தும் வருகிறது. அதன் பொறுப்பிலுள்ள கூட்டுறவுக் கல்வி, பயிற்சித் திட்டங்களை நிறைவேற்றுகின்ற நான்குஅடுக்கு அமைப்புகளாவன:

(1) உயர்சிப்பந்திகளுக்கான (Key Personel) பயிற்சியை அளிக்கும் பூனா (Poona) விலுள்ள வைகுந்த் மேதா கூட்டுறவு

நிருவாகப் பயிற்சித் தேசிய நிலையம் (Vaikunth Metha National Institute of Co-operative Management); (2) இடைநிலைச் சிப்பந்திகளின் பயிற்சிக்கான 14 கூட்டுறவுக் கல்லூரிகள்; (3) இளநிலைச் சிப்பந்திகளுக்குப் பயிற்சியளிக்கும் 63 இளநிலைக் கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள்; (4) உறுப்பினர்கள், நிருவாக அலுவலர்கள், கூட்டுறவுச் சங்கங்களின் மேலாளர்கள், பகுதிநேரச் செயலாளர்கள் ஆகியவர்களின் கல்விக்கான 592 இயங்கும் பயிற்சி அமைப்புகள்.

தேசியக் கூட்டுறவு ஒன்றியம் இரண்டு காலமுறைப் பத்திரிகைகளை (Periodicals), அதாவது மாத இதழான 'அனைத்திந்தியக் கூட்டுறவு ஆய்வுரை' (All-India Co-operative Review) என்பதையும், மற்றும் இருவார இதழான (Fortnightly) 'அனைத்திந்தியக் கூட்டுறவுச் செய்திகள் தொகுதி' (All India Co-operative News Service) என்பதையும் வெளியிடுகிறது. அவ்வப்போது அது, வீட்டு வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுறவு வேளாண்மை, கூட்டுறவு விற்பனை, கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்களின் முன்னேற்றம் முதலியன போன்ற சிறப்புப் பொருள்களைப் பற்றி, 'அனைத்திந்தியக் கூட்டுறவு ஆய்வுரை' பத்திரிகையின் சிறப்பு மலர்களையுங்கூட வெளியிடுகிறது. கூட்டுறவைப் பற்றியும் அதன் தொடர்புள்ள விஷயங்களைப் பற்றியும், பல்வேறு புத்தகங்களையும், சிறு புத்தகங்களையும் ஆசிரியர்களுக்கான உதவிப் பொருள்கள் முதலியவற்றையுங்கூட அது வெளியிட்டிருக்கிறது.

ஒன்றியத்தின் முக்கியச் செயல்களில், நாடு முழுவதிலும் ஒவ்வோர் ஆண்டும் கிரமமாக 'அகில இந்தியக் கூட்டுறவு வார' (All India Co-operative Week) விழாவினை நடத்துவதைக் குறிப்பிடலாம். கூட்டுறவுச் செயல்களின் பல்வேறு அம்சங்களைப் பற்றிய கருத்தரங்குகளையும் மாநாடுகளையும் நடத்துதலும், 'ஒன்றுபட்டு நாம் செழிப்பாக வாழ்கிறோம்' (Together We prosper), 'கூட்டுறவின் ஒரு கதை' (A.Story of Co-operation), 'கூட்டுறவு விற்பனை' (Co-operative Marketing) மற்றும் 'நெசவாளர்கள்' (The Weavers) போன்ற கூட்டுறவுத் திரைப்படச் சுருள்களைத் தயார் செய்தலும், வாங்குதலும், பல்வேறு மாநிலங்களில் கூட்டுறவுச் சங்கங்களாலும் இதர நிறுவனங்களாலும் நடத்தப்படும் கூட்டுறவு விஷயங்களைப் பற்றிய பல்வேறு கருத்துக் கோவைகளில் (Symposium) அதன் பிரதிநிதிகள்மூலம், பங்குகொள்ளுதலும் ஒன்றியத்தின் முக்கிய நடவடிக்கைகளாக இருக்கின்றன.

## தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம்
## (Tamil Nadu Co-operative Union)

**(அ) அமைப்பு** (Constitution): தமிழ்நாட்டில் கூட்டுறவுக் கல்வி, கூட்டுறவுப் பயிற்சி, கூட்டுறவுப் பிரச்சாரம் ஆகியவற்றின் பொறுப்பை யேற்றிருக்கின்ற தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், சென்னையில் தன் தலைமைச் செயலகத்துடன், 'சென்னை மாகாணக் கூட்டுறவு ஒன்றியம்' (Madras Provincial Co-operative Union) என்ற பெயரால் 1914ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. அது, மாநிலத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் கருத்துகளின் அங்கீகரிக்கப்பட்ட ஒரு விளக்கக் கர்த்தாவாகக்கூடப் (Exponent) பணியாற்றுகிறது. தோற்றத்தில், எல்லாவிதச் சங்கங்களும் அதன் உறுப்பினராகலாம். சந்தானம் குழுவினர் (சென்னை—1969) கூட்டுறவுக் கல்வி, பிரசாரம் ஆகியவற்றிற்குத் தொடர்பான நடவடிக்கைகளை உறுதிப் பயனுள்ள வகையில் நிறுவவும், விரிவாக்கவும், ஒவ்வொரு மாவட்டத்திலும் 'மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்கள்' அமைக்கப்படவேண்டுமென்று பரிந்துரை வழங்கியுள்ளனர். அவர்கள், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியமானது, மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களையும், தலைமைச் சங்கங்களையும் உறுப்பினர்களாகக் கொண்ட, ஒரு கூட்டிணைப்பு அமைப்பாக இருக்க வேண்டுமென்றும் கருதினர். மிக அண்மையில், 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில், 'கூட்டுறவு ஒன்றியங்கள்' என்ற தலைப்பில், ஒரு புதிய அத்தியாயம் XI-இ புகுத்தப்பட்டதன் விளைவாக, தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் அமைப்பில் மாறுதல்கள் ஏற்பட்டன. தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின் (1961) பிரிவு 73 (0)-ன் படி, ஒரு 'கூட்டுறவு ஒன்றியம்', கூட்டுறவுக் கல்வி, பிரசாரம், அல்லது பயிற்சி, அல்லது சேமிப்பைத் திரட்டுதல் ஆகியவற்றை மேற்கொள்ளுதலைப் பிரதான நோக்கமாகக் கொண்ட ஒரு சங்கமென்று விளக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டத் திருத்தம், மாவட்ட மட்டத்திலும், தாலுகா மட்டத்திலும் முறையே, மாவட்டக் கூட்டுறவு ஒன்றியத்தையும், தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியத்தையும் அமைப்பதற்கு வழி செய்தது. சங்கங்களின் துணை-விதிகளில் ஏற்படுத்தப்படும் விகிதங்கள்படி ஆண்டுச் சந்தாவைச் செலுத்தி, சங்கங்கள் இந்தக் கூட்டுறவு ஒன்றியங்களில் உறுப்பினராக வேண்டும். தற்போது, தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் அங்கத்துவம், ஒன்றியத்தின் அலுவல் எல்லைக்குள் நிறுவப்பட்டிருக்கும் எல்லா மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களுக்கும், தலைமைக் கூட்டுறவு நிறுவனங்களுக்கும், கூட்டுறவுப் பயிற்சிக் கழகங்களுக்கும் மட்டுமே வரையறுக்கப்பட்டிருக்கிறது.

தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின் பிரிவு 73 (த)-வின் படி, இந்தச் சங்கங்கள் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் உறுப்பினர்களாகக் கருதப்படுகின்றன. இந்தியாவிலுள்ள மாநிலக் கூட்டுறவு ஒன்றியங்களிடையே, தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் ஒரு சிறப்பான இடத்தை வகிக்கிறது.

**(ஆ) பணிகள்** (Functions): அதன் நோக்கங்களுக்கிணங்க ஒன்றியம் கூட்டுறவுப் பத்திரிகைகளை, சிறு வெளியீடுகள், புத்தகங்கள் முதலியவற்றை வெளியிடுகிறது; கூட்டுறவு மாநாடுகளைக் கூட்டுகிறது; நூல் நிலையங்களை நிருவகிக்கிறது; பொருட்காட்சிகளை ஏற்பாடு செய்கிறது; மற்றும், கூட்டுறவு விஷயங்கள் பற்றிய ஒரு தகவல் நிலையமாகவும் (Information Bureau) அது பணிபுரிகிறது. கூட்டுறவுக் கல்வியைப் பரப்பி, திரைப்படக்காட்சிகள், படப்பெருக்கி விளக்குப் படங்கள் (Magic Lantern Slides), பாடல்கள், நாடகங்கள் ஆகியவற்றின்மூலம் அது கூட்டுறவுப் பிரசாரம் செய்கிறது. கூட்டுறவுப் பயிற்சிக்காகத் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் சிறப்புக் குழு ஒன்று அமைக்கப்பட்டு, அரசு பணியாளர் சிப்பந்திகளுக்கும், அரசு பணியாளரல்லாத சிப்பந்திகளுக்குமான பயிற்சித் திட்டத்திற்கும் அது பொறுப்பாளியாக விருக்கிறது. கூட்டுறவு நிறுவனங்களையும், கூட்டுறவுத் துறையையும் சார்ந்த இடைநிலைப் பணியாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்காக நிறுவப்பட்ட கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிக்கும்கூட இந்தக் குழு பொறுப்பாளியாக விருக்கிறது. மாநிலத்தில் கூட்டுறவுக் கல்வியை வளர்ப்பதிலும், கூட்டுறவுப் பிரசாரத்தை மேற்கொள்வதிலும், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் புரியும் பணியைப் பின்வரும் பத்திகளில் கூறியுள்ளோம். கூட்டுறவு நிறுவனங்களில் பணிபுரியும் சிப்பந்திகளின் கூட்டுறவுப் பயிற்சி விஷயத்தில், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றிய மாற்றும் சேவையுங் கூடப் பின்வரும் பத்திகளில் விளக்கப்பட்டிருக்கிறது.

இதுவரை, கூட்டுறவு விளம்பரத்திற்கும் பிரசாரத்திற்கும் தொடர்பான வேலையை, மாநிலம் முழுவதிலும், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் செய்து வந்தது. 1961ஆம் ஆண்டுத் தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின் திருத்தத்தின் விளைவாக, 1971—72ஆம் ஆண்டில், மாவட்ட மட்டத்திலும், தாலுகா மட்டத்திலும் முறையே, மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களும் தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியங்களும், கூட்டுறவு இயக்கத்தின் விளம்பரம், பிரசார வேலையைக் கவனிக்கின்றன. 30-6-72-ல், தமிழ்நாட்டில் 81 தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியங்களும், 12 மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களுமிருந்தன. தற்போது, மாவட்

டக் கூட்டுறவு ஒன்றியங்களும், தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியங்களும் இளநிலையில் இருக்கின்றன. நாளடைவில் அவை வலிவு பெற்று வளரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**(இ) நிதி** (Funds): தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியமானது, உறுப்பினர் சங்கங்களால் கொடுக்கப்படும் ஆண்டுச் சந்தாக்களின் மூலமும், கூட்டுறவுச் சங்கங்களால் தங்கள் நிகர இலாபங்களில், ரூபாய் 10,000 பெருமத்திற்குட்பட்டு, 2 சதவிகிதத்தில், தன்னால் அமைக்கப்பட்டு நிருவகிக்கப்படும் 'கல்வி நிதி'க்குச் (Education Fund) செலுத்தப்படும் உதவித்தொகைகளின்மூலமும், கூட்டுறவுச் சங்கங்களால் தங்கள் நிகர இலாபங்களில் 5 சதவிகிதம், தன்னால் நிருவகிக்கப்படும் 'கூட்டுறவு வளர்ச்சி நிதி'க்குச் (Co-operative Development Fund) செலுத்தப்படும் உதவித்தொகைகளின்மூலமும், அரசினரிடமிருந்து அல்லது தேசியக் கூட்டுறவு ஒன்றியம் அல்லது மற்றவர்களிடமிருந்து பெறும் ஏதாவது உதவித் தொகைகளின்மூலமும் தன் நிதியைப் பெறுகிறது.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் வசம் கூட்டுறவுக் கல்வி நிதியின் நிருவாகப் பொறுப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின்படியும், 1963ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் விதிகளின்படியும், ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும் தன் நிகர இலாபங்களில், ரூபாய் 10,000 பெருமத்திற்குட்பட்டு, 2 சதவிகிதம், இந்த நிதிக்கு உதவித்தொகை அளிக்கவேண்டும். உறுப்பினர்-கல்வித் திட்டங்களுக்காகவும், தன் பத்திரிகைகளை வெளியிடுவதற்காகவும், கூட்டுறவு மத்திய வங்கிகளால் நடத்தப்படும் பத்திரிகைகளுக்கு நிதியுதவி வழங்குவதற்காகவும் இந்த நிதி பிரதானமாக உபயோகிக்கப்படுகிறது. ஒன்றியம், 7 கூட்டுறவு மத்திய வங்கிகளுக்குத் தங்கள் மாவட்டங்களில் பத்திரிகைகளை வெளியிடுவதற்கு நிதியுதவி வழங்குகிறது. சென்னை, கும்பகோணம், மதுரை, சேலம், இராமநாதபுரம், கோவை மாவட்டங்களிலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகள் அத்தகைய பத்திரிகைகளை வெளியிடுகின்றன. 1971–72ஆம் ஆண்டில், இந்த மத்திய வங்கிகளுக்கு ரூபாய் 18,000 நிதியுதவி அளிக்கப்பட்டது. 30-6-72-ல், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் வசமுள்ள கல்வி நிதியில் நிலுவையிலிருந்த தொகை ரூபாய் 13.14 இலட்சமாகும்.

1963ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் (திருத்தம்) விதிகளின் 46-வது விதியின்படி, ஒவ்வொரு சங்கமும்

தன் நிகர இலாபங்களில் 5 சதவிகிதம் 'கூட்டுறவு வளர்ச்சி நிதி'க்கு (Co-operative Development Fund) ஒதுக்கி வைக்கவேண்டும். இந் நிதி தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் நிருவகிக்கப்பட்டு, கீழ்க்காணும் காரியங்களுக்காக உபயோகப்படுத்தவேண்டும் என்றுங்கூட இவ் விதி நிருணயித்திருக்கிறது.

(i) கூட்டுறவு வளர்ச்சி, ஆராய்ச்சி மற்றும், கூட்டுறவுச் சங்கங்களின் மேம்பாடு தொடர்பான காரியங்கள்.

(ii) கூட்டுறவுத் துறையில் திட்டங்களை நவீனப்படுத்தல்.

(iii) பொதுவாக, கூட்டுறவு இயக்கத்தை முன்னேற்ற மடைவித்தல்.

ஒன்றியத்தின் தலைவர், துணைத் தலைவர், நிருவாக அதிகாரி மற்றும், அரசு அபிவிருத்தி இலாக்காக்களின் முதல்வர்கள் ஆகியவர்களடங்கிய குழு ஒன்று இந் நிதியை நிருவகிக்கிறது. 30-6-72-ல், கூட்டுறவு வளர்ச்சி நிதியிலிருந்த தொகை 18.24 இலட்சமாகும். தமிழ்நாடு ஏற்றுநீர்ப்பாசனக் கூட்டுறவுக் கூட்டிணைப்பிற்கு (Tamilnadu Lift Irrigation Co-operative Fedaration) ரூ. 1,00,000-மும், தமிழ்நாடு வேளாண்மைப் பொறியியல், பணிக் கூட்டுறவுக் கூட்டிணைப்பிற்கு (Tamilnadu Agro Engineering and Service Co-operative Federation) ரூ. 50,000-மும், 6 மாதங்களில் திருப்பிக் கொடுக்கப்படவேண்டிய கடன்களாக அளிக்கப்பட்டிருக்கின்றன.

**(ஈ) நிருவாகம்** (Management): ஒன்றியத்தின் நிருவாகம், ஒவ்வொரு மாவட்டக் கூட்டுறவு ஒன்றியத்தின் நிருவாகக் குழுவின் உறுப்பினர்களால் தங்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டு உறுப்பினர்களையும், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் உறுப்பினர்களாகிய, தமிழ்நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கியும், தமிழ்நாடு கூட்டுறவு மாநில வங்கியும் நீங்கலான தலைமைச் சங்கங்களின் சட்டப் பிரிவு 72-ன்கீழ் அமர்த்தப்பட்ட தலைவர்கள் அல்லது தனி அதிகாரிகளால் தங்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்ட 6 உறுப்பினர்களையும், கூட்டுறவுப் பதிவாளரால் நியமிக்கப்பட்டிருந்தால் தமிழ்நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கியின் தலைவரையும், தமிழ்நாடு கூட்டுறவு மாநில வங்கியின் தலைவரையும், அட்டவணையில் கண்ட ஜாதிகளையும், அட்டவணையில் கண்ட மலைவாசிகளையும், மகளிர்களையும், நிருவாகக் குழுவிலும் செயற்குழுவிலும் பிரதிநிதித்துவம் இல்லாத இதர நலமிகளையும் பிரதிநிதித்துவம் செய்யக் கூட்டுறவுப்

பதிவாளரால் நியமிக்கப்பட்ட இதர மூன்று உறுப்பினர்களையுங் கொண்ட நிருவாகக் குழு வசமிருக்கிறது.

ஒன்றியத்தின் பேரவை, நிருவாகக் குழுவின் எல்லா உறுப்பினர்களையும், நிருவாகக் குழுவில் பிரதிநிதித்துவமில்லாத தலைமைச் சங்கங்களின் தலைவர்களையும், கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களின் தலைவர்களையும் கொண்டது.

நிருவாகக் குழு, தலைவரையும், துணைத் தலைவரையும், ஐந்து இதர உறுப்பினர்களையும் கொண்ட ஒரு செயற்குழுவை அமைக்கலாம். இந்த ஐந்து இதர உறுப்பினர்களில் நால்வர் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களிடையேயிருந்தும், ஒருவர் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களிடையேயிருந்தும் இருக்கவேண்டும். நிருவாகக் குழுவின் தலைவரும், துணைத் தலைவரும், செயற்குழுவின் அலுவலால் (Ex-Officio) தலைவராகவும், அலுவலால்-துணைத் தலைவராகவும் இருக்கவேண்டும். நிருவாகக் குழுவால் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்களையும், பணிகளையும் செயற்குழு மேற்கொள்ளுகிறது. அது, முக்கியத் துறைகளில், நிருவாகக் குழுவுக்குப் பரிவுரை செய்கிறது. அன்றாட நிருவாகப் பொறுப்பு, செயற்குழு வச மிருக்கிறது. அதன் அதிகாரங்கள், விதிகளில்கூடத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

கூட்டுறவுக் கல்வி, பிரசாரம் ஆகியவற்றிற்குப் பொறுப்பாளியாகவிருப்பதுமட்டுமன்றி, ஒன்றியம், பயிற்சி பெற்ற பணியாளர் தொகுதியின் பட்டியலை வைத்துக்கொள்வதன்மூலமும், தேர்ச்சி பெற்ற பணியாளர்களை விரும்பும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அந்தப் பட்டியலைச் சுற்றனுப்புவதன்மூலமும், ஒரு வேலை வாய்ப்பு வசதி நிறுவனமாகவுங்கூட இயங்குகிறது. மாநிலத்திற்குள்ளும் வெளியேயுமிருந்துவரும் பல்வேறு கூட்டுறவுத் துறைகளைப் பற்றிய பல்வேறு விசாரணைகளுக்குத் தகவல் வழங்குவதன்மூலம் ஒரு தகவல் நிலையமாகக்கூட அது பணியாற்றுகின்றது. ஒன்றியம் நடத்தும் நூலகத்தில் கூட்டுறவு இயல், கணக்குப் பதிவியல், நிருவாக இயல், அரசினர் நிருவாக இயல் முதலியன போன்ற பல்வேறு துறைகளைப் பற்றிய சுமார் 6,500 புத்தகங்கள் உள்ளன.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், அரசினரிடமிருந்து பெற்ற கணிசமான பொருள் உதவியுடனும், மாநிலத்திலுள்ள கூட்டுறவு நிறுவனங்களிலிருந்து பெற்ற பொருளுதவியுடனும், சுமார் 5.5 இலட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்டதும் தனக்குச் சொந்தமானதுமான ஒரு கட்டடத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளது.

## கூட்டுறவுக் கல்வி
(Co-operative Education)

**(அ) பொது:** நீண்டகாலமாக இந்தியாவின் பல பாகங்களில் கூட்டுறவுக் கல்வியை அளிப்பதற்காக நிறுவப்பட்ட முயற்சிகள் எதுவும் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. கூட்டுறவுச் சங்கங்களிலிருக்கின்ற உறுப்பினர்களுக்கும், சேரக்கூடிய உறுப்பினர்களுக்கும், சங்கங்களின் நிருவாகக் குழு உறுப்பினர்களுக்கும், நிருவாகக்குழு அலுவலர்களுக்கும், கூட்டுறவுக் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் கல்வி புகட்டும் பணியில் முதன்முதலான முயற்சி 1914ஆம் ஆண்டில் சென்னை மாகாணத்தில் செய்யப்பட்டது. அந்தப் பணியை மேற்கொள்ளுவதற்காக, அதே ஆண்டில் 'சென்னை மாகாணக் கூட்டுறவு ஒன்றியம்' (Madras Provincial Co-operative Union) நிறுவப்பட்டது. அதன் பின்னர், இதர மாகாணங்களில் நிறுவப்பட்ட மாகாண நிலையங்கள் (Provincial Institutes) கூட இப் பணியை மேற்கொண்டன. எனினும், பெரும்பாலும் நிதி ஆதாரக் குறைவு காரணத்தால், 1935ஆம் ஆண்டு வரை இந்தியாவில் எங்குமே இந்தத் துறையில் திடமாக எதையும் சாதிக்க முடியவில்லை. 1935ஆம் ஆண்டில், இந்திய அரசு, சர் மால்காம் டார்லிங் (Sir Malcolm Darling) அவர்களால் கூறப்பட்ட அறிவுரைகளின் விளைவாக, இந்தப் பிரச்சினையைத் தீர்த்துவைக்க முடிவு செய்தது. இந்த முடிவு உறுப்பினர் கல்விக்கு ஓர் ஊக்கமளித்தது. எனினும், இரண்டாவது உலக மகாயுத்தத்தின் காரணமாக, அரசின்ரின் நிதி நெருக்கடியால், 1942—43ஆம் ஆண்டில் துரதிஷ்டவசமாக உறுப்பினர்-கல்விப் பணி தடைபட்டது. அதையொட்டி, மாகாண அரசுகளும் திட்டத்தை நிறுத்திவைக்க வேண்டிய சங்கடத்திற்குள்ளாயின. 1953ஆம் ஆண்டு டிசம்பரில் நடைபெற்ற இந்திய ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன் துறையைச் சார்ந்த கூட்டுறவுப் பயிற்சிக்கான மத்தியக் குழுவினர் (Central Committee for Co-operative Training) தம் முதல் கூட்டத்தில் உறுப்பினர்-கல்விப் பணி, அகில இந்தியக் கூட்டுறவு ஒன்றியத்தால், முதல் கடமையாக மேற்கொள்ளப்படவேண்டிய பணியாகும் என்றுரைத்தனர். அக் குழுவினரின் யோசனைகளின் அடிப்படையின்பேரில், உறுப்பினர்களின் கூட்டுறவுக் கல்விக்காக, 1956ஆம் ஆண்டில், டில்லி, மகாராஷ்டிரம், மத்தியபாரதம், பீகார் ஆகிய நான்கு மாநிலங்களில் ஒரு முன்னோடித் திட்டம் பரிசோதனையாக அமல் செய்யப்பட்டது. அத் திட்டத்தின் முக்கியக் கூறுகளாவன: (i) கூட்டுறவுக் கொள்கைகளிலும், நடைமுறைகளிலும், சங்கங்களின் தற்போதைய உறுப்பினர்களுக்

கும், எதிர்பார்க்கப்படுகிற உறுப்பினர்களுக்கும் கூட்டுறவுக் கல்வி. (ii) நிருவாகக் குழு உறுப்பினர்கள், தங்கள் கடமைகள், பொறுப்புகள் ஆகியவைகளின் தன்மையையும் பரப்பையும் உண ரும் வகையில், அவர்களுக்கு ஒரு குறுகியகாலப் பயிற்சி. (iii) பிரதம சங்கங்களின் தலைவர்கள், பொருளாளர்கள், செய லாளர்கள் போன்ற நிருவாகக் குழு அலுவலர்களுக்குத் தங்கள் பதவித் தேவைகளில் பயிற்சித் திட்டம். அத் திட்டம் 6 நட மாடும் அமைப்புகளைக் கொண்டுள்ளது. இந்த 6 நடமாடும் அமைப்புகள், டில்லியில் ஒன்றும், மத்திய பாரதத்தில் ஒன்றும், பீகாரில் இரண்டும், சவுராஷ்டிராவில் இரண்டும் நிறுவப்பட்டன. இந்த அமைப்புகளிலளிக்கப்பட்ட பயிற்சியின் காலவரையானது நிருவாகக் குழு அலுவலர்களுக்கு 6 வாரங்களாகவும், நிருவாகக் குழு அங்கத்தினர்களுக்கு 1 வாரமாகவும், சாதாரண அங்கத் தினர்களுக்கு 3 நாட்களாகவுமிருந்தது. 1957–58ஆம் ஆண் டில், இத் திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ்க் கூட்டுறவு வளர்ச்சிக்கான தேசியத் திட்டத்தின் ஒரு பகுதியாக அங்கீகரிக்கப்பட்டும், ஏற்கப்பட்டும், பல்வேறு மாநிலங்களில் 52 மாவட்டங்களுக்கு நீடிக்கப்பட்டது. 1958–59ஆம் ஆண்டில், நாடு முழுவதிலும் 137 மாவட்டங்களில் இத் திட்டம் அமல் செய்யப்பட்டு, 1959–60ஆம் ஆண்டு முடிவில், இந் நாட்டில் ஏறக்குறைய ஒவ்வொரு மாவட்டத்திலும் இத் திட்டம் அமலில் இருந்தது. புது டில்லியில் இருக்கும் இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் ஒருமைப்படுத்தலின்கீழும், வழிகாட்டலின்கீழும் மாநிலக் கூட்டுறவு ஒன்றியங்களின்மூலம் ஒரு பரவலான முறை யில் இத் திட்டம் அமல் செய்யப்பட்டு வந்தது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவிற்குள், சுமார் 1,200 பயிற்சி நிலையங்களிருக்கும் , என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், மொத்தப்படி மானியம் என்ற முறை தொடங்கினதிலிருந்து, மாநில அரசுகள் இத் திட்டத்திற்காகக் கொடுக்கப்பட்ட நிதிகளைக் கூட்டுறவுத் துறையின் இதர நடவடிக்கைகளுக்கும் பயன்படுத்த அனுமதிக்கப்பட்டன. 1961ஆம் ஆண்டில், 561ஆக இருந்த அமைப்புகளின் எண்ணிக்கை, 1966ஆம் ஆண்டில் 717ஆக உயர்ந்தது. ஆனால், 1967ஆம் ஆண்டில், அது 699-க்குக் குறைந் தது. 1969–70ஆம் ஆண்டின் முடிவில், 592ஆகவிருந்த அமைப்புகளின் எண்ணிக்கை, 31-12-1970-ல் 553-க்குக் குறைந் தது. அமைப்புகளின் எண்ணிக்கைக் குறைவுக்குக் காரணம், உறுப்பினர்-கல்வித் திட்டம் 1967–1968ஆம் ஆண்டில், முறையே தமிழ்நாட்டிலும், ஜம்மு-காஷ்மீர் மாநிலங்களிலும் அமல்படுத்தப்படவில்லை. 1-1-1970-லிருந்து டில்லி மாநிலத்தி லும் ராஜஸ்தான் மாநிலத்திலும்கூட இத் திட்டம் அமல்படுத்தப்

படவில்லை. உத்தரப்பிரதேசத்திலும் இந்த அமைப்புகளின் எண்ணிக்கை பாதிக்குக் குறைக்கப்பட்டது. 1-4-1971-லிருந்து திட்டத்தை நிறுத்த ஆந்திரப் பிரதேசம் முடிவு செய்திருந்தது. 1969–70ஆம் ஆண்டில், பல்வேறு மாநிலங்களில் செயலாற்றப் பட்டு வந்த சுற்றும் பயிற்சி அமைப்புகளின் எண்ணிக்கை 533ஆக இருந்தது. மொத்தத்தில், 1970 ஜூன் வரைக்கும் 46,89,000 அபேட்சகர்கள் கூட்டுறவுக் கல்வி பெற்றனர்.

சங்கங்களின் உறுப்பினர்களுக்கும், அவைகளின் நிருவாகக் குழு உறுப்பினர்களுக்கும், தீவிர விவசாய வளர்ச்சித் திட்டத்தைப் பற்றிய கல்வியை அளிக்கும் திட்டம் 1966–67ஆம் ஆண்டில் தொடங்கினது. தேசியக் கூட்டுறவு ஒன்றியம் இத் திட்டங்களைத் தொடர்ந்து அமல்படுத்தியும், வழிகாட்டியும் மேற்பார்வை செய்தும் வந்தது. 1969–70ஆம் ஆண்டு முடிவில், 41 விளக்கவுரை யாளர்கள் (Instructors) ஏறக்குறைய எல்லா மாநிலங்களிலும் பணிபுரிந்து வந்தனர்.

தேசியக் கூட்டுறவு ஒன்றியம், பயிற்சி விளக்கவுரையாளர் களுக்காகப் புது டில்லியில் 'அனைத்திந்தியக் கூட்டுறவுக் கல்விப் பயிற்சி நிலையத்தை' (All India Co-operative Education Instructors Training Centre) நடத்திவருகிறது. தொழிற் கூட்டுறவுச் சங்க உறுப்பினர்களின் ஒரு கல்வித் திட்டத்தையுங்கூட அது ஏற்பாடு செய்கிறது. இந்தியாவில் பல்வேறு மாநிலங்களில் அத்தகைய நிலையங்கள் 14 இருக்கின்றன. 1970ஆம் ஆண்டின் சூன் வரைக்கும், மொத்தத்தில் 6,321 நிருவாகக் குழு உறுப் பினர்களும், 22,214 தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் சாதாரண உறுப்பினர்களும் பயிற்சி பெற்றிருந்தனர். இயக்கத்தில் மகளிர் ஈடுபாட்டை வளர்த்து அவர்களிடையே தீவிரமான தலைவர்களை உற்பத்தி செய்யும் நோக்கத்துடன், மகளிர் கல்விக்காகவும்கூட அது ஏற்பாடு செய்கிறது. 1969–70ஆம் ஆண்டு இறுதியில், 12 மாநிலங்கள் 35 மகளிர் விளக்கவுரையாளர்கள் மற்றும் 6 ஆண் விளக்கவுரையாளர்களின் உதவியைக்கொண்டு, மகளிர் கல்விக்கான திட்டங்களை அமல் செய்து வந்தன. எனினும், உறுப்பினர்-கல்வித் திட்டம், தேவையான ஆர்வத்துடனும் தீவிரத் துடனும் அமல்படுத்தப்படவில்லை. தற்போது, அதற்கு இரண் டாவது முதன்மை மாத்திரம்தான் அளிக்கப்பட்டு வருகிறது. சங்கங்களின் உறுப்பினர்களையும், நிருவாகக் குழு உறுப்பினர் களையும், நிருவாகக் குழு அலுவலர்களையும் இத் திட்டத்தின்கீழ் கொண்டுவருவதன் அவசியத்தையும், விரும்பத்தக்கதையும் கவ னிக்குமிடத்து, பல்வேறு கட்டங்களில் திட்டத்தைப் பலப்படுத்தத்

தேவைப்படுகிறது. சில மாநிலங்களில் செய்யப்படுவதுபோல, திட்டம் குறைக்கப்படவோ கைவிடப்படவோ கூடாது. திட்டம் பயனுள்ளதாக இருப்பதால் ஒரு குறுகியகால வரைக்குள் உடனடியாகவும், தெளிவாய்த் தெரிகிறதாகவும் அதன் நன்மைகள் இல்லாமலிருப்பதால், திட்டத்தின் முக்கியத்துவத்தை முன்னிட்டுத் திட்டம் முறைப்படுத்தப்பட்டுப் பயனுறுதியுள்ளதாகச் செயற்படுவதற்கு ஏற்பாடு செய்யப்படவேண்டும்.

**(ஆ) தமிழ்நாட்டில் கூட்டுறவுக் கல்வி:** (Co-operative Education in Tamilnadu): தமிழ்நாட்டில், சங்கங்களின் உறுப்பினர்களுக்காகவும், பஞ்சாயத்தார்களுக்காகவுமான பயிற்சி, ஆரம்ப வருடங்களில் கூட்டுறவுத் துறை அதிகாரிகளுக்கும், ஒன்றியங்களின் பேரவை உறுப்பினர்களுக்கும், மேற்பார்வையாளர்களுக்கும், அவர்கள் சங்கங்களுக்குப் போகும் காலங்களின்போது அளிக்கப்பட்டது. சங்கங்களின் மேற்பார்வைக்காக, மாவட்ட நிறுவனமாகவிருந்த 'மாவட்டக் கூட்டுறவுக் கூட்டிணைப்பு'ம் (District Co-operative Federation) சுமார் மூன்று ஆண்டுகளுக்கு ஒழுங்கான பஞ்சாயத்து வகுப்புகளை நடத்தின. இக் காரியத்திற்காக, அவை அரசினரிடமிருந்து மானியங்களைப் பெற்றன. இந்திய அரசால் ஒப்பளிக்கப்பட்ட திட்டத்தின்கீழும், மத்திய அரசால் சென்னை மாகாண அரசுக்கு 1935ஆம் ஆண்டில் அளிக்கப்பட்ட உதவித்தொகையைக் கொண்டும், சங்கங்களின் பஞ்சாயத்தார்களுக்கும் உறுப்பினர்களுக்கும் பயிற்சிக்கான வகுப்புகள் சென்னை மாகாணக் கூட்டுறவு ஒன்றியத்தின் ஆதரவில் நடத்தப்பட்டன. சென்னை மாகாணக் கூட்டுறவு ஒன்றியம், பயிற்சி வகுப்புகளை நடத்துவதாலுண்டான செலவை ஏற்றுக்கொள்வதற்காக, ஆண்டொன்றுக்கு 22,236 ரூபாய் உதவித்தொகை அளிக்கப்பட்டது. மாவட்டக் குழுக்களின் மற்றும், மத்திய வங்கிகளின் உதவியைக்கொண்டு, ஒன்றியம், மாகாணத்தில் பல்வேறு இடங்களில், ஒவ்வோர் இடத்திலும் இரண்டு அல்லது மூன்று நாள்களுக்குப் பயிற்சி வகுப்புகளை நடத்தியது. சங்கங்களின் நிருவாகக் குழு அலுவலர்களுக்கும், சாதாரண உறுப்பினர்களுக்கும், கணக்குப் பதிவியலிலும், அதற்குத் தொடர்பான வேலையிலும் பயிற்சி அளிப்பதற்காக ஒவ்வொரு மாவட்டத்திற்கு 2 விகிதம், முதுநிலைக் கூட்டுறவு ஆய்வாளர்கள் (கல்வி ஆய்வாளர்கள் – Education Inspectors) அமர்த்தப்பட்டனர். முக்கியக் கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட செயலாளர்களும், இயக்குநர்களும், கூட்டுறவு, கிராமப் பொருளாதாரம், கணக்குப் பதிவியல் முதலியவற்றில், சென்னை நகரத்திலுள்ள மத்தியக் கூட்டுறவு நிலையத்தில் (Central Co-operative Institute) அவசிய

மான பயிற்சிபெற்ற பிறகு, தங்கள் சங்கங்களின் உறுப்பினர்களுக்காக வகுப்புகள் நடத்தினர். 1943ஆம் ஆண்டிலிருந்து, இந்திய அரசின் உதவித்தொகை கிடைக்காமல் போய்விட்டது. இத்திட்டங்களில் சில, மாறுதல்கள் சிலவற்றோடு தொடர்ந்து அமல் செய்யப்பட்டு அவற்றின் செலவை மாநில அரசு ஏற்றது.

1957ஆம் ஆண்டில், உறுப்பினர் கல்வி முன்னோடித் திட்டம் ஒன்று அகில இந்தியக் கூட்டுறவு ஒன்றியத்தின் ஆதரவின்கீழ், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் தொடங்கப்பட்டது. அத்திட்டம் அப்போதைக்கப்போது மாறுதல்களடைந்து வந்தது. ஆரம்பத்தில், மூன்று வகையான வகுப்புகளிருந்தன. அதாவது (1) மூன்று நாள்கள் காலத்திற்கு உறுப்பினர்-கல்வி வகுப்புகள், (2) ஐந்து நாட்கள் காலத்திற்குப் பஞ்சாயத்தார்கள் பயிற்சி வகுப்புகள், (3) முப்பத்தாறு நாள்கள் காலத்திற்கு நிருவாகக்குழு அலுவலர்கள் பாட வகுப்புகளிருந்தன. சமுதாய வளர்ச்சி வட்டாரம் (Community Development Block) பயிற்சிக்கான பகுதியாக இருந்துவந்தது. அத்தகைய ஒவ்வொரு பகுதியும் ஒரு கல்வி ஆய்வாளர் பொறுப்பிலிருந்தது. 1962ஆம் ஆண்டில் இத்திட்டம் திருத்தப்பட்டது. சங்கங்களின் உறுப்பினர்களும், சங்கங்களில் இனிச் சேரக்கூடிய உறுப்பினர்களும், பஞ்சாயத்தாரர்களும் மூன்று நாள்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டனர். ஒவ்வொரு சங்கத்திலும், பஞ்சாயத்தாரர்களுக்கு மாத்திரம் மேற்கொண்டு மூன்று நாள்களுக்குத் தொடர்ந்து ஒரு பயிற்சியளிக்கப்பட்டது. 1964ஆம் ஆண்டில் பின்வருமாறு இத் திட்டம் மீண்டும் திருத்தப்பட்டது: (1) கூட்டுறவுச் சங்கங்களின் கௌரவச் செயலாளர்கள் மற்றும், பயிற்சி பெறாத மேலாளர்கள் அல்லது எழுத்தர்களுக்காக 28 நாட்களுக்கான பயிற்சி, (2) சங்கங்களின் பஞ்சாயத்தாரர்களுக்கும் நிருவாகக் குழு அலுவலர்களுக்கும், ஆர்வமுள்ள உறுப்பினர்களுக்கும் 5 நாள்களுக்கான பயிற்சி, (3) மாதமொரு முறை கூடும் 'படிப்புச் சரகங்கள்' (Study Circles) மூலம், உறுப்பினர்கள் மற்றும் இனிச் சேரக்கூடிய உறுப்பினர்களுக்கான பயிற்சி.

மேற்சொன்ன முதலிரண்டு பாடத் திட்டங்களும் கல்வி ஆய்வாளரால் நடத்தப்பட்டன. மூன்றாவது பாடத் திட்டம், கூட்டுறவு வட்டார வளர்ச்சி அலுவலராலும் (Extension Officer-Co-operation) கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகக் குழு அலுவலர்களாலும் ஏற்பாடு செய்யப்பட்டது. 1957ஆம் ஆண்டிலிருந்த கல்வி ஆய்வாளர்களின் எண்ணிக்கை 2-லிருந்து, படிப்படியாக, 1962–63ஆம் ஆண்டு 37-க்கு அதிகரித்தது. 1964–65ஆம்

ஆண்டில் அந்த எண்ணிக்கை 20-க்குக் குறைந்தது. மாவட்டக் கூட்டுறவுக் கல்விக்குழு (District Co-operative Educational Committee) ஒன்று, ஒவ்வொரு மாவட்டத்திலும் மத்திய வங்கித் தலைவரை முதல்வராகவும் மத்திய வங்கிச் செயலாளரைச் செயலாளராகவும் கொண்டு உறுப்பினர்-கல்வித் திட்டத்தைப் பயனுறுதியான மேற்பார்வை செய்வதற்காக நிறுவப்பட்டது. 1967ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில் இத் திட்டத்திற்கு அரசு உதவித்தொகை நிறுத்தப்பட்டதன்பேரில் திட்டம் நிறுத்தப்பட்டது. இத் திட்டத்தின்கீழ், 46,141 உறுப்பினர்களுக்கும் இனிச் சேரக்கூடிய உறுப்பினர்களுக்கும், 86,101 பஞ்சாயத்தாரர்களுக்கும், 5,386நிருவாகக் குழு உறுப்பினர்களுக்கும் பயிற்சி அளிக்கப்பட்டது. இத் திட்டத்தைப் புதுப்பிக்க அரசு யோசித்து வருகிறது.

புது டில்லியிலுள்ள இந்திய தேசிய ஒன்றியத்தின் ஆதரவின் கீழ், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் 1968ஆம் ஆண்டிலிருந்து தஞ்சை மாவட்டத்தில் அதாவது தீவிர விவசாய வளர்ச்சித் திட்டப் பகுதியில், கூட்டுறவுக் கல்வித் திட்டத்தை அமல்செய்து வருகிறது. திட்டப் பகுதியிலுள்ள கூட்டுறவு நிறுவனங்களின் உறுப்பினர்களுக்கும், நிருவாகக் குழு அலுவலர்களுக்கும், கூட்டுறவுக் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் கல்வியளிப்பதே இத் திட்டத்தின் நோக்கமாகும். கூட்டுறவுக் கல்வி ஆய்வாளர்கள் இரண்டுவிதமான பாடவகுப்புகளை நடத்துகின்றனர். — ஒன்று, உறுப்பினர்களுக்காகவும், மற்றொன்று நிருவாகக் குழு உறுப்பினர்களுக்காகவும் — 1971–72ஆம் ஆண்டில், 208 பாடவகுப்புகள் நடத்தப்பட்டன. (உறுப்பினர்களுக்காக 100 வகுப்புகளும், நிருவாகக் குழு உறுப்பினர்களுக்காக 108 வகுப்புகளும்) இந்த வகுப்புகள்மூலம் 928 உறுப்பினர்களும் 350 நிருவாகக் குழு அங்கத்தினர்களும் பயிற்சி அளிக்கப்பட்டனர். இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியம், திட்டத்திற்கான எல்லா உதவியையும் வாபஸ் செய்துவிட்டதனால், திட்டம் இப்பொழுது நிறுத்தப்பட்டுவிட்டது.

## கூட்டுறவுப் பிரசாரம்

கூட்டுறவு இயக்கத்தின் பலமும், பெருக்கமும், பல்வேறு மக்கட்பகுதியினரிடையே கூட்டுறவு இலட்சியங்களைப் பரப்பும், பயனுறுதியுள்ள கூட்டுறவு விளம்பரத்தையும் பிரசாரத்தையும் பெருமளவு சார்ந்திருக்கிறது. இயக்கத்தின் வெளியேயிருக்கும் மக்களிடையே, இயக்கத்தின் இலட்சியங்களில் ஓர் அக்கறையையுண்டுபண்ணி, அவர்கள் இயக்கத்தில் சேரும்படி செய்வதன்மூல

மும், இயக்கத்தில் ஏற்கெனவே இருப்பவர்களின் விசுவாசத்தை யும் இயக்கத்தின் பண்புகளில் அவர்களுடைய நம்பிக்கையையும் உறுதிப்படுத்துவதன்மூலமும், இயக்கத்தைப் பேணி வளர்ப்பதே கூட்டுறவு விளம்பரம் மற்றும் பிரசாரத்தின் நோக்கமாகும். பல்வேறு திசைகளில் இயக்கத்தின் பெருக்கம், தகவலறிந்து விளக்கம் பெற்ற ஒரு பொதுமக்கள் கருத்தின்மூலம் ஆதரிக்கப்பட வேண்டும். இல்லாவிடில், உத்தேசிக்கப்படும் திட்டங்களின் வெற் றியை நிச்சயப்படுத்த முடியாது. குறிப்பாக, கூட்டுறவுக் கடனுக் கான, மற்றும், கூட்டுறவு விற்பனைக்கான விரிவான திட்டங்கள் அமல்படுத்தப்படும் கிராமப் பகுதிகளில், கூட்டுறவுப் பிரசாரம் மிகவும் அவசியப்படுகிறது. கிராமப் பகுதிகளில் பயனுள்ளதான தும், இடைவிடாததுமான பிரசாரம்தான் உறுப்பினர்களுக்குக் (தற்போதுள்ள உறுப்பினர்களும் சேரக்கூடிய உறுப்பினர்களும்) கூட்டுறவுக் கொள்கைகளிலும், நடைமுறையிலும் ஓர் ஆதார அறிவைக் கொடுத்துதவி, இயக்கத்தை உறுதியான கால்கோளின் மீது அமைப்பதற்கு வகைசெய்கிறது.

கூட்டுறவுக் கல்விக்கும் பயிற்சிக்கும் பொறுப்பாகவுள்ள, 1914ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், கூட்டுறவுப் பிரசாரத்திற்குக்கூடப் பொறுப்பாளி யாக விருக்கிறது. முன்னமே கூறினபடி, அண்மையில் நிறை வேற்றப்பட்ட சட்டத் திருத்தத்தின்படி, அதனுடைய அங்கத் துவம் எல்லா மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களுக்கும் தலைமைக் கூட்டுறவு நிறுவனங்களுக்கும் அதன் எல்லைக்குள் அமைக்கப்பட்ட கூட்டுறவுப் பயிற்சிக் கழகங்களுக்கும் அடைக்கப்பட்டிருக்கிறது. அண்மையில் நிறுவப்பட்ட மாவட்ட ஒன்றியங்களும், தாலுகா ஒன்றியங்களும்கூட முறையே மாவட்ட மட்டத்திலும் தாலுகா மட்டத்திலும், கூட்டுறவு விளம்பரம், பிரசார வேலையைக் கவனித்து வருகின்றன. 1972ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 12 மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களும், 81 தாலுக்காக் கூட் டுறவு ஒன்றியங்களும் மாநிலத்திலிருந்தன. அவை இளநிலையில் செயற்பட்டு வருகின்றன.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், 16 எம். எம். புரொ ஜெக்டர்களும், இசைத்தட்டுகளும், நாடாப் பதிவுகளும், ஒலி பெருக்கி வசதிகள் முதலிய தளவாடங்களும் அடங்கிய ஓர் ஊர்தியின் (Public Van) உதவியைக்கொண்டு, கூட்டுறவுப் பிரசாரம் செய்கிறது. ஒன்றியத்தால் தயாரிக்கப்பட்ட 'கூட்டுறவு' என்ற தலைப்பில் ஒரு திரைப்படச் சுருள்கூடக் காண் பிக்கப்படுகிறது. ஒன்றியம், கூட்டுறவு பற்றிய இசைத்தட்டு

களையும்கூடத் தயாரித்துள்ளது. பல்வேறு வகையான கூட்டுறவு நடவடிக்கைகளைக் குறித்த விளக்கப் படங்களைக் காட்சிப் பொருள் களாகக் கொண்ட முக்கியப் பொருட்காட்சிகளில் ஒன்றியம் பங் கெடுத்துக்கொள்கிறது. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலு முள்ள மக்களுக்கு, இயக்கத்தாலேற்படும் நன்மைகளைச் சித்திரிக் கும் கூட்டுறவு பற்றிய, மகிழ்ச்சியூட்டுவதும் அறிவு பயப்பது மான ஒரு திரைப்படச் சுருளைத் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் தயாரித்துள்ளது. 1971—72ஆம் ஆண்டில், திரைப்பட ஊர் தியைப் பராமரிப்பதற்காக, அரசு ரூ. 13,000 மானியத் தொகையை ஒன்றியத்திற்கு அளித்தது. அந்த ஆண்டில், 71 திரைப்படக் காட்சிகள் காண்பிக்கப்பட்டன.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், மாநாடுகளையும், கருத்தரங்கு களையும்கூட நடத்துகிறது. ஆங்கிலத்தில் 'கூட்டுறவு பற்றிய தமிழ்நாடு பத்திரிகை' (Tamilnadu Journal of Co-operation) என்ற தலைப்பில் ஒரு மாதப் பத்திரிகையையும், 'கூட்டுறவு' என்ற தலைப்பில் தமிழில் ஒரு மாதப் பத்திரிகையையும் அது வெளியிடு கிறது. இந்தப் பத்திரிகைகள் உறுப்பினர் சங்கங்களுக்கு இலவச மாக அனுப்பப்படுகின்றன. ரூபாய் 10, ஆண்டுச் சந்தாச் செலுத் தும் மற்றவர்களுக்கும், இப் பத்திரிகைகள் அனுப்பப்படுகின்றன. கூட்டுறவு இயக்கத்தின் முக்கிய அம்சங்களைப் பற்றிய சிறு வெளி யீடுகளையும், சிறு புத்தகங்களையும்கூட ஒன்றியம் அவ்வப்போது வெளியிடுகிறது. இக் காரியத்திற்காக, ஒன்றியத்தில் ஒரு 'தகவல் புள்ளிவிவரங்கள் கலம்' (Information and Statistical Cell) செயல்பட்டு வருகிறது. மாணவப் பருவத்திலிருந்தே, மாணவர் களிடையே கூட்டுறவு உணர்வைப் பிறப்பிக்கும் பொருட்டும், கூட்டுறவு இயக்கத்தில் அவர்களைப் பிரவேசிக்கச் செய்யும் பொருட்டும், கூட்டுறவு விஷயங்களைப்பற்றிப் பேச்சுப் போட்டி கள், கல்லூரி மாணவர்களுக்காகவும் நகரத்திலும் வெளியூர்களிலு முள்ள கூட்டுறவுப் பயிற்சிக் கழகங்களின் மாணவர்களுக்காக வும், 'அகில இந்தியக் கூட்டுறவு வார' விழாவின்போது நடத்தப் பட்டு, போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் படுகின்றன. மாநில ரீதியில் உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக் காகக் கட்டுரைப் போட்டியையும் பேச்சுப் போட்டியையும்கூட ஒன்றியம் நடத்துகிறது.

கூட்டுறவு பற்றிய நாராயணசாமிப் பிள்ளைக் குழுவினரும் (1956), கூட்டுறவு பற்றிய சந்தானம் குழுவினரும் (1961), மக்களிடையே, குறிப்பாக நாட்டில் இளைஞர்களிடையேயும், மகளி ரிடையேயும், கூட்டுறவுக் கருத்துகளையும் இலட்சியங்களையும் பரப்புவதன் அவசியத்தை வலியுறுத்தியுள்ளனர். அவர்கள்

செய்த யோசனைகளுள் முக்கியமானவைகள் கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன.

(i) மாநிலக் கூட்டுறவு ஒன்றியம், கூட்டுறவு பற்றியும் அதன் தொடர்பான விஷயங்கள் பற்றியுமான அறிவைப் பரப்புவதற்காகப் படிப்புச் சரகங்களை (Stduy Circles) அமைக்கலாம். அம் மாதிரியான படிப்புச் சரகங்களை மத்திய வங்கிகளும் பெரிய நகர வங்கிகளும் மாவட்டங்களில் நிறுவலாம். முக்கிய விஷயங்கள் விவாதிக்கப்படும் அத்தகைய படிப்புச் சரகங்கள் கூட்டுறவு பற்றியும் அதற்குத் தொடர்புள்ள விஷயங்கள் பற்றியுமான அறிவைப் பரப்பும் பணியின் விளைவாக, கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றமும் செயற்பாடும் மேம்பாடுடையதாக்கப்பெறும்.

(ii) கூட்டுறவு இயக்கத்தின் இலட்சியத்தையும், செய்முறையையும் மகளிர்க்கு அறிமுகப்படுத்தும் நோக்கத்துடன், எல்லா மகளிர் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மாணவர்கள் எழுதுபொருள்கள் பண்டசாலைகள் நிறுவப்படலாம். அங்ஙனமே ஒவ்வொரு உயர்நிலைப்பள்ளியிலும், கல்லூரியிலும் அமைக்கப்படும் மாணவர்கள் கூட்டுறவுப் பண்டசாலைகள், இளைஞர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் இலட்சியங்களையும் நடைமுறை உபயோகத்தையும் கற்றுக்கொள்ள உதவும் சிறந்த சாதனமாக இருக்கும்.

(iii) ஒவ்வொரு பள்ளியிலும், கல்லூரியிலும் தம் பணியாளர்களுக்காகவும், மாணவர்களுக்காகவும், கூட்டுறவுப் பண்டசாலைகளை நடத்துவதற்கு ஊக்கமளிக்கப்படவேண்டும். மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களும் மத்திய வங்கிகளும் இக் காரியத்திற்காக அவசியப்படும் உதவியை அந்த நிறுவனங்களுக்கு ஆரம்பத்தில் வழங்கவேண்டும்.

(iv) உயர்நிலைப்பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பாடநூல்களில், மாணவர்களுடைய தரத்திற்கேற்பக் கூட்டுறவு பற்றிய தகவல்கள் அடங்கியிருக்கலாம். குறிப்பாக, மாணவர்களிடையே நற்பண்புகளைப் பெறும் விருப்பத்தைத் தூண்டும் நோக்கத்துடன், பாடத் திட்டத்தில் சிறப்புமிக்க கூட்டுறவாளர்களின் வாழ்க்கை வரலாறும் சேர்க்கப்படலாம்.

## கூட்டுறவுப் பயிற்சி
## (Co-operative Training)

**(அ) பொது:** எந்தத் தொழிலிலும், பயிற்சியானது, நடைமுறைக் கல்வியாகவிருக்கிறது. கூட்டுறவுப் பயிற்சியைக் 'கூட்

டுறவு நடவடிக்கைத் துறையில் நடைமுறைக் கல்வி' என்று விளக்கம் கூறலாம். ஒருவேளை, கூட்டுறவு நடவடிக்கைகளை நிருவாகம் செய்யும் நபர்களைத் 'தொழில் செய்பவர்கள்' (Professionals) என்று அழைப்பது சரியானதாகும். ஏனென்றால், நாம் முன்னமே கூறியபடி, நம் பொருளாதார அமைப்பின் இதரத் துறைகளின் ஏகபோகமாக இதுவரை இருந்துவந்த பல்வேறு துறைகளில், இன்று கூட்டுறவுச் சங்கங்கள் உயர்ந்தஅளவு நுண்மையானவையாக வும், கடினமானவையாகவும், நவீனமானவையாகவுமான பணி களை மேற்கொண்டிருக்கின்றன. இக் கூட்டுறவுச் சங்கங்களை நிரு வாகம் செய்யத்தக்க பயிற்சியும், பின்னணியும் கொண்டுள்ள முழுநேரப் பணியாளர் தொகுதி, முன்பைவிட இப்பொழுது அதிகமாகத் தேவைப்படுகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான், கூட்டுறவுப் பயிற்சியின் பொருத்தம் முக்கியமானதாகவும் அவசிய மானதாகவுமாக ஆகியிருக்கிறது.

**(ஆ) விடுதலைக்கு முற்பட்ட காலத்தில் கூட்டுறவுப் பயிற்சி** (Co-operative Training in the Pre-Indipendence Period): 1928 ஆம் ஆண்டிலேயே விவசாயத்தைப்பற்றிய இராயல் கமிஷன் (Royal Commission on Agriculture) கூட்டுறவு இயக்கத்திற்கு நிபுணர் ஆலோசனையை வழங்கவும், இயக்கத்தை வளர்க்கவும், உயர்ந்த கல்வியுடன் நன்கு பயிற்சிபெற்ற பணியாளர் தொகுதி மிக அவசியம் என்று வலியுறுத்தியது. எனவே, அத்தகைய சிப்பந்தி களை ஏற்படுத்துவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும் என்று அது பலமாகப் பரிவுரை வழங்கியது. இப் பரிவுரையானது, கூட்டுறவு நிறுவனங்களில் பணிபுரியும் அரசு பணியாளரல்லாத சிப்பந்திகளுக்கும்கூட அதிகப் பலத்துடன் பொருந்தும். பஞ்சாப் மாநிலத்தில் மட்டும்தான் கூட்டுறவுத் துறைப் பணியாளர் களுக்கு ஒழுங்கான பயிற்சி ஏற்பாடுகள் இருந்தன என்பதை அது குறித்தது.

அந்த ராயல் கமிஷனின் பரிவுரைகளைப் பின்பற்றிப் பம் பாய் மாகாணத்துக் கூட்டுறவுப் பயிற்சிக் கழகம், பிரதம சங்கங் களின் செயலாளர்கள் பயிற்சிக்கான வசதிகளை வழங்கும் பொருட்டு, மாவட்டங்களில் கிளைகளுடன் மூன்று கூட்டுறவுப் பயிற்சிப் பள்ளிகளை நிறுவியது. சென்னை ராஜதானியில், கூட்டுறவு இலாகாவிலும், நிறுவனங்களிலும், ஏற்கெனவே பணிபுரியும் நபர் களுக்கும், அவைகளில் வேலைநாடுபவர்களுக்கும் பயிற்சியளிக்கப் பயிற்சிநிலையங்கள் 6 இடங்களில் தொடங்கப்பட்டன. இந்தப் பயிற்சி நிலையங்களில், கூட்டுறவுக் கணக்குப் பதிவு, வங்கித்தொழில், கணிக்கை ஆகியவை கற்பிக்கப்பட்டன. அரசு தன் சிப்பந்தி

களின் வாயிலாகவும் மானியம் வாயிலாகவும் இந்தப் பயிற்சி நிலையங்களுக்கு உதவி புரிந்தது.

1930ஆம் ஆண்டுகளில் பொருளாதார மந்தத்தையொட்டி, கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றம் பிரதிகூலமாகப் பாதிக்கப் பட்டது. 1936ஆம் ஆண்டில், பயிற்சிக்கான கோரிக்கை குறைந்துவிட்ட காரணத்தால், பம்பாய் மாகாணத்திலுள்ள மூன்று பயிற்சிப் பள்ளிகளும் மூடப்பட்டன. சென்னை மாகாணத்தில், நாளடைவில் தேவைக்குமேல் பயிற்சி பெற்ற வேலை நாடுபவர் களின் எண்ணிக்கை அதிகரித்ததால், மாகாண அரசு, 6 பயிற்சி நிலையங்களுக்குப் பதில், கூட்டுறவுத் துறையின் பணியாளர்களுக் குப் பயிற்சியளிக்க ஒரு மத்திய நிலையமும், கூட்டுறவு வங்கிகள், ஒன்றியங்கள், சங்கங்கள் முதலியவற்றின் பணியாளர்தொகுதிக்குப் பயிற்சி அளிக்க இரண்டு சுற்றும் பள்ளிகளும் இருந்தால் போதும் என்று உத்தரவிட்டது. மத்தியக் கூட்டுறவுப் பயிற்சி நிலையம் (Central Co-operative Institute) 1934ஆம் ஆண்டில் செயலாற்றத் தொடங்கியது.

கூட்டுறவுப் பயிற்சித் துறையில், மால்காம் டார்லிங் அவர் களால் தயாரிக்கப்பட்ட திட்டத்தின் அடிப்படையின்கீழ், இன் னொரு முக்கிய அபிவிருத்தி 1935ஆம் ஆண்டில் நடைபெற்றது. இத் திட்டத்தின்படி, அரசு பணியாளர்களுக்கும், அரசு பணியாள ரல்லாத சிப்பந்திகளுக்கும், சங்கங்களின் உறுப்பினர்களுக்கும் பயிற்சி வசதியை வழங்குவதற்காக, இந்திய அரசு மாகாண அரசுகளுக்கு உதவியளிக்க வேண்டும். சென்னை மாகாண அரசு, ஓர் ஐந்தாண்டுத் திட்டத்தைத் தயாரித்து, அந்தத் திட்டத்தை 1936ஆம் ஆண்டிலிருந்து அமல் செய்தது. கூட்டுறவு இலாகாவில் இளநிலை ஆய்வாளர்களாக அமர்த்தப்படுவதற்காகத் தெரிந்தெடுக் கப்பட்ட வேலை நாடுபவர்களுக்கு 4 மாதங்கள் நடைமுறைப் பயிற்சி அளிக்கப்பட்டது. பின்னர், அவர்கள் 10 மாத காலத்திற் குக் கோட்பாட்டுப் பயிற்சி (Theoretical Training) மத்தியக் கூட் டுறவுப் பயிற்சி நிலையத்தில் பெறுவதற்கு அனுப்பப்பட்டனர். மேற் பார்வையாளர்கள் பதவிக்காகத் தெரிந்தெடுக்கப்பட்ட வேலை நாடு பவர்களும், 2 மாதத்திற்கு நடைமுறைப் பயிற்சியும், வெளியூர் நிலையங்களில் 5 மாதங்களுக்குக் கோட்பாட்டுப் பயிற்சியும் அளிக் கப்பட்டனர். மத்தியக் கூட்டுறவு வங்கிகள், நகர வங்கிகள் ஆகிய வற்றின் செயலாளர்களும், மேலாளர்களும், கடன் பற்றற்ற சங்கங்களின் (Non-Credit Societies) பொறுப்பை வகிக்கும் நபர்களும், மத்தியக் கூட்டுறவுப் பயிற்சி நிலையத்தில் பயிற்சி அளிக்கப்பட்டனர். 2ஆவது உலக மகாயுத்தத்தால் ஏற்பட்ட

நெருக்கடியின் காரணமாக, இந்திய அரசு அளித்து வந்த உதவித் தொகைகள் 1943ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து நின்று விட்டமையால், மாகாண அரசு, பயிற்சிக்கான வசதிகளைக் கடுமையாகக் குறைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. 1944-ல் தயாரிக்கப்பட்ட யுத்தத்திற்குப் பிந்திய வளர்ச்சித் திட்டங்களின் விளைவாகக் கூட்டுறவுப் பயிற்சி, கூட்டுறவுக் கல்விக்கான வசதிகள் மீண்டும் ஏற்பாடு செய்யப்பட்டன. 1945ஆம் ஆண்டில் சென்னை ராஜதானியில், கூட்டுறவு நிறுவனங்களில் வேலை நாடும் நபர்களுக்கும் பணிபுரிபவர்களுக்கும் பயிற்சியளிப்பதற்காக, 4 கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள் இருந்தன. இவைகள் தவிர, கூட்டுறவுத் துறையின் இளநிலை ஆய்வாளர்களுக்குப் பயிற்சியளித்துவந்த மையக் கூட்டுறவுப் பயிற்சி நிலையமும் இருந்தது.

கூட்டுறவுத் திட்டக் குழுவினர் *(1945)* — Co-operative Planning Committee — கூட்டுறவுப் பயிற்சியைக் குறித்த ஏற்பாடுகளை ஆய்வுசெய்து, இதரப் பரிவுரைகளுடன், ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒரு தனிக் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி அமைக்கப்பட வேண்டுமென்ற பரிவுரையையும் இந்திய அரசு உயர் படிப்பிற்காகவும் ஆராய்ச்சிக்காகவும் ஒரு கூட்டுறவுப் பயிற்சி நிறுவனத்தை அமைக்கவேண்டும் என்ற பரிவுரையையும் வழங்கினர்.

சுருங்கக்கூறின், விடுதலைக்கு முன்னர், மாநிலங்களில் பல வகையான பயிற்சித் திட்டங்கள் இருந்துவந்தன; அரசு பணியாளர்களுக்கும் அரசு பணியாளரல்லாதவர்களுக்கும் பயிற்சிக்கான பல்வேறு ஏற்பாடுகள் இருந்துவந்தன; முறையானதும், ஒருங்கிணைந்ததுமான கூட்டுறவுப் பயிற்சித் திட்டத்திற்காகப் பொறுப்புடைய தேசிய மட்டத்து நிறுவனம் ஒன்றுமில்லாமலிருந்தது. கூட்டுறவுப் பயிற்சித் திட்டத்தின் விதி நாட்டின் பொருளாதார நிலைமைக்கும் நிலைபெறாத ஆட்சிக் கொள்கைகளுக்கும் இணைக்கப்பட்டிருந்தது.

**(இ) விடுதலைக்குப் பிந்திய காலத்தில் கூட்டுறவுப் பயிற்சி (Co-operative Training in the Post-Independence Period):** விடுதலைக்குச் சற்று முன், சர் ஜனார்த்தன் ஏ. மதன் (Sir Janarthan A. Madan) அவர்கள் தலைமையில், பம்பாய் மாகாண அரசால் நியமிக்கப்பட்ட கூட்டுறவுப் பயிற்சி பற்றிய குழு (Committee on Co-operative Training), 'கூட்டுறவில் உயர்பட்டயம்' (Higher Diploma in Co-operation) என்ற ஒரு பட்டத்தைப் பெறுவதற்குரிய பயிற்சிப் பாடப் படிப்பை ஒரு வருட காலத்திற்கு, உயர்நிலைச்

சிப்பந்திகளுக்காக வழங்குவதற்கு ஒரு கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி அமைக்கப்பட வேண்டுமென்று பரிவுரை வழங்கினது. இதன் அடிப்படையின்பேரில், பம்பாய் மாகாணக் கூட்டுறவு நிலையம், பூனு நகரத்தில், 1947ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் ஒரு கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியை அமைத்தது.

விடுதலையடைந்த பிறகு, கூட்டுறவு இயக்கம் ஒரு புதிய சகாப்தத்தில் புகுந்தது. அதன் நடவடிக்கைகளின் வளர்ச்சியில் ஒரு வேகம் இருந்தது. ஆனால், பயிற்சி ஏற்பாடுகளின் பற்றாக் குறையும், பயிற்சிபெற்ற பணியாளர் தொகுதி போதாமையும் கூட்டுறவு வளர்ச்சிக்குக் கடுமையான ஓர் அத்தை ஏற்படுத்தியது. இளநிலை, முதுநிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்கான நிறுவன ஏற்பாடுகளை யளிப்பதற்கு இந்திய ரிசர்வ் வங்கி முன்முயற்சி எடுத்தது. முற்போக்குள்ள, திறமையான, பயிற்சியடைந்த சிப்பந்திகளின் அவசியத்தை அவ்வப்போது வலியுறுத்திவந்த இந்திய ரிசர்வ் வங்கி, விவசாயக் கடன்பற்றிய நிலையான ஆலோசனைக் குழுவினரால் (Standing Advisory Committee on Agricultural Credit) வழங்கப்பட்ட யோசனையின்பேரில், முதுநிலைக் கூட்டுறவுப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்காகக் குறுகியகாலப் பாடப் படிப்பை நடத்த ஒரு முடிவு எடுத்தது. இந்திய ரிசர்வ் வங்கியால் உதவப்பட்டு, முதல் பாடப் படிப்பு, 1952ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் பூனு நகரிலுள்ள கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியில் நடத்தப்பட்டது.

இந்தியாவில், கூட்டுறவுப் பயிற்சி வரலாற்றில் 1953ஆம் ஆண்டு ஒரு முக்கிய நிகழ்ச்சியாக உண்மையாகவே கருதப்பட வேண்டும். அந்த ஆண்டில்தான், 'கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு' (Committee for Co-operative Training) என்ற ஓர் உயர் அதிகாரக் குழு, பல்வேறு மாநிலங்களிலுள்ள கூட்டுறவு இலாக்காக்களிலும் நிறுவனங்களிலும் பணிபுரியும் அல்லது பணிபுரியவிருக்கும் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்குத் தொடர்பான ஏற்பாடுகளை அமைப்பதற்கும், அவற்றை இயக்குவதற்கும், திட்டங்களைத் தீட்டுவதற்கும் அமைக்கப்பட்டது. இக் குழு, ஒரே சமயத்தில் இந்திய ரிசர்வ் வங்கியின் குழுவாகவும் இந்திய அரசின் குழுவாகவும் பணியாற்றவேண்டியிருந்தது. உயர்நிலை, இடைநிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சியைக் குறித்து இந்திய ரிசர்வ் வங்கியின் குழுவாகவும், கீழ்நிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சியைக் குறித்து இந்திய அரசின் குழுவாகவும் அது செயற்பட்டது. உயர்நிலை, இடைநிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்கான பொறுப்பை இந்திய ரிசர்வ் வங்கி மேற்கொண்

டது; இந்திய அரசு, கீழ்நிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்காகப் பிரதானப் பொறுப்பாளியாக விருந்தது.

கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு, 1953 டிசம்பரில் நடைபெற்ற தனது முதல் கூட்டத்தில், கூட்டுறவு நிறுவனங்களின் ஊழியர்களுக்கும் கூட்டுறவு இலாக்காக்களின் ஊழியர்களுக்கும் பயிற்சிக்கான ஓர் ஒருங்கிணைந்த திட்டத்தை அங்கீகரித்தது. அந்தத் திட்டத்தின் முக்கியமான அம்சங்களாவன:

(i) பயிற்சியாளர்களை உயர்நிலை, இடைநிலை, இளநிலை என்ற வகைபாடு செய்தல்.

(ii) உயர்நிலைச் சிப்பந்திகளுக்காகப் பூனாவில் தற்போதுள்ள நிறுவனத்தை விரிவுபடுத்துவதன்மூலம் ஓர் அகில இந்திய நிலையத்தை அமைத்தல்.

(iii) முடிவாக, இடைநிலைச் சிப்பந்திகளுக்காக 5 மண்டலப் பயிற்சி நிலையங்களை அமைத்தல்.

(iv) இளநிலைச் சிப்பந்திகளுக்காக, மாநில ரீதியில் பயிற்சித் திட்டங்களைத் தீட்டுதல்.

மேற்குறிப்பிட்ட ஒருங்கிணைந்த திட்டத்திற்கிணங்கவே, 1954 ஜூலையில் மண்டலக் கூட்டுறவுப் பயிற்சி நிலையம் (Regional Co-operative Training Centre) ஒன்று சென்னையில் தொடங்கப்பட்டது. அம் மாதிரியான நிலையங்கள், ராஞ்சி, மீரத், இன்டோர் என்ற இடங்களில் அமைக்கப்பட்டதுடன், ஏற்கெனவே இருந்துவந்த பூனா நிலையமும் ஒரு மண்டல நிலையமாக அமைக்கப்பட்டது. இதற்கிடையில், சமுதாயத் திட்டப் பகுதிகளிலும் (Community Project Areas) தேசிய வளர்ச்சித் திட்ட வட்டாரங்களிலும் (National Extension Service Blocks) பணிபுரிவதற்காக ஒவ்வொரு மாநிலத்திற்கும் தேவைப்படுகிற பெருவாரியான கூட்டுறவு வட்டார வளர்ச்சி அலுவலர்களுக்குப் (Extension Officers, Co-operative) பயிற்சி வழங்கும் பிரச்சினையை, 1954 ஜூலையில் நடைபெற்ற கூட்டத்தில், குழு கவனித்தது. கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள் அக் காரியத்திற்குத் தகுதியுடையவையல்ல என்று கருதப்பட்டு, 8 வட்டார மட்டத்துக் கூட்டுறவு அலுவலர்களின் பயிற்சி நிலையங்களை (Block Level Co-operative Officers Training Centres) அமைக்க முடிவெடுக்கப்பட்டது. 1955 அக்டோபரிலிருந்து 1956 ஜூன் வரை, அத்தகைய 8 நிலையங்கள் கோபால்பூர், ஐதராபாத், திருப்பதி,

கோட்டா, பால்நகர், டில்லி, பைசாவாத், கலயாணி என்ற இடங்களில் செயற்படத் தொடங்கின.

1955 ஆகஸ்டில், சில கூட்டுறவுப் பதிவாளர்களும், முதல்வர்களும் கூடிய முறைப்படியமையாத மாநாடு, கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களில் சிறப்புப் பாடப்படிப்புகள் (Special Courses) நிறுவப்படவேண்டும் என்று யோசனை கூறியது. இந்த யோசனை அடிப்படையின்பேரில், நில அடைமான வங்கித் தொழில், கூட்டுறவு விற்பனை ஆகியவற்றில் சிறப்புப் பாடப் படிப்புகள் சென்னையிலுள்ள பயிற்சி நிலையத்திலும் இதரச் சில பயிற்சி நிலையத்திலும் தொடங்கப்பட்டன.

கூட்டுறவுப் பயிற்சியின் பரிணாமத்தின் மற்ரெரு முக்கிய நிகழ்ச்சியானது, கூட்டுறவுப் பயிற்சி பற்றிய ஆராய்ச்சி அணியின் (1961) – Study Team on Co-operative Training – அறிக்கையாகும். இந்த அணி, திரு. எஸ். டி. மிஸ்ரா தலைமையில், இந்திய அரசால் நியமிக்கப்பட்டது. இந்த ஆராய்ச்சி அணியின் பரிவுரைகளின் அடிப்படையில், கூட்டுறவுப் பயிற்சிக்காக விரிவுபடுத்தப்பட்ட குழு ஒன்று 1962-ல் இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தால் அமைக்கப்பட்டு, 1962 சூலையில் கூட்டுறவுப் பயிற்சிக் கல்வியின் ஒருங்கிணைந்த திட்டம் முழுவதையும் இந்தக் குழு பொறுப்பேற்றுக்கொண்டது.

கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களின் அலுவல்களையும் அன்றாட நிருவாகத்தையும் நடத்தக்கூடிய வலிவுள்ள மாநில ஒன்றியங்கள் எங்கெங்கு இருந்தனவோ அங்கு, ஒன்றியங்களின் சிறப்புக் குழு அமைக்கப்பட்டு, இக் குழுக்களுக்குக் கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களின் உடனடியான நிருவாகத்தை மாற்றியன. சென்னையிலுள்ள கூட்டுறவுப் பயிற்சி நிலையம், 1962 சூலையில் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கு மாற்றப்பட்டது. 1968ஆம் ஆண்டில், இடைநிலை மட்டத்துப் பயிற்சி நிலையங்கள், 'கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிகள்' என்ற புதுப்பெயர் பெற்றன.

### (ஈ) கூட்டுறவுப் பயிற்சியின் தற்போதைய நிலைமை (Present Position)

**(i) கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிகள்:** தற்போது, இடைநிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சித் தேவைகளைப் பூர்த்தி செய்து இந்தியா முழுவதிலும், 14 கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிகள் உள்ளன. பயிற்சி பெற்ற பணியாளர் தொகுதி, ஆள் சேர்த்தல் காரியத்திற்காக (Recruitment), இந்திய அரசாலும் அநேக

மாநில அரசுகளாலும் அங்கீகரிக்கப்பட்ட 'கூட்டுறவில் உயர் பட்டயம்' (Higher Diploma in Co-operation) என்ற பட்டத்தை அளிக்க இக் கல்லூரிகள் 36 வார ஒரு 'பொது அடிப்படைப் பாடப் படிப்பை' (General Basic Course) நடத்தி வருகின்றன. 30–6–1970ஆம் ஆண்டு வரை இந்த அடிப்படைப் பாடப் படிப்பில் பயிற்சிபெற்ற நபர்களின் எண்ணிக்கை 11,810. 16 வாரத்தி லிருந்து 18 வாரம் வரை நீடிக்கும், தனிப் பாட படிப்புகள் பலவும் இக் கல்லூரிகளில் நடத்தப்படுகின்றன. இத் தனித் துறைப் படிப்புகளாவன: கூட்டுறவு வங்கித் தொழில், கூட்டுறவுத் தணிக்கை, கூட்டுறவு விற்பனை, கூட்டுறவு நிலவள வங்கித் தொழில், தொழிற் கூட்டுறவு ஆகியவை. இச் சிறப்புப் பாடப் படிப்புகள் தவிரக் குறுகியகாலப் புதுமுகப் பயிற்சி (Orientation Coures), புத்தொளிப் பயிற்சி (Refresher Courses), கடமைசார் பயிற்சி (Functional Courses), தனிவகைப் பயிற்சி (Ad-Hoc Coures) ஆகியனவும் இக் கல்லூரிகளில் நடத்தப்படுகின்றன. இக் கல்லூரிகளில் பயிற்சியாளர்கள், பல்வேறு மாநிலங்களின் கூட்டுறவுத் துறைகளிலிருந்து மட்டுமல்லாமல்; கூட்டுறவுநிறுவனங் களிலிருந்துங்கூட எடுக்கப்பட்டவர்கள். இக் கல்லூரிகளில் அளிக் கப்படும் பயிற்சித் திட்டத்தின் மற்றொரு குறிப்பான அம்சம், நேபால், மலேசியா, நைஜீரியா, டான்சேனியா, உகந்தா, எதியோப்பியா, கொரியா, ஈராக், ஆஃப்கானிஸ்தான் போன்ற இதர நாடுகளிலிருந்து ஐக்கியநாடு நிறுவனம் (U. N.) சர்வதேசத் தொழிலாளர் நிறுவனம் (I.L.O.) முதலிய நிறுவனங்களின் திட்டங்களின்கீழும் மற்றும் கொலம்புத் திட்டங்களின்கீழும் வரு கின்ற பயிற்சியாளர்கள் தங்கள் தேவைகளுக்கேற்ற பாடப் படிப்புகளில் பயிற்சி பெறுகிறார்கள்.

**(ii) வைகுந்த் மேதா கூட்டுறவு நிருவாகத் தேசியப் பயிற்சி நிலையம்–பூனா** (Vaikunth Metha National Institute of Co-operative Management-Poona): வாணிக நிருவாகப் பயிற்சிக்குத் தனிக் கவனம் செலுத்தியும், கூட்டுறவில் ஆராய்ச்சியை மேற் கொள்ளவும்கூட எல்லாமடங்கிய பயிற்சியளிக்கும் ஓர் உயர் மட்ட நிறுவனத்தின் அவசியத்தைப் பல குழுக்களும், ஆராய்ச்சி அணிகளும், நடைமுறைக் குழுக்களும் வலியுறுத்தியிருந்தன. முடிவாக, 1966-ல் வைகுந்த் மேதா கூட்டுறவு நிருவாகத் தேசி யப் பயிற்சி நிறுவனம் (Vaikunth Metha National Institute of Co-operative Management) அமைக்கப்பட்டது. இதில், தேசியக் கூட்டுறவுக் கல்லூரியும் மற்றும் ஆராய்ச்சி நிலையமும், நுகர்வோர் வாணிகத்திற்காக நிருவாக மத்திய நிலையமும் ஒன்றிணைக்கப் பட்டன. முதல் கூறப்பட்ட நிறுவனம் பூனாவில் முதலில் கூட்

டுறவுப் பயிற்சிக் கல்லூரியாக இருந்தது. இரண்டாவதாகக் கூறப்பட்ட நிறுவனம், 1964 சூனில் பம்பாயில் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் ஆதரவின்கீழ் அமைக்கப்பட்டு, ஆனால், 1966-ல் பூனாவிற்கு மாற்றப்பட்டு இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் கூட்டுறவுப் பயிற்சிக்கான குழுவிற்கு மாற்றப் பட்டது. ஒரு முதுநிலைமட்டப் பயிற்சி நிலையமான வைகுந்த் மேத்தா தேசியப் பயிற்சி நிலையத்தின் நோக்கம், கூட்டுறவு வளர்ச்சிக்குள் ஓர் உயர்தரமான தொழில் துணிவோர் நிருவாகத் தைப் பதியச் செய்தலாகும். கூட்டுறவு வாணிக நிருவாகத்தில் ஒரு பிற்பட்ட படிப்பு டிப்ளமோ பாடப்படிப்பை (Post Graduate Diploma Course) நடத்துகிறது. இந்த நிறுவனம் கூட்டுறவு இயக்கத்தின் பல்வேறு துறைகளில் பணிபுரியும் பணியாளர் தொகுதிகளுக்கான இதரப் பல குறுகியகாலப் பாடப் படிப்பு களையும், துணைப் பாடப் படிப்புகளையும்கூட நடத்துகிறது.

**(iii) கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள்** (Co-operative Training Institutes) கூட்டுறவுத் துறை இளநிலைப் பணியாளர் தொகுதிக் காகவும், கூட்டுறவு மேற்பார்வையாளர்கள், உதவி ஆய்வாளர் கள், உதவித் தணிக்கையாளர்கள், பிரதம சங்கங்களின் முழுநேரச் செயலாளர்கள் மற்றும் ஏனையவர்கள் போன்ற நிறுவனப் பணி யாளர் தொகுதிக்காகவும் பயிற்சியளித்து நாடெங்கும் தற் போது 66 கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களுள்ளன. கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு, இந்த எல்லாப் பயிற்சி நிலையங்களிலும், ஒருபடித்தான பயிற்சியை அளிப்பதற்கு முயற்சி செய்கிறது. வைகுந்த்மேதா தேசியப் பயிற்சி நிலையம் எல்லாப் பயிற்சி நிலையங்களுக்கும் மேல்நிலையில் தொடர்ந்திருந்து வந்துள்ளது. அது 1969—70-ல் 2,705 பயிலிகளுக்குப் பயிற்சியளித்தது. அதற் கடுத்தபடியாக, மகாராஷ்டிரா அதே வருடத்தில் 903 பயிலி களுக்குப் பயிற்சியளித்தது. பயிற்சித் திட்டங்கள் அமல் தொடங்கிய காலத்திலிருந்து பயிற்சியளிக்கப்பட்ட பயிலிகளின் மொத்த எண்ணிக்கை 87,793 ஆகும்.

மேற்கூறியதிலிருந்து, நம் நாட்டில் கூட்டுறவுப் பயிற்சிக்காக நாம் மூன்று அடுக்கு அமைப்பை வைத்திருக்கிறோம் என்பதும் இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் கூட்டுறவுப் பயிற்சிக் கான குழுவின் முயற்சியின்மூலம் பயிற்சி நிலையங்கள் யாவும் முழுமையாக இணைக்கப்பட்டிருக்கின்றன என்பதும் தெளிவாகும். எல்லா மட்டங்களிலும், பயனுறுதியுள்ள நிருவாகப் பயிற்சிக்கான தேவையையுணர்ந்து, இளநிலை மட்டத்திலிருந்து பாடத் திட்டத் தில் கூட்டுறவு நிருவாகத்திற்குத் தக்க இடம் அளிக்கும்வண்ணம் முக்கியமான பாடப் படிப்புகளுக்கான பாடத் திட்டம் உத்

தேசிக்கப்பட்டுள்ளது. கூட்டுறவு நிருவாகத்திற்கான வைகுந்த் மேதா தேசியப் படிப்புப் நிலையம் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிகளுக்குப் படிப்புப் பற்றிய தீவிர ஆதரவை அளித்து வருகிறது. கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிகளும் அவ்வாறே இளநிலைப் பயிற்சி நிலையங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன. ஒரு சரியான மதிப்பீடு மூலமும், ஆய்வுத் திட்டத்தின் மூலமும், இப் பயிற்சி நிலையங்களில் அளிக்கப்படும் பயிற்சியின் தரம் உயர்வாக வைக்கப் பட்டிருக்கிறது.

**(iv) கூட்டுறவுப் பயிற்சியில் இந்திய ரிசர்வ் வங்கியின் பங்கு** (Role of the Reserve Bank of India in Co-operative Training): மாநிலக் கூட்டுறவு வங்கிகள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள், நகரக் கூட்டுறவு வங்கிகள் ஆகியவற்றின் மேலாளர்—சிப்பந்திகளுக்கான பயிற்சிப் பாடப் படிப்பை, ரிசர்வ் வங்கி, பம்பாயிலிருக்கும் தன் 'வங்கிப் பணியாளர்களின் பயிற்சிக் கல்லூரி'யில் (Bankers' Training College–Bombay), 1965ஆம் ஆண்டிலிருந்து நடத்தி வருகிறது. 1969ஆம் ஆண்டில், கூட்டுறவு வங்கிகளின் பணியாளர் தொகுதிக்கான இந்தப் பாடப் படிப்பு, பூனா நகரத்திற்கு மாற்றப்பட்டு, அங்குள்ள கூட்டுறவு வங்கிப் பணியாளர்களின் புதிய பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி அளிக்கப் படுகிறது. இடைநிலைப் பணியாளர் தொகுதிக்கும்கூட, அதாவது மாநிலக் கூட்டுறவு வங்கிகள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ஆகியவைகளின் கிளை மேலாளர்களுக்கும் இக் கல்லூரியில் பாடப் படிப்புகள் நடத்தப்படுகின்றன. பிரதம விவசாயக் கடன் சங்கங்களின்மூலம் வணிக வங்கிகளால் விவசாயத்திற்கு நிதி வழங்கும் திட்டம் அமல் தொடங்கியதிலிருந்து, இந்த வணிக வங்கிகளின் இடைநிலை, முதுநிலைப் பணியாளர் தொகுதிக்காக, அதே கல்லூரியில் 'விவசாய நிதி இயல்' பற்றிய பட்டப் படிப்புகளை நடத்துவதற்கு முடிவு செய்யப்பட்டது. இக் கல்லூரியில் பல்வேறு பாடப் படிப்புகளும் கருத்தரங்குகளும் நடத்தப்படுகின்றன. இக் கல்லூரியில் நடத்தப்படும் 9 பல்வேறு பாடப் படிப்புகளில் மொத்தம் 225 பயிலிகள் பயிற்சியளிக்கப்பட்டனர். பயிற்சியாளர்களின் பயிற்சிச் செலவு முழுவதையும் ரிசர்வ் வங்கி ஏற்றுக் கொள்கிறது. ஆனால், மாணவர் விடுதிச் செலவுகளின் ஒரு பகுதியைப் பயிலிகளை அனுப்பும் வங்கிகள் ஏற்றுக்கொள்கின்றன.

## (உ) தமிழ்நாட்டில் கூட்டுறவுப் பயிற்சி (Co-operative Training in Tamil Nadu)

**(i) இளநிலை அலுவலர்களுக்கான பயிற்சி:** நாட்டில், கூட்டுறவு இயக்கத்தின் தொடக்கத்திலிருந்து, கூட்டுறவுச் செயல்

துறையில் எப்பொழுதுமே தமிழ்நாடு முன்னணியிலிருந்து வந்துள்ளது. இம் மாநிலத்தில் முதன்முதலில் ஆரம்பிக்கப்பட்ட கூட்டுறவுப் பயிற்சி நிலையம் 'ஹூட் கூட்டுறவுப் பயிற்சி நிலையம்' (Hood Co-operative Training Institute) தற்போது 'சாமியப்பா கூட்டுறவுப் பயிற்சி நிலையம்' என்று வழங்கப்பட்டுவரும் அந்த நிலையம், தஞ்சையில் 1927ஆம் ஆண்டிலிருந்து செயற்படத் தொடங்கியது. அதன் செயற்பாடு தஞ்சை மாவட்டத்திற்கு மட்டுமே அடக்கப்பட்டிருந்தாலும், நாளடைவில் 1941ஆம் ஆண்டுவரை தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலும் அதன் செயற்பாடு நீடிக்கப்பட்டிருந்தது. பின்னர், கோவையிலும், வேலூரிலும், அதற்குப் பின்னர், மதுரை, திருநெல்வேலி, சேலம், காஞ்சிபுரம் என்ற இடங்களிலும் தனியாகப் பயிற்சி நிலையங்கள் ஆரம்பிக்கப்பட்டன. இம் மாநிலத்தில் இன்று ஏழு இளநிலைக் கூட்டுறவுப் பயிற்சி நிலையங்கள், கூட்டுறவு நிறுவனங்களில் பணிபுரியும் அல்லது பணிபுரியவிருக்கும் இளநிலைப்பணியாளர் தொகுதிக்குப் பயிற்சியளித்து வருகின்றன. தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் ஒரு தனிக் குழு கூட்டுறவுத் துறைப் பணியாளர் தொகுதிக்காகவும் அரசு பணியாளரல்லாத பணியாளர் தொகுதிக்குமான பயிற்சித் திட்டங்களுக்குப் பொறுப்பாக உள்ளது. இக் குழு சென்னையிலுள்ள கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியையும்கூடத் தன் பொறுப்பில் வைத்திருக்கிறது.

இவ் வேழு கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களும் தமிழ்நாட்டின் கூட்டுறவு இயக்கத்தில் ஒரு சிறப்பிடம் வகிக்கின்றன. தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், பாடத் திட்டங்கள், சம்பள விகிதங்கள், தேர்வுகளை நடத்துவதற்கான விதிமுறைகள் ஆகியவற்றை ஆணையிடும், ஒருங்கிணைக்கும் அதிகாரியாக இருக்கிறது. பொதுவாக, பள்ளி இறுதியாண்டுத் தேர்வில் (S. S. L. C. Examination) தேர்வடைந்தவர்கள் கூட்டுறவுப் பயிற்சிக்காக இந் நிலையங்களுக்கு விண்ணப்பம் செய்கிறார்கள். கூட்டுறவு நிறுவனங்கள், தங்களிடம் ஊழியர்களாக இருப்பவர்களையும் அல்லது தாங்கள் ஊழியர்களாக வைத்துக்கொள்ள விரும்பும் நபர்களையும்கூட ஒரு சிலரை இப் பயிற்சி நிலையங்களுக்கு அனுப்புகின்றன. ஆனால், பயிலிகளில் பெரும்பாலோர் கூட்டுறவு இலாக்காவிலோ கூட்டுறவு நிறுவனங்களிலோ ஊழியர்களாக இல்லாத வெளியிலிருப்பவர்கள். இந் நிலையங்கள், 9 மாத அடிப்படைப் பாட வகுப்பை நடத்துகின்றன. இவைகளில் கற்றுக் கொடுக்கப்படும் பாடங்கள்: கூட்டுறவும், கூட்டுறவுக் கடன் தொழிலும், வங்கித் தொழிலும், கூட்டுறவுச் சட்டமும், கணக்குப் பதிவியலும், தணிக்கையும் மற்றும், கூட்டுறவு மேலாண்மை நிருவாகமும், கோட்பாட்டுப்

பயிற்சி (Theoretical Training) 7½ மாத காலத்திற்கும், களத்தில் நடைமுறைப் பயிற்சி 1½ மாத காலத்திற்கும் இப் பாடத் திட்டத்தில் அடங்கியுள்ளன. தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத் தால் நடத்தப்படும் ஒரு மாநில மட்டத்துத் தேர்வின் அடிப்படை யின்பேரில் பாடப் படிப்பை வெற்றிகரமாக முடிக்கும் பயிற்சி யாளர்களுக்குத் தமிழ்நாடு அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு சான்றிதழ், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் அளிக்கப்படு படுகிறது. மேற்கூறிய பாடப் படிப்புடன், பயிற்சி பெறாத கூட்டுறவுப் பணியாளர் தொகுதிக்காகத் தனிக் குறுகியகாலப் பாடப் படிப்புகள்கூட இந் நிலையங்களில் வழங்கப்பட்டு இப் பாடப் படிப்புகள் எவ்வித முறையான பயிற்சியுமில்லாமல் கூட் டுறவு நிறுவனங்களில் பணியாளர்களாகச் சேர்ந்துள்ளவர்களைத் தகுதியுள்ளவர்களாக்குகிறது. இப் பயிற்சி நிலையங்களைப் பற்றிய மிக்க மகிழ்ச்சி தரும் அம்சமானது, அவற்றில் ஒவ்வொன்றும், ஒரு சுதந்திரமானதும் சுய ஆட்சித் தன்மையதுமான பதிவு பெற்ற கூட்டுறவுச் சங்கமாக இயங்குகிறது. மற்றும், ஒவ்வொரு பயிற்சி நிலையமும் தன் சொந்த வரவு செலவுத் திட்டத்தை மேலாண்மை செய்கிறது. எல்லாக் கூட்டுறவுப் பயிற்சி நிலையங் களின் சிப்பந்திகள் தொகுதியானது அவற்றின் முதல்வராகப் பணியாற்றும் கூட்டுறவுத் துணைப் பதிவாளரையும் மற்றும், கூட் டுறவு முதுநிலை ஆய்வாளர்களையும், கூட்டுறவு உதவிப் பதிவாளர் களையும் நிலையங்களால் நேரடியாக அமைக்கப்பட்ட சிப்பந்திகளை யும் கொண்டுள்ளது. இந் நிலையங்கள் பயிற்சியாளர்களிடமிருந்து கட்டணங்களையும், பல்வேறு கூட்டுறவு நிறுவனங்களிலிருந்து நிதியுதவியையும் பெறுகின்றன. தமிழ்நாட்டு அரசு இந் நிலையங் களுக்குப் பல வழிகளில் உதவி வழங்கி வருகிறது. முதல்வரை யும் மற்றும், கூட்டுறவு இலாக்காவிலிருந்து ஆசிரியர் சிப்பந்தி களையும் அரசு இந் நிலையங்களுக்கு இலவசமாக வழங்குகிறது. நூலகத்திற்காக உதவித்தொகையும், பயிற்சியாளர்களில் தெரிந் தெடுக்கப்பட்ட ஓர் எண்ணிக்கைக்காகப் பயிற்சி யுதவிப்பணமும் கூட அரசால் வழங்கப்படுகின்றன. பயிற்சியாளர்கள், பயிற்சிக் கட்டணங்கள் செலுத்துகின்றனர். 1971—72ஆம் ஆண்டில் இப் பயிற்சி நிலையங்களில் 2,751 பயிற்சியாளர்களிருந்தனர்.

இளநிலை மட்டத்தில் 'மத்தியக் கூட்டுறவுப் பயிற்சி நிலையம்' என்ற பெயருடைய ஒரு தனிப் பயிற்சி நிலையம், சென்னையில் 1934ஆம் ஆண்டில் கூட்டுறவு இளநிலை ஆய்வாளர்கள் அந்தஸ் துள்ள கூட்டுறவு இலாக்காப் பணியாளர்களுக்குப் பயிற்சியளிப்ப தற்காக நிறுவப்பட்டது. கூட்டுறவு இலாக்காப் பயிற்சியாளர் தொகுதிக்கு மட்டும்தான் அது பயிற்சியளித்து வருகிறது. இப்

பயிற்சி நிலையத்தில் பயிற்சிக்காலம் ஒரு வருடமாகும். ஒரு வருடத்தில் மூன்று மாதங்கள் நடைமுறைப் பயிற்சியும், ஒன்பது மாதங்கள் கோட்பாட்டுப் பயிற்சியும் அளிக்கப்படுகின்றன. இப் பயிற்சி நிலையத்தின் தலைவர் ஒரு கூட்டுறவு இணைப்புப் பதிவாள ராகவும், மற்றச் சிப்பந்திகள் கூட்டுறவுத் துறை அலுவலர்களாகவு முள்ளனர். இந் நிலையத்திற்குத் தொடர்பான செலவு முழுவதை யும் தமிழ்நாடு அரசு ஏற்றுக்கொண்டுள்ளது. இப் பயிற்சி நிலை யத்தில் கற்றுக் கொடுக்கப்படும் பாடங்களாவன: கூட்டுறவுத் தணிக்கை, வங்கித்தொழில், கிராமப் பொருளாதாரம் மற்றும் கணக்குப் பதிவியல், நேரடியாக அமர்த்தப்பட்ட இளநிலை ஆய்வாளர்களுக்காகவும், இளநிலை ஆய்வாளர்களாகப் பதவி உயர் வுக்குத் தகுதியுடைய தட்டெழுத்தர்கள், மற்றும் எழுத்தர்கள் போன்ற கூட்டுறவுத் துறைச் சிப்பந்திகளுக்காகவும் 11 மாதப் பாடப் படிப்பு நடத்துவதுடன், இப் பயிற்சி நிலையம் நிலவள வங்கிகள், நுகர்வோர் பண்டசாலைகள் முதலியவற்றில் பணிபுரி யும் இலாக்காப் பணியாளர் தொகுதிக்காகப் புத்தொளிப் பயிற்சி யுங்கூட (Refresher Courses) நடத்துகிறது. இப் பயிற்சி நிலையத் தின் பயிற்சியாளர்கள் தங்கள் 11 மாதப் பாடப் படிப்பின் இறுதியில், ஒரு பட்டயம் (Diploma) அல்லது சான்றிதழைப் பெறுகிறதில்லை. ஆனால், தமிழ்நாடு அரசு பணியாளர் தேர்வுக் கழகத்தால் (Tamilnadu Public Service Commission) நடத்தப்படும் இலாக்காத் தேர்வுகளுக்குத் தோன்றி அவர்கள் இலாகாவில் முறை யான பணிக்காகத் தங்களைத் தகுதியாக்கிக் கொள்கிறார்கள். 1971–72ஆம் ஆண்டில், நேரடியாக வேலைக்கு அமர்த்தப்பட்ட 96 இளநிலை ஆய்வாளர்களுக்கும், 17 கம்ப்யூட்டர்களுக்கும் இந் நிலையம் பயிற்சியளித்தது.

**(ii) இடைநிலை மட்டத்து அலுவலர்களுக்கான பயிற்சி** (Training for Intermediate Level Officers): 1954 ஜூலையில், சென்னையில் மண்டலக் கூட்டுறவுப் பயிற்சி நிலையம் (Regional Co-operative Training Centre) நிறுவப்பட்டது. 1962-ல் இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் கூட்டுறவுப் பயிற்சிக் கான குழுவிற்குப் பயிற்சித் திட்டம் ஒப்புவிக்கப்பட்டபோது, ஏறக்குறைய அதேசமயத்தில், சென்னையிலுள்ள மண்டலக் கூட்டுறவுப் பயிற்சி நிலையத்தின் நிருவாகம் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கு ஒப்புவிக்கப்பட்டது. தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றி யம் இந் நிலையத்தின் அலுவல்களை மேலாண்மை செய்வதற்குக் 'கூட்டுறவுப் பயிற்சிக்கான தனிக் குழு' (Special Committee for Co-operative Training) என்ற ஒரு குழுவை அமைத்தது. 1962 ஜூலையிலிருந்து, இந் நிலையம் கூட்டுறவுப் பயிற்சி நிலையம்

(Co-operative Training Centre) என்று வழங்கப்பட்டு வந்தது. 1968-ல் இந் நிலையத்தின் பெயர் ஒரு மாறுதலடைந்து, அது 'கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி' (Co-operative Training College) என்று வழங்கப்படுகிறது.

கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி, தமிழ்நாட்டிலும் புதுவையிலுமுள்ள கூட்டுறவு இலாக்காவிலும் கூட்டுறவு நிறுவனங்களிலும் பணிபுரியும் இடைநிலை ஊழியர்களுக்கான, அடிப்படை மட்டத்துப் பயிற்சியின் தேவையைப் பூர்த்தி செய்கிறது. கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிக்குத் தொடர்பான செலவுகள் முழுவதும், மத்திய அரசிடமிருந்து (சமுதாய வளர்ச்சித் துறை மற்றும் கூட்டுறவுத் துறை) (Ministry of Community Development and Co-operation) உதவித்தொகைகள் பெறுகின்ற, கூட்டுறவுப் பயிற்சிக்கான குழுவால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இக் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியில், கூட்டுறவு இலாக்காவிலிருந்து அனுப்பப்பட்ட சிப்பந்திகளும் கலைத் துறையிலிருந்து வரும் சிப்பந்திகளும் இணைக்கப்பட்டுள்ளனர். இக் கல்லூரியில், பொது அடிப்படைப் பாடப் படிப்பில் (General Basic Course) கற்றுக் கொடுக்கப்படும் பாடங்களும், கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களில் கற்றுக்கொடுக்கப்படும் பாடங்களும் ஒரே மாதிரியானவை என்றாலும், இக் கல்லூரியில் பாடங்கள் ஓர் உயர் மட்டத்தில் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. கூட்டுறவு வங்கித் தொழில், கூட்டுறவுத் தணிக்கை ஆகியவற்றில் ஒருபட்டயப் பாடப் படிப்புப் (Diploma) போன்ற சிறப்புப் பயிற்சிப் படிப்புப் பாடங்கள் பலவும், புதுமுகப் பயிற்சி ஆற்றுப்படுத்தும் பாடப் படிப்பு, சிறப்புக் குறுகியகாலப் பயிற்சி ஆகியன இக் கல்லூரியில் நடத்தப்படுகின்றன. தமிழ்நாடு அரசு பணியாளர்த் தேர்வுக் கழகத்தால் கூட்டுறவு இலாக்காவுக்குத் தேர்வு செய்யப்படும் அலுவலர்கள், 'கூட்டுறவில் உயர் பட்டயம்' (Higher Diploma in Co-operation) என்றுகூட வழங்கப்படும், பொது அடிப்படைப் பாடப் படிப்புப் பயிற்சிக்கு 36 வார காலத்திற்கு அனுப்பப்படுகின்றனர். 28 வாரங்கள் கோட்பாட்டுப் பயிற்சியும், 8 வாரங்கள் நடைமுறைப் பயிற்சியும் அவர்கள் அளிக்கப்படுகின்றனர். கூட்டுறவுத் துறை அலுவலர்களான முதுநிலைக் கூட்டுறவு ஆய்வாளர்கள், சார்துணைப் பதிவாளர்கள், துணைப் பதிவாளர்கள் ஆகியவர்கள் மட்டுமன்றி, மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள், தலைமைச் சங்கங்கள், மாவட்ட மட்டத்தில் விற்பனை, வீட்டு வசதி, நிலவள வங்கி மற்றும் அது போன்ற கூட்டுறவு நிறுவனங்களின் அலுவலர்கள்கூட இப் பாடப் படிப்புகளுக்கு அனுமதிக்கப்படுகின்றனர். 1971–72ஆம் ஆண்டில், 179 நிறுவனப் பயிலிகளும், 124 இலாக்காப் பயிலிகளும்,

4 அயல்நாட்டுப் பயிலிகளும் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியில் பயிற்சிபெற்றனர். இப் பாடப் படிப்பில் வெற்றி பெறுபவர்கள், இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் கூட்டுறவுப் பயிற்சிக் கான குழுவால் 'கூட்டுறவில் உயர் பட்டயம்' (Higher Diploma in Co-operation) என்ற பட்டம் வழங்கப்படுகின்றனர்.

சிறப்புப் பாடப் படிப்புகளுக்காகப் (Special Courses) பயிற்சியாளர்கள் இந்தியாவின் பல மாநிலங்களிலிருந்தும், வெளி நாட்டிலிருந்தும் எடுக்கப்படுகின்றனர். கானு, காம்பியா, மலேசியா, நைஜீரியா, டான்ஜானியா, ஈராக், நேபாளம் போன்ற ஆஃப்பிரிக்க நாடுகளும் ஆசிய நாடுகளும் தங்கள் அலுவலர் களைப் பயிற்சிக்காக இக் கல்லூரிக்கு அனுப்புகின்றன.

**(iii) கற்பிக்கும் நுட்ப வினைமுறை** (Teaching Technique) : பயிற்சித் திட்டங்கள் வேலைத்திறனை அளிப்பவையாக (Job Oriented) இருக்கிறதால், கற்பிக்கும் நிலையங்களனைத்தும், கற் பிக்கும் பல்வேறு நுட்ப வினைமுறைகளைப் பயிற்சித் திட்டங்களில் கையாளுகின்றன. விரிவுரைகள் மட்டுமன்றி, தொகுதி ஆய் வுரைகள் (Group Discussions), விவாதங்கள் (Debates), கருத்துக் கோவைகள் (Symposiums), பேனல் கலந்துரையாடல்கள் (Panel Discussion), கருத்தரங்குகள் (Seminars), சிந்தனைக் கூட்டவை ஆராய்ச்சிகள் (Syndicate Study), படிப்புத் தொழிற் சாலை (Workshop), பொறுப்பு விளையாட்டு (Roleplay), நிகழ்வுக்கூறு ஆய்வு (Case Study), விளையாட்டு வினு-விடை வகுப்பு (Quiz Session), ஒப்படைப்பு (Assignments), செயல்முறை விளக்கங்கள் (Demonstration) முதலிய போதனு முறைகள் தாராள மாகக் கையாளப்பட்டுப் பொருத்தமான பயிற்சி பயிற்சியாளர் களுக்கு வழங்கப்படுகின்றன. பயிற்சியாளர்களுக்கு அளிக்கப்படும் நடைமுறைப் பயிற்சியானது, கல்லூரியைச் சுற்றிய மனையில் செயல்முறைப் பயிற்சி (Campus Practicals), தமதாக ஏற்றுக் கொள்ளப்பட்ட கிராமங்களைக் (Adopted Villages) காணுதல், வெளித்துறைப் படிப்புச் சுற்றுலாக்கள் (Field Study Tours), வெளித்துறை செய்துகற்றல் சுற்றுலாக்கள் (Field Placement Tours) என்பவை அடங்கியது. வெளித்துறைப் படிப்புச் சுற்றுலாக்களின் போது, பயிற்சியாளர்கள் பார்த்தல்மூலமும், விசாரணை மூலமும் கற்றுக்கொள்கிறார்கள். வெளித்துறை செய்துகற்றல் சுற் றுலாக்களின்போது, 'செய்வதன்மூலம் கற்றுக்கொள்ளுதல்' என்ற போதனு முறை கையாளப்படுகிறது.

தமிழக அரசு, கூட்டுறவுத் துறைப் பணியாளர் தொகுதிக்கு மட்டுமன்றி, கூட்டுறவுச் சங்கங்களின் பணியாளர் தொகுதிக்காக

வுங்கூடப் பயிற்சியளிப்பதன் அவசியத்தை நன்குணர்ந்து வந்துள்ளது. பயிற்சி பெறுத எந்த நபரும் கூட்டுறவு நிறுவனங்களில் வேலையில் வைக்கப்படக்கூடாது என்று அரசு உத்தரவிட்டிருக்கிறது. கூட்டுறவு நிறுவனங்களில் முன்னமே வேலையில் வைக்கப்பட்ட பயிற்சிபெறுத ஊழியர்கள், கூட்டுறவுப் பயிற்சி நிலையங்களிலும் அல்லது கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிகளிலும், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் நடத்தப்படும், பகுதிக் கால அல்லது குறுகியகாலப் பாடப் படிப்புகளில் பயிற்சி பெறுவதன்மூலம் தங்களைத் தகுதி செய்துகொள்வதற்குங்கூட அரசு அனுமதியளித்துள்ளது. வைகுந்த் மேத்தா தேசியக் கூட்டுறவு நிருவாகக் கழகத்திலும், கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியிலும் அரசு தன் சொந்த அலுவலர்களை அனுப்பி உதவுவதன்மூலம், எல்லா மட்டங்களிலும் அமல்நடத்தப்படும் பயிற்சித் திட்டத்திற்கு முழு ஆதரவுகூட அளித்துள்ளது. இவை தவிர, ஒவ்வொரு சரகத்திலும், தொடர்புள்ள துணைப் பதிவாளரால் இலாக்காப் பணியாளர் தொகுதிக்காக ஒரு வருடாந்தர மறுநினைவுப் பாடப் படிப்பும் நடத்தப்பட்டு வருகிறது.

**(iv) முதுநிலை மட்டத்து அலுவலர்களுக்கான பயிற்சி** (Training for Senior Level Officers): இளநிலை, மற்றும் இடைநிலைப் பணியாளர் பயிற்சிக்கான பயிற்சி ஏற்பாடுகள் ஏறக்குறையப் போதுமானவையாக இருந்தாலும், முதுநிலை அலுவலர்கள் பயிற்சிக்கான படிப்பிற்குத் தமிழ்நாட்டில் இடமிருக்கிறது. இந்தியக் கூட்டுறவு நாட்டுப்படத்தில் தமிழ்நாடு ஒரு பெருமை வாய்ந்த இடம் பெற்றிருப்பதை நோக்கியும், கூட்டுறவு நிறுவனங்களின் வளர்ந்துவரும் கன அளவையும் சிக்கல்களையும் நோக்கியும், தலைமை நாணயச் சங்கங்கள், விற்பனைச் சம்மேளனங்கள், நுகர்வோர் பண்டசாலைகள், சிறப்பங்காடிகள், சர்க்கரை ஆலைகள், நூற்பாலைகள், தேயிலைத் தொழிற்சாலைகள் போன்ற பெரிய நிறுவனங்களின் உயர்தகுதியும் தொழில் திறமையுமுள்ள நிருவாகத் தேவைகளை நோக்கியும், இந் நிறுவனங்கள், எப்பொழுதுமே இலாக்கா அலுவலர்களை எதிர்நோக்கியிராமல், தங்கள் சொந்த ஊழியர்கள் பயிற்சி பெறுவதன் தேவையை நோக்கியும், வைகுந்த் மேத்தா தேசியக் கூட்டுறவு நிருவாகக் கழகத்தைப் போன்று தமிழ்நாட்டில் ஒரு கூட்டுறவுப் பயிற்சிக் கழகத்தை நிறுவுவதற்கு அவசியமும் இடமும் இருக்கின்றது. இக் காரணத்திற்காக, ஒரு புதிய நிறுவனம் அமைக்கப்படவேண்டும்; அல்லது தற்போதுள்ள கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி விரிவுபடுத்தப்பட்டுப் போதிய வசதிகளுடன் அது திருத்தியமைக்கப்படவேண்டும். இவ் விஷயம் தமிழ்நாட்டின் கூட்டுறவாளர்களால் கவனிக்கற்பாலது.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் தவிர, மாநிலத்திலுள்ள கல்வி நிறுவனங்களும்கூட, கூட்டுறவை ஒரு தனிப்பாடமாக அல்லது ஒரு சிறப்புப் பாடப் படிப்பாகப் படிப்பதற்கு ஏற்பாடுகள் செய்துள்ளன.

**(v) கூட்டுறவுப் பயிற்சியிலும் கூட்டுறவுக் கல்வியிலும் சென்னைப் பல்கலைக்கழகத்தின் பங்கு** (Role of the Madras University in Co-operative Training and Education): கூட்டுறவுக் கல்வித் துறையில் சென்னைப் பல்கலைக்கழகம் ஆற்றுகின்ற பணி சிறப்பாகக் குறிக்கற்பாலதாகும். கூட்டுறவுத் துறையில் எதிர்பார்க்கப்படுகின்ற பணியாளர் தொகுதிக்கு வேலைத் திறனை யளிக்கும் (Job Oriented) கல்விக்கான அவசியத்தை உணர்ந்து, 1948ஆம் ஆண்டில், கூட்டுறவு ஒரு தனிப்பாடமாக அமைந்த பி. காம். (ஆனர்சு) பட்டப் படிப்புத் தொடங்கப்பட்டது. நடைமுறைப் பயிற்சியுடன் இணைக்கப்பட்ட கோட்பாட்டுப் போதனை ஏற்பாடு செய்யப்பட்டுத் தமிழக அரசும் அப் பாடப் படிப்பைக் கூட்டுறவுப் பயிற்சிக்கு வேண்டியதைப் பூர்த்தி செய்யும் ஒரு பாடப் படிப்பாக ஏற்றுக்கொண்டது. பல்கலைக்கழகத்திற்குக் கூட்டுறவு இலாக்காவின் இரண்டு அதிகாரிகளைப் பல்கலைக்கழகத்தின் வணிகவியல் துறையில் விரிவுரையாளர்களாகச் சேவை செய்ய இலவசமாக அரசு கொடுத்துள்ளது. சென்னைப் பல்கலைக் கழகம், 1972ஆம் ஆண்டில், 'கூட்டுறவை'ப் பிரதானமான பாடமாகக் கொண்ட ஒரு புதிய மூன்று வருடக் கலைப் பட்டப் படிப்பைத் தொடங்கியதன்மூலம், மற்றொரு முக்கிய நடவடிக்கையை எடுத்திருக்கிறது. பி. ஏ. (கூட்டுறவு) என்று வழங்கப்படும் இப் பாடப் படிப்பில், கோட்பாட்டுப் போதனை நடைமுறைப் பயிற்சியுடன் இணைக்கப்பட்டு, அது எல்லா மட்டங்களிலும் தக்க ஏற்பைப்பெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில், பி.காம். பட்டப் படிப்பிற்கும், எம்.காம். பட்டப் படிப்பிற்கும் கூட்டுறவு ஒரு தனிப் பாடமாகப் போதிக்கப்படுகிறது. கூட்டுறவை ஒரு தனிப் பாடமாக எம். காம். பட்டதாரிகளும் பி.காம். பட்டதாரிகளும், கூட்டுறவு இலாக்கா அதிகாரிகள் பதவிக்கு ஆள்சேர்க்கும் விஷயத்தில், தனி ஆதரவு காண்பிக்கப்படுகின்றனர். கூட்டுறவை ஒரு தனிப் பாடமாகப் பயின்ற பட்டதாரிகளுக்குத் தனி ஆதரவு பதவித் தேர்வில் வழங்கும்படி கூட்டுறவு நிறுவனங்களுக்கும்கூட அறிவுரை செய்யப்பட்டிருக்கின்றன. கோவை மாவட்டத்திலுள்ள பெரியநாயக்கன் பாளையத்திலுள்ள கிராமக் கல்லூரியும் (Rural Institute) மதுரை மாவட்டக் காந்திக் கிராமம் என்ற இடத்திலுள்ள கிராமக் கல்லூரியும் கூட்டுறவை ஒரு பாடமாகக் கொண்ட 'கிராமப்

பணி' (Rural Service) என்ற ஒரு பட்டயப் பாடப் படிப்பை நடத்துகின்றன. பெரியநாயக்கன்பாளையத்திலுள்ள கிராமக் கல்லூரி ஒரு மேற்பட்டப் படிப்பையுங்கூட ஏற்பாடு செய்திருக்கிறது.

## அனைத்துநாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பு
(International Co-operative Alliance)

**(i) தோற்றுவாய்:** இங்கிலாந்தில் இராக்டேல் பயனீயர்ஸ் அவர்களின் கருத்துத் தோற்றமாகிய 'கூட்டுறவுப் பொதுநல ஐக்கிய அமைப்பு' (Co-operative Common Wealth) என்ற எண்ணம், 'அனைத்து நாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பு' அல்லது ஐ.சி.ஏ. (I.C.A.) என்று வழங்கப்படும் ஓர் அனைத்துலகக் கூட்டுறவு நிறுவனவடிவத்தில், சம்யுக்தமான ஓர் உருவத்தை எடுத்தது. இந் நிறுவனம், இலண்டன் மாநகரத்தில் 1895ஆம் ஆண்டில், தேசியக் கூட்டுறவு ஒன்றியங்களின் ஒரு கழகமாக நிறுவப்பட்டது. அது சமுதாய முழுவதன் நலனுக்காகவும், சுயேச்சையான உதவி, மற்றும் பரஸ்பரச் சுயஉதவி என்ற அடிப்படையிலும் அமைக்கப்பட்ட இலாபநோக்கமற்ற ஓர் உற்பத்தி முறையையும் வணிக முறையையும் வளர்ப்பதற்கு முயலுகிறது.

ஐ.சி.ஏ. 51 பல்வேறு உலக நாடுகளிலுள்ள 110 நேரடியான இணைக்கப்பட்ட தேசிய மட்டத்து நிறுவனங்களைக் கொண்டுள்ளது. இத்தேசிய நிறுவனங்களின்மூலம் அதன் இணைப்பு உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 140,000,000-க்கும் அதிகப்படுகிறது. அதன் பெரும்பான்மை உறுப்பினர்கள் நுகர்வோர் இயக்கங்களாக இருந்தாலும், அதில் விவசாயக் கூட்டுறவுக் கடன் சங்கங்களும், தொழிலாளர்கள் உற்பத்திச் சங்கங்களும், கைவினைஞர்கள் கூட்டுறவுச் சங்கங்களும் இருக்கின்றன. இரண்டாவது உலக மகாயுத்தத்தின் பின்விளைவு, ஐரோப்பிய நாடுகளுக்கு வெளியேயுள்ள கூட்டுறவு இயக்கத்தைப் பெருகிக் கொண்டிருக்கும் ஓர் அளவில் ஐ. சி. ஏ-வில் சேரும்படி செய்தது. தற்போது ஐ.சி.ஏ-வுடன் இணைக்கப்பட்ட பெரும்பாலான இயக்கங்கள், ஆசியா, ஆஃப்பிரிக்கா மற்றும் லத்தீன் அமெரிக்காக் கண்டங்களிலுள்ள வளர்முக நாடுகளிலிருப்பவை. உலகத்திலுள்ள மிகச் சக்தி வாய்ந்த எல்லா முக்கிய வகையான தேசியக் கூட்டுறவு நிறுவனங்களும் அதன் உறுப்பினர்களாக இருக்கின்றன.

**(ii) ஐ. சி. ஏ.-ன் நோக்கங்கள்:** ஐ.சி.ஏ.-ன் நோக்கங்களாவன: (i) கூட்டுறவுக் கொள்கைகளையும் முறைகளையும்

பிரசாரம் செய்வதும், தேசிய மட்டத்திலும் சர்வதேச மட்டத்திலும் எல்லாவகையான கூட்டுறவு நிறுவனங்களுக்கிடையே நேச உறவையும் பொருளாதாரத் தொடர்பையும் வளர்ப்பதும், (ii) துணை வணிகம், வங்கித் தொழில், மற்றும் ஈட்டுறுதி நிறுவனங்கள்மூலம் பல்வேறு நாடுகளில் கூட்டுறவுத் தொழில் முயற்சிச் சங்கங்களுக்கிடையே நேரடியான வணிக மற்றும் நிதி உறவுகளை வளர்ப்பதன்மூலம் உலக அங்காடியிலும், உள்நாட்டு அங்காடியிலும் நுகர்வோர்களுக்கும் பிரதம சங்கங்களுக்கும் ஒரே சமயத்தில் அனுகூலமான ஒரு செல்வாக்கினைச் செலுத்துவதற்கு உதவுதலும், (iii) கூட்டுறவு விஷயங்கள் பற்றிய சர்வதேசக் காங்கிரசைக் கூட்டுவதும், கூட்டுறவுபற்றிய போதனையையும் படிப்பையும் வளர்ப்பதும், வெளியீடுகளையும் ஆராய்ச்சி விவரங்களையும் வெளியிடுவதும், மற்றும் கூட்டுறவுக்கு முக்கியமாகவுள்ள நோக்கங்களைக் கடைப்பிடிக்கும் அரசு அல்லாத சுயேச்சையான சர்வதேச நிறுவனங்களுடனும் ஐக்கிய நாடுகள் நிறுவனத்துடனும் நெருங்கிக் கூடிப் பணியாற்றுதலும்.

பல்வேறு நாடுகளில் மக்களிடையேயும் அவர்களின் இயக்கங்களிடையேயும் ஒருமைப்பாட்டுக்கும் கட்டுப்பாட்டுக்கும் ஒரு பலமான தூண்டுதல் எப்பொழுதுமே இருந்து வருவதால், மக்களின் பொதுநலனுக்காகப் பாடுபடும் மக்களின் கூட்டுறவுச் சங்கத்தை உருவாக்கும் சக்திகளைத் தேசிய எல்லைகளினுல் வரையறைப்படுத்த முடியாது. ஏனெனில், கூட்டுறவு இயற்கையாகவே ஓர் அனைத்துலகச் சக்தியாகவாகி நல்லுறவு, சேவை, சுய உதவி, பரஸ்பர உதவி என்ற ஒரு திறந்த பணித்திட்டத்துடன் ஒரு நாட்டின் புவியியல் எல்லைகளை மீறுகிறது.

இயல்பான ஒருமைப்பாடு அல்லது சமுதாய ஒற்றுமை, கூட்டுறவு இயக்கம் பெருமளவு வளர்ச்சியடைந்த நாடுகளில், ஏற்கெனவே ஒரு பெரும்பணியாற்றிய அனுபவ அறிவுப் பரிவர்த்தனையின்மூலம் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது.

அதன் விளைவாகச் சர்வதேசக் கூட்டுறவு வாணிகத் துறையில் வெற்றிகரமான முயற்சிகள் செய்யப்பட்டன. ஒரு சிறப்பான உதாரணம், டென்மார்க், பின்லாந்து, ஐஸ்லாந்து, நார்வே, ஸ்வீடன் ஆகிய நாடுகளிலுள்ள நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் ஒரு கூட்டுக் கொள்முதல் ஏற்றுமதி நிறுவனமாகிய 'ஸ்காண்டிநேவியன் கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கம்' (Scandinavian Co-operative Wholesale Society) ஆகும். தொழில் நுட்பத்திலும் பொருளாதாரத்திலும் வளர்முக நாடுகள் என்று

வழங்கப்படுகின்ற உலகத்தின் இப் பகுதிகளில் கூட்டுறவு வளர்ச்சியில் ஐ.சி.ஏ. இந்த நோக்கத்துடன் ஒரு தீவிரமான அக்கறையெடுக்க வேண்டியது இயற்கையானதே.

ஆஃப்பிரிக்கா, ஆசியா, லத்தீன் அமெரிக்கா ஆகிய கண்டங்களில் புதியதாகச் சுதந்திரமடைந்த நாடுகளுக்குக் கூட்டுறவு அனுபவத்தின் சர்வதேசப் பரிவர்த்தனையை நீட்டுவதற்கான வழிவகைகளை ஐ. சி. ஏ. கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறது. தொழில் நுட்பத்திற்கான ஒரு தனி உதவிக் குழு இப் பணியில் தனி அக்கறை கொண்டுள்ளது. இப் பணி, வளர்முக நாடுகளில் கூட்டுறவு நிறுவனங்களுக்கு, அநேக அனுகூலங்களை ஏற்கெனவே அளித்துள்ளது. சமுதாயப் பொருளாதார முன்னேற்றத்தின் வளர்ச்சிக்கான ஒரு சர்வதேச நிறுவனமாக ஐ.சி.ஏ.-வின் முக்கியத்துவம் ஐக்கிய நாடுகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் 'பொருளாதாரச் சமுதாய சபை' யுடன் (Economic and Social Council) ஐ.சி.ஏ. ஆலோசகர் அந்தஸ்தைப் பெற்றிருக்கிறது. 'உணவு விவசாய நிறுவனம்' (F. A. O.), 'ஐக்கிய நாடுகளின் கல்வி, சமுதாயம், கலாசார நிறுவனம்' (UNESCO), சர்வதேச அணுகுண்டுச் சக்தி அமைப்பு' (International Atomic Energy Agency) ஆகிய நிறுவனங்களாலும் ஐ.சி.ஏ.-வுக்கு அம் மாதிரியான அந்தஸ்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

**(iii) ஐ. சி. ஏ.-ன் உறுப்பினர்கள்:** எல்லா வகையான கூட்டுறவுச் சங்கங்களையும், அவைகளின் சம்மேளனங்களையும், அவைகள் உண்மையானவைகளாக இருந்தால் தன் உறுப்பினர்களாக ஐ. சி. ஏ. ஏற்றுக்கொள்கிறது. அதில் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கின்ற நான்கு வகையான சங்கங்களாவன: (1) தேசியக் கூட்டுறவு ஒன்றியங்களும், கூட்டுறவுச் சங்கங்களின் சம்மேளனங்களும், (2) மண்டலச் சம்மேளனங்கள், (3) பிரதம சங்கங்கள், (4) ஆடவர் மன்றங்களும், மகளிர் மன்றங்களும் (Men and Women's Guilds) போன்ற தேசியத் துணை நிறுவனங்கள். அதன் தற்போதைய உறுப்பினர்களில் ஐரோப்பாவின் தொழில் பிராந்தியங்களில் சக்தி வாய்ந்தவைகளான நுகர்வோர் சங்கங்கள் மட்டுமன்றி, விவசாய விளை பொருள்களை விற்பனை செய்தும் விவசாயத்திற்கான தேவைகளை வழங்கியும் வருகின்ற விவசாயச் சங்கங்களும், குடியானவர்களும் கைத்தொழிலாளர்களும் உற்பத்தி செய்வதற்காகக் கடன் வாங்கும் கடன் சங்கங்களும், நல்ல முறையில் அமைக்கப்பட்ட குறைந்த விலைக் கட்டடங்களை வழங்கும் வீட்டுவசதிச் சங்கங்களும்,

மக்களாட்சி நிருவாகத்தின்கீழ்த் தங்கட்குச் சொந்தமான தொழில்களை நடத்துகின்ற தொழிலாளர் வகுப்புகளின் உற்பத்திச் சங்கங்களும்கூட உள்ளன. மற்றும், வங்கித் தொழிலுக்காகவும் ஈட்டுறுதிக்காகவும் கூட்டுறவுச் சங்கங்களால் அமைக்கப்பட்ட நிறுவனங்களும்கூட ஐ.சி.ஏ.-வுடன் இணைப்புக்காகத் தகுதியுள்ளவை. மகளிர் மன்றங்களும், இதரச் சங்கங்களும் கூட்டுறவுச் சங்கங்களைப்போல் அமைக்கப்படாவிட்டாலும், அவை சாரத்தில் உண்மையாகக் கூட்டுறவுத் தன்மையைப் பெற்று இயக்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றினால், அத்தகைய தேசியத் துணை நிறுவனங்களையும்கூட ஐ.சி.ஏ. ஏற்றுக்கொள்ளும்.

ஆனால், கூட்டுறவு நிறுவனம் தன் வகையில் உண்மையானதாக இருக்கவேண்டும். கூட்டுறவு நிறுவனங்கள் புகழ்பெற்ற ராக்டேல் பயோனீயர்ஸ் கொள்கைகளை நடைமுறையில் பின்பற்ற வேண்டும். அவையாவன:

(1) சுயேச்சை அங்கத்துவம்,

(2) ஜனநாயகக் கண்காணிப்பு,

(3) சங்கத்தில் ஏற்படும் உபரி இலாபத்தை உறுப்பினர்களுக்குச் சங்கத்தின் நடவடிக்கைகளில் அவர்களின் ஈடுபாட்டின் விகிதப்படி பிரித்துக் கொடுத்தல்,

(4) மூலதனத்தில் வரையறுக்கப்பட்ட பற்று.

மேற்குறிக்கப்பட்ட மூன்றாவது கொள்கையும் நான்காவது கொள்கையும் முதலாளித்துவ அடிப்படையைக் கொண்ட நிறுவனங்களை விலக்குகின்றன; முதலாவது கொள்கையும், இரண்டாவது கொள்கையும் எதேச்சாதிகார அடிப்படையைக் கொண்ட நிறுவனங்களை விலக்குகின்றன.

**(iv) ஐ. சி. ஏ.-ன் நிருவாகம்** (Management of the I.C.A.): பின்வரும் அதிகார அமைப்புகளால், ஐ.சி.ஏ. நிருவாகம் செய்யப்பட்டும் கண்காணிக்கப்பட்டும் வருகிறது. (i) காங்கிரஸ், (ii) மத்தியக் குழு, (iii) நிருவாக அமைப்பு, (iv) இயக்குநர், (v) பொதுச் செயலாளர்.

காங்கிரஸ் என்பது ஐ.சி.ஏ.-வின் உயர்மிகு அதிகாரியாக உள்ளது. இரண்டிலிருந்து மூன்று ஆண்டுகள் இடைக் காலத்தில் அது கூட்டப்படுகிறது. அதன் பிரதானக் கடமைகள் ஐ.சி.ஏ.-வின் கொள்கைகளையும் திட்டத்தையும் நிறுவுவதும், காங்கிரசின் கடந்த கூட்டத்திலிருந்து ஐ.சி.ஏ.-வின் செயல்பாட்டைப் பற்றிய மத்தியக் குழுவின் அறிக்கையை அங்கீகரிப்பதுமாகும்.

மத்தியக் குழுவின் பொறுப்பு, காங்கிரசின் முடிவுகள் நிறைவேற்றப்படுவதைக் கவனித்தலாகும். ஆனுல், தன் சொந்தப் பொறுப்பிலேயும்கூட, இதர முக்கிய முடிவுகளையெடுப்பதற்கும் அது விதிகளால் அதிகாரமளிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு தேசிய நிறுவனமும் தன் சந்தாவை முழுதும் செலுத்தியவுடன், தன் அங்கத்துவத்தின் காரணமாக மையக் குழுவிற்கு ஒரு பிரதிநிதியை அனுப்பும் உரிமையைப் பெறும். அது, பத்து எண்ணிக்கைப் பெருமம் வரைக்கும், செலுத்தப்பட்ட ஆண்டுச் சந்தா பவுண்டு 200 ஒவ்வொன்றுக்கும், அதிகமான ஒரு பிரதிநிதியை அனுப்பலாம். ஒரே நாட்டிலிருந்து ஒன்றுக்கு மேற்பட்ட தேசிய நிறுவனங்கள் உறுப்பினர்களாக இருந்தால், அவைகள் செலுத்தின சந்தாக்கள் அடிப்படையின்பேரில் அவர்களிடையே பிரதிநிதித்துவம் பங்கிடப்படுகிறது.

ஒவ்வொரு காங்கிரசு கூடினவுடன், மத்தியக் குழு கூடித் தலைவரையும் இரண்டு துணைத் தலைவர்களையும், செயற்குழுவின் எல்லா உறுப்பினர்களையும் தேர்ந்தெடுக்கிறது. அவர்கள் எல்லோரும் அடுத்த காங்கிரசு வரைக்கும் பதவி வகிக்கின்றனர். மத்தியக் குழு தணிக்கையாளரையும், அறங்காவலர்களையும், தலைமை அலுவலர்களையும் நியமிக்கிறது. அது, காங்கிரசுக்குச் சமர்ப்பிக்கப்படும் எல்லா விஷயங்களைப் பற்றிய அறிக்கைகளையும் நிகழ்ச்சிக் குறிப்பையும் அங்கீகரித்து, காங்கிரஸ் கூடும் தேதியையும் முடிவு செய்கிறது. தலைவருடனும், துணைத் தலைவர்களுடனும், மூன்று உறுப்பினர்களைக் கொண்ட காங்கிரசுக் குழு, நடைமுறை விஷயங்களைப் பற்றித் தலைவருக்கு உதவி செய்து, நிகழ்ச்சிக் குறிப்புக்காகப் பிரேரேபிக்கப்படும் அவசரத் தீர்மானங்களைப் பற்றியும் முடிவு செய்கிறது.

மத்தியக் குழு, செயற்குழுவின் முடிவுகளுக்கு எதிராகச் செய்யப்படும் மேல்முறையீடுகளை விசாரிக்கிறது. ஐ.சி.ஏ.-ன் விதிகளுக்கும் நோக்கங்களுக்கும் நலன்களுக்கும் முரணுக ஒரு நிறுவனம் செயல்படும் அரிதான சந்தர்ப்பங்களில், அந் நிறுவனத்தை அங்கத்துவத்திலிருந்து நீக்குவதற்கு மத்தியக் குழுவிற்கு அதிகாரமுண்டு. மத்தியக் குழு, குறைந்தது ஆண்டிற்கொருமுறை கூடுகிறது. மற்றும், காங்கிரசுக்கு முன்னுலும் பிறகும்கூட அது கூடுகிறது.

செயற்குழு, மத்தியக் குழுவின் கூட்டங்களுக்கிடையேயான காலத்தில், ஐ.சி.ஏ.-ன் விவகாரங்களின்மீது பொதுக் கண்காணிப்பைச் செலுத்துகிறது. தலைமைச் செயலகத்து வேலை

யின் ஒவ்வோர் அம்சத்துடன் தொடர்பு வைத்துக்கொண்டிருப்ப துடன், செயற்குழு குறிப்பாக, நிதி விஷயத்திலும் அங்கத்துவ விஷயத்திலும் அக்கறை கொண்டிருக்கிறது. அது, செயலகத்தால் தயாரிக்கப்பட்ட வரவுசெலவுத் திட்டத்தைப் பரிசீலனை செய்தும், வரவு செலவைக் காவல் புரிந்தும், பிரதானமான அலுவலக உதவியாளர்களை நியமித்தும், சிப்பந்திகளின் வேலை நிபந்தனைகளை முடிவு செய்தும் வருகிறது.

நிருவாக அமைப்பு, ஐ.சி.ஏ. அங்கத்துவத்திற்கான விண் ணப்பங்களை ஏற்றுக்கொள்ளவும், தள்ளுபடி செய்யவும் அதி காரம் அளிக்கப்பட்டுள்ளது. உறுப்பினருக்கான விண்ணப்பம் தள்ளுபடி செய்யப்பட்ட ஒரு நிறுவனம், மத்தியக் குழுவிற்கு மேல்முறையீடு செய்துகொள்ள உரிமை பெற்றுள்ளது. நிருவாக அமைப்பு, அவசியப்படும்போதெல்லாம் அடிக்கடி கூடலாம். ஆனால், வழக்கமாக அது எந்த ஆண்டிலும் நான்கு தடவைக்கு மேல் கூட்டப்படுகிறதில்லை. நிருவாக அமைப்பில் எந்த நாடும் அல்லது நாட்டுத் தொகுதியும் இரண்டு உறுப்பினர்களுக்கு மேற் பட்டு அவர்களில் ஒருவர் தலைவராக இருந்தாலொழிய, பிரதி நிதிகளை அனுப்ப முடியாது. ஒரு கூட்டத்திற்கு வர முடியாமல் தடுக்கப்பட்ட ஓர் உறுப்பினருக்குப் பதில் குழுவின் மற்றோர் உறுப்பினர் வரலாம்.

தலைமைச் செயலகம் ஐ.சி.ஏ.-ன் அன்றாட வேலையைச் செய்துவருகிறது. அதன் தலைமை இடம் இலண்டன் மாநகரத்தி லுள்ள ஒரு கட்டடத்திலுள்ளது. இக் கட்டடம், 1951ஆம் ஆண்டில் ஐ.சி.ஏ.-வால் வாங்கப்பட்டு, இணைக்கப்பட்ட நிறு வனங்களிடமிருந்து பெற்ற அன்பளிப்புகளின்மூலம் சோடிக்கப் பட்டிருக்கிறது.

20 எண்ணிக்கையுள்ள நிரந்தரச் சிப்பந்திகளும், நியூயார்க் நகரிலும் ஜெனிவா நகரிலுமுள்ள ஐக்கிய நாடுகள் நிறுவனத்தி லிருந்து பகுதிநேரப் பிரதிநிதிகளும், மற்றும் மொழிபெயர்ப்பாளர் களும் பணிபுரிகின்றனர். தலைமைச் செயலகத்திற்கு இயக்குநரும், பொதுச் செயலாளரும் தலைவர்களாவர். இவர்களிருவரும் ஐ.சி.ஏ. அதிகாரிகளின் கூட்டங்களில் பங்கெடுத்துக் கொள் கின்றனர். ஆலோசனை வழங்கவும் அவர்கட்கு அதிகாரமுண்டு. ஆனால், அவர்களுக்கு வாக்களிக்க உரிமையில்லை.

நிருவாகக் கூட்டங்களுக்கிடையேயான காலத்தில், இயக்குநர் ஐ.சி.ஏ. விவகாரங்களுக்கான பொதுப் பொறுப்பை யேற்கிறார்.

ஐக்கிய நாடுகளின் நிறுவனத்துடனும் சிறப்பமைப்புகளுடனும் ஐ.சி.ஏ.-ன் உறவுகளுக்கும் நேரடிப் பொறுப்பேற்கிறார். மற்றும், ஐ.சி.ஏ. வெளியீடுகளின் ஆசிரியர் பொறுப்பும் அவர்க்குண்டு.

பொதுச் செயலாளர், தலைமைச் செயலகத்தின் பொது வேலைகளைச் செய்தும், ஐ.சி.ஏ.-ன் நிதி நிருவாகம் செய்தும், காங்கிரசையும் ஐ.சி.ஏ. அதிகாரத்தின் கூட்டங்களையும், சில துணை அதிகாரத்தின் கூட்டங்களையும் அமைத்து வருவதன்றி, புது உறுப்பினர்களைச் சேர்ப்பதற்கான விதிகளில் நிர்ணயிக்கப் பட்ட நடைமுறையையும் நிறைவேற்றி வருகிறார்.

(v) **நிதி** (Finance): ஐ.சி.ஏ.-ன் வருடாந்தரச் செலவுத் திட்டம் 50,000 பவுண்டுக்குச் சிறிது மேற்பட்டுள்ளது. அதன் வருவாய் அநேகமாக அதன் உறுப்பினர்களால் செலுத்தப் பட்ட வருடாந்தரச் சந்தாக்களிலிருந்து முழுதும் பெறப்படுகிறது. அதன் வெளியீடுகளின் விற்பனையிலிருந்து பெறப்படும் வருவாய் ஒரு நிகர வரவு அன்று. ஏனென்றால், விற்பனை வரவுகள் இயல் பாகவே செலவுகளுக்குப் போதாமலுள்ளன.

ஐ.சி.ஏ.-வுடன் இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் அங்கத்துவத்தின் அடிப்படையில் சந்தாச் செலுத்துகின் றன. ஒன்றியங்களும் அல்லது சங்கங்களின் கூட்டமைப்புகளும் 'தனிநபர்' உறுப்பினராக ஆண்டொன்றுக்கு 115 பவுண்டு நிலை யான சந்தாவைச் செலுத்துகின்றன. எனினும், ஓர் ஒன்றியம் தன் இணைப்புச் சங்கங்களுடனும் நிறுவனங்களுடனும் ஒரு கூட்டு உறுப்பினராக (Collective Member) இருப்பதற்கு விரும்பினால், அது கூடுதலாகத் தனக்காகப் பவுண்டு 115-ம், தன்னுடன் சேர்ந்த இதரத் தேசிய நிறுவனம் ஒவ்வொன்றிற்காகப் பவுண்டு 57-ம், செலுத்துவதுமன்றித் தன் சங்கங்களுக்காக அவர்களுடைய அங்கத் துவத்தின் அடிப்படையில், ஒரு சந்தாவையும் செலுத்துகின்றது.

(vi) **தொழில்நுட்ப உதவிக்கான ஐ. சி. ஏ.-ன் திட்டம்** (I. C. A. Programme of Technical Assistance): 1960-ல் சுவிட்சர் லாந்தில் நடைபெற்ற 22ஆவது சர்வதேச மாநாட்டில், தொழில் நுட்ப உதவிக்கான ஐ.சி.ஏ.-ன் நீண்டகாலத் திட்டம் வகுக்கப் பட்டது. ஐ.சி.ஏ. தொழில்நுட்ப உதவித் திட்ட அதிகாரிகளால் தெரிந்தெடுக்கப்பட்ட முதல் மண்டலம் தென்கிழக்கு ஆசியா வாகும். 1958-ல் கோலாலம்பூரில் நடைபெற்ற ஒரு மாநாடு தென்கிழக்கு ஆசியாவில் அமல்படுத்தவேண்டிய செயல் திட்டத் தின் முக்கியக் குறிக்கோள்களைச் சுட்டிக்காட்டியது.

1960ஆம் ஆண்டில், ஐ.சி.ஏ.-ம் இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியமும் புதுடெல்லியில் கூட்டுறவுத் தலைமை பற்றிய ஒரு மண்டலக் கருத்தரங்கை அமைத்தன. இக் கருத்தரங்கு 10 ஆசிய நாடுகளிலிருந்து வந்த பிரதிநிதிகளால் கலந்து கொள்ளப்பட்டு, ஒரு பெரிய ஊக்கத்தையெழுப்பியது. இந்தியாவின் அந் நாள் பிரதமரான காலஞ்சென்ற ஜவகர்லால் நேரு அவர்கள் கருத்தரங்கைத் தொடங்கி வைத்தார். புதுடெல்லியில் கூடிய அக் கருத்தரங்கு மண்டலத்திற்கான இரண்டு புதிய நிலையான நிறுவனங்களின் பணித் தொடக்கத்தைக் குறித்தது. அவையாவன: (1) புது டெல்லியிலுள்ள ஐ.சி.ஏ.-ன் மண்டல அலுவலகமும், (2) தென்கிழக்கு ஆசியாவுக்கான ஐ.சி.ஏ.-ன் கல்வி நிலையமும். இவையிரண்டும், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் வலிமையும் சுயேச்சையுமுள்ள கூட்டுறவு இயக்கங்களின் வளர்ச்சியைப் பேணுவதற்காக ஐ.சி.ஏ. அதன் தொழில் நுட்ப உதவித் துணைக் குழுவின் மூலம் செய்யும் முயற்சிகளில் உயர்திறனையும், ஒருமைப்பாட்டையும், தொடர்ச்சியையும் நிச்சயப்படுத்த அமைக்கப்பட்டன. மேலும், ஐ.சி.ஏ.-வின் இம் முயற்சி, தென்கிழக்கு ஆசிய நாடுகளிலுள்ள கூட்டுறவு இயக்கங்கள் ஐ.சி.ஏ. நடவடிக்கைகளில் ஒரு மேம்பட்ட முக்கியப் பங்கெடுத்துக்கொள்ள உதவுகிறது.

புது டெல்லியில் இருக்கும் மண்டல அலுவலகம், இலண்டன் நகரிலுள்ள ஐ.சி.ஏ. தலைமைச் செயலகத்தின் ஒரு நீட்சியாகும். எனவே, அதன் முக்கியக் கடமை, ஐ.சி.ஏ. கொள்கையைக் குறிப்பாகத் தென்கிழக்கு ஆசியாவில் கூட்டுறவு வளர்ச்சிக்குத் தொடர்புள்ள கொள்கையை அமல் நடத்துவதில் உதவியளிப்பது. உலகத்தின் இப் பகுதியில் சுயேச்சையான நிறுவன வளர்ச்சியில் உதவி செய்வது அதன் நோக்கம். அது முக்கியமான கூட்டுறவுப் பிரச்சினைகளைப் பற்றிய ஆராய்ச்சிப் பணியையும்கூட மேற்கொள்கிறது; பல்வேறு கூட்டுறவு நிறுவனங்களுடன் தொடர்பு ஏற்படுத்துகிறது. மற்றும் மண்டல அதிகாரி, கூட்டுறவாளர்களுக்கு அக்கறையான பல்வேறு அனைத்துலக மாநாடுகளில் ஐ.சி.ஏ.-க்குப் பிரதிநிதியாக இருக்கிறார்.

புது டெல்லியிலுள்ள ஐ.சி.ஏ. கல்வி நிலையம், உலக முழுவதிலும் பரவியிருக்கும் கூட்டுறவு இயக்கத்திலுள்ள சர்வதேச ஒருமைப்பாட்டின் உருப்படியான தோற்றமாகும். தென்கிழக்கு ஆசிய நாடுகளின் கூட்டுறவு இயக்கங்களின் கல்விப் பணிக்கு உதவுவதற்கும், துணைபுரிவதற்கும் நிறுவப்பட்ட இந் நிலையம் ஸ்வீடன் நாட்டுக் கூட்டுறவாளர்கள் சர்வதேச விஷயங்களில்

எடுத்துக்கொள்ளும் மிகத் தீவிர அக்கரையின் விளைவாகும். இந் நிலையம், ஸ்வீடன் நாட்டு நுகர்வோர் உற்பத்திச் சங்கங்கள், கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள், மகளிர் கூட்டுறவு மன்றங்கள், கூட்டுறவு ஒன்றியம், மொத்த விற்பனைச் சங்கம் ஆகியவைகளின் உறுப்பினர்களிடமிருந்து பெறும் சுயேச்சையான உதவித்தொகைகளின்மூலம், நிதி ஆதரவு பெறுகிறது. அவைகளுக்கும் உலகத்தின் மற்றப் பகுதிகளிலுள்ள நன்கு நிறுவப்பட்ட இயக்கங்களுக்குமிடையே கூட்டுறவு அறிவையும் அனுபவத்தையும் பரிவர்த்தனை செய்வதற்கு வசதி செய்வதே இக் கல்வி நிலையத்தின் பணியாகும். மண்டலத்திலுள்ள நாடுகளில் பாடப் படிப்புகளையும் கருத்தரங்குகளையும் மாநாடுகளையும் ஏற்பாடு செய்வதன்மூலமும், கூட்டுறவு இயக்கத்தைப் பதிப்பித்து வெளியிடுவதன்மூலமும், கல்வி போதனைக்கான உதவிப் பொருள்களை உற்பத்தி செய்வதன்மூலமும், கூட்டுறவு நிறுவனத்தின் பல்வேறு அம்சங்களைப் பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொள்வதன்மூலமும் இந் நிலையம் தேசியக் கூட்டுறவு இயக்கங்களின் கல்வி நடவடிக்கைகளை ஆதரித்தும் அவற்றிற்குத் துணைபுரிந்தும் வருகிறது. இந் நிலையம் அதன் பணியில் சுயேச்சையான கூட்டுறவு நிறுவனங்களுடனும், தேசிய அரசுகளின் கூட்டுறவு இலாக்காக்களுடனும், நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டுள்ளது. பல்வேறு தென்கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்து சிறந்த கூட்டுறவாளர்களைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழு, இந் நிலையத்திற்குத் தன் நடவடிக்கையுடன் அந் நாடுகளின் தேவைகளையும், மண்டலத்திலுள்ள கூட்டுறவு இயக்கத்தின் தேவைகளையும் ஒருங்கிணைக்க வகைசெய்யும்.

**(vii) ஐ.சி.ஏ.-ன் வெளியீடுகள்** (Publications of the I.C.A.): சர்வதேசக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் பொதுவான உறுப்பினர்களுக்கும், வழிகாட்டலுக்காகவும் கல்விக்காகவும் தகவலுக்காகவும், பல புத்தகங்களையும், சிறு வெளியீடுகளையும், துண்டு வெளியீடுகளையுமன்றி, நான்கு ஆய்வுரைகளையும், பத்திரிகைகளையும் ஐ.சி.ஏ. வெளியிடுகிறது. அவற்றுள் மிக முக்கியமானவை பின்வருமாறு:

(1) சர்வதேசக் கூட்டுறவு ரெவ்யு (A Review of the International Co-operation). — மாதப் பத்திரிகை

(2) ஏகபோக வளர்ச்சி, நுகர்வோர் பாதுகாப்பு ஆகியவற்றின் கால் வருட ரெவ்யு (Quarterly Review of Monopoly Development and Consumer Protection).

(3) கூட்டுறவு விவசாய புல்லட்டின் (Co-operative Agricultural Bulletin). — மாதப் பத்திரிகை

(4) கூட்டுறவுச் செய்திப் பணி (Co-operative News Service). — மாத மிருமுறைப் பத்திரிகை

(5) பொருளாதாரச் செய்திப் பணி (Economic News Service). — மாதப் பத்திரிகை

இவ் வெளியீடுகள்மூலமும், பல்வேறு இதர வெளியீடுகள் மூலமும், ஐ.சி.ஏ. தன் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வேலைத் திட்டங்களையும் பிரசாரம் செய்தும், சர்வதேசக் கூட்டுறவு நிறுவனங்களிடையே ஒத்துழைப்பை வளர்த்தும் வருகிறது. இவற்றின்மூலம், பல்வேறு நாடுகளைச் சார்ந்த மக்களனைவரையும் கூட்டுறவுத் துறையில் கொண்டுவரும் முயற்சியாலும், பரஸ்பர உதவி, சுய உதவி ஆகிய துறைகளில் செய்யும் முயற்சியாலும், பொதுவாக மனித குலத்திற்கு மிகப் பயனுள்ள ஒரு தொண்டை ஆற்றுகின்றது. ஐ.சி.ஏ.-ன் பணிகள், நம் நாட்டைப் போன்ற வளர்ச்சியடையாத நாடுகளுக்கு மிக முக்கியமாகத் தேவைப்படுகின்றன.

**(viii) ஐ. சி. ஏ.-ன் சாதனைகள்** (Achievements of the I.C.A.): இரண்டு உலக மகாயுத்தங்களும், பொருளாதார நெருக்கடிகளும், அரசியல் முரண்பாடுகளும் இருந்தும்கூட, ஐ. சி. ஏ. தன் அமைப்பாளர்களால் தனக்கு வகுத்த பணியை இடைவிடாது தொடர்ந்து செய்துவருகிறது. ஐ.சி.ஏ. இப்பொழுது 79 ஆண்டுகளைப் பூர்த்தி செய்துவிட்டது. அது இத்தனை ஆண்டுகளாக நீடித்திருப்பதே அதனிடம் அதன் உறுப்பினர்கள் வைத்திருக்கும் விசுவாசத்திற்கும், அனைவருக்கும் கூட்டுறவு, சுய உதவி, பரஸ்பர உதவி ஆகியவற்றிற்கான தேவைக்கும், ஒரு விரிவான சான்றாகும். மற்றும், ஐ. சி. ஏ. இயங்குவதன் காரணமாகப் பல தேசியக் கூட்டுறவு நிறுவனங்கள் படையெடுப்பாலும், இராணுவ சுவாதீனத்தாலும், நாடு இழப்பாலும், நாட்டு எல்லை மாறுதல்களாலும், அரசாங்கங்களின் விரோதச் செயல்களாலும், வெள்ளம், தீ ஆகியவற்றால் நேர்ந்த விபத்துகளாலும் ஏற்பட்ட உறுப்பினர் இழப்பையும் வெற்றிகரமாகச் சமாளிக்க முடிந்தது.

சுதந்திரத்தை மீண்டும் பெற்ற கூட்டுறவு இயக்கங்கள் தங்கள் நிறுவனங்களை மீண்டும் நிறுவுவதில் தேவையான உதவியளிப்பதற்கு ஒரு வாய்க்காலாகவும், அடக்குமுறையால் பாதிக்கப்பட்ட கூட்டுறவாளர்களுக்கு ஒரு நம்பிக்கையாகவும், ஐ.சி.ஏ.

இருந்து வருகிறது. 1943ஆம் ஆண்டுக்கும் 1945ஆம் ஆண்டுக்கு மிடையே 3,00,000 பவுண்டுக்கும் மேற்பட்ட தொகைக்கு, அதனல் அமைக்கப்பட்ட 'நிவாரண மற்றும் புனர்வாழ்வு நிதி' (Relief and Rehabilitation Fund) என்பது, இரண்டாவது உலக மகாயுத்த காலத்தில் கூட்டுறவாளர்களின் ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் தெரியப்படுத்துவதற்கும், கூட்டுறவு இயக் கத்தின் எதிர்காலத்தைப் பாதுகாப்பதற்கும், ஐ.சி.ஏ.-வால் மேற்கொள்ளப்பட்ட பல சாதனங்களில் ஒன்ருக இருந்தது.

**கூட்டுறவு வளர்ச்சி** (Promotion of Co-operation): இரண்டா வது உலக மகாயுத்தத்திலிருந்து, கூட்டுறவின் வளர்ச்சியானது உலக முழுவதிலும் ஒரு புதிய சகாப்தத்தில் நுழைந்தது. அதை அரசாங்கங்கள் பொருட்படுத்தாமலிருக்க முடியவில்லை. உண்மை யாகவே ஐக்கிய நாடு நிறுவனத்தின் ஆதரவுடனும், அதன் சிறப்பு அமைப்புகளின் ஆதரவுடனும், அநேக அரசாங்கங்கள் கூட்டுறவைத் தங்கள் நாடுகளில், குடிமக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் ஒரு சாதனமாகவும், வேளாண்மை, தொழில், வர்த்தகம், கல்வி ஆகியவைகளை நவீனப்படுத்தும் ஒரு சாதனமாகவும் பயன்படுத்துவதன்மூலம் தங்கள் குடிமக்களுக்குக் கல்வியறிவு அளிக்கவும் உதவவும் முற்படுகின்றன.

கூட்டுறவு வளர்ச்சியை இந் நாடுகளில் அவற்றின் அரசாங் கங்களுக்கு முற்றிலும் விட்டுவிடக் கூடாது என்றும், ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் உதவியும் அரசாங்கங்களுக்கிடையேயுள்ள சிறப்பு நிறுவனங்களின் உதவியும் தேவைப்படுகிறது என்றும் உணர்ந்து, ஐ.சி.ஏ. தொழில்நுட்பத்திற்கான தன் சொந்தத் திட்டத்தை, வளர்ச்சி நிதியின் (Development Fund) ஆதரவுடன் மேம்படுத்துவதற்கு முடிவு செய்தது. 1954 பாரிசு காங்கிரசுக்குப் (Paris Congress) பிறகு, இத் துறையில் ஐ.சி.ஏ. செயல்பட வேண்டிய வழிவகைகளை அதன் செயலகம் நிர்ணயித்தது. ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் தொழில்நுட்ப உதவித் திட்டங்களுடன் போட்டியிடாமலும், ஒன்றின்மேல் ஒன்ருய் இராமலும், ஐ.சி.ஏ. -ன் நடவடிக்கைகள், கல்வி, பிரசாரம், பயிற்சி என்ற துறை களில் முழுக் கவனத்தைச் செலுத்துகின்றன. வளர்ச்சி நிதி, இணைக்கப்பட்ட நிறுவனங்களிலிருந்து பெற்ற தன்னிச்சையான நன்கொடைகள்மூலம் அமைக்கப்பட்டது. வளர்ச்சி நிதியால் நிறைவேற்றப்பட்டு, நிதியுதவி அளிக்கப்பட்டுவரும் சில திட்டங் களாவன: கான (Ghana) நாட்டிற்காகவும், பர்மா (Burma) தேசத்திற்காகவும், நடமாடும் ஒலிப்படக் கல்வி அமைப்புகளும் (Mobile Audio-Visual Units), கிழக்கு நைஜீரியா நாட்டிற்காக

ஓர் அச்சகமும், ஜமேய்கா நாட்டிற்காகக் கடை நிருவாகத்திலும் (Shop Management) சிப்பந்திப் பயிற்சியிலும் நிபுணர்களை அனுப்புதல் முதலியன.

தென்கிழக்கு ஆசியாவில், மண்டல அலுவலகம் (Regional Office) அமைப்பதில் பெற்ற அனுபவத்தைக்கொண்டும், உதவிக்காகப் பெருகிக்கொண்டுவரும் கோரிக்கைகளைக் கொண்டும், புதியதாக வளர்ச்சியடையும் நாடுகளில் கூட்டுறவு வளர்ச்சியின் பிரச்சினைகளனைத்தும், 1957-ல் ஸ்டாக்கோமில் (Stockholm) நடைபெற்ற காங்கிரசால் கவனிக்கப்படவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு தீர்மானத்தில், காங்கிரசு, வளர்ச்சி நிதிக்கு அதிகப்பட்ட உதவித் தொகைகளுக்காக விண்ணப்பித்ததோடு, ஐ.சி.ஏ.-ன் வளர்ச்சி நடவடிக்கைகள், ஒரு நிலையானதும் போதுமானதுமான நிதி அடிப்படையின்பேரில் வைக்கப்பட வேண்டுமென்றும் அறிவித்தது.

புதிய உறுப்பினர்களைச் சேர்ப்பதன்மூலமும், பழைய உறுப்பினர்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதன்மூலமும், ஐ.சி.ஏ.-வுக் கிணைக்கப்பட்ட நிறுவனங்களின் தொழில்துறை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை ஒவ்வோர் ஆண்டும் 1,000,000-க்கு மேலாக அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஐ. சி. ஏ. ஐரோப்பிய நிறுவனங்களின் எண்ணிக்கைக்குத் தொடர்ந்து சேர்த்துக் கொண்டிருந்தாலும் இந்தக் கண்டங்களிலிருந்தும் மேலும்மேலும் உறுப்பினர்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறது. 1957-ல், ஐ.சி.ஏ.-ல் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஆசியா, ஆஃப்பிரிக்கா, அமெரிக்கா ஆகிய நாடுகளின் மொத்த எண்ணிக்கை, முதன்முதலாக ஐரோப்பிய நாடுகளின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருந்தது. கொள்கையளவில் எப்பொழுதுமே 'கூட்டுறவு நிறுவனங்களின் ஓர் உலகக் கூட்டிணைப்பாக' (World Confederation of Co-operative Organizations) இருந்துவந்த ஐ.சி.ஏ. நாளடைவில் உண்மையாகவே அத்தகைய நிறுவனமாகிக் கொண்டிருக்கிறது.

**(ix) கூட்டுறவாளர்களின் வானவில் கொடி** (Rainbow Flag of the Co-operators) : 1923ஆம் ஆண்டிலிருந்து, வானவில் கொடி கூட்டுறவாளர்களின் சர்வதேசச் சின்னமாக ஏற்கப்பட்டுள்ளது. உலகமெங்கும் எல்லாக் கூட்டுறவு அலுவலகங்களின் மேலும், கட்டடங்கள்மேலும், அத்தகைய சின்னமாக அது பறக்கிறது. கூட்டுறவின் எல்லாமடங்கிய தன்மையையும், கூட்டுறவுக் கொடியின்கீழ் வேறுபட்ட நலமிகளை அன்யோன்னியத்துடன் கொண்டுவர முடியும் என்பதையும் அது அடையாளப்படுத்துகிறது.

வானவில்லில் அமைந்த ஏழு பிரதம வண்ணங்களான கருநீலம், ஊதா, ஆரஞ்சு, நீலம், பச்சை, மஞ்சள், சிவப்பு நிறங்களின் கருத்து முக்கியத்துவமானது, ஏழு நிறங்களும் ஒன்றுசேர்ந்து வெள்ளை நிறத்தை விளைவிக்கின்றன என்பதே. வெள்ளை நிறம் உண்மையாகவே, கூட்டுறவுச் சின்னமாகிய புராதன சுத்தத்தையும், ஒருமைப்பாட்டையும் காண்பிக்கிறது. சுத்தத்தின் மூலமும், எளிமையின்மூலமும் (Purity and Simplicity) சமயம், நிறம், இனம், கோட்பாடு ஆகியவற்றின் எல்லாத் தடைகளையும் மீறி, தம்மையொத்த மனிதர்களுடைய உள்ளங்களை மாற்றிக் கூட்டுறவு எல்லோருக்கும் பணிபுரிகிறது. கூட்டுறவானது, பல சரக்குக் கடைகளை நடத்துவதும், இலாப விகிதங்களைச் சம்பாதிப்பதுமே எண்ணமாகக் கொண்ட கடை வைப்பவர்களான (Shop-keepers) ஒரு தேசத்தவரை உற்பத்தி செய்வதற்கு ஆசைப்படவில்லை. தன்னலமற்ற சேவை, சமர்ப்பணம் (Selfless Service and Devotion) என்ற உணர்வில் மனிதவர்க்கம் முழுவதையும் தழுவுவதைக் கூட்டுறவு நோக்கமாகக் கொண்டிருக்கிறது. ஆகையால், வானவில்லின் நிறமானது கூட்டுறவு ஒத்துணர்வின் (Co-operative Fellowship) சின்னமாக உள்ளது.

(x) **அனைத்துநாட்டுக் கூட்டுறவு நாள்** (International Co-operative Day): அனைத்துநாட்டுக் கூட்டுறவு நாள் என்பது, ஏறக்குறைய 40 ஆண்டுகளுக்கு முன்னர், ஒரு வருடாந்தர விழாவாகக் கூட்டுறவாளர்களால் ஏற்படுத்தப்பட்டது. இவ் விழாவின்போது, உலக முழுவதுமுள்ள கூட்டுறவாளர்கள், இயக்கத்தின் கருத்துகளையும் கொள்கைகளையும் நினைவுபடுத்திக்கொண்டும், இயக்கத்திற்குத் தங்கள் விசுவாசத்தைக் காண்பித்தும், தங்கள் அனைத்துநாட்டு ஒருமைப்பாட்டை அறிவித்தும், இயக்கத்தின் ஆற்றலையும் சாதனைகளையும் வருங்காலத்திற்காக அதன் வாய்ப்பையும் வெளிப்படையாக எடுத்துக்காட்டியும் வருகின்றனர்.

இந் நாள், உலகமெங்கும் ஒவ்வோர் ஆண்டும் ஜூலை மாதத்தில் முதல் சனிக்கிழமையன்று, ஐ.சி.ஏ.-ன் உறுப்பினர் நிறுவனங்களால் மட்டுமன்றி, எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களாலும் கொண்டாடப்படுகிறது. எனினும், பருவநிலை காரணமாகத் தென்கிழக்கு ஆசியா மண்டலத்துப் பல்வேறு நாடுகள் தங்கள் சௌகரியத்திற்கேற்ற தேதிகளை ஏற்பாடு செய்துள்ளன. இந்தியாவில் நாம் ஒவ்வோர் ஆண்டும் நவம்பர் மாதத்து முதல் சனிக்கிழமையன்று இவ் விழாவைக் கொண்டாடுகிறோம். விழாவன்று ஐ.சி.ஏ.-வினால் ஓர் அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

அந்த அறிவிப்பு ஒரு கூட்டத்தில் கையோசையுடன் வாசிக்கப் பட்டு ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

விழாக் கொண்டாட்டங்கள், ஒவ்வொரு நாட்டிற்கும் ஏற்ற மிக்க முறையில், ஏற்பாடு செய்யப்படுகின்றன. ஆனால், பொது வாக, பொதுமக்கள் விழாக்களும், திறந்த அரங்குக் கூட்டங்களும் நடத்தப்படுகின்றன. இந்தியாவில் நாமும்கூட முன்னமே குறிப் பிட்டபடி, சர்வதேசக் கூட்டுறவு நாளன்று ஆரம்பிக்கும் 'அனைத் திந்தியக் கூட்டுறவு வார'த்தைக் கொண்டாடுகிறோம். இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தின் கட்டளையைப் பின்பற்றி, வாரத்தின் எஞ்சிய ஆறு நாள்களில் ஒவ்வொரு நாளும் இயக் கத்தின் ஒரு குறிப்பிட்ட துறைக்கு ஒதுக்கப்பட்டு, அனைத்திந்தியக் கூட்டுறவு வாரம் கொண்டாடப்படுகிறது. அதாவது, ஒரு நாளைக் 'கூட்டுறவு உற்பத்தியாளர்கள் நாள்' என்றும், ஒரு நாளைக் 'கூட்டுறவு நுகர்வோர்கள் நாள்' என்றும், ஒருநாளை 'மகளிர் நாள்' என்றும் அதுபோன்று மற்ற நாள்களும் விழாக் கொண்டாடப்படுகிறது. மற்ற நாடுகளை நோக்குமிடத்து, நம் கூட்டுறவு இயக்கம் பின்தங்கிய நிலையிலிருக்கும் காரணத்தினாலும், நம் நாட்டில் முறையான வேகமுள்ள கூட்டுறவு நடவடிக்கை யின் வளர்ச்சிக்கான அவசரத் தேவையினாலும், இவ்வாறு விழாக் கொண்டாடுவது நம் நாட்டில் அவசியமாகக் கருதப்படுகிறது.

---